ஸ்ரீமத்

# கம்ப ராமாயண அகராதி



இரண்டாம் பாகம்

க — ஞ



அ. சே. சுந்தரராஜன், B. A.

2 2 8

உ

# ஶ்ரீமத்
# கம்ப ராமாயண அகராதி

## இரண்டாம் பாகம் க – ஞ



தொகுப்பாசிரியன் :
முன்னாள், இலங்கை இராமநாதன் கல்லூரி ஆசிரியர்
**அ. சே. சுந்தரராஜன், B. A ,**
*10-A, அல்மோரா, அணுசக்தி நகர்,*
**பம்பாய் – 400 094**

## EDITORIAL BOARD

## பொருளடக்கம்





## AN APPRECIATION

by

D. NALLA SENATHIRAJAH, Ph. D.,
Policy Development Officer,
Metropoliton Toranto, Toranto, Canada.

It is very seldom that a piece of literary work appears as a result of fifty years of "labour of love" and devotion. The publication of the Concordance to Kamba Ramayana in four volumes is heralded by growing enthusiasm and keen interest in Indian literary woks, specially in Tamil literature, in recent years in the North American Continent and Europe. There are fourteen universities and a number of private organizations of immigrant Tamils who are teaching or doing research in Tamil literature in North America.

There is a great search for moral, ethical, and spiritual meanings to life in the highly civilized and materially advanced societies in the West. The great Indian epics embody most lofty ideals of life and it is the search for these gems that has led the Western scholars to study Tamil literature.

The concordance-arrangements of chief words and phrases used by the poet, their meanings in different contexts and citations to verses in the text, is rare in modern Tamil literature. The use of such a concordance enhances the understanding and appreciation of the ethical, moral and philosophical dimensions of the great epic. The eternal value of the epic is enshrined not only in the deep visions of the poet but also in the scholar's profound understanding and appreciation of the poet's vision and its significance to life in every age.

As a student of Mr. Sundara Rajan Iyengar, I was privileged to learn and appreciate Kamba Ramayana. My cherished thoughts in those days were that many more students

of Kamban, not only in Tamil speaking countries but also Tamil research scholars in the West should get a chance to appreciate the lofty ideals in the epic.

I am now delighted to welcome from North America the publication of the Concordance to Kamba Ramayana. I am sure that this would serve as an essential source book for research and study of the great epic.

I want to congratulate my revered teacher Sundara Rajan for giving such a valuable literary work to the world.

---

## OPINIONS

M. VARADARAJAN
Vice-chancellor
Madurai University

University Buildings
MADURAI - 2
24—9—1971

Dear Thiru. Sundararajan,

I am in receipt of your letter and Kamba Ramayanam Dictionary Volume I. I appreciate the great pains you have taken to compile such a volume. I hope you are busy preparing the other volume. May God bless you with all strength and health to complete the work. It will be a very valuable contribution to the fi-ld of Tamil Literature, especially Kambar.

With kind regards,

Yours sincerely,

(Sgd.) *M. Varadarajan*

Vidvan
V. M. SUBRAMANYA AYYAR,
M. A., B. O. L.
French Institute of Indology

PONDICHERRY - 1
9—4—78

Kamban's Ramayanam has brought undying fame since it was written. It can easily rank with the best literature of the world.

A word index with sources in which they occur is a long-felt want. Sri A. S. Sundararajan of Ramanathan College, Sri Lanka (Retd ) has fulfilled that by his devotion and dedication to the work, single handed.

His labours will be richly rewarded if all the Universities and libraries buy as many copies as they can buy.

(Sgd.) *V. M. Subramanya Ayyar*

## PRESS REVIEWS Etc. Etc.

---

*The Indian Express of* 30—10—1971

This is the first volume of the Kamba Ramayana "agaraathi" undertaken for compilation by the author and contains all the words beginning in vowels. This includes all the words in the series, from the most simple to the most difficult and is a very useful guide to the readers of Kamba Ramayana. This is a multi-purpose work, combining the features of a dictionary, a concordance, a glossary and an encyclopaedia. The author has consulted all the extant editions of the epic for compiling this dictionary, and has given a comparative chart of the variations in verse number in these editions. He must be congratulated for this laborious and digilent venture Let us look forward to the early completion of the other volumes.

Prof. R. Krishnamoorthy

*Th: Hindu of* 20—2—1972

This publication contains all the words and phrases begining from 'Aa' to Ou' used in Kamba Ramayana with their places of occurrence in the text and their meaning. In the introduction, the author has mentioned all printed editions of the work either in full or in parts and with annotations or without them and states that he has used only four full editions now available for his purpose and has given cross reference in the tables attached to the work. As the texts of stanzas vary in these editions, the compiler has used the texts found in the Annamalai Universiiy edition for the first five Kandams and the one found in Sri V. M. Gopalakrishnamachariar's edition for the last Kandam. Many works give different meanings to different stanzas and they are all shown in the body of the work.

—*V.*

## சுதேசமித்திரன்

நவம்பர் 2, 1971

தமிழிலே மதிப்புமிக்க நூல்களைக் கூறும்போது கம்ப ராமாயணத்தைத் திருக்குறளோடு இணைத்துக் கூறுவோர் பலர். திருக்குறளுக்கு இப்போது நாம் தலைநிமிர்ந்து பெருமைகொள்ளும் அளவுக்கு ஆராய்ச்சி நூல்கள் வெளிவந்துகொண்டிருக்கின்றன. திருக்குறளைப்போல் கம்ப ராமாயணத்துக்கும் பலதுறை பலமுக ஆராய்ச்சி தேவை. கம்பரின் மதம், சொல்லாட்சி கம்ப ராமாயணத்தின் விரிவான பொருளடக்க அகராதி, கம்பர் ஆளும் அணிகள், வண்ணங்கள், கம்ப சூத்திரங்கள், கம்பர் எடுத்தாண்ட வேறு நூலடிகள், கருத்துக்கள் போன்றவற்றில் புதிய ஆராய்ச்சிகள் வரவேற்கத்தக்கன. அத்தகையவற்றுள் கம்ப ராமாயண அகராதி ஒன்று.

கம்ப ராமாயணத்தின் பல பதிப்புக்களில் ஆறு காண்டங்களையும் துருவித்துருவி கம்பர் ஆளும் சொற்களை எடுத்து அகர வரிசைப்படுத்தி அவற்றிற்குப் பொருள் எழுதுவது செயற்கரும் செயல். அதனை ஸ்ரீ சுந்தரராஜன் செய்யமுயன்று முதற்பகுதியை அழகிய புத்தக வடிவில் தமிழுலகிற்கு அளித்திருக்கிறார். இவரும் உட்பட பதிப்புக் குழுவினர் ஒன்பதின்மர் என்பது தெரிகிறது. பொருள்கூறும் சொல் இராமாயணத்துள் ஆளப்படும் இடம்சுட்ட ஆசிரியர் ஒவ்வோர் எடுத்துக்காட்டையும் கொடுத்துள்ளார்.

முகவுரையே ஓர் ஆராய்ச்சி. கம்ப ராமாயணத்தைப்பற்றி இதுகாறும் பலர் செய்துள்ள சேவை காரணமாகத் தோன்றியுள்ள கட்டுரைகள், உரைநடை நூல்கள் மூலம் பதிப்புகள் உரையுடன்கூடிய பதிப்புகள் முதலிய எல்லாம் முகவுரையிற் குறிக்கப்பட்டுள்ளன. நூலை ஆசிரியர் எந்த முறையிற் கையாண்டு சொற்களை அகர வரிசையில் தொகுத்தார் என்ற விவரம் முதலியன இப்பதிப்பில் உள்ளன. தக்க அறிஞர் பலரின் அணிந்துரைகளே இப்புத்தகத்தின் மதிப்புக்கு நல்ல சான்று.

இப்புத்தகம் ஆசிரியரின் கன்னிமுயற்சி. ஒரு காலத்தில் இந்த அகராதி தொடர்களை மிகுதியாகப்பெற்று விரிவடைதல்கூடும் என்ற நம்பிக்கை இருக்கிறது.

இத்தகைய நூல்களை வெளியிடுவோருக்கு தமிழன்பர்களும், தமிழ்த்துறைத் தாபனங்களும் மிகுதியாக முன்வரவேண்டும். குடும்ப நூல்நிலையமுதல் மிகப்பெரிய நூல் நிலையங்களுக்கும், மாணவர்களுக்கும் கம்ப ராமாயண ஆராய்ச்சியாளருக்கும் முக்கியமான தகவல்நூல் இது. கம்ப ராமாயண செய்யுட்களுக்கேயன்றி ஏனைய நூல்களின் செய்யுட்களுக்கும் சொற்பொருள் காண இது பெரிதும் உதவக்கூடும்.

— ச. கு. க.

கல்கி

12—3—1972

கம்பன் ரஸிகர்களுக்கும், தமிழாராய்ச்சி மாணவர்களுக்கும் பயன் தரத்தக்க இவ்வகராதியின் தொகுப்பாசிரியர் திரு. அ. சே. சுந்தரராஜன் அவர்கள். 'அ' விலிருந்து 'ஔ' வரையிலுள்ள சொற்களைத் தொகுத்து அவற்றின் பொருளையும், அவற்றைக் கம்பன் எந்த எந்தக் காண்டங் களில் எந்த எந்த எண்ணுள்ள செய்யுள்களில் கையாண்டிருக்கிறான் என்பதையும் விளக்கியிருக்கிறார். பல பெரும் புலவர்கள் கூடியிருந்து செய்யவேண்டிய ஓர் அரும்பணியை இவர் ஒருவரே செய்ய முன்வந் திருப்பதைப் பாராட்டவேண்டும். இதைத்தொடர்ந்து இன்னும் மூன்று பாகங்களை விரைவில் அச்சிட்டு வெளியிடவேண்டும் என ஆசிரியர் தமது முகவுரையில் கூறுகின்றார். தமிழ் கூறும் நல்லுலகம் அவர் நம்பிக்கை வீண்போகவிடாது என்று எண்ணுகிறோம்.

**தினமணி**

ஜூன் 2, 1972

கம்பன் பிறந்த தமிழ்நாடு இது. கற்றவர் கல்லாதவர் யாவரும் கற்றும் கேட்டும் தம் மனத்தைப் பறிகொடுக்கும் அளவில் மக்களி டையே பரவியுள்ளது கம்பரது இராம காதை. பங்குனி உத்தர நாளில் கண்ணிய அரங்கன் முன்னே கவியரங்கேற்றப்பெற்ற இக் காவியம் அன்று முதல் இன்று வரை யாவருள்ளத்தையும் கவர்ந் துள்ளது. அச்சுயந்திரம் தமிழ் நாட்டுக்கு வருமுன் பதினுயிரத்திற்கு அதிகமான பாடல் உள்ள இந்த இதிகாசம் ஏட்டுச் சுவடிகளில் எழுதியும், கற்றும், கற்பிக்கப்பட்டும் வந்ததிலிருந்து இதன் பெருவழக்கு நன்கு புலனுகும்.

மொழியியல் ஆராய்ச்சித்துறை தோன்றி வளர்ந்துவரும் இந் நாளில் ஒவ்வொரு நூலுக்கும் தனித்தனியே ஓரகராதி வெளியிடப்பட வேண்டும் என்னும் அவா தமிழன்பரிடையே தழைத்து வருகின்றது. கம்ப ராமாயணத்திற்கு இத்தகையதோர் அகராதியைத் தொகுக்கும் பணியில் இதன் ஆசிரியர் கொண்டுள்ள உழைப்பு மிகவும் போற்றத் தக்கது.

மூல பாடத்தை மட்டும் வைத்துக்கொண்டு தாமே கம்ப ராமாயணத்தைக் கற்க விரும்புவோருக்கும், உரைப் பதிப்புகளோடு ஊன்றிப் பயில முற்படுவோர்க்கும் இவ்வகராதி மிகவும் பயன்படும். மொழியியல் ஆராய்ச்சியாளர்க்கு உறுதுணையாய் உதவும் கம்ப ராமாயண அகராதியின் முதலாம் பாகமாகிய இந்நூல் 'அ—ஔ' ஈருய் உள்ள எழுத்துக்களை முதலாகக்கொண்டது. ஏறக்குறைய 5290 சொற்கள் பொருள் விளக்கத்துடன் இதில் அடங்கியுள்ளன. நூல் நிலையங்களும், நூலாராய்ச்சியில் ஆர்வமுடையோர் கரங்களும் இந் நூலைக்கொண்டு விளங்குதல் இன்றியமையாதது. மற்றுமுள்ள மூன்று பகுதிகளும் விரைவில் அச்சியன்று வெளிவர ஆசிரியர்க்கு உதவிபுரிவது தமிழன்பர் கடனுகும்.

எஸ். வி. வரதராஜ ஐயங்கார்

*All India Radio*

17—6—72

**—திரு. ஆர். கோபாலகிருஷ்ணன் அவர்கள்**

கம்பர் காவியத்தை ஒருமுறை படித்தல் என்பதுகூட பெருமை தருவதாகும். அத்துணை பாடல்கள் அரிய பாடல்கள் செவ்விய மதுரஞ் சேர்ந்த தீஞ்சுவைக் கவிகள். அவற்றை முற்றும் கற்று மூழ்கித் திளைத்த ஒருவரால்தான் இத்தகைய அரிய அகராதியைத் தொகுக்க இயலும்.

"தமிழின் ஒப்புயர்வற்ற இலக்கியச் செல்வமாகிய கம்ப ராமாயணத்திற்கு சொல்லடைவு ஒன்றைத் தொகுத்தல் துணிவுடைய முயற்சியாகும். இலக்கியப் பதிப்புக்கும் ஆராய்ச்சிகளுக்கும் வரவேற்பு இல்லாத இக்காலத்தில் ஏ. எஸ். சுந்தரராஜன் அவர்கள் இந்த நன் முயற்சியை மேற்கொண்டிருப்பதும், ஒரு தொகுதியை வெளியிட்டிருப் பதும் பாராட்டத்தக்கதாகும்".

"பல புலவர்கள் சேர்ந்து செய்யவேண்டிய பணியை ஆசிரியர் தமது சொந்த தனிப்பட்ட முயற்சியால் கம்ப ராமாயணம் முழுவ தற்கும் மகத்தான அகராதியைத் தொகுத்திருப்பது செயற்கரிய செயல்".

"கம்ப ராமாயணத்தின் சொல்லாட்சியில் எளிமையும் செறிவும் சேர்ந்திருக்கும். அதில் வரும் சொற்களுக்கும், சொற்றொடர்களுக்கும் தெளிவான விளக்கமும், மேற்கோள் பகுதிகளும் அகராதியில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால், கம்பனைப் போதிக்கும் ஆசிரியர்களுக்கும், படிக்கும் மாணவர்களுக்கும், மக்களுக்கும் இந்நூல் மிகவும் பயனுள்ளதாயிருக்கும் என்று அணிந்துரையில் கூறியுள்ள செய்தி இலக்கிய மாணவன் என்ற முறையில் முற்றும் ஏற்றுக் கொள்ளற்குரியதே".

# புலவர் சுந்தர சண்முகனார் அவர்கள்

எழுதியுள்ள

## "தமிழ் அகராதிக் கலை"

என்னும் நூலிலிருந்து

*(கழகப் பதிப்பு — பக்கம் 381–382)*

"இஃது ஒருவகைச் சிறந்த அகராதியாகும். கம்ப ராமாயணத்திலுள்ள சொற்கள் அகர வரிசையில் நிறுத்தப்பெற்று பொருள் விளக்கம் தரப்பட்டிருப்பதோடு இந்த அகராதி அமைந்துவிடவில்லை; மற்றும் அந்தந்தச் சொற்கள் இடம்பெற்றுள்ள அந்தந்தப் பாடல் எண்கள் கொடுக்கப்பட்டிருப்பதோடும் இந்த அகராதி அமைந்து விடவில்லை; சொற்கள் இடம்பெற்றுள்ள பாடல் பகுதிகளும் உடன் கொடுக்கப்பட்டிருப்பது இந்த அகராதியின் ஒரு தனிச் சிறப்பாகும். ஏறக்குறைய 22,000 கம்ப ராமாயணச் சொற்கள் இதில் இடம் பெற்றுள்ளன.



# செய்யுட்களின் மாற்று எண் அட்டவணை

## V சென்னை கம்பன் கழகப் பதிப்பு

| செய்யுள் எண் | மாற்று எண் | மிகைப் பாடல் |
|---|---|---|
| பாயிரம் | தனியன் | |
| 1 | 1 | |
| 2-4 | 3-5 | |
| 4a | 6 | |
| 5 | 7 | |
| 6-9 | 9-12 | |
| 10 | 2 | |
| 11-17 | 13, 14, 15, 17, 18, 19, 20. | |
| 18-20 | 21, 22, 23 | |
| 21-23 | 24, 25, 26 | |
| 24-26 | | [1, 2, 3] |
| 26a | | [4] |
| 27-31 | | [5-10] |
| 31a | | [11] |
| 32 | | [12] |
| 32a | | [14] |
| 32b | | [15] |

பால காண்டம்

| செய்யுள் எண் | மாற்று எண் | மிகைப் பாடல் |
|---|---|---|
| 1-186 | 1-186 | |
| 187 | | [48] |
| 188-260 | 187-259 | |
| 261 | | [56] |
| 262-296 | 260-294 | |
| 297 | | [59] |
| 298-365 | 295-362 | |
| 366-383 | | [72-89] |
| 384-399 | 363-378 | |
| 400-403 | | [90-93] |
| 404-424 | 379-399 | |
| 425 | | [95] |
| 426-480 | 400-454 | |
| 481-507 | | [99-113, 115-126] |
| 508-509 | 455-456 | |
| 510-539 | | [127-156] |
| 540-557 | 457 474 | |
| 558 | | [157] |
| 559-620 | 475-537 | |
| 621 | — | |
| 622-823 | 538-739 | |
| 824 | — | |
| 825-1292 | 740-1207 | |
| 1293 | | [186] |
| 1294-1308 | 1308-1312 | |

அயோத்தியா காண்டம்

| செய்யுள் எண் | மாற்று எண் | மிகைப் பாடல் |
|---|---|---|
| 1-95 | 1313-1407 | |
| 96-98 | | [206-208] |
| 99-383 | 1408-1692 | |
| 384 | | [215] |
| 385-386 | 1693-1694 | |
| 387 | 1696 | |
| 388 | 1695 | |
| 389-662 | 1697-1970 | |
| 662a | 1971 | |
| 663-908 | 1972-2217 | |
| 909 | | [233] |
| 910-912 | 2218-2220 | |
| 912 a, b | 2221-2222 | |
| 913-1069 | 2223-2379 | |
| 1070 | | [240] |
| 1071-1206 | 2380-2515 | |

ஆரணிய காண்டம்

| செய்யுள் எண் | மாற்று எண் | மிகைப் பாடல் |
|---|---|---|
| 1-64 | 2516-2579 | |
| 65 | | [254] |
| 66 67 | 2580-2581 | |
| 68 | | [255] |
| 69-200 | 2582-27B | |
| 201-205 | | [264-269] |
| 206-208 | 2714-2716 | |

| செய்யுள் எண் | மாற்று எண் | மிகைப் பாடல் |
|---|---|---|
| 209 | | [270] |
| 210-754 | 2717-3261 | |
| 755 | | [295] |
| 756-855 | 3262-3361 | |
| 856-857 | | [297-298] |
| 858-943 | 3362-3447 | |
| 944 | | [300] |
| 945-1160 | 3448-3663 | |
| 1161 | | [310] |
| 1162-1205 | 3664-3707 | |

## கிட்கிந்தா காண்டம்

| செய்யுள் எண் | மாற்று எண் | மிகைப் பாடல் |
|---|---|---|
| 1-187 | 3708-3894 | |
| 188 | | [328] |
| 189-296 | 3895-4002 | |
| 297 | | [334] |
| 298-442 | 4003-4247 | |
| 443 | | [338] |
| 444-702 | 4148-4466 | |
| 703 | | [343] |
| 704-935 | 4467-4638 | |
| 936 | | [366] |
| 937-1009 | 4639-4711 | |
| 1010 | 4713 | |
| 1011 | 4712 | |
| 1012-1037 | 4714-4739 | |

## சுந்தர காண்டம்

| செய்யுள் எண் | மாற்று எண் | மிகைப் பாடல் |
|---|---|---|
| 1-509 | 4740-5248 | |
| 510 | | [415] |
| 511-976 | 5249-5714 | |
| 977 | | [459] |
| 978-991 | 5715-5728 | |
| 991 A-Y | 5729-5763 | |
| 992-1177 | 5754-5939 | |
| 1178 | | [460] |
| 1179 | 5910 | |
| 1180 | | [470] |
| 1181-1257 | 5941-6017 | |
| 1258-1274 | | [482-499] |
| 1175-1281 | 6020-6026 | |
| 1282-1299 | | [506-520] |
| 1300-1315 | 6027-6042 | |
| 1316-1317 | | [520-523] |
| 1318-1329 | 6043-6054 | |
| 1330 | | [524] |
| 1331-1332 | 6055-6056 | |
| 1333-1337 | | [525-549] |
| 1338-1339 | 6057-6058 | |

## யுத்த காண்டம்

| செய்யுள் எண் | மாற்று எண் | மிகைப் பாடல் |
|---|---|---|
| 1-312 | 6059-6370 | |
| 313 | | [594] |
| 314-340 | 6371-6397 | |
| 341-342 | | [596-97] |
| 343-474 | 6398-6529 | |
| 475 | | [606] |
| 476-489 | 6530-6543 | |
| 490 | | — |
| 491-657 | 6544-6711 | |
| 657a | 6712 | |
| 658-694 | 6713-6749 | |
| 695 | | [624] |
| 696-877 | 6750-6932 | |
| 878 | | [680] |
| 879-1178 | 6933-7232 | |
| 1179 | | [727] |
| 1180-1263 | 7233-7316 | |
| 1264 | | [742] |
| 1265-1268 | 7317-7320 | |
| 1268a | 7321 | |
| 1269-1517 | 7322-7570 | |
| 1518-1519 | | [781-780] |
| 1520-1521 | 7571-7572 | |
| 1522 | | [784] |
| 1523-1728 | 7573-7778 | |
| 1729 | | [800] |
| 1730-2371 | 7779-8420 | |
| 2372 | | [861] |
| 2372-2531 | 8421-8580 | |
| 2532 | | [868] |
| 2533-2754 | 8581-8801 | |
| 2755 | | [873] |
| 2756-2801 | 8802-8847 | |

| செய்யுள் எண் | மாற்று எண் | மிகைப் பாடல் |
|---|---|---|
| 2802 | | [877] |
| 2803-2829 | 8848-8874 | |
| 2830 | | [878] |
| 2831-2878 | 8875-8952 | |
| 2879 | | [880] |
| 2880-2959 | 8953-9002 | |
| 2960 | | [886] |
| 2961-3135 | 9003-9177 | |
| 3136 | | [901] |
| 3137-3311 | 9178-9353 | |
| 3312 | | [921] |
| 3313-3330 | 9354-9370 | |
| 8331 | | [923] |
| 3382-3378 | 9371-9417 | |
| 3379 | 9420 | |
| 3380 | 9418 | |
| 3381 | 9419 | |
| 3382-3473 | 9421-9512 | |
| 3474-3484 | 9514-9524 | |
| 3485 | 9513 | |
| 3486-3493 | 9525-9532 | |
| 3494 | | [918] |
| 3495-3578 | 9533-9616 | |
| 3579 | | [980] |
| 3580-3600 | 9617-9636 | |
| 3601 | | [981] |
| 3602-3763 | 9637-9799 | |
| 3764 | | [991] |
| 3765-3811 | 9800-9846 | |

| செய்யுள் எண் | மாற்று எண் | மிகைப் பாடல் |
|---|---|---|
| 3812 | | [1006] |
| 3813-3911 | 9847-9945 | |
| 3912 | | [1022] |
| 3913-3915 | 9946-9948 | |
| 3916-3917 | | [1023-40] |
| 3918-4029 | 9949—10060 | |
| 4030 | | [1052] |
| 4031-4083 | 10061—10193 | |
| 4083A | 10194 | |
| 4084-4089 | 10115—10120 | |
| 4090-4091 | | [1108-09] |
| 4092-4180 | 10121—10209 | |
| 4181 | | [1227] |
| 4182-4195 | | [1245-58] |
| 4196-4254 | 10210—10269 | |
| 4255-4256 | | [1262-63] |
| 4257-4276 | 10269—10289 | |
| 4277 | | [1271] |
| 4278 | | |
| 4279-4357 | 10290—10368 | — |
| 4358 | | — |



## குறியீடுகளின் விளக்கம்

அ - அயோத்தியா காண்டம்

அண் - அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு

ஆ - ஆரணிய காண்டம்

இலக் - இலக்கணை

உ. வி - உரை விகற்பம்

கலா - கலாக்ஷேத்திரம் பதிப்பு

கி - கிட்கிந்தா காண்டம்

கு - குமாரசாமிப்புலவர் பதிப்பு

சு - சுந்தர காண்டம்

பா - பால காண்டம்

பா : பே - பாட பேதம்

மு. ரா - மு. ரா. கந்தசாமிக் கவிராயர் பதிப்பு

யுத் - யுத்த காண்டம்

வெ. ப - வெ. ப. சுப்பிரமணிய முதலியார் கம்பராமாயண சாரம்

வை. மு - கோபால கிருஷ்ணமாசாரியர் பதிப்பு



பஹோலா பிரஸ், பெரியதெரு, கும்பகோணம். போன்: 244

உ

# ஸ்ரீமத்

# கம்ப ராமாயண அகராதி-I

## பிற் சேர்க்கை.

பக்கம்

4 **அகலத்திரிதல் - நீளத்திரிதல்.** சேய காலம் பிரிந்து அகலத் திரிந்தான். (யுத் : 5)

4 **அகல விடுதல் - விலக்கி விடுதல்.** ஆவத்தின் வந்து அவய மென்றுனே அயிர்த்து அகல விடுதியாயின். (யுத் : 409) (பா : பே)

5 **அகன்வேலை - அகன்ற கடல்.** அகன் வேலையை ஆறு செய் தான். (யுத் : 831)

7 **அங்கியின் நெடுவாயுவின் நிலைகண்டவர் - (குண்டலியில் எழுகின்ற) அக்கினியின் நிலையினையும் நீண்ட பிராண வாயுவின் நிலையினையும் கண்டறிந்த யோகியர். (யுத் : 441)**

8 **அங்கையோடங்கை தாக்கி - அங்கையினை அகங்கை யோடு சேரப் புடைத்து.** (யுத் : 941)

10 **அசுரர்கள் தம் பிரளயமே - அசுரர்களுக்குப் பிரளய காலம் போன்றவனே. அசுரர்களை. ஒழிப்பவனே. (யுத்: 3887)**

10 **அசைதல் - 3. உயிர் ஒழிதல்.** என் உயிர்போல் வருமகனை அசையத் தரை அரைவித்தனை. (யுத் : 1133)

10 **அஞ்சமம் - அரிய போர். அருஞ்சமம் என்பது இடை குறைந்தது.** அஞ்சம மஞ்சி அழிந்துளரானுர். (யுத் : 2260)

11 **அஞ்சல் - 4 +** அஞ்சுகின்றிலர்கள். (யுத் : 104) அஞ்சினென். (யுத் : 1684) [பா : பே]

12 **அஞ்சிறை - 3. அழகிய சிறை. (கொடிய சிறை)** ஆசில் பர தாரமவை அஞ்சிறை யடைப்பேம். (யுத் : 64)

13 **அஞ்சொல் - அழகிய சொல். அழகிய சொற்களைப் பேசுகின்ற சீதா பிராட்டி. (அண்)** அஞ்சொற் பொன்னுரு அமைக்கும் மாயம் இயற்றுவான். (யுத் : 2812) [பா : பே]

13 **அடா - 1. +** ஆரடா சிரித்தாய். (யுத் : 215)

16 **அடித் துணை.** கால்கள் இரண்டு. உதைத்தவன் அடித்துணை பிடித்து. **(யுத் : 850)**

17 **அடி பெயர்தல் - +** அடி பெயர்த்தார். **(யுத் : 690)**

20 **அடைத்தல் - 3. நிரைத்தல்.**

21 **அடைந்துளோர் - புகலாகச் சார்ந்தவர்கள். (யுத் : 318)**

22 **அண்டங்கொள் தேவர் - உலகை ஆளும் தேவர்கள். (யுத் : 726)**

25 **அணிபறித் தழகு செய்யும் அணங்கு - அணிகலன்களைக் களைந்தெறிந்து இயல்பாயமைந்த அழகினை மீண்டும் உண்டாக்கிய தெய்வத்தன்மையுடையவளாகிய சீதை. (யுத் : 937)**

26 **அணை - 10. அமைந்த.** ஏவணை வரிவிற்காமன். **(யுத் : 900)**

26 **அணைத்தல் - 8. கொள்ளுதல்.** நீரணைமுகில். **(யுத் : 921)**

26 **அணைதல் - வருதல்.** அணையாய் இனி. **(யுத் : 1143)**

27 **அத்தலை - 3. அந்தப் பக்கம்.** அத்தலைக் கல்லேன்யான். **(யுத் : 2164)**

28 **அதிர்தல் - 1. +** அதிர் குரல் அசனித் திண்டேர். **(யுத் : 1860)**

29 **அது - 5. +** போரது புரிதிரோ. **(யுத் : 349)**
வலியது. (யுத் : 400) [பா : பே]

29 **அது போழ்தின் - அப்பொழுது. (யுத் : 829)**

29 **அந்தகற்கீதல் - கொல்லுதல்.** எம்பிதன் ஆருயிர் வவ்வினானை விருந்தேயென அந்தகற்கீவென். **(யுத் : 1965)**

30 **அந்தந்த - அந்த அந்த. (யுத் : 1044)**

31 **அந்தமிலா அன்பு - முடிவில்லாத பேரன்பு.** அந்த மிலா அன்பென்மேல் வைத்தாய் அளியத்தாய். **(யுத் : 296)**

31 **அந்தர அருக்கன் - ஆகாய வீதியில் சஞ்சரிக்கின்ற அருக்கன்.** அந்தர அருக்கன் மகன். **(யுத் : 856) 32ஆம் பக்கத்திலுள்ள இதனை 31ஆம் பக்கத்திற்கு மாற்றுக.**

33 **அநங்கவாளி - மன்மதன் அம்பு. (யுத் : 1590)**

34 **அநந்தன் - 2. திருமால்.** அதி கைதவர் ஆதி அநந்தனையும் விதி கைம்மிக முட்டிய வெம்மையினர். **(யுத் : 1743)**

36 **அபிமானம் - 4. மானக்கேடு.** பேரபிமான மென்னும் சத்திரம் மார்பில் தைக்க உயிரிலன் என்னச் சாய்ந்தான். **(யுத் ; 2853)**

37 **அம்பொன்கோடு - அழகிய பொன்மலை.** (யுத் : 1909)

37 **அம்பொன் மாப்படை - பொன்போல் அருமையான சிறந்த சைனியங்கள்.** அம்பொன் மாப்படை ஐயிரு கோடி. (யுத் : 497)

38 **அமர் ஆற்றல் - போரை மேற்கொண்டு செய்தல்.** அமர் ஆற்றெனும் தோற்றம் வல்லையாமெனின். (யுத் : 1217)

39 **அமரர் கூற்று - தேவர்களுக்கு யமனுயிருப்பவன்.** (யுத் : 3887)

39 **அமரர் பழ நகரம் - அமரருடைய பழமையான தேவ லோகம்.** (யுத் : 3413)

40 **அமிழ்தப் பெருமத்து - அமிழ்தம் எழுமாறு கடைந்த பெரிய மத்தாகிய மந்தரமலை.** அமிழ்தப் பெருமத்தினை முறை சுற்றிய பெரும் பாம்பு. (யுத் : 3714)

40 **அமிழ்து** - அமிழ்து ஊறி. (யுத் : 219)

40 **அமுத இசை - அமுதம்போன்ற இசை.** அரமகளிர் அமுத இசை பாடினர். (யுத் : 1581)

43 **அமைவு - 5. குணநிறைவு.** ஆட்சியும் அமைவும் என் அரசும் நன்றெனு. யுத் : 23)

43 **அய்யன் மீர் - ஐயன் மீர்.** (யுத் : 2724)

44 **அயர்வாறுதல் - இளைப்பாறுதல்.** அப்போதையின் அயர் வாறிய அனுமான் அழல் விழியா. (யுத் : 1122)

45 **அயனுர் மகனுர் - உருத்திர மூர்த்தி.** (யுத் : 2021)

47 **அரக்கர்க்கும் அரக்கன் - இராவணன். தம் மினத்தவ ராகிய அரக்கர் மாட்டும் இரக்கமில்லாத கொடியவன்.** (யுத் : 3497)

52 **அரம் - 5.** ஒலி. அரவம் என்பது எதுகை நோக்கி மருவியது. (அண்) அரங்கொண்ட கருங்கடல். (யுத்; 1579)

52 **அர மங்கையர் - தெய்வப் பெண்கள்.** ஆழி வந்த அர மங்கையர். (யுத் : 811)

54 **அரி - 12. +** அரி அரசன். (யுத் : 782) அரிக்குழு. (யுத் : 211)

55 **அரிகுல மன்னன் - சுக்கிரீவன்.** (யுத் : 2513)

56 **அரியரசன் - இராச சிங்கம்.** அருவரை இவர்வ தாங்கோர் அரியர சனையனுனன் (யுத் : 782)

58 **அருங்குலக் கற்பினுக்கணி - அருமை வாய்ந்த நற்குலத்திற் பிறந்த கற்பினுக் கணிகலமாகத் திகழும் சீதா பிராட்டி. (யுத் : 3964)**

58 **அருந்ததி. 1. +** அருந்ததி யனைய நங்கை. **(யுத் : 781)**

60 **அருமகன் - அருமையாகப் பிறந்த புத்திரன். (யுத் : 149)**

61 **அருவித்திரள் - அருவிகளின் கூட்டம். (யுத் : 809)**

62 **அருள் நெறி - அருட் குறிப்பு.** கண்ணன் அருள் நெறி எய்திச் சென்றடி வணங்கினன். **(யுத் : 256)**

63 **அரைத்தல் - 3. +** அரைத்தனை. **(யுத் : 1133)**

64 **அலக்கண் - 1. +** அலக்கண் எய்தினன்- **(யுத் : 923)**

67 **அலமருதல்செய்தல் - வருத்தஞ் செய்தல்.** இடைக்கு அலமருதல் செய்யும் முலையினர். **(யுத் : 907)**

68 **அலி - + பேடி. +** அலி யென்பவர் புறநின்றவர். **(யுத் : 1143)**

68 **அலை - 3. அலைக்குந் தன்மை.** (அண்) அலை படைத்த வாளரக்கன். **(யுத் : 1429)** [பா. பே]

69 **அலை படைத்த வாளரக்கன் - கடல் நிறம் படைத்த கொடிய அரக்கன்.** (கலா) பிற உயிர்களை யெல்லாம் **அலைக்குந் தன்மை படைத்த கொடிய அரக்கன்.** (அண்) **(யுத் : 1429) [பா. பே]**

71 **அவலத் தழிதல் - துன்பத்தால் நிலை கலங்குதல்.** உள்ளம் உயிரினை ஊசல் நின்று ஆட்டவும் அவலத்தழிந்தானரோ. **(யுத் : 4133)**

72 **அவி - 2. +** அவிகொள் நான் மறை. **(யுத் : 161)**

75 **அழி செம்புனல் - 2. பெருகிய இரத்தம்.** அழி செம்புனலதுவோ பசையற்றிலது. **(யுத் : 1133)**

75 **அழித்தல் - சூறையாடுதல்.** (கலா) நம் சோலையை அழிக்க. **(யுத் : 313)**

77 **அழுதல் - +** அழுதி. **(யுத் : 311)**

78 **அள் - 2. + (உ. வி) (யுத் : 2487)**

80 **அளத்தல் - 4. அளப்பதாய் உயர்தல்.** பகிரண்ட முதல முற்றும் அளந்தது. **(யுத் : 260)**

80 **அளவளாவுதல் - 2.** + அளவளாய் உவந்தார். (யுத்: 2575)

84 **அற்படி நிறம் - இருள் செறிந்த நிறம்.** வெங்கண் யானை அற்படி நிறத்தவேனும். (யுத்: 792)

84 **அற்பின் - அன்பினால். அன்பு என்னும் மென்றொடர்க் குற்றிய லுகரம் அற்பு என வன்றொடராயிற்று.** (அண்) அற்பின் அத்தலைவனும் அமைய நோக்கினான். (யுத் : 3980)

84 **அற்பினத் தலைவன் - எல்லா உயிர்களித்தும் அன்பை யுடைய நாயகனான இராமபிரான்.** (வை. மு) (யுத்: 3980)

85 **அற்று - 4.** + **அறுபட்டு.** + (யுத் : 2180)

85 **அற - 2. அழிய.** அவருழைச் சென்று தீர்ந்தறக் கொல்வது கருமம். **(யுத் : 49)**

86 **அறத்துறை - அறத்தின் வழிப்பட்ட செயல்.** அறந்துறை யன்று. **(யுத் : 931)**

87 **அறம் வலித்தான் - தருமத்தைத் துன்புறுத்தியவனான இராவணன்.** தள்ளாடிய வட மேருவிற் சலித்தான் அறம் வலித்தான். **(யுத் : 1139)**

88 **அறிஞரில் தூயோன் - பிரகலாதன்.** (யுத்: 176)

88 **அறிதல் - 1.** + அறியகிற்றிலேன். **(யுத்: 327)** அறிந்திலம். **(யுத்: 358)**

89 **அறியளவு - அறிந்த அளவு.** யானறி அளவெலாம் அறைவென். **(யுத் : 513)**

89 **அறியும்மவர் - முன்னறிந்து பழகியவர்.** (யுத் : 1932)

89 **அறிவின் மேலுளான் - அறிவினால் யாவரினும் மேம்பட்டவனான இராமபிரான்.** மாருதி என்னும் நேரிலா அறிவனை நோக்கினான் அறிவின் மேலுளான். **(யுத் : 592)**

90 **அறிவினுள் அறிவன் நாயகன் ஒருவன் - உயிர்களின் உயிரில் அறிவாய் அமைந்திருப்பவனாகிய தலைமைத் தன்மையுடைய ஒப்பற்ற இராமன்.** (யுத் : 3756)

90 **அறுக்கும் ஆக்கைகள் - அறுபட்ட உடம்புகள்.** **(யுத்: 2991)**

90 **அறுகால் - நடக்கும் செயலோய்ந்த கால்கள்.** அறுகால் வயக்கவி வீரர். **(யுத் : 3051)**

91 **அறுதல் - 6. அழித்தல்.** தீர்ந்தறக் கொல்வது கருமம். **(யுத்: 45)**

91 **அறுபதின் முதலினோடு ஆயிரம் - அறுபதினாயிரம்.** **(யுத் : 1814)** [பா : பே]

92 **அறைதல் 1.** + அறையகிற்பார். (யுத் : 260)

92 **அன்பான் - அன்பினையுடையவன்.** தலைவர் மேல் தாழ்ந்த அன்பான். (யுத் : 2193)

92 **அன்பினை - அன்பினையுடையை. (யாய்)** என்பகை மனிதரின் வைத்த அன்பினை. (யுத் : 311) நீயும் அன்பினை உயிருக்காகி யானும் அடைக்கலம் என்றி. (கி : 354)

94 **அன்னக்குழாம் - அன்னங்களின் கூட்டம்.** (யுத் : 971)

96 **அனகன் - 2.** + வானவர் கனைகணை அனகன். (யுத் : 273)

97 **அனல் விழித்தல் -** + அனல் விழியார். (யுத் : 1833)

97 **அனலன் - 2. அக்கினி தேவன்.** அனலன் தன் புதல்வன் (யுத் : 1895)

97 **அனலன் தன் புதல்வன் - நீலன்.** (யுத் : 1895)

97 **அனலி - 2. அக்கினி தேவன்.** கொள்ளியிற் சுடர் அனலி தன் படை கைக் கொண்டான். (யுத் : 2582)

99 **அனுமன் - மாருதி. அனு - கன்னம். சிதைந்த கன்ன முடையனுதலால் அனுமன் எனப் பெயர் பெற்றுன்.** (கி : 58)

99 **அனுமன் தாதை - வாயுதேவன்.** (யுத் : 478)

## ஆ

100 **ஆக - 5. முழுவதும்.** தன் படரல்குல் ஆகக் கண்டு. (பா : 1004)

**6. மேற்கூறியவாறு.** இவ்வாறு ஆக ராகவனை அவ்வழிக் கண்டான். (யுத் : 823)

**7. பொருந்துமாறு.** அன்னவனும் அன்னதனை ஆக உரை செய்தான். (யுத் : 3658)

102 **ஆகுலஞ் செய்தல் - துன்பஞ் செய்தல். கலக்கத்தை உண்டாக்குதல்.** வேலைக்கோர் ஆகுலஞ் செய்தவே. (யுத் : 997)

102 **ஆசறுதல் - 2.** + ஆசறக்கொன்று. (யுத் : 375)

**3.** + கடையுக நாள் சுட்டாசறுத்து உலகுண்ணும் அச்சுடரோன் என. (யுத் : 3367)

103 **ஆசு - 1.** + ஆசில் பரதாரம். (யுத் : 84)

104 **ஆடகக் குன்றம்.** (யுத் : 369)

107 **ஆடுதல் - 19. காணப்படுதல்.** நளிர் நாட்டில் ஓர் பூடும் ஆடுதல் இல்லை இப்புவியில். (யுத் : 682)

107 **20. எதிர்த்தல்.** பகையாடிய வானவன். (யுத் : 1738)

**21. உண்டாக்குதல்.** வானவர் பல்வகையூர் புகையாடிய நாள். (யுத் : 1738)

**22. செய்தல்.** உன்னோடு இன்னே ஆடுவென் விளையாட்டென்ன. (யுத் : 1909)

107 **ஆண்டகை வீரன் - (யுத் : 3834)**

107 **ஆண்டலை - ஆண்டலைப் பறவை.** ஆண்டலை நிகர்த்தன பறவை ஆடுவ. (யுத் : 794)

109 **ஆணி - 7.** + ஆணியா யுணர்மாருதி. (யுத் : 1182)
**8. காணியாட்சி.** (வை. மு)
**9.** + ஆணி இவ்வுலகுக்கான ஆழியான். (யுத் : 2900)

110 **ஆதர் - 1. அறிவிலிகள்.**
**2. எளியவர்.** (அண்)

110 **ஆதரித்தல்.** (யுத் : 2580)

111 **ஆதல் - 6.** + நல்லை யாகுதி. (யுத் : 1217)
**7.** + தீதாய் விளைதல் நனி திண்ணம். (யுத் : 306)

111 **ஆதிநாயகன் - (யுத் : 157)**

112 **ஆதிப் பண்ணவன் - ஆதி தேவனாகிய திருமால். (யுத்: 232)**

112 **ஆதிப் பரம் - முதற் கடவுள்.**

112 **ஆதியந்தங்கள் - வேதத்தின் தொடக்கம் முதல் முடிவு வரை கூறப்பட்ட பொருள்கள்.** (அண்)

112 **ஆதியம் பரம் - அழகிய ஆதிமூலம்.** (யுத் : 419)

112 **ஆதியம் பரமன் - எல்லாப் பொருள்களுக்கும் முன்னவனாகிய அழகிய பரம்பொருள்.** (யுத் : 328)

118 **ஆயிர நாமத்தாழி ஐயன் - (யுத் : 1468)**

120 **ஆயுள் - +** ஆயுளான். (யுத் : 150)

121 **ஆர்தல் - 1.** + சங்கத்தார் குரங்கு சாய. (யுத் : 1423)
**7. நன்கு அழுத்துதல்.** ஆரக்குத்தி. (யுத் : 227)

123 **ஆரழியாத சூலத்தண்ணல் - கூர்மை கெடாத சூலப் படையை ஏந்திய சிவபிரான்.** (யுத் : 3109)

123 **ஆலம் - 1.** + ஆல மன்னவர். (யுத் : 210) (சு : 619)

128 ஆவி குறைத்தல் - வரி 17 திருத்துக.

128 ஆவித்துணை - திருமாலுக்கு உயிர்த் துணையாய் இருப்பவள். (யுத் : 293)

131 ஆழித்தனி முதல் நாயகன் - சக்கரப் படையையுடைய ஒப்பற்ற இறைவனுகிய இராமபிரான். (யுத் : 3004)

132 ஆழிமின் - கடலில் தோன்றும் மின்னற் கொடி. (யுத்: 883)

132 ஆழியஞ் செல்வன் - சக்கரப்படையாகிய செல்வத்தை யுடையவன். ஆழியஞ் செல்வ. (யுத் : 2187)

132 ஆழியந்தடந்தேர் - (யுத் : 1907)

133 ஆளன - வீரரை யுடையன. வீழ்ந்த ஆளன. (யுத் : 1540)

136 ஆற்றுதல் - 5. நடத்துதல்.
13. வல்லமை யுடையதாதல்.

138 ஆறுதல் - 8. அவிதல். ஆறுகின்றிலதழல். (யுத் : 25)

138 ஆறுநால் - பத்து. ஆறு நாலாண் டவண் ண்வகி. (யுத் : 4199)

138 ஆறிரெடாறு - பன்னிரண்டு. (யுத் : 3743)

140 ஆனு - 4. நீங்காத. குன்றின் ஆனு மருங்கே இரண்டு ஆடகக் குன்றின் நின்ருன். (யுத் : 833)

140 ஆனையின் உரிபோர்த்தவன் - சிவபிரான். (யுத் : 3717)

## இ

141 இகல் இயற்றுதல் - போர் செய்தல். இகல் இயற்றுவான் மிடைந்து நின்ற படைவேலை. (யுத் : 2022)

145 இஞ்ஞான்று - இந்நிலையில். (யுத் : 2163)

146 இட்டது - இடப்பட்டது. செயப்படுபொருளைச் செய்தது போலக் கூறுவதோர் வழுவமைதி. இட்டதோர் இரண பீடம். (யுத் : 1589)

146 இட்டிய - சிறிதாகிய. (அண்)

147 இடத்திரள்தோள் - திரண்ட இடது தோள். (யுத் : 822)

147 இடபம் - ஆனேறு. இடபம் உந்தும் எழில் இரு நான்கு தோட் கடவுள். (யுத் : 1293)

147 இடம் - 1. + இடம் படுவாளும். (யுத் : 4200)

147 இடம் வலம் நிமிரும் - இடமும் வலமுமாக வானில் நிமிர்ந்து செல்லும். (யுத் : 3730)

151 **இடுதல் - 16.** குஞ்சு பொரித்தல். குஞ்சை இட்டிலா முட்டை. (யுத் : 265)
**17.** பொருந்துதல். வம்பிட்ட தெரியல். (யுத் : 1378)
**18.** ஐயமிடுதல். உணவளித்தல். இட்டுண்டாய். (யுத் : 1616)

155 **இணை - 1.** + இணை நெடு மலர்க்கையான். (யுத் : 752)

155 **இத்தலை - 3.** இந்தப் பக்கம். (யுத் : 2164)

156 **இதழ் அதுக்குதல் -** உதட்டைக் கடித்தல். சினக் குறிப்பால் நிகழும் மெய்ப்பாடு. பல்லினல் இதழ் அதுக்கினன். (யுத் : 1167) பல்லாலே இதழ் அதுக்கும் கொடும்பாவி நெடும் பாரப்பழி தீர்ந்தாளே. (யுத் : 3892)

156 **இதாக -** இவ்வாருக. (யுத் : 1752)

156 **இது ஒன்று -** இந்த ஒரு வார்த்தை. பொய்யற்ருனும் இது ஒன்று புகன்ருன். (யுத் : 222)

157 **இந்திர நகரம் -** அமராவதி. இந்திர நகரமும் இணையிலாதது. (கி : 851) 158ஆம் பக்கத்திலுள்ள இதனை 157ஆம் பக்கத்திற்கு மாற்றுக.

157 **இந்திரன் தேவி -** இந்திராணி. (யுத் : 4002)

158 **இந்திரன் பதி -** அமராவதி. (யுத் : 139)

158 **இந்து மண்டிலம் -** சந்திர மண்டிலம். (யுத் : 3756)

158 **இந்துவன்ன நுதற்பேதை -** சீதா பிராட்டி. (யுத் : 9)

160 **இமயமால் வரை -** (யுத் : 2695)

161 **இமையா முக்கண் ஒருவன் -** (யுத் : 3608) [பா : பே]

163 **இயல் - 4.** + மண்ணியல் மனிதரும். (யுத் : 46)

165 **இரங்கல் -** வருந்துதல். எம்மை நோக்கி இரங்கலை. (யுத் : 1384)

165 **இரங்கிய இரக்கம் -** இரங்கி வருந்துதற்குக் காரணமான பரிதாபம். (யுத் : 939)

165 **இரட்டி -** + இரட்டிப் பொற்ருேள். (யுத் : 263)

166 **இரணிய ன் -** பிரகலாதன் தந்தை. (யுத் : 130) (யுத் : 176)

166 **இரணியனே நம -** (யுத் : 142) (யுத் . 308)

167 **இரவிகாதல் -** சூரிய புத்திரனுகிய சுக்கிரிவன். (யுத் : 2021)

167 **இரவிதன் பெரும்பதம் -** சூரியனது பேரரசு. தேரின்மேல் நின்று இரவிதன் பெரும்பதம் செலுத்தும். (யுத் : 135)

167 **இரவி மண்டிலம் -** (யுத் : **3728**)

168 **இராமன் என்பளவும் - இராமன் என்னும் பெயர் நிலைத் திருக்குமளவும்.** (யுத் : **1357**) [பா : பே]

170 **இருகரத்துணை - பெரிய இரண்டு கைகள்.** (கலா) (யுத்: **861**)

170 **இரு கோடுடை மதவெஞ்சிலை இளவல் - இலக்குவன்.** (யுத் : **1825**)

171 **இருஞ்சு - இருந்து. போலி.** இருஞ்சு இறை அழுங்குகின்றேன். (யுத்: **2841**)

171 **இருடிகள் - +** இருடியர் மூவரும். (கி : **174**)

172 **இருந்த நாள் - நிலைத்திருப்பதற்குரிய சிறந்த நாள்.** (யுத் : **416**)

173 **இரு நில மடந்தை - பெரிய நில மகளாகிய பூமிதேவி.** (யுத் : **2956**)

175 **இருமை - 7. நல்வினை, தீவினை.** அவர் இருமையென்றுரை செயும் கடல் நின்றேறுவார். (யுத் : **194**) இருமையுந் துடைப்பன. (யுத் : **2726**)

176 **இருள் மிடற்றிறைவன் -** (யுத் : **3283**)

178 **இல்லுறை தவத்தி - மனையில் வசிக்கின்ற கற்புடையாள்.** (யுத்: **63**)

178 **இலவும் - இல்லவும்.** (யுத் : **1740**)

179 **இலங்கையர் நாயகன் -** (யுத் : **537**)

182 **இவனுகுவான் - இவன்.** (யுத் : **1334**)

184 **இழுக்கம் - 3. இழிவு. இழிவு விளைப்பது.** இரக்கமது இழுக்க மென்றான். (யுத் : **922**)

184 **இழுகுதல் - 4. பரவி நிற்றல்.** (அண்)

184 **இழுது - இழுதாக உறைந்த நெய்.** (அண்)

195 **இழைத்தல் - +** இழையா. (யுத் : **327**)

186 **இளக்குதல் - 2 வன்மை கெடச்செய்தல்.** இளக் கருமிலங்கை. (யுத் : **3810**)

189 **இற்றை நாளளவும் -** (யுத் : **460**)

190 **இறத்தல் - 5. +** இறத்தும். (யுத் : **1445**)

191 **இறத்தும் - இறந்து போவோம்.** இறத்தும் இங்கிறை நிற்பின். (யுத் : **1445**)

191 **இறந்து தீர்தல் - +** இறந்து தீர்தி. **(யுத் : 1650)**

192 **இறுகுறத் தழுவல் - இறுக அணைத்தல்.** அன்பினேடு இறுகுறத் தழுவி. **(யுத் : 169)**

192 **இறுத்தல் - 14. சொல்லுதல்.** மாள்வது மெய்யெனு இறுத்து. **(யுத் : 1343)**

193 **இறுதல் - 8. +** இற. **(யுத் : 1302)**

193 **இறுதி - 6. அழிததற்ருெழில்.** இறுதியும் காவலும் **(யுத்: 2434)**

194 **இறுதியில்லாக் காமம் நுகரும் செல்வக் கடவுளர் கூட்டம் - கின்னரர் கிம்புருடர் ஆதியோர். (யுத் : 2701)**

194 **இறுவதாக்கிய - இறந் தொழிந்திடச் செய்த. (யுத்: 2457)**

197 **இன்னணை - இனிய படுக்கை. (யுத் : 760)**

199 **இன்னுயிர் - இனிய உயிர்.** அறத்தின் இன்னுயிரனையவன். **(யுத் : 1445)**

200 **இனிச் செயல் - இனிமேற் செய்யத்தக்க செயல். (யுத் : 324)**

203 **இனைவரும் - வருந்துகின்ற.** இனைவரும் வீடணன். **(யுத்: 320)**

## ஈ

203 **ஈசனுர் படை - பாசுபதாஸ்திரம். (யுத்: 295)**

203 **ஈட்டுதல் - 5. கொண்டு வந்து சேர்த்தல்.** தரங்கம் ஈட்டிய திரள் மணிக்குப்பையும். **(யுத் : 333)**
**6. செய்து பழகுதல்.** வேதியர்க்கு ஏதமும் இமையவர்க்கு இடரும் ஈட்டிய பாதகர். **(யுத் : 381)**

204 **ஈடுறல் - 3. போர் செய்தல்.** ஈடுறும் இவனைக்கொண்டு எளிதில் எய்தினேன். **(யுத் : 1501)**

208 **ஈர்ப்புண்டல் - +** ஈர்ப் புண்டவல்லவும். **(யுத் : 1538)**

209 **ஈரிருகால் - நான்கு முறை. (யுத் : 1962)**

209 **ஈற்றுக்கை - கடைசிக்கை. இடக்கை.** ஈற்றுக்கையையும் இக் கணத்தரிதி. **(யுத் : 1562)**

210 **ஈறு - 6. கடைசி.** ஈற்றுக்கை. **(யுத் : 1562)**

## உ

212 **உகத்தல் - +** உகந்து. **(யுத் : 964)** [பா. பே]

212 **உகு குன்று - சூரியன் மறையுங் குன்று.** உதயக்குன்றினின்று உகு குன்றிற் பாய்ந்தவன் ஒத்தான். **(யுத் : 343)**

212 உகுத்தல் - 5. கெடுதல். சானகிக்கு அழகு உகுத்து. (யுத்: 890)
6. நீங்குதல். உயிர் உக்கன. (யுத்: 1136)
7. பொழிதல். மழை உக்கன வானம். (யுத்: 1136)

213 உகுதல் - 17. நழுவுதல். அங்கைநின் றுக்கனன் கவியரசு. (யுத்: 1513)

216 உச்சிச் சொருகு பூ - தலை உச்சியிற் சொருகப்பெறும் உச்சிப் பூ என்னும் அணி. (யுத்: 3623)

215 உடல் அலைதல் - உடம்பினைத் துழாவி வருத்தல். உந்தையைச் சீறி உடலலையக் கண்டும். (யுத்: 247)

216 உடற்பொறை - + உடற்பொறை சுமக்க வந்தனென். (யுத்: 2588)

217 உடன் உதித்தவர் - உடன் பிறந்தோர். சகோதரர். (யுத்: 253)

217 உடன் கொடு - உடன் கொண்டு. (யுத்: 319)

217 உடுக்குலம் - நட்சத்திரங்களின் கூட்டம். (யுத்: 3727)

218 உடைந்தவர் - வலி தோற்றவர். (யுத்: 417)

219 உண்ட - 9. ஆளான. பிறர் முன் சொல்லா உரையுண்ட நல்லோர் என்ன. (யுத்: 2123)

219 உண்டாட்டு - போரில் வெற்றி பெற்ற வீரர் கள்ளின் தெளிவை யுண்டு மகிழ்ந்து விளையாடும் விளையாட்டு. எதிர்ந்துளோர் இருக்கையெல்லாம் சுட்டு உண்டாட்டயர்ந்தாய். (யுத்: 1616) [பா. பே]

220 உண்ணிய - 2. உண்ணுதற்கு. (யுத்: 46)

223 உணர்தல் - 7. + உணர்கிலாமையின். (யுத்: 105)

223 உணரற் பாற்று - உணரத்தகும் சிறப்புடையது. உய்த் தொன்றும் ஒழிவின்றி உணரற் பாற்று. (யுத்: 188)

225 உத்தமன் - + விபீடணன். (யுத்: 311)

226 உதயக் குன்று - உதய கிரி. (யுத்: 843)

226 உதய மெய்தல் - உதய மலையை அடைதல். உருளுறு தேரோன் உதய மெய்தினன். (யுத்: 330)

226 உதவி - உபகாரம். உற்றவிடத்துச் செய்யும் உதவி. ஒருவன் செய்த உதவியிற் கருத்திலோனும். (யுத்: 423)

227 உதவியிற் கருத்திலோன் - செய்ந்நன்றி மறந்தவன். (யுத்: 423)

227 **உதவியோன்** - பெரு நன்றியாளன். தமியனேனுக்கு உயிர்தந்த உதவியோனே. (யுத்: 867)

227 **உதவுதல்** - 7. + உதவியோனே. (யுத்: 867)

228 **உதிரப்பேராறு** - (யுத்: 1391)

228 **உதைத்தல்** - 5. வில் நாணை இறுக வலித்தல். உதைத்தவன் சிலையில். (யுத்: 2896)

229 **உந்தார் துயர்** - மேன் மேற்கிளர்ந்து நிறையும் துன்பம். (அண்) (யுத்: 1709)

229 **உந்தாரிய** - கொடுத்தற்கரிய. (அண்)

229 **உந்துதல்** - 4. + உந்த நின்ற. (யுத்: 1313)
18. மேன்மேற் கிளர்தல். உந்தார் துயரம். (யுத்: 1709)
19. கொடுத்தல். யானலது யார் தருவார் உந்தாரிய உயர்ந்த வுள்ளவெலாம். (யுத்: 1713)

231 **உப நிடதங்கள்** - வேதத்தின் ஞான காண்டம். (யுத்: 153)

231 **உம்பர் நாடு** - 2. விண். (யுத்: 2153)

232 **உம்பர் வானகம்** - மேலுலகத்திலுள்ள வீர சுவர்க்கம். (யுத்: 525)

233 **உமைக்கொருபாகன்** - (யுத்: 2418)

233 **உமைகோன்** - (யுத்: 4029)

233 **உமையொரு கூறன்** - (யுத்: 1866)

233 **உய்த்திடுதல்** - தள்ளி விடுதல். வெள்ளத் துய்த்திடுவீர். (யுத்: 229)

225 **உயர்தல்** - 1. மேன்மையடைதல். உயர்குவர். (யுத்: 1255)

236 **உயர்வினேடுபார்நிதது** - (பா: 100) என்று திருத்துக.

237 **உயிருக்கு நேயம்** - உயிர்களிடத்து அன்பு. (யுத்: 328)

238 **உயிர் கோணெறி** - உயிரைக் கொள்ளும் போர்முறை. (அண்)

239 **உயிர் தந்தீயும் மருந்து** - உயிரை மீட்டுத் தருதற்குரிய மருந்து. (யுத்: 2971)

239 **உயிர் நேடுதல்** - உயிரைத் தேடியறிதல். உயிர் நேடுவேம் போல் உடல் அளையக்கண்டும். (யுத்: 297)

241 **உயிர் புகுதல்** - 2. உயிர் மீண்டும் புகுந்ததாகிய தன்மை. உள்ள முவந்தாள் உயிர் புகுந்தாள். (யுத்: 1669)

241 **உயிர் விடு** - + உயிர் வீடாதுரை செய்தாய். (யுத் : **1145**)

243 **உரஞ்சுடுதல் - வல்லமையை அழித்தல்.** புள்ளின் பாகனும் அமரர் வேந்தனும் உரஞ்சுடுகிற்கிலர். (யுத் : **3430**)

246 **உரிமை - 6. தகுதி.** உரிமை மாண்டனே. (யுத் : **1310**)

246 **உரிமை புரிதல் - உரிமைப் பணிகளைச் செய்தல்.** (அண்)

246 **உரு - 2.** + ஆயிர உருச்சரம். (யுத் : **1438**)

247 **உருகுதல்** - + என்புற உருகுதி. (யுத் : **311**)

250 **உருவெளி - ஒளியுடன் கூடிய அழகிய உருவம்.** (அண்)

250 **உருளுறு தேரினன் - சூரியன்.** (யுத் : **433**)

250 **உலகந்தாங்குஞ் சக்கரத்தவன் - திருமால்.** (யுத் : **2138**)

253 **உலகளந்தான் - திருமால்.** (யுத் : **1123**)

257 **உலாவுதல் - 7. சுழலுதல்.** நீருலாவுமிலங்கை நெடுந்திரு. (யுத் : **751**)

259 **உவமம்** - (யுத் : **1480**) [பா : பே]

259 **உவர்ப்புத்தரை - நெய்தல் நிலம்.** (யுத் : **689**)

260 **உழக்குதல் - 6. மிதித்தல்.** ஒன்றின்மேல் ஆயிரம் உழக்கிவிட் டெழுப்புவீர். (யுத் : **1265**)

262 **உழுந்துருள் பொழுது** - (யுத் : **2870**)

263 **உழைப்பொலி உண்கண் - மான்விழிபோன்று விளங்குகின்ற மையுண்ட கண்.** உழைப்பொலி உண்கணீர்த்தாரை மீதுக. (யுத் : **3898**)

265 **உள்ளமோடல் - மனம் விரும்பிச் செல்லுதல்.** ஒரு தனிப் பேடை மேல் உள்ள மோடலால். (யுத் : **337**)

265 **உள்ளுறுதல் - 2. உள்ளே பொருந்துதல்.** உள்ளுற்று உறைகின்றாரும். (யுத் : **250**)

265 **உள்ளுறு முணர்ச்சி - மனத்தின் கண்ணே பொருந்திய உள்ளுணர்ச்சி.** (யுத் : **166**)

266 **உளதிலை - உள்ளது என்பது இல்லையாகும்.** நின்னின் வேறுளதிலை நெடியோய். (யுத் : **4018**)

267 **உளவை - 2. உள்ளவற்றை.** அறிவின் அப்புறத் துளவை ஆய உபநிடதங்கள் ஓதுவ. (யுத் : **192**) [பா : பே]

267 **உளவையா - உள ஐயா.** (யுத் : **192**)

267 **உளென் - உள்ளேன்.** (யுத்: **171**)

272 **உறச் செய்தல் - அடையச் செய்தல்.** சேமவீடுறச் செய்வது. (யுத்: **172**)

272 **உறுகிரி - மிக்க மலைகள்.** (யுத்: **683**)

272 **உறுகுறை - பெரிய குறை.** (அண்)

273 **உறுதல் - 1.** + உறுபதம். (யுத்: **172**)
**2.** + சேமவீடுறச் செய்வது. (யுத்: **172**)

274 **உறுதி பிடித்தல் - உறுதிச் சொல்லை ஏற்றுக் கொள்ளுதல்.** பிறந்த என் உறுதி நீ பிடிக்கிலாய். (யுத்: **324**) பிறந்த என் உறுதி நீ பிடித்தியால். (யுத்: **324**) [பா: பே]

278 **உன்னுதல் - 2** + உன்னினை. (யுத்: **312**)

## ஊ

280 **ஊடல் -** + வணங்குதல் ஊடல் நாளினும் உளதோ. (யுத்: **271**)

285 **ஊழி - 8. பழமையான இடம்.** மொய்த்த குன்றை அம்மூல ஊழிவாய் வைத்து மீடியால். (யுத்: **2771**)

285 **ஊழிகாண்டல் - ஊழிக்காலம் வரையில் வாழ்தல்.** ஊழி காண்குறும் நின்னுயிர். (யுத்: **317**) ஊழி காண்கிற்கும் வாணாள் உந்தையை உயிர் பண்டுண்டான்.. (யுத்: **920**)

285 **ஊழித்தீ -** + ஊழித் தீயையும் அவிய ஊதுவான். (யுத்: **1530**)

288 **ஊற்றம் - 13. மனத் திண்மை.** ஊற்றமில்லவன். (யுத்: **164**)

289 **ஊறுதல் - 1.** ஊறுகின்றன கிணறு. (யுத்: **25**)
**11, பொருந்துதல்.** தொடையூற்றின் கணைமாரி. (யுத்: **3715**)

290 **ஊன்றல் - 4. எதிர்த்தல்.** (அண்)

291 **ஊனுடை உடம்பு -** + ஊனுடைப் பொறை உடம்பினன். (யுத்: **547**)

## எ

294 **எஞ்சுதல் - 7. சிதைந்தொழிதல்.** எஞ்சும் உன்கிளை. (யுத்: **292**)

294 **எட்டாமை ஈறு பத்தின் எழுதிரை வளாக வேந்தர் - எழு கடல் சூழ்ந்த உலக வட்டத்தை ஆள்கின்ற பதினெட்டுத் தேயத்தினராய வேந்தர்கள்.** (அண்) (யுத்: **4284**) [பா: பே]

295 எட்டமை ஈறு பத்து - பதினெட்டு. எட்டமை ஈறுபத்தின் எழுதிரை வளாக வேந்தர். (யுத் : 4284) [பா : பே]

205 எட்டெழுத்து - அஷ்டாக்ஷரம். (யுத் : 173)

295 எட்டென இறுத்த பத்தின் ஏழ்பொழில் வளாக வேந்தர் - எட்டென முடிக்கின்ற பத்து (பதினெட்டுப்) பிரிவுடன் எழுகின்ற பூமி வட்டத்து அரசர்கள். (வை. மு) எட்டென முடிகின்ற பத்து (பதினெட்டுப்) பிரிவான ஏழு பூமி வட்டத்து மன்னர்கள். (கலா) (யுத் : 4284)

296 எடுத்தது - மேற்கொண்டது. நின் அறிவின் எடுத்தது என் இது. (யுத் : 154)

296 எடுத்தல் - 22. மேற் கொள்ளல். போர் எடுத்தெதிர் புகுந் துளோர். (யுத் : 2026)

297 எதிர்த்து நாட்டுதல் - தடுத்து நிலை நிறுத்தல். (அண்)

298 எண்கணன் - எட்டுக் கண்களையுடைய பிரமதேவன். அமையாத எண்கணனும். (யுத் : 1281)

299 எண்டகு கருமம் - மதிக்கத்தக்க செயல். (யுத் : 1486)

301 எண்ணுதல் - + எண்ணினை. (யுத் : 312)

302 எண்ணுநீர் - எண்ணுந்தன்மை. எண்ணுநீர் கடந்தானை. (யுத் : 3600)

302 எண்ணுறும் - எண்ணிக் கவலைப்படத்தக்க. எண்ணுறு நகரம். (யுத் : 1363)

304 எத்தல் - மோதித் தாக்குதல். பனிபடும் சிகரம் எத்த மேற் செல எறிந்தனர். (யுத் : 1150)

304 எத்தனைவர் - எத்தனை பேர். (யுத் : 3410) [பா : பே]

305 எதிர்த்தல் - + எதிர்க்கிலேன். (யுத் : 1481)

305 எதிர் தருதல் - எதிர்ப்பட்டுக் காணுதல். இச்சேது என்னும் இங்கு இதின் எதிர்ந்தோர் புன்மை யாவையும் நீங்கு மன்றே. (யுத் : 4089)

305 எதிர்த்தல் - 6. + எதிர்வார். (புத் : 1703)

308 எம்போலியார் - எம்மைப் போலும் சிற்றறிவினர். (யுத் : 241)

308 எம்முனோன் - (யுத் : 1330)

309 எய்தக் காணுதல் - நன்ருகப் பார்த்தல். இலங்கையை எய்தக்கண்டான். (யுத் : 780)

311 **எயிறு - 1.** எயிற்றிரும்புரை. (யுத்: 319)
314 **எரியின் திருமைந்தன் -** (யுத்: 1037)
315 **எருவை வேந்தர் உடன் பிறந்தார் - உடன் பிறந்தவர் களாகிய கழுகரசர்கள்.** சடாயு சம்பாதி. (யுத்: 2011.
317 **எல்லை - 3.** எல்லையில் பெருக்கு. (யுத்: 326)
317 **எலாம் - எல்லாம்.** (யுத் : 503)
317 **எலும்பு - என்பு.** (யுத்: 1565) [பா : பே]
317 **எவ்வம் - 2.** + எவ்வமில் ஆற்றலானை. (யுத்: 1417)
317 **4. இளிவரவு.** (யுத்: 53)
317 **எவ்வம் தீர்தல் - இளிவரவு நீங்குதல்.** ஏயினர் உயிர் குடித்து எவ்வந்தீர்கிலம். (யுத் : 33)
317 **எவ்வுலகங்களுங் கடந்தவன் -** (யுத்: 4052)
318 **எவ்வளவை - எப்பொழுது.** (யுத்: 2962)
318 **எவன - எவனுடைய.** (யுத்: 3614)
319 **எழுத்து - 2. வேதம்.** எழுத்தெனச் சிதைகிலா இராமன் தேர். (யுத்: 3743)
320 **எழுதல் - 11. உயர எழுதல்.** நெருப் பெழுந்திட்டது விசும் பெட்ட. (யுத்: 215)
**12. செல்லுதல். போதல்.** பொருக்கென எழுதும். (யுத்: 321)
320 **எழுதிரை வளாகம் - ஏழு கடலாற் சூழ்ப்பட்ட பூமி.** (அண்) (யுத் : 2517)
321 **எழுப்புதல் - எழச் செய்தல்.** எழுப்பலம். (யுத்: 1265)
321 **எழுபஃது - எழுபது.** (யுத்: 4063)
321 **எழு மழை - ஏழுமேகங்கள்.** (யுத் : 2047)
322 **எழுவகை முனிவர் -** (யுத் : 3038)
322 **எள் - 2.** + எள்ளில் எண்ணெயுமான. (யுத் : 250)
322 **எள்ளுதல் - 6. இகழ்ந்து வெறுத்தல்.** எள்ளக்கட்டி எடுத்து விசித்து. (யுத் : 229)
325 **எற்றுதல் - 10. வெட்டுதல்.** எற்றின குற்றின ஈர்ந்தன படை யாவும். (யுத் : 213)
325 **எற்றை நாளினும் -** + எற்றை நாளினும் உளனெனும் இறைவ னும் அயனும். (யுத்: 132)
326 **எறிதிரைப் பரப்பினுற்ற பாற்கடல் - வீசுகின்ற அலை களின் மிகுதியோடு கூடிய பாற்கடல்.** (யுத் : 270)
330 **என்னுனவாறு - முடிந்தது எவ்வாறு.** என்னுன வாறிதுவோ. (யுத் : 1665)
332 **எனைத்து - எத்தகைய தொன்று.** எனைத்தாயதோர் பொருளால் இடை தடையில்லதை விட்டான். (யுத் : 3043)

# ஏ

334 ஏகம் முதல் - ஒரு வித்து. ஏகம் முதற் கல்வி. (பா : 167)

334 ஏகராசி - ஒரே இராசி. (அண்)

335 ஏங்கிய விம்மல் - ஏக்கங் கொள்ளுதற்குக் காரணமாகிய அழுகை. (யுத் : 1939)

336 ஏத்தரும் உறுதி - கொண்டாடுதற்கு அருமையான நன்மை. (யுத் : 401) (பா : பே)

337 ஏத்துதல் - 2. + ஏத்துதி. (யுத் : 311)

337 ஏதி - + ஏதி வெந்திறலினுய். (யுத் : 1500)

337 ஏதிலன் - 2. பகைவன். ஏதிலன் மிகுதியெல்லாம் இயற்றிய பின்னர். (யுத் : 3673)

338 ஏந்தற் பன்மணி எறுழ்வலித் திரள்புயத்திராமன் - (யுந் : 3771)

338 ஏந்தொழில் இராவணன் - 1. பிறரை வருத்துவதைத் தொழிலாகக் கொண்ட இராவணன். ஏம் - வருத்தம். இங்கு வினைத்தன்மைப்பட்டு நின்றது. (அண்) (யுத்: 363)
2. ஏவுகின்ற தொழிலேயுடைய இராவணன். (உ. வி.) (யுத்: 363)

339 ஏம் - 3. வருத்தம். (அண்) ஏந்தொழில் இராவணன். (யுத்: 363)

340 ஏய்தல் – 3. வந்து சேர்தல். ஏயும் நம் பகைவன். (யுத் : 709)

344 ஏவது – என்ன. ஏவதவ்வுரை விளம்புதி. (யுத் : 172)

344 ஏவர் - 2. ஏவர்க்கும் சிறியையல்லே. (யுத் : 1362)

345 ஏவாதன - முன்பு ஒரு போதும் ஏவப் படாதன. ஏவாதன யாவையும் ஏவினனுல். (யுத் : 169)

345 ஏவுதல் - + ஏவுதியென்னின். (யுத் : 259)

348 ஏழை - 6. ஏழ்மையுடையவன். செல்வ மிகுதியில்லாதவன். ஏழை நீ என் பெருஞ் செல்வமெய்திப் பின் வாழவோ கருத்து. (யுத் : 310)
7. மடப்பம். ஏழை மகளிர் அடிவருட. (யுத் : 1666)

349 ஏற்றகை மாற்ருமை - (யுத் : 1109)

350 ஏற்றம் - 11. பெருமை. ஏற்றம் மீக்கொண்ட. (யுத் : 541)

351 ஏற்றிலா - ஏற்புடைமையல்லாத. (அண்)

351 ஏற்றை - ஆற்றலோடு கூடிய ஆண்பால் விலங்கு. (அண்)

354 ஏன நாடு - ஏனைய நாடு. (யுத்: 2692)

354 ஏனை - 2. என்னே. (அண்) கொற்றமும் ஏனையுற்றனர். (யுத் : 1296)

## ஐ

355 ஐஞ்ஞூற்றே ழிரண்டின் இரட்டு - (யுத்: 811) [பா: பே]
359 ஐயன் - 5. பேரறிஞன். (பிரகலாதன்) ஐயனைப் பெய்தனர். (யுத்: 215)
359 ஐயா - + நில் ஐயா. (யுத்: 1712)

## ஒ

361 ஒட்டிய - 3. (யுத்: 373)
362 ஒடித்தல் - பெயர்த்தல். நன்கொடித்து. (யுத்: 681)
362 ஒடியாவலி - தளராத பெருவன்மை. (அண்)
363 ஒடுங்குதல் - 13. அடங்கித் தணிதல். தான் ஒடுங்காது என்றஞ்சித் தருமமும் சலித்த தம்மா. (யுத்: 269)
363 ஒண்கவி - விளக்கம் அமைந்த வானரம். (யுத்: 683)
363 ஒண்ணகர் - ஒள்ளிய (இலங்கை) நகர். ஒண்ணகர் ஆறுகின் றிலது அழல். (யுத்: 25)
365 ஒதுங்கல் - 3. + ஒதுங்கின வேலை எங்கும். (யுத்: 919)
366 ஒப்பு - 6. + செயிர் ஒப்புறும் இந்திரசித்தை. (யுத். 1739)
367 ஓர் - + ஓரந்தணன். (யுத்: 151)
367 ஒரு - 1. ஒரு தக்கோன். (யுத்: 149)
367 ஒரு கால் - ஒரே சமயம். பொன்னூர்சிலை இரு கால்களும் ஒரு கால் பொறையுயிரா முன்னுளினில் இரண்டாம் பிறை முளைத்தா லென வளைத்தார். (யுத்: 3007)
368 ஒருங்குதல் - 6. அற்றொழிதல். (அண்)
9. ஒன்ருகத் திரண்டெழுதல் செரு ஒருங்குளதெனில். (யுத்: 102)
369 ஒரு நாள் - ஒரு நாளாகிய சிறு பொழுது. ஐயா ஒரு நாளும் அயர்த்தனையோ. (யுத்: 231)
371 ஒருவன் - 3. ஏகன். தனி முதற் பொருள். (யுத்: 170)
371 ஒரு விலாளர் - ஒரு தன்மையான வில்லாளர். (அண்)
373 ஒல்லுலை - ஊதுலை. கொல்லன் ஒல்லுலை. (யுத்: 6) [பா: பே]
373 ஒலி கொள்ளல் - எதிரொலி எழுப்புதல். நிமிர் கையெடுத்து மெய்கலங்கி உடுத்த திசை அனைத்தினுஞ் சென்று ஒலிகொள்ள உறுதுயரால் ... பரமே என்றழைப்ப. (ஆ: 40)
373 ஒலித்தல் - ஆரவாரஞ் செய்தல். ஒலியாது. (யுத்: 2912)
374 ஒழிதல் - 2. + ஒழிசில புகலுதல். (யுத்: 315)
374 ஒழிவரும் உதவி - அழியாத பேருதவி. (அண்)
375 ஒழுக்குதல் - 5. செல்லும்படி செய்தல். செலுத்துதல். ஒழுக்கினர் நிருதரை உதிர ஆற்றினே. (யுத்: 1774)

375 **ஒள் வாள் - சிறந்த ஒளி.** ஒள் வாள் இழை படிந்த இள வெண் ணிலவு ஈன. (யுத் : 812)

375 **ஒளிதல் - 2. கலத்தல்.** உடைக் கருந்தனி நிறம் ஒளித்துக் கொண்டதால். (யுத் : 467)

3. ஒடுங்குதல். நூன்மறைந் தொளிப்பினும். (யுத் : 1779)

377 **ஒற்றை - அண்டகோளம்.** (யுத் : 132)

377 **ஒற்றை உரக்கரி - உரம் படைத்த தனி யானை.** (அண்) (யுத் : 225)

378 **ஒற்றைச் சரம் - ஓரம்பு.** (யுத் : 1829)

378 **ஒன்றல - ஒன்று அல்ல.** ஒன்றல பலப்பல உறுதி கூறினன். (யுத் : 315)

378 **ஒன்றலில் பொருள்கள் - தம்முள் ஒவ்வாதனவாகிய பல வேறு பொருள்கள்.** ஒன்றலில் பொருள்களெல்லாம் ஒருவன் புக்குறைவன் என்றாய். (யுத் : 253)

379 **ஒன்றுதல் - 8. வேறுபடாமை.** ஒன்றலில் பொருள்கள். (யுத் : 253)

9. ஒத்தல். செலவொன்று கணைகள். (யுத் : 3682)

## ஓ

380 **ஓகம் - பெருங் கூட்டம்.** (அண்)

381 **ஓங்கிய மேனிலை - உயர்வற உயர்ந்த சிறப்பியல்பு.** (யுத் : 190)

382 **ஓங்கு வாளரவின் நாமத் தொரு தனிப்படை - உயர்ந்த தாகிய நாகத்தின் பெயர் கொண்ட படை; நாகாஸ்திரம்.** (யுத் : 2138)

382 **ஓட்டர் - தூதர்.** (அண்)

383 **ஓட்டின் மேற்கொண்டதானை -** (யுத் : 3291)

384 **ஓட்டைப் பொருப்பதம் -** (அண்) (யுத் : 1430) [பா : பே]

387 **ஓய்தல் - 5.** + ஓய்வன, (யுத் : 1715)

7. + ஓய்வவே. (யுத் : 1795)

388 **ஓர் - சிறிது; அற்பம்.** வண்மையில்லை ஓர் வறுமை யின்மையால். [பா : 84]

388 **ஓர்தல் - 5.** இடை விடாது சிந்தித்தல். ஓரச் சொல்லுவதெப் பொருள். (யுத் : 159)

6. எண்ணிப் பார்த்தல். ஊழிகாண்கிற்கும் நின்னுயிர். ஓர்கிலாய். (யுத் : 317)

389 **ஓராசை ஒருவன்மேல் உயிராசைக் குலமகள் - பல திறப் படாது ஒரு திறப்பட்ட ஆசையை யுடைய ஒப்பற்ற இராமன்மேல் உயிர் ஆசையையுடைய குல மகளாகிய சீதை.** (யுத் : 3888)

உ

# ஸ்ரீமத்

# கம்ப ராமாயண அகராதி-II

---

## க

**கக்குதல் - வாந்தி செய்தல்.** உதிரம் வாய்வழி கக்கிலா உயிர்களு மில்லை காண்பன. (யுத் : 3732) கக்கினன் குருதிவெள்ளம். (யுத் : 2530)

**ககனம் - ஆகாயம்.** கருவியுற்ற ககனமெலாம். (பா : 696) ககன முட்டை. (யுத் : 260)

**ககன முட்டை - அண்ட கடாகம். உலக உருண்டையாகிய முட்டை. (அண்) (முட்டை - அண்ட கோளத்தின் ஓடு)** கிளர்ந்தது ககன முட்டை கிழிந்தது கீழும் மேலும். (யுத் : 260) நீளிருங் ககன முட்டை. (யுத் : 280)

**கங்கச் சிறைக் கணை - பருந்திறகு கட்டப்பட்ட கணை. தெரிந்த வெங்கணை.** கங்க வெஞ் சிறையன்ன திறத்தான். (யுத் : 3762)

**கங்கணம் - முன் கை வளையுள் ஒன்று. வளையல். வாகு வலய முமாம். வீரர் அணியும் தோள்வளை.** சலஞ்சல மலம்பு தவளக் கங்கணங்களும் இலங்கியகரம் பிறழவே. (ஆ: 16) தாலஞ் சார்ந்த மாசுண மெனக் கங்கணந்தழுவ. (யுத் : 3614) கங்கணம்தொடு கவசமும் முட்டிறக் கழல. (யுத் : 2470)

**கங்க சாலம் - பருந்துக் கூட்டம்.** கங்கசாலந் தொடரக் கடற் செலூஉம் வங்கம். (யுத் : 1014)

**கங்க பத்திரம் - அம்பு வகையுள் ஒன்று. கழுகுகளின் சிறகுகளை யுடையது எனப் பொருள்படும். (கங்கம் - கழுகு; பத்திரம் - சிறகு)** ஆய்ந்த கங்க பத்திரங்கள் புக்கு அரக்கர் ஆவி தோய்ந்த. (ஆ : 518) (யுத் : 2041)

**கங்கம் - 1. கழுகு; பருந்து.** கங்கமொடு காகமிடை யக்கடலின் ஓடும் வங்கம். (ஆ : 537) கங்கம் வந்துற்ற செய்ய களம். (யுத் : 1233)
**2. ஒரு தேசம்; அதிலுண்டாகும் பொன்.** கங்கமார் பெருங் கவசமும் இற்று. (யுத் : 2470)

**கங்கர் - கங்க நாட்டரச பரிவாரங்கள்.** (அண்) கங்கர் கொங்கர் கலிங்கர். (பா : 1194)

**கங்கள் - சிரசுகள்.** (கம் என்பதன் பன்மை) இழிசெம்புனல் பம்ப அலைந்து அம் கங்கள் நிரம்பி அலம்பியதால். (யுத் : 2932)

**கங்கு - 1. பருந்துகள்.** அம் கங்கு இழி செம்புனல். (யுத் : 2932)

2. இருள் கங்கு பூசிவருகின்ற கலிகாலம் எனவே. (ஆ : 14) [பா. பே.]

**கங்குல் - 1. இரவு.** கங்குல் வந்த திங்கள். (பா : 800)

2. இருளுக்கு இலக்கணை. கங்குல் பூசி வருகின்ற கலி காலம் எனவே. (ஆ : 14)

**கங்குல் அரசன் - இரவாகிய அரசன்.** கழிந்த கங்குலரசன் கதிர்க்குடை விழுந்த தென்னவும் (பா: 711)

**கங்குல் மாலை - இராப்பொழுது. கங்குற்பொழுது.** காமவிற்குடை கங்குன் மாலை கழிந்தது. (அ : 236)

**கங்குலின் நள் - நடு யாமம்.** நாழிகை கங்குலின் நள்ளடைந்த பின்றை. (அ : 186)

**கங்குலின் நிறத்தினன் - இருள்போலக் கருநிற முடையவன். விபீடணன்.** கங்குலின் நிறத்தினன்தன் கண் மலைழத்தாரை கான்ற. (யுத் : 431)

**கங்குலும் பகல் பட - இருட் பொழுதும் ஒளிமிகுதியினுல் பகற் பொழுதாக விளங்க.** பன்மகுடம் இள வெயில் எறிப்பக் கங்குலும் பகல்பட வந்தான், (சு : 407)

**கங்குற் கனகன் - இரவாகிய இரணியன்.** மீனுடை எயிற்றுக் கங்குற் கனகனை வெதண்டு. (பா : 975)

**கங்குற் பொழுது - இராக்காலம்.** கங்குற் பொழுதுந் துயிலாத கண்ணன். (யுத் : 3)

**கங்குன் மாலை - கங்குல் மாலை பார்க்க.**

**கங்கை - பகீரதன் பெரு முயற்சியாற் கொணரப்பட்ட கடவுண்மா நதி.** கங்கை தந்தவன் வழிக் கடவுள் மன்னன். (யுத் : 95)

**கங்கைக் கிறைவன் - கங்கைக்குத் தலைவன்; கங்கையைக் கொணர்ந்த பகீரதன் வழித் தோன்றல்; இலக்குவன்.** கங்கைக் கிறைவன் கடகக்கை புடைத்து நக்கான், (அ : 410)

**கங்கை சூடி - சிவபிரான்.** கங்கை சூடிதன் கடுஞ்சிலை. (யுத் : 324)

**கங்கைத்திரு நாடுடையான் - இராமபிரான்.** கங்கைத் திருநாடுடை யானைக் கண்டு நெஞ்சங் களிகூர. (யுத் : 11)

**கங்கைத் தீம் புனல் நாடன் - கங்கை நதியின் இனிய புனல் வளம்படுக்கும் நாட்டையுடைய மன்னவன் குமாரனுகிய இராமன்.** (பா : 409)

**கங்கை தந்தவன்** - பகீரத சக்கரவர்த்தி. (யுத் : 95)

**கங்கை நீர் நாடன்** - தசரதன். கங்கை நீர்நாடன் சேனை. (பா : 1118)

**கங்கையந் தொங்கல்** - கங்கையாகிய மாலை. (கலா) சூழிபடு கங்கையந் தொங்கல் மௌலியான் விழிபட வெந்ததோ. (பா : 361)

**கங்கையந் தொங்கல் மௌலியான்** - கங்கையாற்றையும் அழகிய (கொன்றை) மாலையையும் அணிந்த முடியினையுடைய சிவபெருமான். (அண்) (பா : 361)

**கங்கையின் கணவன்** - கங்கா நதிக்குத் தலைவனாகிய சிவபெருமான். கங்கையின் கணவன் அக்கறைமிடற்றிறைவனே உங்கள் வெங்கத வலிக் கொருவன். (கி : 186)

**கங்கைவார் சடைக்கற்றை** - கங்கை ஒழுகும் சடைத் தொகுதி. வெண்ணிறக் கங்கைவார் சடைக் கற்றையன். (அ: 635)

**கங்கைவார் சடையோன்** - கங்கை பெருகா நின்ற சடை முடியை யுடைய சிவபெருமான். கங்கைவார் சடையோனன்ன மாமுனி கனல. (பா : 1015)

**கச்சம்** - 1. ஆமை. (சு : 42)
2. ஒப்பந்தம்; சபதம். கச்ச முற்றவன். (யுத் : 2463)

**கச்சமுற்றவன்** - சூளுறவு கொண்டவன். (கலா) ஆடையை இறுக உடுத்துப் பொருவோன். (அண்) கச்சங் கட்டிக் கொண்டு வந்தவன். கச்சமுற்றவன் கைத்துணைக் கடுமையைக் காணு அச்சமுற்றனர். (யுத் : 2463)

**கச்சு** - 1. அரைப் பட்டிகை. கற்றை மாசுணம் உரித்த உரி கச்சு ஒளிரவே. (ஆ : 15)
2. இடையில் உடையை இறுகப் பிணிக்கும் ஒருவகை உடை. கச்சொடார்த்த கறைக் கதிர் வாளினன். (அ : 651)

**கச்சை** - யானைக் கழுத்திடு கயிறு. கச்சையங் கடகரி. (அ : 26)

**கச்சையங் கட கரி** - கச்சையை யுடைய அழகிய மத யானை. (அ : 26)

**கசகோமுகன்** - வானர சேனைத் தலைவன். மயிந்தன் மற் கச கோமுகன் தன்னொடும் வந்தான். (சு : 718) கோகச முகன். (யுத் : 4328)

**கசட்டுடை முனி** - அழுக்குடை யணிந்த முனிவன். (அண்) (பா : 483)

**கசட்டுறு முனி** - கோபம் மிக்க முனிவன். (வை. மு.) (பா : 483) [பா. பே.]

**கசட்டுறு வினை - குற்றம் மிக்க தீவினை.** கசட்டுறு வினைத் தொழிற்கள்வ ராயுழல் அசட்டர்கள். (பா : 256)

**கசடறு முனி - குற்றமற்ற முனிவன்.** (கலா) (பா : 483) [பா. பே.]

**கசடு - 1. குற்றம்.** கசட்டுறு வினைத் தொழிற் கள்வர். (பா : 256) [பா. பே.]

**2. அழுக்குடை.** (அண்) (பா : 483)

**3. கோபம்.** (உ. வி) (பா : 483)

**4. கீழ்மை.** (கலா) கசட்டறுவினைத் தொழிற் கள்வர். (பா : 256) [பா. பே.]

**கசரத துரகம் ஆள் - யானை, தேர், குதிரை, காலாள் என்னும் நால்வகைப் படை.** கசரத துரகமாட் கடல்கொள் காவலன் தசரதன். (பா : 201)

**கசிவுறுதல் - மனம் இரங்குதல்.** கண்டார் விண்ணவர் கசிவுற்றார். (சு : 957)

**கஞ்சம் - தாமரை.** கஞ்சங்களை மஞ்சன் கழல் நகுகின்றது கண்டாள். (அ : 620)

**கஞ்ச நாண்மலர்க் கிழவன் - பிரமன்.** கஞ்சநாண் மலர்க்கிழவனும் கடவுளர் பிறரும். (பா : 497)

**கஞ்ச நாண் மலரோன் - பிரமன்.** கஞ்சநாண் மலரோன் அன்ன மாமுனி. (பா : 562)

**கஞ்ச மலர் - தாமரை மலர்.** கஞ்ச மலர்ப் பழிக்குங் கையபயங் காட்டினான். (யுத் : 292)

**கஞ்சுகம் - சட்டை.** முற்று மூடிய கஞ்சுகன். (யுத் : 744)

**கஞ்சுகன் - சட்டை யணிந்தவன்.** (யுத் : 744)

**கஞ்சுகி - 1. சட்டையிட்ட மெய்காப்பாளன். பிரதானி.** (கலா) கஞ்சுகி அயல் நின்றானை ஈண்டு நம் தூதர் தம்மை இவ்வழித்தருதிர் என்றான். (யுத் : 1284)

**2. கவசந்தரித்தவன்.** செம்மணியின் கற்றைச் சுடர் விட்டெறி கஞ்சுகியான். (ஆ : 83)

**கஞலுதல் - 1. மிகுதல்; நிறைதல்.** கொழுந்தொளி கஞலத் தூக்கி. (பா : 1206)

**2. விளங்குதல். சொலித்தல்.** பொன்னின்று கஞலும் தெய்வப் பூணினர். (சு : 755) (சு : 731) காசொடு கண்ணிழல் கஞல. (பா : 1310) கஞல்வ. (யுத் : 791)

**3. ஒலித்தல்.** தண்டை ஆயிர கோடிகள் ஒலியுறக் கஞல. (யுத் : 4065)

**கட்கடை - கண்களின் கடைப் பகுதி.** கட்ட காவி அம் கட்கடை காட்டுவ கழனி. (பா : 542)

**கட்கடை தைத்தல் - கடைக்கண் நோக்கம் வீழ்தல்,** கமல வாண்முக நாடியர் கட்கடை அமலன் மேனியில் தைத்த அனந்தமால். (யுத் : 3699)

**கட்கணை - கண்களாகிய அம்புகள்.** (யுந் : 3699)

**கட்கிலார் களை - களை களையாதவர்களாய்.** கடைசியர் கட்கிலார் களை. (அ : 814)

**கட்கொந்தார் குழலினர் - தேன் பொதிந்த பூங் கொத்துக்களை யணிந்த மகளிர்.** (யுத் : 4096)

**கட்செவி - 1. பாம்பு. ஆதிசேடன்.** கட்செவி யென்னக் கனல் கண்ணுள். (சு : 170) (கி : 575)

2. **கண்ணையே செவியாகவுடைய.** மலை முழையிற் கட்செவி உரகமும். (யுத் : 2294)

**கட்செவி உரகம் - கண்ணையே செவியாகவுடைய பாம்பு.** (யுத் : 2294)

**கட்சேல் - கண்ணை ஒக்கின்ற சேல்.** கட்சேல் பிடித்திழுத்திழி திரை யாற்றில். (யுத் : 1776)

**கட்டதோ - கட்டுப்பாட்டு வார்த்தை தானோ.** கருமம் கட்டளை என்றல் கட்டதோ. (கி : 405)

**கட்டம் - துன்பம். கஷ்டம்.** படர் சாபமிட முன்கட்டவன் பிறவி தந்த கடையான உடல். (ஆ: 46) கட்ட மானிடன். (யுத்: 3158) கட்டமத் தொழில். (யுத்: 3256) (யுத் : 3432)

**கட்டமைந்தவில் - உறுதியமைந்தவில்.** கட்டமைந்த வில்லும் சுமக்கப் பிறந்தேன். (அ : 432)

**கட்டமை வயிரக்கோடு - கிம்புரியாகியபூண் அணியப்பட்ட திண்ணிய தந்தங்கள். பூண்கட்டுப்பொருந்திய கிம்புரிக்கோடு.** யானை கட்டமை வயிரக் கோட்டாற் களப்பட வீழ்த்தி. (யுத் : 1902)

**கட்டல் - அழித்தல். கொல்லல்.** தெவ்வரைக் கட்டவா கண்டும். (யுத்: 738) உலகமும் உயிரும் பற்றறக் கட்டபோதல்லது மயிலைக் காண்டுமோ. (கி:537) கட்டவர். (யுத் : 1743) இராவணன் தன்னையுங்கட்டு. (யுத் : 4059)

2. **பேர்த்துவிடல். களைந்தெறிதல்.** வானவர் தம்பதியைக் கொடு கட்டவர். (யுத் : 1743)

3. **களைதல். வேரோடு அழித்தல்.** கட்டது இந்திரன் வாழ்வை. (யுத்: 1053) நிற் கட்டனென். (கி : 339)

4. **ஒழித்தல். இருப்பிடத்தினின்றும் அப்பாற்படுத்தல்.** அமரரை இருக்கை நின்றுங் கட்ட தோட் கானஞ் சுற்ற. (யுத் : 1589)

5. **அணை கட்டுதல்.** காரியம் கடலினை அடைத்துக்கட்டலே. (யுத் : 622) வேலை கட்டவன். (யுத் : 2570)

**கட்டவா கண்டும்** - அழித்தவாற்றைக் கண்டும். (யுத் : 738)

**கட்டழகு** - பேரழகு. கண்டாரே காதலிக்கும் கட்டழகும் விடமன்றோ. (ஆ : 355)

**கட்டழல்** - பெருந்தீ. கண்ணிய வினைகளென்னுங் கட்டழல் கதுவலாலே புண்ணியம் உருகிற்றன்ன பம்பையாம் பொய்கை. (ஆ : 1205)

**கட்டழித்தல்** - 1. பந்துவர்க்கத்தோடு அழித்தல். நிருதர் கோனைக் கட்டழித்திட்ட கீர்த்தி. (யுத் : 4324)

2. காவலை அழித்தல். மது வனத்தைக் கட்டழித்திட்டது. (சு : 1264) (சு : 544)

**கட்டழிதல்** - முழுவதும் அழிதல். காவலழிதல். இனிக்கட்டழிந்தது அரக்கர்குலம். (சு : 544)

**கட்டளை** - 1. உருவம் அமைத்தற்குரிய மாதிரி உருவம் (வை. மு) உவமை. (அண்) திட்டமாகச் செய்யப்பட்ட ஓர் உருவம். தெரிவை மார்க்கொரு கட்டளை எனச் செய்த திருவே. அ : 769)

2. உரைகல். (அண்) கருமம் கட்டளை என்றல் கட்டதோ. (கி : 405)

3. அளவு கருவி, (கலா) நடக்கும் நீதி. (பழையவுரை) (கி : 405)

4. முறைமை. (அண்) ஓசைக் கட்டளைக்கூறுபாடுகள். (கலா) யந்ர கீதத்திசைப்பதம் தொடர்ந்த வகையுறு கட்டளை வழாமல். (சு : 419)

**கட்டறுதல்** - 1. நிலை குலைதல். கலப்பையும் காமர்வண் தருப்பையும் பிறவும் கட்டற. (யுத் : 2947)

2. பூட்டறுதல். கற்றை வெஞ்சுடர்க் கவசமும் கட்டறக் கழித்தான். (யுத் : 1205)

**கட்டனென்** - உயிர் பறித்தேன். அவன் என் ஆருயிர்க் காதலான் எனலாலும் நிற்கட்டனென். (கி : 339)

**கட்டார் சிலை** - கட்டமைந்த வில். கட்டார் சிலை கருநாயிறு புரைவான். (யுத் : 3367)

**கட்டி** - வெல்லக் கட்டி. பசை நறவின் வினைகட்டியின் மதுரித்தெழுகிளவி. (அ : 622)

**கட்டிய** - கட்டு ஈய. சுடுதலைச் செய்ய. சுடும்படி. (கலா) வெம் புடையிற் கட்டிய நிமிர்ந்த சுடர்ச் சுடரும். (யுத் : 3951)

**கட்டு** - 1. வலிமை. பற்பல போர் விசை கட்டழிதானவர். (அ : 81) களிறுங் கட்டற. (யுத் : 1475)

2. உறுதி. இனிக் கட்டழிந்தது அரக்கர் குலம் என்று சுருதி ஈரிரண்டும் குனிக்க. (சு : 544)

3. **கட்டுப்பாட்டு வார்த்தை. புனைந்துரை.** (அண்) கருமம் கட்டளை என்றல் கட்டதோ (கி : 405)

4. **முடிச்சு.** கட்டார் கடு மத்திகை. (யுத் : 245)

5. **பூட்டு.** கவசமுங் கட்டறக் கழித்தான். (யுத் : 1205)

6 **களையப்பெற்று.** கட்டு ஒடியும் வெய்யோன். (யுத் : 3553)

7. **பூண். கிம்புரியாகிய பூண்.** கட்டமைவயிரக் கோட்டால். (யுத்'1902)

**கட்டுண்டாய் - தீயிட்டாய்.** (கலா) எரித்தாய். **உண்-துணைவினை. செயப்பாட்டு வினைப்பொருளது.** (வை. மு.) எதிர்ந்துளோர் இருக்கை யெல்லாம் கட்டுண்டாய். (யுத்: 1616)

**கட்டுதல் - 1. தொடர்புறல்.** மதப்பசை கட்டின. (ஆ : 81)

2. **உறைதல்.** திசை கட்டிய மால்கரி. (ஆ : 81)

3. **சேர்த்துக் கட்டுதல்.** தானவர் விட்டகல் பேர் இசை கட்டிய ஒத்திவர் சாமரையான். (ஆ : 81)

4. **யாதொரு தீங்கும் ஒட்டாது தடுத்தல். தடைசெய்து பிணித்தல்.** கட்டினன் கருவிகள். (யுத் : 214) கட்டினர். (யுத் : 2527)

5. **அமைத்தல்.** தொளைகட்டிய கிளை. (அ : 622)

**கட்டுரை - 1. பொருள் பொதிந்த சொல். நற்பொருள்.** கவிக்குலத் தரசும் அன்ன கட்டுரை கருத்திற் கொண்டான். (கி : 355) என் மெய்யுறு கட்டுரை. (யுத் : 4013)

2. **புனைந்துரை.** கை கடக்கவிட்டிருந்து கட்டுரைப்பதென்கொலோ. (பா : 803)

3. **உறுதிமொழி.** கட்டுரையில் விலக்கினர் தாமே. (பா : 450)

4. **சான்றுரை.** கடல் தோட்டாரெனின் வேறோர் கட்டுரையும் வேண்டுமோ. (பா : 728)

5. **கற்பனைச் சொல்.** வெவ்வினை தூண்டிடக் கட்டுரை சொல்லன் மேயினன். (அ : 141)

**கட்டுரைத்தல் - 1. புலம்புதல்.** (உ. வி.) கைகடக்கவிட்டிருந்து கட்டுரைப்பதென்கொலோ. (பா : 803)

2. **தெரிவித்தல். குறிப்பித்துக் காட்டுதல்.** யாதொன்றும் விளம்பார் கரதலத்தினுற் பட்டதுங் கட்டுரைக்கின்றார். (சு : 806) கட்டுரையிர். (அ : 213)

3. **பொருள் விளங்கச் சொல்லுதல்.** யாவருக்கும் கட்டுரைத்து. (யுத் : 170)

**கட்டுவிடுதல் - கட்டவிழ்தல்.** மணி நெடுந்தேரின் கட்டுவிட்டது. (யுத் : 3111)

**கட்டேறு காளே** - **வீர வெறி கொண்ட இக் காளை போல்வான்.** கட்டேறு நறுங்கமழ் கண்ணி இக் காளை என் கைப்பட்டால் அதுவே இராவணன் பாடுமாகும். (சு : 1005)

**கட்டை** - குற்றி. கல்லொடு மரனும் வேருங் கட்டையும். (யுத் : 1400)

**கட்படி கோதை** - **தேன் நிறைந்த மாலையை அணிந்தவளாகிய சீதை.** தவத்தின் வந்த கட்படிகோதையை நாடினர் காணுர். (ஆ : 1071)

**கட்புலக்குற்றது** - **கண்ணினது அறிவாகிய காட்சியுணர்வுக்குப் பொருளாய் வந்துள்ளது.** மெய்ப்பொருள் கட்புலக் குற்றதம்மா. (கி : 384)

**கட்புலம்** - **கண்ணுகிய புலம். கண்.** கட்புலம் பிற்பட முன்பு போனுன். (சு : 62) (சு : 65) கட்புல வரம் பிற்றுமே. (யுத் : 1986)

**கட்புலம் கதுவலாகா** - **கண்ணுகிய பொறியினுல் பற்ற (தொடர) முடியாத.** குலிசத்தாற்தும் கட்புலம் கதுவலாகா வேகத்தன். (சு : 25)

**கட்புலம் கொள்ளாமை** - **கண்ணுகிய இந்திரியம் பொருள்களைச் சென்று பற்றி புலன்களை ஏற்றுக்கொள்ளாமை; கண்ணுல் அறியாமை; காணுமை.** அங்கு ஒருவர் தம்மை ஒருவர் கட்புலங் கொள்ளாமை தீர்த்தது...... தூளி வெள்ளம். (பா : 892)

**கட்புலம் பரப்பல்** - **கண் பார்வைச் செலுத்தல்.** பாச வெங்கரத்துக் கூற்றும் கட்புலன் பரப்ப அஞ்சும். (கி : 1005)

**கட்புலம் பிற்பட** - **பார்வை பிற்பட.** மெய்ம்மை பூண்டான் அவன் கட்புலம் பிற்பட முன்பு போனுன். (சு : 62)

**கட்புலம் புதைத்தல்** - **கண்மூடிக் கொள்ளுதல்.** கூற்றமும் கட் புலம் புதைப்பக் கோத்தெழு தோற்றமும் இராவணி துணிபும் நோக்குரு. (யுத் : 1986)

**கட்புலம் புறத்து நாரு** - **வெளியே கண்திறந்து பாராத.** கட்புலம் புறத்து நாரு வன்பறழ். (சு : 7)

**கட்பொருநர்** - **துளைக்கருவியோடு கூடிய கூத்தர்.** கண்ணிமை யடைத்த சில கட்பொருநர் பாடல். (சு : 162)

**கட்பொறி** - **கண்ணுகிய பொறி. கண்.** கூற்றையுங் கட்பொறி குறுகக் காண்பரேல். (யுத் : 482) (கி : 781) புன்கட் பொறியாக்கை. (அ : 424)

**கடக்கரியான்** - **யானை போன்றவன்; கும்பகருணன். யானைச் சேனையுடையவன் எனினுமாம்.** இது எந்தை கடக்கரியானுடல். (யுத் : 1705)

**கடக்களிறு - மதநீர்ப் பெருக்கையுடைய ஆண் யானை.** கடக்களிறெனத் தகைய கண்ணன். (யுத் : 3642)

**கடக்கார் - நீரைக்கொண்ட மேகம். மதநீரையுடைய யானை.** (உ. வி) கடக்காரென்னப் பொங்கு கவந்தம். (யுத் : 3553)

**கடகம் - கைவளை.** கடகமும் குழையும் பூணும். (பா : 580) (யுத்: 1470)

**கடகரி - மதயானை.** முழங்குதிண் கடகரி. (பா : 159)

**கடங்கலுழ்தல் - மதநீரொழுகுதல்.** கடங்கலுழ் தடங்களிறு. (பா: 391)

**கடங்கார் மதயானை - மதநீரை மேகம்போற் பொழிகின்ற மதயானை.** மைக்கடங்கார் மதயானை வாள் வேந்தன் வழிவந்தீர். (யுத் : 1574)

**கடங்கொள் கார்மதக் கைம்மலை - கன்னத்திலே இழிகின்ற கரிய மதநீரையுடைய யானை.** (அ : 772b)

**கடங்கொள்ளுதல் - கடமையைக் கொள்ளுதல்.** அண்டமுழுதும் முடிவினுண்ணும் கடங்கொள் வெங்காலச் செந்தீ. (யுத் : 264)

**கடத்தல் - 1. தவறுதல்.** அபயம் என்றாற்கு அன்று நான் விரித்துச் சொன்ன காதையைக் குறித்து நின்ற அவ்வுரை கடக்கலாமோ. (யுத் : 424) அறங்கடக்கிலான். (கி : 986) [பா : பே]

**2. ஓடிவிடுதல்.** இன்னம் மாண்டு கிடத்திரோ கடத்திரோ தான். (யுத் : 2925)

**3. மிகுதல்.** காமத்தின் திறத்தையும் கடந்தது சீற்றத்தின் தகைமை. (சு : 466)

**4. அளத்தல்.** மண் கடந்து. (பா : 1154)

**5. விட்டு நீங்குதல்.** கண்கடவாது காத்த காரிகை பெரியளே காண். (பா : 1154) ஊர் கடந்தரிது கொல் இராக்கதர்க் காழி நீந்துதல், (யுத் : 47)

**6. மீறி நடத்தல்.** (யுத் : 424)

**7. துளைத்தல்.** மேருவை உருவிப்போய் விண்ணகத்தையுங் கடப்பன. (யுத் : 1552)

**8. தாண்டிச் செல்லுதல்.** இங்கார் கடத்திர் எனை என்று எழுந்தாள். (சு : 76)

**9. வெல்லுதல்.** அருஞ்சமங் கடத்தல். (யுத்: 1214)

**கடப்பாடு - கடமை.** அபயம் என்ன பொழுதத்தே அபய தானம் ஈதலே கடப்பாடு என்பது. (யுத் : 426)

**கடம் - கடமை. கடப்பாடு.** கடங்கொள் வெங்காலச் செந்தீ. (யுத் : 264) உயிர்காக்கக்கடவீர். (யுத் : 1574)

**2. காடு.** கட ஏறுகள் பட. (யுத் : 1831) கடமேய் கயிலைக்கிரி. (யுத் : 1734)

3. **கன்னம்** அங் கடங்கழிந்த பேர் அருவிக்குன்று. (யுத் : 2938) கடந்தரு மாமதக் களிறல் யானை. (பா : 620)

4. **நீர் மொள்ளும் பாத்திரம்.** கையும் கடமும் நெகிழ. (அ : 372) [பா: பே]

5. **உடல்.** அம்கடம் கிழிந்திலர் அழிந்த ஆடவர். (யுத் : 2938) கடக்காரென்ன. (யுத் : 3553)

6. **மதம்.** கடம்படு களிறு. (பா: 1245) கடம்பொரு மதக்களிறு. (யுத்: 3274)

7. **சாரல்.** குன்று சூழ்ந்த கடத்தொடும். (கி : 929)

8. **பாலைவனம்.** (அண்) குன்று சூழ்ந்த கடத்தொடும். (கி : 929)

**கடமா - காட்டா. காட்டுப்பசு.** ஊறுமாகட மாவுற. (பா : 957)

**கடமேய் கயிலைக்கிரி - காடுகள் பொருந்திய கயிலாசமலை.** (யுத் : 1734)

**கடர் - கடல்.** கடர் கடை மத்து. (யுத் : 441) (அ : 1096) (சு : 1075)

**கடல் - 1. சமுத்திரம்.** கானுங் கடலுங் கடந்து. (அ : 1)

2. **கூட்டம். தொகுதி.** வாளிக்கடல் சுமந்து. (ஆ : 997) தாரார் புரவிக்கடல். (யுத் : 1978) கடற்பெருஞ்சேனை. (யுத் : 1221)

**கடல்கொள்பேரொலிக்கம்பலை - கடலிடத்தே பொருந்திய பேரொலியை ஒத்த கம்பலை.** (யுத் : 3640)

**கடல் நாடு - கடல் சூழ்ந்த நெய்தல் நிலம்.** நளிர் கடல் நாட்டில் ஓர் பூடும் ஆடுதல் இல்லை. (யுத் : 1682)

**கடல் நுரைத்துகில் - கடல் நுரை போன்ற வெண்பட்டாடை. மெல்லிய ஆடை.** (அண்) கடனுரைத்துகில் சுற்றி. (யுத் : 1291)

**கடல் நெருப்பு - வடவை.** நிறைந்துள கருங்கடல் நெருப்பின் வாய்த்துள அக்கனை. (உ. வி.) (யுத் : 322)

**கடல் படைத்தவர் - கடலை உண்டாக்கிய சகரர்.** (யுத் : 195)

**கடல்வண்ணன் - கடல் போன்ற கரிய வண்ணனாகிய இராம பிரான்.** உலகங்காத்த மன்னனின் இளையனன்றே கடல் வண்ணன். (அ : 166)

**கடல் வலயத்தவர் - கடல் சூழ்ந்த நிலத்திலுள்ளார்.** (ஆ : 199)

**கடல் வலயம் - கடல் சூழ்ந்த நிலவுலகம்.** அயிர் கிடக்கும் கடல் வலயத்தயலறிய. (ஆ : 199) [பா : பே]

**கடலமிர்தம் - 1. பாற்கடலில் தோன்றிய அமுதம்.** (அண்)

2. **உப்பு.** (வை. மு.) சொன்மலையல்லன தொடுகடலமிர்தம். (பா : 78)

**கடலவன் படை - வருணப்படை.** (யுத் : 2381)

**கடலிடை - பூமி. கடல் சூழ்ந்தஉலகம்.** இக்கடலிடைக் கிழவோன். (அ : 51)

**கடலிடைக் கோட்டந் தேய்த்தல் - கடலின்கண்ணே கோட்ட மென்னும் வாசனைப் பொருளைத் தேய்த்துக் கலத்தல்: அது போன்ற பயனற்ற செயல் என்பதைக் குறிக்கும்.** பெருங் கடலிடைக் கோட்டந் தேய்த்தாயது என் அடிமை. (யுத் : 2845) கடலிடைக் கோட்டந் தேய்த்துக் கழிவது கரும மன்று. (யுத் : 1364)

**கடலின் வந்த தெள்ளிய திரு - திருப்பாற் கடலின் வந்த இலக்குமி தேவி.** (யுத் : 4317)

**கடலேறு - கடலிலுள்ள சுறு முதலிய வலிய மீன்கள்.** (யுத் : 1831) [பா : பே]

**கடவது - 1. செய்யத்தக்கது.** காவல் செய் அமைச்சர் கடன் நீ கடவ துண்டோ. (ஆ : 759) இனிவே றெண்ணக் கடவதென். (யுத் : 426)
**2. தாண்டுவது.** (உ. வி) (யுத் : 426)

**கடவல் - செலுத்தாதே.** பொருது நின்னைக் காக்குமா காண்டியாயின் கடவல் உன்தேரை. (ஆ : 895)

**கடவாய் - கடமைப் பட்டாய்.** அறங் காத்தற் காருமொரு துணையின்றி நீயே யோகடவாய்தான். (ஆ : 50)

**கடவால் - தகுதியாக.** கெடுவார்கள் சொன்ன கடவால். (யுத் : 2208)

**கடவாள் - கடவு ஆள். பாகன்.** கடவுள்கதழ்தேர் கடவு ஆளினெடும். (யுத் : 2240)

**கடவீர் - செய்வீர்களாக.** உயிர் காக்கக் கடவீர். (யுத் : 1974)

**கடவு - தகுதி.** சொன்ன கடவால். (யுத் : 2208)

**கடவுட் கன்னியர் - தெய்வ மகளிர்.** (ஆ : 380)

**கடவுட் சிலை - தெய்வத்தன்மை வாய்ந்த வில்.** கறுத்த மணிகண்டர் கடவுட் சிலை. (ஆ : 538)

**கடவுட்டச்சன் - விசுவகர்மா.** விஞ்சைதெள்ளிய கடவுள் தச்சன்கை முயன்று அரிதிற்செய்த தள்ளறுமனை. (சு : 1181)

**கடவுட்டிங்கள் - தெய்வத்தன்மையுள்ள திங்கள்.** வானம் கைவிளக்கெடுத்ததென்ன வந்தது கடவுட்டிங்கள். (அ : 579)

**கடவுட்டிருநதி - தெய்வத்தன்மை வாய்ந்த உயர்ந்த ஆறு.** கங்கையென்னும் கடவுட்டிருநதி. (ஆ 627)

**கடவுட்படை - தெய்வத்தன்மையுள்ள அஸ்திர சஸ்திரங்கள்.** காதிசேய்தரு கடற்கடவுள் வெம்படையினர். (கி : 83) (ஆ : 754)

**கடவுண் மன்னன்** - தெய்வீக அரசன். கங்கை தந்தவன் வழிக் கடவுள் மன்னன். (யுத் : 95)

**கடவுண் மாமரம்** - நாவன் மரம். நாவலந்தீவென்னு நளிர்கடல் வைப்பிற் காவன் மூன்றுலக மோதும் கடவுள் மாமரத்தைக் கண்டான். (யுத் : 2703)

**கடவுணாட்டவர்** - கடவுள் நாட்டவர். விண்ணுலகத்தவர். காற்று வந்தசைத்தலும் கடவுள் நாட்டவர் போற்றினர். (யுத் : 2756)

**கடவுதல் - 1.** செலுத்துதல். கடவினர். (யுத் : 1815) பாகர் கடவுகின்றது. (யுத் : 1447) கடவல் உன் தேரை. (ஆ : 895)

2. அமைத்தல். தகை ஏர் கடாம் கலவைதாம். (அ : 980)

**கடவுள் ஓங்கல்** - தெய்வத் தன்மை வாய்ந்த சஞ்சீவி மலை. கடவுள் ஓங்கல்தான் வான்றனில் நின்றது. (யுத்: 2754)

**கடவுள் திங்கள்** - கடவுட் டிங்கள் பார்க்க.

**கடவுள் நாட்டவர்** - அமரர். (யுத்: 2756)

**கடவுள் மன்னன்** - கடவுண் மன்னன் பார்க்க.

**கடவுள் மாக்கதை** - தெய்வத் தன்மை வாய்ந்த பெரியகதாயுதம். (யுத்: 3775)

**கடவுள் யாறு** - தெய்வத்தன்மை பொருந்திய நதி; கோதாவரி. (ஆ: 226)

**கடவுள் வெம்படை** - தெய்வத் தன்மையுடைய கொடிய படைக் கலங்கள். காதி சேய்தரு கடற்கடவுள் வெம்படையினர். (கி: 83)

**கடவுளர்க்கரசன்** - இந்திரன். கடவுளர்க்கரசனைக் கடந்த தோன்றலும். (சு: 1067)

**கடவுளர்** - முனிவர். செய்ம் முறை கடன் முறை திறம்பலின்றியே மெய்ம் முறை கடவுளர்க் கீந்து. (பா : 275 ) [பா : பே]

**கடவுளர் படை** - தேவர்களின் அஸ்திரம். கடவுளர் படைகளிருக் கற்றன படைகள் யாவும். (பா: 665)

**கடவுளுண்ட நஞ்சு** - ஆலகால விடம்; சிவபிரான் உண்ட நஞ்சு. தாழ் சடைக் கடவுள் உண்ட நஞ்செனத் தகையனன்றே நாயகன் அருளின் நாயேன். (யுத்: 432)

**கடவேறு** - கடத்திலுள்ள (காட்டிலுள்ள) ஆண்சிங்கம். காலேறின சில நாஞெலி கடவேறுகள் பட வான் மேலேறின. (யுத்: 1831)

**கடவையோ** - செய்வையோ. எமைக் கைதுடைத் தேகவுங் கடவையோ. (அ : 452)

**கடற் கடவுள்** - வருணன். பனிக் கடற் பெருங் கடவுள். (சு : 241)

**கடற் கடு - பாற் கடலில் தோன்றிய ஆலகாலம் என்னும் விஷம்.** முதிரும் வெங்கத மொழிகொடு மூண்டது முதுகடற் கடு ஏய்ப்ப. (யுத் : 209)

**கடற்கதிர் - கீழ் கடலினின்று உதித்தசூரியன்** (வை. மு) கனிக் கடற் கதிர் தொடர்ந்தவன் அகழியைக் கண்டான். (சு : 241)

**கடற்கிறைவன் - வருணன்.** நெடுங்கடற் கிறைவன் வைகும் உறைவிடம். (பா : 682)

**கடற் குட்டம் - கடலாகிய (குட்டம்) ஆழ்ந்து பரந்த இடம்.** நெருப் பாற் கூனை அங்கியின் குண்ட மொத்தது கடற் குட்டம். (யுத் : 553)

**கடற் செலூஉம் வங்கம் - கடலிற் செல்லும் மரக்கலம்.** கடற் செலூஉம் வங்கமாமென வந்தெதிர் தாக்கினன். (யுத் : 1014)

**கடற்படை - கடல் போன்ற பெரிய படை.** இளக்கமில் கடற்படை இருக்கையை எதிர்ந்தான். (சு : 166) கரன்முதற் கருணையற்றவர் கடற் படை யொடும் சிரமுகச் சிலைகுனித்து. (கி : 88)

**கடற்பரப்பு - கடற்பகுதி.** கரைப்பரப்பு கடற்பரப்பு ஆயதால். (யுத் : 683)

**கடற் பெருந்தகையினர் - கடல் போன்ற பெருந் தகைமை யுடையவர். (அசுரர்)** தாம விஞ்சயர் கடற் பெருந்தகையினர் தரளத்தாம விஞ்சையர் துவன்றினர். (யுத் : 3785)

**கடற்றனை - கடல் போன்று பரந்த சேனை.** நீடுமா கடற்றனை நெருங்கலால். (பா : 1208)

**கடற்றுணை - கடலளவு.** கடற்றுணை நெடியதன் கண்ணிரீப் பெருந் தடம். (சு : 393)

**கடற்றுளி - கடல் நீர்த்துளிகள்.** (யுத் : 555)

**கடறோட்டார் - கடலைத் தோண்டினர்.** இவர் குலத்தோர் கடல் தோட் டார் எனின் வேறோர் கட்டுரையும் வேண்டுமோ. (பா : 728)

**கடன் - 1. முறைமை. கடமை.** உயிரோ அகலா கண்ணோ துயிலா இதுவோ கடனே. (பா : 1254) ஈசற்கே கடன். (யுத் : 4158)

**2. அந்திய கருமம்; சாச் சடங்கு. இறுதிக்கடன்.** கங்கைபாற்றங்கரை அடியேற்குத் தன் செங்கையாற் கடன் செய் கென்று செப்புவாய். (சு : 638)

**3. குடம்.** கையுங் கடனும் நெகிழக் கணையோடு உருள்வோற் காணு. (அ : 372)

**4. உரிய கடன்.** எதிர் நடவாக் குன்றுகிய திரள் தோளவன் கடன் கொள் கெனக் கொடுத்தான். (யுத் : 1145)

**5. திருப்பிக் கொடுப்பதாகப் பெறும் கடன்.** கடனென்று எம் பாற் கொண்டிலை. (யுத் : 2221)

**6. கடமை.** கடனறி காவலன். (யுத் : 365)

**கடன் கழித்தல் - 1. கடமையை நிறைவேற்றுதல்.** மடிந்தபோது கடன் கழித்தோமும் ஆதும். **(ஆ : 793)**

**2. இறுதிக் கடனைச் செய்து முடித்தல்.** பொய்யில் மாக்கடன் கழித்தி போய் என்றுர். **(அ : 920)**

**கடன்கள் - கடமைகள். அன்பின் செயல்கள்.** இக்கடன்கள் உடையீர் நீர். **(யுத் : 1574)**

**கடன் முடித்தல் - கடமையைச் செய்து முடிப்பது.** எண்ணம் இறை பேரின் அருங்கடன் முடிப்பதரிதாம். **(சு : 168)**

**கடன் மேனி - கடல் போன்ற உடல். (யுத் : 1293)**

**கடன்மை - 1. முறைமை.** (வை. மு) **மரபு நெறி.** (வெ. ப) எண்ணுங் கால் கணங்கொள்கை நும்மனோர் கடன்மை காண் என. **(யுத் : 393)** [பா : பே] கட்கொந்தார் குழலினரை ஏற்றுதல் கடன் மைத்து ஆகும். **(யுத் : 4096)**

**2. தொடர்பு.** களவியல் அரக்கன் பின்னே தோன்றிய கடன்மை தீர. **(யுத் : 451)**

**3. தன்மை.** ஆருயிருதவி யாதும் காரியமில்லான் போனன் கருணையோர் கடன்மை ஈதால். **(யுத் : 2223)**

**4. கடமை. கடமையாகிய செயல்கள். (ஈமக் கிரியைகள்)** செயத்தகு கடன்மை யாவும் தேவரு மருளச் செய்தார். **(சு : 571)** [பா : பே]

**கடன்மை மீது - மேன்மையான கடமைகள்.** நாளை நீ மவுலி சூட நன்மை சால் பெருமை நன்னுள் காளை நீ அதனுக்கேற்ற கடன்மை மீதியற்றுக. **(யுத் : 4306)**

**கடனறிதல் - கடமையை நன்கறிதல்.** கடனறி காவலன். **(யுத் : 365)**

**கடனுரை - கடல் நுரை.** கடனுரைத் துகில். **(யுத் : 1291)**

**கடனெருப்பு - கடல் நெருப்பு.** வடவை. **(யுத் : 522)**

**கடனொழுக்குதல் - நீர்க்கடன் முதலியன செய்தல்.** செய்வன வரன் முறை திருத்திச் சேந்த நின் கையினுல் ஒழுக்குதி கடன் எலாம் என்றுன். **(அ : 1143)**

**கடாதல் - ஆராய்தல்.** கண்டு கண்ணெடும் கருத்தொடுங் கடாயினன். **(சு : 291)**

**கடாம் - மதநீர் வடியும் கன்னம்.** கடாத்திடை வண்டு சோப்பி. **(யுத் : 1893)**

**கடா முகத்த - மதநீர்ப் பெருக்கை முகத்திலே கொண்ட.** வடாது திக்கின் மதவரையின் வழிக் கடா முகத்த முளரிக் கண்ணவால். **(யுத் : 3573)**

**கடாய் - ஆட்டுக்கடா. (யுத் : 495)** [பா : பே]

**கடாய் வருதல் - செலுத்திவருதல்.** சினக்கிடாய் கடாய் வந்து. (யுத் : 495)

**கடாயென - கடாவினு லென.** திண் கம்பக் கரியுண்டை கடா யெனவே. (யுத் : 2326)

**கடாவிடல் - தூண்டுதல்.** காதல் கடாவிடக் கடிது சென்றூர். (பா : 1203)

**கடாவுதல் - 1. தட்டிச் சமப்படுத்தல்.** பொருப்பின் வீங்கும் கல்லினுற் கல்லை ஒக்கக் கடாவினுன். (யுத் : 707)

**2. தூண்டுதல்.** கடாவிட. (பா : 1203) கானிடை வந்த தேயும் வானவர் கடாவவே யாம். (யுத் : 769) தேர் கடாய். (யுத் : 2014)

**3. ஊர்ந்து செலுத்துதல்.** விமானத்தைக் கடாவுகின்றூர். (யுத் : 2655) கூற்றையே மேற் கொண்டானே கனலையே கடாவினனே. (யுத் : 1247)

**4. அமைத்தல்.** தகை ஏர் கடாம் கலவைதாம் கமழ்ந்தின் றென்பரால். (அ : 980)

**5. வீசுதல்.** உண்டை கடாவ விரும்பினையே. (ஆ : 909) (உ. வி) (யுத் : 2326)

**6. சிந்தித்தல். [அளவிடல்] ஆராய்தல்.** கண்டு கண்ணெடும் கருத்தொடும் கடாயினன். (சு : 291)

**7. அறைதல்.** ஏற்றஞ் சால் ஆணிக் காணி எதிர் செலக் கடாய தென்ன. (சு : 1002)

8. **செலுத்துதல்.** (வை. மு) உண்டை கடாய் எனவே. (யுத் : 2326)

**கடி - 1. காவல்.** இருங்கடியரணம். (யுத் : 480) கடியமாமணே. (சு : 1183) கடிநகர். (பா : 564) கடி கெடச்சுடுதும். (யுத் : 2212) கடிமதில் அயோத்தி. (அ : 585)

**2. தெய்வத்தன்மை.** கடியுடைக் கற்பகம். (பா : 129)

**3. விளக்கம்.** கடிகெட அமரர்கள் கதிரும் உட்குற. (பா : 378)

**4. வாசனை.** மலர்க்கடி நாறுவ மகளிர் கூந்தலே. (பா : 150) கடித்தடந் தாமரைக்கண். (யுத் : 4177)

**5. நாடு. சீமை. (தெலுங்கு)** காந்து கடுந்தீக் கொளுத்தினர் அண்டம் கடிகலங்க. ( சு : 1165)

**6. சிறப்பு.** (அண்) கடிகெடச் சுடுதும். (யுத் : 2812)

**கடி எறி - காவலை மிகுத்திடுமின்.** கடி எறி கங்கையின் கரை வந்தோர் களைப் பிடி எறிபட. (அ : 1005)

**கடி கமழ் கமலம் - மணம் கமழ்கின்ற தாமரை மலர்.** சனகியாம் கடி கமழ் கமலத்து அவ்வை. (அ : 185)

**கடி கமழ் கழனி - மணம் வீசுகின்ற வயல்.** அவர் விழியின் கயல் புடை பெயர்வன கடி கமழ் கழனி. (பா : 73)

**கடி கமழ் சாலை** - நறு மணம் வீசுகின்ற பர்ண சாலை. (ஆ : 281)

**கடி கமழ் பொழில்** - மணம் வீசுகின்ற சோலைகள். (பா : 53)

**கடி கா** - காவற் சோலை. துன்று கடி காவினை அடிக்கொடு துகைத்தான். (சு : 698)

**கடி காவு**-காவலமைந்த வனம். அணங்கு சேர் கடி காவு சென்றணமினன். (யுத் : 3935)

**கடிகை** - 1. நாழிகை. ஒரு நாழிகைப் பொழுது. முனிவனோடு மோர் கடிகையினடைந்தனன். (பா : 255)

2. வெட்டப்பட்ட கருப்பங்கழித் துண்டுகள். கருதி வாயினுங் கையினுங் கடிகையிற் கட்டி. (சு : 790) [பா : பே]

**கடி சூத்திரம்** - அரை ஞாண். மணிக்கடி சூத்திரம் வீக்கி. (யுத் : 3610)

**கடிகையர் கவிதை ஓதை** - நாழிகை யறிவிப்பார்களுடைய நாழிகைப் பாட்டின் ஓசை. (பா : 894)

**கடித்தல்** - கவ்வுதல். தன்னெதிர்ச் செல்லும் தழல் வேலைக் கடித்தான். (சு : 183) கடித்த வாயினன். (அ : 1001)

**கடித்தலம்** - இடைப்பக்கம். கடித்தலத்திரு காலுறக் கைகளாற் பிடித்து. (யுத் : 1029) (கி : 293)

**கடித்த வாயினன்** - கடித்த உதட்டையுடையவன். (அ : 1001)

**கடி தடம்** - 1. இடை; இடுப்பு. அல்குல் பட அரவமிசைக்கும் கடிதட முற்றவள். (ஆ : 1083)

2. நறு மணமுள்ள இடம். சோலை. கானினும் வரையினும் கடிதடத்தி னும் சேனையோடு அவதரித் திடுமின் சென்று. (பா : 200)

3. காவலுள்ள மலைப்பக்கம். (உ. வி) (பா : 200)

**கடி தடவம்** - கடிதடம். அல்குல். (ஆ : 1083) [பா : பே]

**கடிதல்** - 1. ஓடுதல். (வெ. ப) அறுத்தல். (வை. மு) தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான் உரனையு மறந்தான். (ஆ : 642)

2. தடுத்தல். விலக்கல். பந்தரின் நிழல் வீசப் படர் வெயில் கடிவாரும். (பா : 1270)

3. நீக்குதல். நிலங்கடிந்தாள். (அ : 484) கடிந்து. (அ : 484)

**கடிதாவுதல்** - விரைவாகத் தாவிச் செல்லுதல். காற்றினுங் கடி தாவன கதிர்மணி நெடுந்தேர் ஆற்று கொய்யுளைப் புரவி. (யுத் : 1204)

**கடிதில்** - விரைவாக. கவரி பால் நிறவால் புடைபெயர்வன கடிதில். (அ : 741)

**கடிதினின் - விரைந்து.** முரி திரை நெடு நீர் வாய் கடிதினின் மடவன்னக் கதியது செல மின்றூர். (அ : 677) காயெரிவரன் முறை கடிதினில் இடுவான். (ஆ : 110)

**கடிது - 1. மிகவும்.** கடிதார்த்தார், (அ : 612)

**2. விரைவாக.** அத்தீயெறி நரகத்துக் கடிது செல்க யான். (அ : 893) கடி தோட்டி. (யுத் : 1567) (பா : 1203) மீளரு நரகிடைக்கடிது வீழ்க யான். (அ : 894) திண்டேரினைக் கடிதே வென. (யுத் : 1848)

**கடி நகர் - காவலுள்ள நகர்.** அந்தக் கடிநகர் அழைப்பது போன்ற தம்மா. (பா : 564)

**கடி நாட் கமலம் - மணம் பொருந்திய நாண் மலராகிய தாமரை.** (ஆ : 1067)

**கடி நாண் மலர் - அன்றலர்ந்த மணமலர்.** கயங்களென்னும் கனல் தோய்ந்து கடி நாண் மலரின் விடம் பூசி. (பா : 627)

**கடிப்பு - குறுந்தடி.** இரும்படை கடிப் பெடுத்தெற்றி ஏகுக. (யுத் : 1318)

**கடிப்புறும் - கடித்து இழுப்பான்.** பல்லினுற் கடிப்புறும். (கி : 1302)

**கடிபொழில் - நறுமணமுள்ள பொழில்.** சிறை வண்டு நிறம் வேறெய்திக் கடி பொழிலும் முறியீன்ற போன்றுளிர்வ காண்மின் காண்மின். (யுத் : 3564)

**கடிமதில் அயோத்தி - காவலமைந்த மதிலையுடைய அயோத்தி நகர்.** (அ : 585)

**கடிய - 1. கடியவான.** கடிய கால். (யுத் : 3661)

**2. மிக்க.** கடிய வேகச் சுடுசரம். (பா : 413) கடிய வேகக் கலுழன். (யுத் : 748)

**கடியவள் - அஞ்சத்தக்கவள்.** கடியவள் தாயெனக் கருதுகின்றிலன். (அ : 862) (அ : 884)

**கடியான் - 1. விரைவுள்ளவன்.** காற்றிலினும் கனலினும் கடியானை. (ஆ : 367)

**2. கொடியவன். (இராவணன்)** (யுத் : 3716)

**கடியெறி - காவலை மிகுத்திடுமின்.** (அ : 1005)

**கடிவேள்வி - காவலுள்ள வேள்வி.** சென்றிக் கடிவேள்வி சிதைத்திலையேல் என்றிக் கடல் வெல்குதும் யாம். (யுத் : 2917)

**கடு - நஞ்சு.** கடுவமர் களன். (பா : 186)

**கடுக்கை - கொன்றை.** கடுக்கையார் வேங்கை கோங்கு. (பா : 24) (கி : 474)

3

**கடுகுதல்** - விரைதல். வேகமாகச் செல்லுதல். கடுகிய தூதரும். (பா : 856) நில்லடீஇ யெனக் கடுகினன். (ஆ : 317) கடுகும். (யுத் : 2368)

**கடுங்கணை** - உக்கிரமான அம்பு. (வை. மு) கொடுமை மிக்க அம்பு. (அண்) நெகிழ்ந்திலன் கடுங்கணை கவர்தல், (கி : 296) கடுங் கணைப் புட்டில். (யுத் : 4200)

**கடுங்கணைப் புட்டில்** - கடுமையான அம்புகளையுடைய அம்பருத் தூணி. (யுத் : 4200)

**கடுங்குருதிப் பேர் யாறு** - வேகத்தையுடைய இரத்தப் பேராறு. (யுத் : 3665)

**கடுங்குறி** - விரைந்தறியும் வல்லமை. காதக் கடுங்குறி கணத்திறுதி கண்ணுள். (சு : 77)

**கடுஞ்சாரிகை திரிதல்** - மிக வேகமாகவும் வலிமையாகவும் சாரிகை திரிதல். கடுந் தொழிலோர் துண்டப்படக் கடுஞ்சாரிகை திரிந் தான். (யுத் : 3376)

**கடுஞ்சிலை** - வலியவில். கங்கை சூடிதன் கடுஞ்சிலை. (யுத் : 3247)

**கடுத்த** - ஓடின. அரக்கர் வேலை பட்டதும் படவும் பாரார் கடுத்தனர் கடுத்த பின்னும் காத்தனர் கவியின் வீரர். (யுத் : 2005)

**கடுத்தல்** - 1. ஓடுதல். கடுத்தனர் கடுத்த பின்னும் காத்தனர் கவியின் வீரர். (யுத் : 2005)
2. கோபித்தல். (உ. வி) (யுத் : 2005)
3. விரைதல். கடுமின் இப்பொழுதே கொடுமதிற் குடுமித்தலைக் கொள்க. (யுத் : 965) கடுத்துறுவர். (யுத் : 3356)
4. ஒத்தல். போன்றிருத்தல். வானம் பாற்கடல் கடுப்ப, (பா : 567) கார்கள் தாம் எனமிகக் கடுத்த கைம்மலை. (அ : 980)
5. விரைந்து போர் செய்தல். கடுத்தனர் கடுத்தபின்னர் காத்தனர் கவியின் வீரர். (யுத் : 2005)

**கடுத்தல் செய்தார்** - ஒத்தார். கயிலையிலிருந்த தேவைத் தனித்தனி கடுத்தல் செய்தார். (சு : 12)

**கடுத்துறுவர்** - விரைந்து வருவர். பிடித்து மெனக் கடுத்துறுவர். (யுத் : 3356)

**கடுந்திறல் மடங்கலன்னுன்** - மிக்க வலிமையுடைய ஆண்சிங்கம் போன்றவன். (இலக்குவன்) (அ : 665)

**கடுநடை** - விரைந்த நடை. கால் திரண்டனைய கால கடுநடை கலினப் பாய்மா. (அ : 1045)

**கடுப்ப** - ஒப்ப. கருங்கடல் புகப் பெருகு காவிரி கடுப்ப. (யுத் : 697)

**கடுப்பின் கொட்பு - விரைவின் தன்மை.** கூனேறு சிலையுங் தானும் குதிக்கின்ற கடுப்பின் கொட்பால். **(யுத் : 3474)**

**கடுப்பு - 1. விரைவு வேகம்.** காய்கணை ஐந்தும் ஐந்தும் கடுப்புறத் தொடுத்து. **(யுத் : 1096) (ஆ : 802)**
**2. செயலின் அதிவேகம்.** கடுப்பினை யாரும் அறிந்திலர். **(பா : 783)**
**3. தொழிலாற்றும் இயல்பு.** அன்னபோரின் வந்து ஆவிகொண்ட காலனுர் கடுப்புமென்ன தாகுமே. **(யுத் : 3347)**

**கடும்பகல் - நடுப்பகல்.** இன்ருெரு கடும்பகலிலே குரக்கின் முதல்நாயகனை யாளுடைய கோளுழுவை கொல்லும் இவரை. **(யுத் : 3411)**

**கடும்பாய் பரிக்கணன் - விரைவுடையதாய்ப்பாயும் குதிரைத் திரள். (யுத் : 3377)**

**கடும்பு - சுற்றம். (யுத் : )**

**கடுமணி - கடிய ஓசையையுடைய மணி.** கடுமணி நெடிய வெனுஞ்சிலை. **(யுத் : 3473)**

**கடுமா - குதிரை.** கொய்யுளைக் கடுமாக் குரங்குடைந்தன. **(யுத் : 1440)**

**கடுமின் - விரைந்து செல்லுங்கள். களைமின்.** (அன்) கடுமின் இப் பொழுதே கதிர் மீச்செலாக் கொடிமதிற் குடுமித் தலைக்கொள் கென்றுன். **(யுத் : 965)**

**கடுமை - 1. வன்மை.** கடு மணி. **(யுத் : 3473)**
**2. விரைவு. வேகம்.** கறங்கு வெஞ்சிறைக் கலுழன்தன் கடுமையிற் கரந்தான். **(யுத் : 179)** சினக் கடுந்திறற் சீற்றம். **(அ : 1067)**

**கடுவச்சையன் - கொடிய உலோபி.** கடுவச்சையன் போலொர் மன்னன். **(பா : 993)**

**கடுவமர் களன் - நஞ்சு பொருந்திய கண்டத்தையுடைய சிவ பெருமான். (பா : 186)**

**கடுவல்விடம் - மிகவும் கொடுமையான நஞ்சு.** இட்டார் கடுவல்விடம். **(யுத் : 245)**

**கடுவன் - ஆண்குரங்கு.** அவிர் மணிக் கோவை ஆரம் மரம் பயில் கடுவன் பூண மந்தி கண்டுவக்கும் மாதோ. **(பா : 940) (கி : 519)**

**கடுவிடம் - கொடிய விடம்.** சீரிய பகழி மாரி தீக்கடு விடத்திற்ருேய்ந்த. **(யுத் : 2985)**

**கடுவேகம் - கடிய வேகம்.** கண்ணிற் சிந்திய தீ கடுவேகத்த. **(யுத் : 3708)**

**கடை - 1. பின்னணி.** கார் செலக் கடை செலச் சென்ற தானை. **(யுத் : 1321)**
**2 வாசல். புறவாயில்.** முரசெய்து கடைத் தலையான். **(பா : 326)** சிக்குறக் கடை சேமித்த செய்கைய. **(கி : 598)**

**3. எல்லை.** அருங்கடையின் மறையறைந்த அறஞ்செய்த அறத்தாலும். (பா : 740)

**4. ஓரம்.** இறைக் கடை துடித்த புருவத்தள். (பா : 390)

**5. கடைப்பட்டவள்.** கறைக் கடை யரக்கி. (பா : 390) [பா. பே]

**6 யுகாந்த காலம்.** மறைந் தொளிப்பிலாக் கடையிற் கண்ணகல் நான்மறை ஆர்ப்பென. (யுத் : 1779) கடைகாண் உலகம். (அ : 327) (யுத் : 3716)

**7. முடிவு. வரம்பு.** கடைகண்டில தலைகண்டில கழுதின்திரள். (யுத் : 1828) கடை பார்த் தெண்ணுதிவை பகர்ந்தீர். (யுத் : 3030) கடையிலா மறை. (சு : 1121) கடையில் ஞானம். (கி : 770)

**8. கடத்தல்.** வார் கடை மதுகைக் கொங்கை. (யுத் : 2157)

**9. கடைவாய்.** பகுவாய் படுத்த வான்கடைக் கடைதொறும் வளையிற் றிட்டம். (யுத் : 3618) (யுத் : 1277)

**10. வாயிற் கதவு.** கடையடைத்து மாற்றினர். (பா : 1080)

**11. இழிவு.** பழிக் கடைபடும் அரக்கர்தம் பிறவி கட்டமால். (யுத் : 3432)

**கடைக்கண் - கண்ணின் கடை.** நோக்கிய கடைக்கண் அஞ்சனம். (பா : 841)

**கடைக்கண்ணோக்கு - கடைக்கண் பார்வை.** ஊடலும் கடைக்கண்ணோக்கு மழலை வெவ்வுரையு மெல்லாம். (யுத் : 2790)

**கடைக்கண் தீயுகல் - கடைக்கண்ணினின்று தீ வெளிப்படுதல்.** கடைக்கண் தீயுக அங்கதக் களிற்றினைக் கண்டான். (யுத் : 2589)

**கடைக்கணித்தல் - கடைக்கண்ணாற் பார்த்தல்.** வாள் கடைக்கணித்து ஓச்சலும். (யுத் : 3847)

**கடைக் கணேக்கம் - கடைக்கண் பார்வை.** கொடுத்தனன் கடைக் கணேக்கம். (யுத் : 4348)

**கடைக்கால் - 1. கற்பாந்த காலம். இறுதிக் காலம். சங்கார காலம்.** கடைக்கால் விலங்கன் மேருவும் வேர் பறிந்தாலென வீழ்ந்தான். (கி : 295)

**2. முடிவில்.** கடைக்கால் வருஞ் சொல்லை நோக்கித் துணுக்கெனும். (ஆ : 1051)

**கடைக்குழை - பின்னணிப்படை.** குழை - கூழை என்பதன் குறுக்கம். கடைக்குழை திருவாலாக. (சு : 832) கடைக்குழை முதுகின் பின்பு நின்றவர். (யுத் : 1431)

**கடைக்கூட்டு - 1. வேண்டுகோள். கடைசி விருப்பம்.** (அண்) **இறுதியில் கூட்டியுரைக்கும் சொற்கள்.** (கலா) **பிரார்த்தனை.** உம்முடைய கைக்கடைந்தான் உயிர்காக்கக் கடவீர் என் கடைக்கூட்டால். (யுத் : 1574)

2. முடியுங் காலம். மரண சமயம். கன்மத்தின் கடைக்கூட்டாலும். (யுத் : 1904)

**கடைக்கூழை - பின்னணிச் சேனை.** (சு : 832) [பா. பே]

**கடைகயிறு - கடைகின்ற கயிறு.** மத்து மந்தரம் வாசுகி கடைகயிறு. (பா : 498) அந்தமில் கடைகயிறு ஆழியான். (கி : 254)

**கடை காணுதல் 1. கடைசியாய் நிற்றல். கடைசியில் வைத்து எண்ணப்படுதல்** கடை காணும் புல்லும் சிறு கொடியும். (யுத் : 2997)
2. **செய்து முடித்தல்.** கடன் யாவும் கடைகண்டு. (கி : 407)

**கடைசியர் - உழத்தியர்.** (பா : 65)

**கடை செல்லல் - முடிவை அடைதல். கடைசி வரையில் செல்லுதல்.** வாழ்க்கை நாளும் மெலியுங் கடைசென்றுளதாகலின். (ஆ : 940) காதங்கள் கோடி கடை சென்று காணும் நயனங்கள் வாரி கலுழ. (யுத் : 2197)

**கடைத்தலை - தலைவாசல்.** முரசெய்து கடைத்தலையான் முன்மொழிய. (பா : 326)

**கடைத்தீ-ஊழித்தீ. ஊழியின் இறுதிக் காலத்தில் எழும் நெருப்பு.** கண்ணிற் கடைத் தீயுக. (அ : 409) (அ : 408)

**கடைத்தொழில் - இழிதொழில்.** அறங்கடைப்பட்ட தொழில்; அதாவது பாவச் செயல் என்றுமாம். (ஆ : 1010)

**கடைதல் - குத்திக் குமைத்தல், தாக்கிக் கலக்குதல்.** கடல் கடைந்த அக்கர தலங்களால் உடல் கடைந்தனன். (கி : 143)

**கடைதுறத்தல் - முற்றும் விடுதல்; நீங்குதல்.** கடை துறந்தது போர் என் கருத்தென்றான். (யுத் : 3842)

**கடைநக்குதல் - கடைவாயை நக்குதல்.** நறைக்குடங்கள் பெருங் கடை நக்குவான். (யுத் : 1277)

**கடைநாள் - உலக முடிவான ஊழிக்காலம்.** கடைநாள் தண்ணென் மாமதி கோளொடும் சாய்ந்தென. (சு : 1037) (யுத் : 2217) கடைநாளுறு கண மாமழை. (யுத் : 3716) [பா : பே]

**கடைநிற்றல் - 1. நிறைவேறுதல்.** (வை. மு) **முடிவை அடைதல்.** (கலா) **கடைசியாக அமர்ந்திருத்தல்.** (அண்) காரணம் கடை நின்ற துண்டு வேறொரு சிறப்பு. (சு : 291)
2. **முழுவதும் நிற்றல். முடிவு போக நிற்றல்.** புயங்க வாளி கடை நின்று கணிக்க ஆங்கோர் கணக்கிலா வாறுங் கண்டான். (யுத் : 1872)

**கடைநின்று கணித்தல் - முடிவுபோகக் கணித்தல்.** போகின்ற புங்கவாளி கடைநின்று கணிக்க ஆங்கோர் கணக்கிலா வாறுங் கண்டான். (யுத் : 1872)

**கடைப்படு பழி - தாழ்மையான பழி.** பழிக் கடைப்படும் அரக்கர் தம் பிறவி கட்டமால். (யுத் : 3432)

**கடைப்படு பிறவி - இழிந்த பிறவி. (அரக்கப் பிறவி)** சாபத்தால் இக்கடைப்படு பிறவி கண்டேன். (ஆ : 1191)

**கடைப்பால் - இறுதியில்.** காலமும் கருவியும் இடனுமாய்க் கடைப்பாலமை பயனுமாய். (யுத் : 204)

**கடைப்பிடித்தல் - 1. கேட்ட நெறியில் வழுவாமல் ஒழுகல்.** இப் பொருள் நன்று கேட்டுக் கடைப்பிடி நன்றென. (அ : 103)

**2. உறுதியாகக் கொள்ளுதல்.** கேட்டு அவை கடிப்பிடிப்பாய். (கி : 151)

**கடைமுறை - 1. முடிவு.** கடைமுறையே புரந்தரனுர் பெருந்தவமாய்ப் போயிற்றம்மா. (யுத் : 3908)

**2. முதுமைப் பருவம்.** தந்த மக்களே கடைமுறை நெடுநிலந்தாங்க. (அ : 64)

**3. முடிவாக.** என்னிற் கேகயன் நங்கையே கடைமுறை நல்லள் போலுமால். (அ : 555)

**கடையவன் - அதமன்.** கடையவன் சரமுந் தாழ்தர. (யுத் : 2104)

**கடையிட்ட பாதலக்கம் - ஒன்றேகால் இலக்கம். (125,000)** காதலித் தயனளித்த கடையிட்ட கணிதப் பாதலக்க மதவெற்பவை படைத்த வலியான். (ஆ : 18)

**கடையிட்டு - கடையில் சேர்க்கப்பட்டு. கடையிலேயே வைத்து.** அரை கடையிட்டமைவுற்ற முக்கோடி ஆயுவும். (யுத் : 3910)

**2. இறுதிக் காலத்தில் இடப்பட்டு.** வரமென்னும் பாற்கடலைச் சீதை யென்னும் பிரை கடையிட்டழிப்பதனை அறிந்தேனே. (யுத் : 3910)

**3. முடிவு காட்டி.** உரை கடையிட்டளப்பரிய பேராற்றல் தோளாற்றற் குலப்போ இல்லை. (யுத். 3910)

**கடையில் ஞானம் - எல்லையற்ற தத்துவ அறிவு.** கடையில் ஞானத் தருவினையின் பெரும் பகைஞர். (கி : 770)

**கடையிலா ஞானம் - முடிவில்லாத தத்துவ ஞானம்.** கடையிலா ஞானமாய்க் காப்பானைக் காணு. (ஆ : 99)

**கடையின் மேலுயர்ந்த காட்சி - முடிவின்றி மேம்பட்டுயர்ந்த காட்சி.** கடையின் மேலுயர்ந்த காட்சி இருவருங்கடுத்தார். (யுத் : 2411)

**கடையுகத்துருமு - ஊழி இறுதியின் இடி.** பொன்றெடர் வடிம்பின் வாளி கடையுகத்துருமுப் போல ஒன்றின்னென்றதிகமாக ஆயிர கோடி உய்த்தான். (யுத் : 1102)

**கடையுகம் - யுகக்கடை. ஊழியிறுதி. யுகாந்த காலம்.** கடையுக நாள் கட்டாசறுத்துண்ணும் அச்சுடரோன். (யுத் : 3367) கடை யுகத் தெழுந்த மேகம் மின்னெடும் அசனியோடும் வீழ்வதேபோல வீழ்ந்தாள். (பா : 414) கடையுகக் கடலொலி. (ஆ : 584)

**கடையுக மாமழை - கடையுகத்து மிக்க மழை.** கடையுக மாமழை பொழிகின்றதுமான. (யுத் : 2995)

**கடையுக முடிவினிற் காலன் - யுகாந்த காலத்தில் எல்லா உயிர்களையும் நாசஞ்செய்கின்ற யமன்.** கடையுக முடிவினிற் காலன் என்பதென் விடை வருபாகனைப் பொருவு மேன்மையோர். (யுத் : 481)

**கடையுக முடிவு - கடைசி யுகத்தின் முடிவென்கின்ற ஊழிக் காலம். ஊழியிறுதி.** கடையுக முடிவினில் எவையும் கால்படப் புடை பெயர் கடலென எழுந்துபோயவே. (பா : 825) (சு : 224)

**கடையுகவன்கால் - யுகமுடிவில் வீசுகின்ற வலிய காற்று.** எறிதரு கடையுகவன் கால் இடறிட. (சு : 769)

**கடையுற - முடிவு போக.** கடையுற நன்னெறி காண்கிலாதவர்க் கிடை யுரு திருவென இந்து நந்தினுன். (பா : 1113)

**கடையுறு காலம் - பிரளய காலம்.** அண்ணல் உயிரெலாம் ஒருங்கி யுண்ணும் கடையுறு காலம். (யுத் : 2711)

**கடையுறு நோக்கு - இறுதியாகப் பொருந்திய ஞானக்கண். (அண்) எல்லையற்ற ஞானக்கண். (வை. மு) எல்லையான ஞானக் கண். (கலா)** கருமத்தின் எல்லைகண்டார் கடையுறு நோக்கிற் காணும் காட்சியன். (யுத் : 1071)

**கடையூறுறு கண மாமழை - கடைக் காலத்தில் ஊறு விளைக்கின்ற பெரிய மேகங்கள். (வை. மு) கடையூழியில் உலகிற்கு இடையூருகப் பொருந்துகின்ற பெரிய மழை. (அண்)** (யுத் : 3716)

**கடையோட மெய்த்த வேந்தன் - முடிவு போக வாய்மையைக் காத்த அரசனுகிய தசரதன்.** கைத்த சொல்லால் உயிரிழந்தும் புதல்வற் பிரிந்தும் கடையோட மெய்த்த வேந்தன். (அ : 603)

**கடைவருந்தீ நெறிக்கலி - கடைசியில் வருதற்குரிய தீய நெறிகள் மலிந்த கலிபுருடன்.** இடை வருங்கால மீண்டிரண்டு நீத்திது கடைவருங்கலியின் ஆட்சியோ. (அ : 948)

**கடை வாய் - வாயின் கடை.** முதுமேதிகள் கதிர் மேய்வன கடைவாய்ப் பால் பாய்வன. (அ : 625)

**கடை வாயில் - தலைவாயில். வாயிலின் கடை.** இந்திரன் சிறையிருந்த வாயிலின் கடை. (சு : 233)

**கண் - 1. அகக்கண் தியானம். ஞானக் கண்.** கண்ணால் துளவை ஆய் முடியாய் உனை நீ எனத் துணியும். (யுத் : 4025)
**2. உடம்பு.** பொற்கண்ணன் தம்பி. (சு : 454)
**3. வழி.** (கலா) (வை.மு) **அறிவு.** (அண்) நற்கண்ணர் நல்லறம். (சு : 458)
**4. இரக்கம். கண்ணோட்டம்.** அங்கணன் ஆயிரம் பெயருடை அமலன். (அ : 737) கண்ணிலர் கரையிலர் கரந்து போயினர். (யுத் : 485) கண்ணற இடித்த காலத்து. (யுத் : 3153)
**5. குணில் கொண்டு அடிக்கப்படும் இடம்.** போர்த்த பேரியின் கண்ணன. (யுத் : 1432)
**6. இடம்.** புளினத் திட்டிற் கண்ணகன் வாரிக் கடல் பூத்த நளினக் காடு. (யுத் : 3500)
**7. எண்ணம். கருத்து.** இனிக் கரக்க மற்றொரு புறத் தென்னுங் கண்ணினால் ... சரக் கொடு நெடு மதில் சமைத்திட்டானரோ. (யுத் : 3427)
**8. கணு.** கண்புக்க வேழவில்லால். (யுத் : 3911)
**9. சக்கரம்.** (அண்) பொலங்தேர் வெங்கண் ஓலமும். (யுத் : 2496)

**கண் கடந்த தோளான்-கண்ணுக்கு அடங்காத பேரழகு வாய்ந்த தோளையுடையவன். இராமபிரான்.** (யுத் : 1670)

**கண் கடவாது காத்தல் - கண்ணைவிட்டு நீங்காமற் காத்தல்.** கண் கடவாது காத்த காரிகை பெரியளேகாண். (பா : 1154)

**கண் கலுழ்தல் - கண்களில் நீர் பெருகல்.** கண்டகார்முகில் வண்ண னும் கமலக்கண் கலுழத் துண்டவெண்பிறை நிலவென முறுவலுந் தோன்ற. (யுத் : 2471)

**கண் கலுழியாறு - கண்ணீர் ஆகிய ஆறுகள்.** மேகலைத்தடங் கடலிடைப் புகுந்தது கண்கலுழியாறரோ. (அ : 476)

**கண்கள் காக முண்டல் - கண்களைக் காகம் உண்ணும்படி கொன்று வீழ்த்தல்.** (யுத் : 2875) (சு : 621)

**கண்கள் செருகுதல் - கண்கள் சொருகுதல்.** சால அலசினென் ஐய கண்கள் செருகின வன்றே. (யுத் : 2239)

**கண்கள் பனி சோர்தல் - கண்களினின்று நீர் பெருகுதல்.** கைப் போதினோடு நெடுங்கண் பனி சோர நின்றாள். (பா : 987)

**கண்கள் முகிழ்தல் - கண்களை மூடி ஒடுங்கல்.** திசையானை கண்கள் முகிழா ஒடுங்க. (யுத் : 2196)

**கண்களைக் காக முண்ணுதல் -(இறந்தபின்) கண்களைக் காகங்கள் கவர்ந்துண்ணும்படி கொல்லுதல்.** அச்சழக்கன்தன் கண்கள் காக முண்டதற்பின் மீண்டு முடிப்பன் என் கருத்தை என்றான். (யுத் : 2875) வாளரக்கன் விழி காகங்கள் உண்ட போதன்றி யானுளெனவெனோ. (சு : 621)

**கண்களைப் புடைத்தல் - கண்களிலே புடைத்துக் கொள்ளுதல்.** கண்டார் விண்ணோர் கண்கள் புடைத்தார் கலுழ்கின்றார். (யுத் : 2614)

**கண் கிழித்துமிழ் விடக் கனலரா அரசு - கண்களைக் கிழித்துக் கொண்டு கக்குகின்ற விடம் போன்ற நெருப்பையுடைய பாம்பரசனாகிய ஆதிசேடன்.** (பா : 351)

**கண் குடை இனமணி - பார்ப்பவர் விழி கூசச் செய்யும் அணிகளின் மணியினங்கள்.** மின் எனக் கண்குடை இனமணி வெயிலுங் கான்றிட. (பா : 1284)

**கண் குழித்தழுதல் - கண்களைக் குழித்துக் கொண்டு அழுதல். நீர்த்தாரைகள் வீழ்வதனால் இடம் குழிவிழும்படி அழுதல்.** மாடமும் பொன்னெடுங் கண்குழித் தழுவ போன்றவே. (அ : 492)

**கண் கூடாகக் கண்டது-நேரிற் கண்டுணர்ந்த அநுபவவுண்மை.** கற்றதும் கண்கூடாகக் கண்டதும் ... உணராராயின் இறுதிவேறிதனின் உண்டோ. (கி : 658)

**கண் கெடுதல் - கண் பார்வை கெடுதல்.** வட அனலும் கண்கெடத் தீப் பொடித்தன. (கி : 247)

**கண் கொடு பிறத்தல் - கண் கொண்டு பிறத்தல்.** பெண் கொடுவினை செயப் பிறந்த நாட்டினில் கண்கொடு பிறத்தலும் கடை என்றார் சிலர். (அ : 482)

**கண் கொள்ளுதல் - கண்களாற் பார்த்து அளவிடல்.** கண்கொள அரிது. (சு : 740)

**கண்கோடல் - 1. துயிலுதல்.** நாண் நிறை கொண்ட பின்னர்க் கண் இறை கோடல் செய்யான். (யுத் : 1228)

**2. கண் இமைத்தல்.** கண் கோடற் பொறியிற் கடிதேகி. (யுத் : 228)

**கண் சும்புளித்தல் - கண் கூசுதல்.** மாதிரக் காவலர் கண்ணொடும் சுமந்த நாகமும் கண் சும்புளித்தவே. (பா : 695)

**கண் செல் பண்பு - கண் பார்வை செல்லுகின்ற பண்பு.** மாடு பேரும் ஆறு கண்டு கண் செல் பண்பும் இல்லையால். (யுத் : 3341)

**கண்ட - 1. ஒத்த.** வாள் கண்ட கண்ணார். (பா : 1166)

**2. செய்தன.** மரக்கடல் பூக்கடல் கண்டவே. (சு : 723)

**கண்டகம் - முள்.** கண்டகராய அரக்கர். (ஆ : 1087)

**கண்டகர் - 1. துஷ்டர்; முள்ளைப்போலக் கொடியவர்; பகைவர்.** எதிர் பொரு கண்டகர் சிரக்கொடுங்குன்று திரட்டினான். (யுத் : 2091)

**2. பகைஞர்.** காரேய் மேனிக் கண்டகர். (யுத் : 3563)

**கண்டகன்** - கொடியவன். துஷ்டன். முள்போல உபத்திரவஞ் செய்பவன். கற்றைப் பூங்குழலாளைச் சிறைவைத்த கண்டகனை. (சு : 318)

**கண்டங் காணுதல்** - துண்டுகளாக அறுத்தல். துண்டு பண்ணுதல். கைக்கணை ஒன்றால் அக்கணை கண்டங் கண்டான். (யுத் : 3069) அறமிலானைக் கண்டங்கள் பலவும் காண்பன். (யுத் : 726)

**கண்டஞ் செய்தல்** - கண்டமாக்குதல். சாரதி புரள வீரத் தண்டினாற் கண்டஞ் செய்தான். (யுத் : 2524)

**கண்டத் தெறுகணை** - கண்டதுண்ட மாகுமாறு அழிக்க வல்ல அம்புகள். (யுத் : 3715)

**கண்ட நாண்** - கண்ட சரம். கண்ட நாணும் கழலும் கவசமும் வீழ்ந்தவால். (யுத் : 2090)

**கண்டப் படுதல்** - பிளவு படுதல். கண்டப்படுமலை போல். (யுத் : 3376)

**கண்டம்** - 1. கண்ட சருக்கரை. வெல்லம். செந்தயிர்க் கண்டம் கண்டம் இடையிடை செறிந்த சோற்றில். (பா : 50)
2. துண்டம். துண்டு. துணுக்கு. கண்டங்கள் பலவுங் காண்பன் என்பதும் கழறுவீரால். (யுத் : 726) (யுத் : 1091) (யுத் : 1478)
3. கழுத்து. வலக்கரமெனக் கரன் கண்டமுற்றனரோ. (ஆ : 552)
4. கட்டி. செந்தயிர்க் கண்டம். (பா : 50)
5. குரல்வளை. கண்டத்தும் கழுத்தும். (யுத் : 3480)

**கண்டமாதல்** - துண்டுபடுதல். தடுத்த தாள்கள் கண்டமாகும். (யுத் : 3343)

**கண்டமுற்றான்** - கழுத்தறுப் புண்டான். (ஆ : 552)

**கண்டமுறுதல்** - துண்டுபடுதல். கண்டமுற்றது மற்றது. (யுத் : 1556)

**கண்டல்** - தாழை. மணலும் கண்டலும் பானலும் குவளையும். (யுத் : 332)

**கண்டலம்** - கண்ணினிடம். கண்டலம் அறிவொடு கடந்த காட்சிய. (சு : 591) கண்டலம் பசும் பொன்னவன். (யுத் : 142)

**கண்டலம் பசும் பொன்னவன்** - இரணியாட்சன். (யுத் : 142)

**கண்டவாறு** - செய்கின்ற வகை. அண்ட முற்றவும் வீங்கிருள் அகற்றுநின்றலரி கண்ட ஆற்றின். (சு : 111) [பா : பே]

**கண்டறியான்** - பார்ப்பதுகூடச் செய்திருக்கமாட்டான். அறவே தெரிந்தானில்லை. இவன் கருணை என்பது கண்டறியான் பெரும் பருணிதன் கொல். (பா : 1182)

**கண்டன்** - கொடியவன். அக் கண்டன் மாறொருவர் இன்மை கண்டு. (யுத் : 2021)

**கண்டன நிலை - நேர்ந்த நிலைமை.** நிலை கண்டன கண்டு ஒரு தாதை நெடுந்தலை கண்டிலனென்று சலித்தனனல். (யுத் : 1704)

**கண்டனை நின்ருய் - கண்டு நின்ருய். கண்டு மகிழ்ச்சி காட்டி நின்ருய்.** விரிபொழில் இறுத்து வீசக்கண்டனை நின்ருய் என்று. (சு : 730)

**கண்டாகுதல் - கண் தாகுதல். (தாக்குதல்) கண்ணிற் படுதல். கண் பார்த்தல்.** வெய்யோன் கண் தாகுதல் முன் செல்ல விசைத்துள்ளது கண்டான். (யுத் : 3793)

**கண்டாகுலம் - கண்டையின் கூட்டம். (தொகுதி) பெருமணி.** கண்டாகுலம் உற்று ஆயிரம் ஆர்க்கின்றது. (யுத் : 3793)

**கண்டாகுலமுற்று - கண்டு ஆகுலமுற்று.** கண்ணிற் கண்டு ஆகுல முற்று உம்பர் அயிர்க்கின்றது. (யுத் : 3793)

**கண்டாய் - 1. முன்னிலையசை.** கவாற்கிது கருது கண்டாய். (கி : 779)

**2. காண்பாயாக.** கிரி இவண் கிடப்ப கண்டாய் பைந்தொடி அடைத்த சேது பாவனமாயது. (யுத் : 4088)

**கண்டான் - நிச்சயமாக உணர்ந்தான்.** கண்டவளே இவள் என்பது கண்டான். (யுத் : 2825)

**கண்டிகை - பதக்கம் போன்ற ஓர் ஆபரணம்.** அணி கண்டிகை கவசம். (யுத் : 3371)

**கண்டித்தல் - துண்டித்தல். கண்டமாக்குதல்.** நெடும்புயமும் உரமும் கண்டித்து. (யுத் : 3569) காய்கனை கடுப்புறத் தொடுத்துக் கண்டித்து ஆயிரங் கூறு செய்தான். (யுத் : 1096)

**கண்டிரும் - அறியப் போகிறீர்கள்.** இவன் கண்ணனே இது கண்டிரும் பின் என்ருன். (பா : 1173)

**கண்டில் வெண்ணெய் - ஒருவகை வாசனைப் பொருள்; ஓமா லிகைத் திரவியங்களுள் ஒன்று.** பச்சிலை கண்டில் வெண்ணெய் ... அகிலொடு நாறுமன்றே. (பா : 24)

**கண்டிலர் - காணக்கூடவில்லை.** கண்டிலர் ஓசை கேட்டார். (யுத் : 3112)

**கண்டிலன்கொல் - காணவில்லை போலும்.** கண்டிலன் கொலாம் இளவலும். (சு : 341)

**கண்டிலாதன - 1. தேடிக் காணப்படாதன.** (கலா) (வை. மு) **பார்க்கப் படாதன.** (அண்)

**2. படைக்கப்படாதன.** (வை. மு) (அண்) (கலா) பாரதனின் வாழ் உயிர்கள் அம்மதியினேர் கண்டிலாதன அயன் கண்டிலாதன கொலாம். (கி : 823)

**கண்டு - 1. கற்கண்டு.** கண்டினிற் குயின்றவீணை நரம்பொடு கமழுந்தேறல். (யுத் : 2409)

**2. எண்ணி.** நிலை கண்டன கண்டு. (யுத் : 1704)

**கண்டு கண்டு - 1. உணர்ச்சி வசப்பட்டுத் திரும்பத் திரும்பக் கண்டு.** தங்கூருகிர்ப் பெருங்குறி தோள்மேற் ... கண்டு கண்டாருயிர் கழித்தார். (யுத் : 2318)

**2. செவ்வனே கண்டு.** யாவர்க்குந் தீதிலாமை கண்டு கண்டுவகை யேற. (யுத் : 2552)

**3. பலமுறை கண்டு.** கண்டு கண்டனைக் கைத்தலம் குவிக்கின்ற காட்சி. (யுத் : 4040)

**கண்டு காட்டுவார் - ஞானிகள்.** கண்டு காட்டுவார் உண்ணிறைந்திடு முணர்வாகி. (யுத் : 201) [பா : பே]

**கண்டு காட்டுவான் - எல்லாவற்றையும் கண்டு (அவற்றின் இயல்பில்) உள்ளவாறு அறிவுறுத்துவான்.** (அண்) (யுத் : 201)

**கண்டு கொண்டருள்வாய் - பார்ப்பாயாக.** கோதற்ற சிந்தையாய் கண்டு கொண்டருள்வாய். (யுத் : 4165)

**கண்டுகொண்டேன் - தரிசிக்கப் பெற்றேன்.** தருமமே உருவமா வுடைய நிற் கண்டுகொண்டேன். (கி : 361)

**கண்டு கோடி - கண்டுகொள்ளப் போகின்றாய்.** குத்துண்டன்னுன் குலத்தொடு நிலத்தனுதல் போய்க் கண்டுகோடியன்றே. (யுத் : 2877)

**கண்டேனல்லேன் - கண்டிலேன்.** யானே கண்ணிற் கண்டேனல்லேன். (அ : 378) நற்பெருந்தவத்தளாய நங்கையைக் கண்டேனல்லேன். (சு:1308)

**கண்டை - 1. ஓர் இசைக்கருவி.** கரடிகை துடி வேய் கண்டை அம்பலி கனுவை. (யுத் : 2397)

**2. பெரு மணி. (யானை மணி)** மாக்கொடி கண்டைமான. (யுத் : 2398) களிற்றிடை மணியென இசைக்கும் கண்டை ஆயிர கோடியின் ருகையது. (யுத் : 3626)

**3. மணி.** கண்டை ஆயிரகோடிகள் ஒலிப்புற. (யுத் : 4065)

**கண்டைத்தார் - கிண்கிணி மாலை.** கண்டையின் தாரார். (யுத் : 2084)

**கண்ணகல் - இடமகன்ற.** கண்ணகல் நீனிறவரை. (ஆ : 180) கண்ணகல் நன்னீர்க்கரை. (கி : 891)

**கண்ணகன் கோயில் - இடமகன்ற மாளிகை.** புண்ணியன் கண்ணகன் கோயிலுட் புக்கான். (சு : 230)

**கண்ணகன் பெரும்படை - இடமகன்ற பெரிய சேனை.** கண்ணகன் பெரும் படைத்துணைவர் காத்திட நண்ணின துணையொடு பொருதல் நன்று. (யுத் : 1981)

**கண்ணகன் பெரும் புனல் கங்கை** - அகன்ற இடத்திற் பாயும் நீர்ப்பெருக்கினையுடைய கங்கை. (அ : 994)

**கண்ணகன்றடமார்பு** - மிக அகன்ற மார்பு. கண்ணகன் தட மார் பெனுங் கல்லினன். (ஆ : 650)

**கண்ணகனன்னிர்க்கரை** - பரவிய மிக்க நீரையுடைய பொய்கை யின் கரை. (கி : 891)

**கண்ணடி** - கண்ணாடி. செழும்பூ நறுமாலை சூடிச்சூடிக் கண்ணடி நோக்கித் துவள்வாளும். (பா : 1000)

**கண்ண நீர்** - கண்ணிலுள்ள நீர்; கண்ணீர். தடக்கையாலெடுத் தவற்றழுவிக் கண்ணணீர் துடைத்து. (அ : 557)

**கண்ணயில்** - கண்ணாகிய கூரிய வேல். கருங்கடைக் கண்ணயில் காமர் நெஞ்சினை உருங்குவ. (பா : 138)

**கண்ணரங்குதல்** - கண் - உபசர்க்கம். வருந்தல். அங்நிமித்தமுற்ற போதரக்கர் கண்ணரங்க. (யுத் : 3338)

**கண்ணருவி** - கண்ணீர். முளரியங் கண்ணன் சடிலநீள்துகள் ஒழிதரத் தனது கண்ணருவி நெடிய காதலங்கலசம தாட்டினன் நெடியோன். (யுத் : 4106)

**கண்ணவன்** - கண் போன்றவன். (வை. மு) கண்ணோட்டமுடை யவன். (கலா) (யுத் : 3995)

**கண்ணவாம் புனல்** - கண்களினின்று பெருகுகின்ற ஆனந்தக் கண்ணீர். யானை வண்ணவார் மதமு முந்நீரும் மாதர் கண்ணவாம் புனலும் ஓடிக் கடலையும் கடந்தவன்றே. (யுத் : 4260)

**கண்ணற** - 1. நீங்க. (வை. மு) கணுக்கள் தகரும்படி. (கலா) துகளாம்படி. (அண்) நெடுநாணும் கண்ணற. (பா : 608)
2. கண்ணோட்டமில்லாமல். கண்ணற இடித்த காலத்துருமென. (யுத் : 3153)

**கண்ணறுதல்** - நீங்குதல். (பா : 608)

**கண்ணன்** - 1. திருமால். கண்ணுதல் பொருந்தவரு கண்ணனில் வரும். (பா : 916)
2. இராமபிரான். (கருநிறமுடையவன். கண் போன்றவன். கண்ணோட்டமுள்ளவன்) கலுழன்மேல் விளங்கும் விண்டுவிற் கண் ணனை என்னெடு வெரிநிற் காண்டியால். (சு : 678) (அ : 657) (பா : 1153)
3. சடையப்ப வள்ளல். வெண்ணெய் வாழ் கண்ணன். (பா : 495)

**கண்ணன் தங்கை** - துர்க்கை. கமலத் தடங்கண்ணன் தங்கையழுதாள். (யுத் : 2628)

**கண்ணனூர்** - இராமபிரான். கள்ள வாளரக்கன் அக் கமலக் கண்ணனூர் உள்ளுறை உயிரினை ஒளித்து வைத்தவா. (சு : 394)

**கண்ணார் நுதற் பெருமான்** - நுதல் கண் ஆர் பெருமான் ; நெற்றியிலே நிறைந்த கண்ணையுடைய சிவபெருமான். (யுத் : 3030)

**கண்ணாற் காண்டல்** - கண்ணினால் பிரத்தியட்சமாகப் பார்த்தல். கண்டாள் கண்ணால் கணவனுருவன்றி ஒன்றுங் காணாதாள். (யுத் : 2627)

**கண்ணி** - 1. கருதி. கரனே முதலோர் உதிரத்தின் வாரி கண்ணி. (ஆ : 924)
2. ஆராய்ந்து. கண்ணியுணர்ந்தீர் கருமம். (கி : 1024)
3. முடிமாலை. புகலும் வாளரிக் கண்ணியர். (பா : 955)
4. மாலை. வண்டுழாய்க் கண்ணிய. (பா : 1388)

**கண்ணிடை ஒளி** - கண்ணிடத்துள்ள ஒளியாய் நின்று உதவுபவன். (அண்) கண் கூசும்படியான ஒளி. (வை. மு) கண்களித்து ஒளியாய் விளங்கும் பரம்பொருளாகிய இராமபிரான். (கலா) விண்ணிடை இம்பர் நாகர் விரிஞ்சனே முதலோர்க்கெல்லாம் கண்ணிடை ஒளியின் பாங்கர். (ஆ : 281)

**கண்ணிடைக் கனல்சொரி களிறு** - (மதத்தால்) கண்ணில் நெருப்பைச் சொரிகின்ற ஆண் யானைகள். கண்ணிடைக் கனல்சொரி களிறு மண்ணிடை வெட்டுவ. (பா : 136)

**கண்ணிடை நிறுத்துதல்** - கண்ணெதிரே நிற்கச் செய்தல். நபனை இன்றிவன் கண்ணிடை நிறுத்துவென். (யுத். 1526)

**கண்ணிணை** - இணையாகிய கண்கள். இரண்டு கண்கள். கண்ணொடு கண்ணிணை கவ்வி. (பா : 598) (கி: 197)

**கண்ணிணை உதிரமும் புனலும் காலுதல்** - இரண்டு கண்களினினும் (கோபத்தால்) உதிரமும் (விசனத்தால்) நீரும் மிகுதியாகச் சிந்துதல். கண்ணிணை உதிரமும் புனலும் கான்றுக மண்ணினை நோக்கிய மலரின் வைகுவாள். (யுத் : 3990)

**கண்ணிணை வாரி** - கண்களினின்று பெருகுகின்ற நீர். மழை பொரு கண்ணிணை வாரியோடு தன் இழை பொதிந்திட்டனள். (கி : 197)

**கண்ணிமைத்தல்** - அச்சத்தாற் கண்களை மூடுதல். கம்பமில் திரையில் நின்ற களிறும் கண்ணிமைத்தவன்றே. (ஆ : 479)

**கண்ணிய** - 1. கருதிய. கண்ணிய கருமம் இன்றே முடிக்குவென் கடிதின் என்றான். (சு : 948)
2. விரும்பிய. கண்ணிய கணிப்பரும் செல்வக் காதல் விட்டு. (கி : 689)
3. குறிக்கப்பட்ட. குறித்த. கண்ணிய நாள் கழிந்துளவால். (சு : 323) வேதங் கண்ணிய பொருள். (யுத் : 131)
4. பொருந்திய. பூதங்கண்ணிய வலியெலாம். (யுத் : 131)

5. **காரணமாக. இடம் பெற்ற. மூண்ட.** கேகயன் மகள் கண்ணிய சினங்கிடந் தெரியலிற் றீய்ந்தவே கொலாம். (ஆ : 984)

**கண்ணியக்கால் - நினைத்தால்.** ஒரு மூவேம் கண்ணியக்கால். (ஆ : 364)

**கண்ணிய பொருள் - குறித்த பொருள்.** வேதங்கண்ணிய பொருளெலாம் விரிஞ்சனே ஈந்தான். (யுத் : 131)

**கண்ணிய மந்திரம் - மேற்கொள்ளும் ஆலோசனை.** கண்ணிய மந்திரம் கருமம். (யுத் : 46)

**கண்ணியர் - மாலையணிந்தவர்.** புகலும் வாளரிக் கண்ணியர் பொற்புயம். (பா : 955)

**கண்ணில் விழித்தல் - கண்முன்னே விழித்தல்.** மேகமேயனையான் கண்ணில் எங்ஙனம் விழித்து நிற்றும். (யுத் : 3311)

**கண்ணிலான் - பிறவிக்குருடன்.** கண்ணிலான் பெற்றிழந்தான் என உழந்தான் கடுந்துயரம். (பா : 328)

**கண்ணிழல் - கண்களின் நிழல்.** கள்ள வாள்நெடுங்கண்ணிழல் கயலெனக்கருதா. (பா : 540)

**கண்ணிற் கடுகுதல் - கண்ணின் பார்வையைக் காட்டிலும் விரைந்து செல்லுதல்.** கண்ணிற் கடுகும் மனனிற் கடுகும். (யுத் : 2348)

**கண்ணிற் கூறுதல் -கண்பார்வையின் குறிப்பினுல் சொல்லுதல்.** உலகம் யாவுக்கும் களைகணைத்தொழ அவன் கண்ணிற் கூறினுன். (யுத் : 3998)

**கண்ணிற் கொல்லல் - கண்ணெதிரே கொல்லல்.** பெருஞ்சிறைக் கற்பினுளைப் பெண்ணினைக் கண்ணிற் கொல்ல. (யுத் : 2841)

**கண்ணிற் புதுப் புனலாட்டுதல் - கண்ணினின்றும் வெளிவரும் புது நீரைக்கொண்டு திருமஞ்சனம் செய்தல்.** பொழியுங்கண்ணிற் புதுப்புனலாட்டினர். (அ : 631) [பா : பே]

**கண்ணிற்றல் - கண்முன்னே நிற்றல்.** கண்ணின்ற சுந்தரப் பொற்றோளானை முகநோக்கி. (யுத் : 1573)

**கண்ணின் நோக்குதல் - கண்களாற் காணுதல்.** முனிவர் கண்டவர் கைகுலைக்கின்றதும் கண்ணினோக்கினுன். (யுத் : 2950)

**கண்ணின் விழுங்கல் - கண்களால் உட்கொள்ளுதல்.** வெருளும் நோய்கெடக் கண்ணின் விழுங்கலால். (பா : 705)

**கண்ணின் வெள்ளம் - நோக்கப்பெருக்கு.** இருந்தனன் இராவணன் புருவக் கார்முகக் கருந்தடங் கண்ணியர் கண்ணின் வெள்ளத்தே. (ஆ : 582)

**கண்ணினுற் பேசல் - கண் பார்வையினுற் குறிப்பாகக் கூறுதல்.** கூற்றம் போலுங் கொலைக்கண்ணினலன்றி மாற்றம் பேசுகிலாளை. (பா : 851)

**கண்ணினுண் மணி - கண்ணினுள் மணி.** கண்ணினுண்மணியூடு கழிந்தன எண்ணின் நுண்மணலிற் பல வெங்கணை. (யுத் : 3858)

**கண்ணினீர்க்கடல் - கண்ணீர்க்கடல்.** கண்ணினீர்க்கடல் கைவிட நேர்கிலன். (அ : 520)

**கண்ணினீர்க் கலசமாட்டல் - கண்ணீராகிய கலச நீரினுல் முழுகப் பண்ணுதல்.** கையினுற் பொருந்தப் புல்லிக் கண்ணினீர்க் கலசமாட்டி. (யுத் : 4218)

**கண்ணினீராட்டல் - கண்ணினின்று வரும் நீரினுல் நீராட்டல்.** தழுவிக் கண்ணினீராட்ட. (யுத் : 4037)

**கண்ணீர் - கள்ளாகிய நீர்; கண்ணநீர்.** வாள்நுதலியர் வதன ராசி போல் உகுத்த கண்ணீரின. (அ : 535)

**கண்ணீர் சோர்தல் - கண்களில் நீர் தாரைதாரையாய்ப் பெருகுதல்.** பரதனுங்கண்ணீர் சோர. (யுத் : 4223)

**கண்ணீர்த்தாரை - கண்களிலிருந்து பெருகும் நீர்த்தாரை.** உண் கணீர்த்தாரை மிதுக. (யுத் : 3898)

**கண்ணீர்ப் புதுப்புனல் - கண்ணீராகிய புதுப்புனல்.** பொழியுங் கண்ணீர்ப் புதுப் புனலாட்டினர். (அ : 631)

**கண்ணீர் பொடித்தல் - கண்ணீர்த்துளியைப் பெருக்குதல்.** துள்ளிக் கண்ணீர் பொடித்திலன். (யுத் : 2851)

**கண்ணீர்மெழுகுதல் - கண்ணீரால் மெழுகுதல்.** கையால் நிலந் தடவிக் கண்ணீர் மெழுகுவார். (அ : 401)

**கண்ணீரருவியாடுதல் - கண்ணீராகிய அருவியில் நீராடுதல்.** அல்லனை நெடுங்கணீர் அருவியாடினன். (அ : 991)

**கண்ணீராயொழுகல் - கண்ணிரண்டிலும் நீர்மிக ஒழுகுதல்.** கண்ணும் நீராய் உயிரும் ஒழுகக் கழியா நின்றேன். (அ : 351)

**கண்ணீரால் மஞ்சனத் தொழில் செய்தல் - விழிகளினின்று பெருகிய நீரால் நீராட்டுந் தொழிலைச் செய்தல்.** ஐயனை அவர்கள் தாமும் அன்புறத் தழுவித் தத்தம் செய்யதாமரைக் கணீரால் மஞ்சனத் தொழிலுஞ் செய்தார். (யுத் : 4263)

**கண்ணீராலியுகல்-கண்ணிலிருந்து கண்ணீர்த் துளிகள் சிந்துதல்.** பூந்தரள மாதாம்பு அற்றென்ன மழைக் கண்ணீர் ஆலியுக. (அ : 394)

**கண்ணீராற்றல் - கண்ணீரைப் பெருக்கல்.** கண்ணீராற்றித் தலைசுமந் திருகை நாற்றி. (யுத் : 2862)

**கண்ணுடை நுதலவன் - கண் பொருந்திய நெற்றியையுடைய உருத்திரன்.** கண்ணுடை நுதலவன் சிலைவிலின் நோன்மை நூறிய புதல்வன். (அ : 842)

**கண்ணுதல் - 1. சிவபிரான்.** (சு : 26) கண்ணுதல் ஒருவனது அடுபடை. (யுத் : 3761) காளியைப்பண்டு கண்ணுதல் காட்டியகாலை. (யுத் : 3228)

2. **மூளுதல்.** கண்ணிய சினம். (அ : 984)

3. **செய்ய நினைத்தல்.** நிருதரோடுங் களங்கோடற்குரிய செருக் கண்ணியக்கால். (ஆ : 364)

4. **கருதுதல்.** கண்ணிய சீற்றந் தீர்ந்தான். (ஆ : 1025)

5. **அனுபவித்தல்.** கரையிலாத பெருவளங் கண்ணினர். (யுத் : 3585)

**கண்ணுதல் பொருந்தவரு கண்ணன் - சிவபிரான் தன்னிடம் பொருந்த வருகின்ற திருமால்.** கண்ணுதல் பொருந்த வருகண்ணனில் வரும். (பா : 916)

**கண்ணுதல் வானவன் - சிவபெருமான்.** இரவியான கண்ணுதல் வானவன் கனகச் சடை விரித்தால் என விரிந்த கதிர்களெல்லாம். (பா : 716)

**கண்ணுதலான் - சிவபிரான்.** கண்ணின் நோக்குறிற் கண்ணுதலானையுங் கடக்கும். (கி : 727)

**கண்ணுதற் பரமன் - கண்ணை நுதலிலேயுடைய பரமனான சிவபிரான்.** (யுத் : 3477)

**கண்ணுதற் பெருங்கடவுள் - நெற்றிக்கண்ணையுடைய பெருமை மிக்க கடவுளாகிய சிவபிரான்.** (யுத் : 1552)

**கண்ணுதிரங் காலுதல் - கண்கள் இரத்தத்தைச் சொரிதல். கோபக்குறி.** கதிரும் வானமுஞ் சுழன்றன நெடுநிலங் கம்பித்த கனகன்கண் உதிரங்கான்றன. (யுத். 209)

**கண்ணுள் - கூத்து.** (கி: 22) (கி: 480)

**கண்ணுள் ஆடுபாவை - கண்களில் அசைகின்ற கருவிழி.** ஆயிளையார்க்குக் கண்ணுள் ஆடிரும் பாவையானுன். (யுத் : 4257)

**கண்ணுளர் - 1. கூத்தர்.** களிக்கும் மஞ்ஞை அக்கண்ணுள ரினமெனக் கண்ணுற்று. (கி: 480)

2. **கழைக் கூத்தர்.** கலிநடக் கழைக்கண்ணுளரென நடங்கவின. (கி : 22)

**கண்ணுற்றவாரி - கண்ணில் வடிந்த கண்ணீர்.** கண்ணுற்றவாரி கடலுற்றது. (அ : 390)

**கண்ணுற** - பொருந்த. கண்-இடப்பொருள். கச்சையங் கடகரிக் கழுத்தின் கண்ணுறப் பிச்சமும் கவிகையும் பெய்யும் இன்னிழல். (அ : 26)

**கண்ணுறல்** - 1. சேர்தல். அழித்துமிவ் வாக்கையைப் புகழைக் கண்ணுற. (யுத் : 3435)

2. காணுதல். கண்ணன் கடலைக் கண்ணுற்றான். (யுத் : 2) (சு : 329)

**கண்ணுறு** - 1. பெருமை பொருந்திய. (வை. மு) எல்லாருடைய கண்களும் பொருந்துதற்குக் காரணமான. (அண்) கண்ணுறு கவரியின் கற்றை சுற்றுற. (அ : 2)

2. காட்சியமைந்த. கண்ணுறு கருங்கடல். (பா : 130)

**கண்ணெனும் பூசலம்பு** - கண்ணென்று சொல்லப்படுகின்ற போர்வாளி. ஐம்பொறி வாளியும் ... ... கண்ணெனும் பூசலம்பும் நெறியின் புறஞ்செலாக் கோசலம். (பா : 12)

**கண்ணொடு கண்ணிணை கவ்வுதல்** - ஒருவர் கண்ணிணையோடு மற்றொருவர் கண்ணிணை கவர்ந்து பற்றிக் கொள்ளுதல். கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றையொன்றுண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட. (பா : 598)

**கண்ணோட்டம்** - தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்க மாட்டாமை தாட்சணியம். கண்ணோடாதே கணவன் உயிரோடு இடர் காணாதே. (அ : 340)

**கண்ணை ஈர்தல்** - கண்ணை அகழ்ந்தெடுத்தல். நின்னை இங்ஙனம் பார்த்த கண்ணை ஈர்கிலாக் கள்வனேன். (அ : 661)

**கண்ணை விழுங்குதல்** - கண்ணை மறைத்தல். தூளி விண்ணோர் கண்ணை விழுங்குதலினாற் கரை காணார். (யுத் : 2275)

**கண் தாரையருவி** - கண்ணீர்த்தாரையாகிய அருவி. பெய் கண் தாரையருவிப் பெருந்திரை மொய் கண்டார் திரை வேலையை மூடவே. (யுத் : 3174)

**கண் தீயுகல்** - விழிகளினின்று தீப்பொறி பறத்தல். எற்றிவாளெயிறு தின்று கைத்துணை பிசைந்து கண்கள் எரி தீயுக வற்றி யோடுதிர வாரி சோர்வுற மயங்கினான் நில முயங்கினான். (யுத் : 2038)

**கண் துணை** - இரு கண்கள். என் கண் துணைகொண்டிதயத் தெழுதி. (பா : 1257)

**கண்படை** - உறக்கம். படுத்த குழையிற்சிலர் கண்படை பயின்றார். (அ : 547a) [பா : பே]

**கண்பனி** - கண்ணீர். கைப்போதினோடு நெடுங் கண்பனி சோர நின்றாள். (பா : 987)

**கண்பனித்தல் - கண்ணீர் சொரிதல்.** கரும்பன மொழியினர் கண்பனிக்கிலர். **(அ: 468)**

**கண்பால் - கண்ணெதிரே.** கண்பாலுறுமாயை. **(ஆ: 709) (சு: 82)**

**கண் பிளந் தகலநோக்கல் - கண்களை அச்சம் நீங்கி விரித்து விரிவாகப் பார்த்தல்.** கண்பிளங் தகலநோக்கும் வானவர் களிப்புங் கண்டான். **(யுத்: 3604)**

**கண்புக்க வேழவில் - கணுப்பொருந்திய கரும்புவில்.** கண்புக்க வேழவில்லால் நார நாண் மலர்க்கணையால் நாளெல்லாம் தோளெல்லாம் நைய எய்யும் மாரனுர். **(யுத்: 3911)**

**கண்புடைத்தல் - கண்ணில் அடித்துக் கொள்ளுதல்.** தருமம் நின்று தன் கண்புடைத் தலமரச் சாய்ந்தான். **(யுத்: 2591)** கண்கள் புடைத்தார். **(யுத்: 2614)**

**கண்பொடித்தல் - கண்ணைக் கெடுத்தல், போக்கடித்தல்.** அது கண் பொடித்த நாள் காக முற்றும் ஓர் கண்ணில வாக்கிய வேகவென்றி. **(சு: 354)**

**கண்பொருத முத்தம் - பொருது கண்ணுற் சொரிந்த முத்துப் போன்ற கண்ணீர்.** பொற்றெடி ஒருத்தி கண் பொருத முத்தமே. **(பா: 1076) [பா: பே.]**

**கண்மணி - 1. கண்.** சிரனெரிந்தவும் கண்மணி சிதைந்தவும். **(சு: 1010)** கரிந்த கண்டகர் கண்மணி. **(யுத்: 1153)**

**2. கண்ணிலுள்ள கருமணி.** மங்கையருள் எல்லாம் கண்மணியெனத் தகைய கன்னி. **(பா: 1227)** நீள வெண்மையிற் கருமைகாட்டி வானுதற் சீதை கண்ணின் மணியென வயங்குவானே. **(யுத்: 440) (சு: 689) (யுத்: 1936)**

**3. கண்மணி போன்றமகன்.** காட்டாயோ என்னுடைய கண்மணியைக் காட்டாயோ. **(யுத்: 1945)**

**கண்மலர் - கண்ணுகிய மலர்கள்.** கண்மலர் உக்கனநீர் வறந்து. **(அ: 469)**

**கண் மலர்தல் - 1. கணுக்களோடு கிளைத்தல்.** கரும்பும் வண்டும் கண்மலர்ந் தொளிருமாதோ. **(பா: 38)**

**2. முகமும் கண்களோடு மலர்ச்சியுறல்.** முகமும் (போதும்) கண் மலர்ந் தொளிருமாதோ. **(பா: 38)**

**3. பூக்கள் தேனேடு மலர்த்தல்.** (முகமும்) போதும் கண்மலர்ந் தொளிருமாதோ. **(பா: 38)**

**கண் முகிழ்த்தல் - கண் மூடுதல். கண் கூம்பல்.** அகலிகை ஏய்ந்த தன்றென எண்ணினன் கண் முகிழ்த்திருந்தான். (சு : 1038) இறங்கிய கண் முகிழ்த்து இரவும் எல்லியும் உறங்குதிபோய். (யுத் : 1309)

**கண் முத்தினம் - கண்களினின்று பெருகும் முத்தினங்கள். (கண்ணீர்த் துளிகள்)** ஆலிபோல் முலை முகட்டு உதிர்ந்திடும் நெடுங்கண் முத்தினம். (பா : 611)

**கண்மை - 1. கண்ணோட்டம். இரக்கம்.** கண்மையும் பொருந்திக் கருணைப்படா வண்மை என்கொல். (சு : 439) (அ : 1136)
**2. காட்சி. கண்ணுக்கு எதிர்.** கண்மையின்னகர் கடந்த அத்திண்மை. (யுத் : 741)

**கண்வழி - கண்களின் வழி.** கண்வழி நுழையும் ஓர் கள்வனேகொலாம். (பா : 618)

**கண் வழுக்குறுதல் - கண்ணொளி மயங்குதல். கண் கூசுதல்.** சோதி பேதை சேயொளியிற்றிர்ந்த கறங்குபு திரியத் தாமும் கண்வழுக்குற்று நின்றார். (பா : 1214)

**கண் வளர்தல் - நித்திரை செய்தல்.** கருங்கடலிற் கண்வளர்ந்தோய் கைம்மாறுமுண்டோ. (ஆ : 101)

**கண்வாரி - கண்ணீர்.** கண்ணுற்றவாரி கடலுற்றது. (அ : 390)

**கண்வைத்தல் - கண் பார்வையைச் செலுத்தல்.** முழுமுகம் திசையிற் கண்வைக்குந்தொறும். (சு : 1086)

**கணக்கறுபதம் - எல்லையில்லாத இடம்.** காயமென்னும் கணக்கறு பதம். (சு : 117)

**கணக்காயர் - உபாத்தியாயர். ஆசிரியர்.** கல்வியிற்றிகழ் கணக்காயர். (கி : 558) **கணக்கு - நூல்; ஆயர் - ஆராய்ந்தவர். காரணப்பெயர்.**

**கணக்கிறுதி - அளவின் முடிவு.** (கலா) **கணக்கே முடிதலையுடைய.** (வை. மு) காதக்கடுங்குறி கணக்கிறுதி கண்ணுள். (சு : 77)

**கணக்கு - 1. தன்மை.** கறங்கலாது கணக்கிலான். (யுத் : 1339)
**2. அளவு.** காலமும் கணக்கும் நீத்த காரணன். (சு : 1222) [பா. பே] கணக்கிலாப் பரப்பு. (யுத். 2421)
**3. நூல்.** கணக்காயர். (கி : 558)
**4. எண்.** கணக்கு வரம்புண்டோ. (சு : 606)

**கண கண கண கண் - கண கண கண வென்று. ஒலிக் குறிப்பு.** கடுமணி நெடிய வெனுஞ்சிலை கண கண கண கண் எனுந்தொறும். (யுத் : 3473) கண கண கண கணெனுந்தொறும். (யுத் : 3473) [பா : பே] கண கண கண்ணெனுந்தொறும். [பா : பே]

**கணங்குழை - திரண்ட பொன்னூற் செய்த காதணி.** கணங்குழைச் சீதை. **(யுத் : 2395)** கணங்குழை மகளிர். **(யுத் : 3089)**

**கணங்குழையாள் - திரண்ட காதணியை அணிந்தவள்.** கணங் குழையாள் எழுந்ததற்பின். **(பா : 767)**

**கணங்குழையினுள் - திரண்ட காதணியை அணிந்தவள். (கி: 877)**

**கணங்கொள்கை - இனமாகக் கொண்டு மேம்படுத்தல். இனத்த வராகச் சேர்த்துக் கொள்ளுதல்.** இணங்கினர் அறிவிலரெனினும் கணங்கொள்கை நும்மனோர் கடன்மை காண். **(யுத் : 393)**

**கணங்கொளல் - இனமாகச் சேர்த்துக்கொண்டு சிறப்பித்தல். (யுத் : 393) [பா : பே]**

**கணத்திறுதி - ஒரு கண முடிவு.** காதக்கடுங்குறி கணத்திறுதி கண்ணுள். **(சு : 77)**

**கணந்தரு குரங்கு - கூட்டமாகவுள்ள குரங்கு.** கணந்தரு குரங்கொடு கழிவதன்றிது. **(யுத் : 1326)**

**கணம் - 1. கூட்டம். தொகுதி.** துறக்க நாட்டு விண்ணவர் கணமும் நாண. **(பா : 1014)** சிலைக் கடுங்கணை நெடுங்கணம் சிறையுடன் செல்ல. **(யுத் : 1428)**

**2. திரட்சி.** கணங்கிளர் தரு சுண்ணம் கல்லிடையன கானத்து. **(அ : 704)**

**3. கால நுட்பம்.** அக்கணம் உவரிமீளும் அகன் மழை நிகர்த்த அம்மா. **(அ : 1049)**

**4. இமைப்பொழுது. கணப்பொழுது.** இயற்றினன் கணத்தின் என்பரால். **(யுத் : 13)**

**கணமணி - தொகுதியான இரத்தினம்.** வறந்த கானயாறுகள் கணமணி இமைப்பன காணாய். **(அ : 755)**

**கணமழை - தொகுதியான மேகம்.** கணமழையைத் தடவத் தீயென நிமிர்ந்த குஞ்சியர். **(யுத் : 3232) (யுத் : 3710)**

**கணவன் - 1. தலைவன்.** வில்லின் விச்சையின் கணவனே. **(யுத் : 3110)**

**2. மணஞ்செய்த பர்த்தா.** என்துணைக் கணவன் ஆற்றற்கு உரனிலாது இற்று. **(சு : 451)**

**கணன் - 1. கூட்டம்.** பரிக்கணன். **(யுத் : 3377)**

**2. கணப்பொழுது.** கணனில் எய்தினன். **(யுத் : 168)** அக்கணனே அயில் வாளினர் நேரா மிக்குயர் நாசியை ஈர விரைந்தார். **(யுத் : 2259)**

**கணுர - கண்ணுர.** இருந்தனள் தேவி யானே எதிர்ந்தனன் என் கணுர. **(யுத் : 2869)**

**கனல் - கண்ணினுல்.** என்கனல். நின் கனல். (யுத் : 251)

**கனி - ஊன்றியுணர்தல்.** கனிகொள் நாளம். (சு : 229)

**கனிகையர் - 1. பணிப்பெண்கள்.** கனிகையர் ஈட்டம் பொங்கி. (பா : 879)

2. **அரங்குகளில் வேத்தியல் நாடகம் நிகழ்த்துவோர்; 64 கலைத் திறமும் படைத்துள்ளோர்.** கனிகையர் தொகுவாரும் கலைபல பயில்வாரும். (பா : 1276)

**கனிகொள் நாளம் - ஊன்றி யுணரத்தக்க பூந்தண்டுகளின் துளை.** (சு : 229)

**கணிச்சை - மழுப்படை. கோடாலிப்படை.** வரிகொள் நோன் சிலை வயவர்தம் கணிச்சியின் மறிந்த பரிய காரகில். (அ : 754)

**கணிச்சியான் - சிவபிரான்.** கணிச்சியான் மகனே. (சு : 236)

**கணிச்சிவானவன் - சிவபிரான்.** கார்விடக் களமுடைக் கணிச்சி வானவன். (பா : 1298) (சு : 139)

**கணித்தல் - 1. எண்ணுதல். கருதுதல்** கணிப்பரும் புனல் கடையுறக் குடித்தலில். (யுத் : 562) உந்தியொக்கும் சுழியெனக் கணித்ததுண்டால். (கி : 783)

2. **ஆராய்தல். அளவிட்டறிதல்.** மறைகள் யாவும் கணித்த என் பெரும. (பா : 660) யார் கணிக்கற் பாலார். (ஆ : 802)

3. **கணக்கிடப்படல்.** வெள்ள மோர் ஏழுபத்துக் கணித்த வெஞ்சேனை யோடு. (யுத் : 920)

4. **மதித்தல்; அடக்குதல்.** இத்தகை வாளால் கணிக்கும் தன்மைத் தன்று. (ஆ : 1173)

**கணித் தொழில் - சோதிடத் தொழில்.** கொடிச்சி மார்க்குக் கணித் தொழில் புரியும் வேங்கை. (பா : 930)

**கணித நூல் - சோதிடம்.** (அ : 263)

**கணித நூல் உணர்ந்த மாந்தர் - சோதிடர்.** கணித நூலுணர்ந்த மாந்தர் காலம் வந்தடுத்ததென்னு. (அ : 263)

**கணிதம் - கணக்கு.** (யுத் : 2999)

**கணிதம் முறுதல் - ஒரு கணக்குக்கு அகப்படுதல். எண்ணு வதற்கு அடங்குதல்.** விசிகம் என இமையோர் கண் செல்கில மனஞ் செல்கில கணிதம் முறுமெனினேர் எண் செல்கில. (யுத் : 2999)

**கணிதமாக்கள் - சோதிடர். காலக் கணிதர்.** காவலின் நுனித்துணர் கணிதமாக்களும் கூவுறு கோழியும் துயில்வு கொண்டவே. (ஆ : 688) (அ : 98)

**கணிதர் - சோதிடர்.** உரை தெரி கணிதரை ஒருங்கு கொண்டு. (அ : 86)

**கணிப்பிலாதார் - எண்ணற்றவர்.** படையரக்கர் கணிப்பிலாதார். (யுத் : 3357)

**கணிப்பு - 1. அளவு.** ஆக்கைகள் அடுக்கிய அடுக்கல் பிறங்கி நீண்டன கணிப்பில. (ஆ : 523) (ஆ : 754)

2. **எண்ணுதல். எண்ணி அளவிடல்.** கணிப்பரிய செல்வம். (கி : 689) கணிப்பரிய கலை. (யுத் : 411)

3. **கணக்கிடல்.** (கலா) கணிவருங் கருணையான். (பா : 1304) [பா: பே]

**கணில் - கணீர். ஒலிக்குறிப்பு.** கானம் ஆயிரங்கவந்த நின்ருடிடின் கவின் மணி கணில் எனும். (யுத் : 3485)

**கணீர் - கண்ணீர்.** வீழ்கணீர் துன்னரும் பெருஞ்சுழி அழிப்ப. (யுத் : 334) இருகணீர் அருவி சோர. (அ : 665-c)

**கனுவை - ஓர் இசைக்கருவி.** (யுத் : 2397)

**கணை - அம்பு.** கணைக்கடுங் கண்ணினளை. (பா : 848)

**கணைக்கால் - முழங்காலுக்கும் பரட்டுக்கும் இடையிலுள்ள உறுப்பு.** மேகமன்னவன் பூங்கணைக் காற்கொரு பரிசுதான் ஆங்கவைக் காவமோ ஆவது. (சு : 532)

**கணைக்கானம் - அம்புக்கூட்டம். மொய்கணைக்கானம்.** (யுத் : 2066)

**கணைகண்டங் காணுதல் - அம்புகளைத் துண்டமாக்குதல்.** கைக் கணையொன்ருல் வள்ளல் அக்கணை கண்டங் கண்டான். (யுத் : 3069)

**கணைத்தூணி - அம்புகளையுடைய தூணீரம்.** வில்லும் அருங்கணைத் தூணியும். (ஆ : 137)

**கணை தள்ளுதல் - அம்பு விடுதல்.** தாளற்றுக் கணை தள்ளிடுவான் சூளுற்றதுமுண்டு அது சொல்லுதியால். (யுத் : 1710)

**கணை துரத்தல் - அம்பு விடுதல்.** சுடு கணை பலமுறை துறந்தான். (யுத் : 508)

**கணை நூக்குதல் - கணைகளை எய்து செலுத்தல்.** நூறு ஆயிரமும் கணை நூக்கி வந்து. (யுத் : 2112)

**கணைப் புட்டில் - அம்பருத்தூணி.** பல்கணைப் புட்டிலும் பொறுத்தனன். (அ : 1094) (யுத் : 1969)

**கணைமாரி** - அம்பு மழை. விடுகணை மாரியால். (யுத் : 1033) தெரிகணைமாரி. (யுத் : 2115) தொடையூறின கணைமாரிகள். (யுத் : 3716)

**கணைமாரி வித்தல்** - அம்பு மழைகளை விதைத்தல். வெம்பிகல் அனுமன் மீதே கணைமாரி வித்தி. (யுத் : 2372)

**கணைமாறுதல்** - அம்புகள் பிரயோகிப்பதை மாற்றுதல். போர் நிறுத்தல். கண்டன் மாறெருவர் இன்மை கண்டு கணைமாறினுன். (யுத் : 2021)

**கணைமுடுக்குதல்** - அம்பை விரைந்து செலுத்துதல். மார்பிடை முற்று வெங்கணை நூறு முடுக்கினுன். (யுத் : 2077)

**கணையம்** - 1. யானை நிற்குமிடத்தில் யானைகள் ஒன்றேடொன்று முட்டிக்கொள்ளாத வண்ணம் குறுக்காக இடப்படும் மரம். திருத்து கூடத்திற் றிண்கணையத்தொடும் எருத்தினேந்திய மால்களி றென்னவே. (பா : 853)

2. வளைதடி. கோல் கணையநேமி. (சு : 164) [பா : பே] (சு : 940)

**கணை வித்துதல்** - அம்புகளை விதைத்தல், அனுமன்மீதே வெங்கணை மாரிவித்தி. (யுத் : 2372)

**கணையின் மேவும் குளிர் மெல்லணை** - அம்புகளால் அமைந்த குளிர்ந்த மெல்லிய படுக்கை. எதிர்மறை இலக்கணையால் வெப்பம் மிகுந்த வலிய அணை என்ற பொருளைக் காட்டும். ஏவின் தலைவந்த இருங்கணையின் மேவும் குளிர் மெல்லணை மேவினையோ. (யுத் : 2642)

**கத்தரிகை** - கத்தரிக்கோல். வள்ளை கத்தரிகை வாம மயிர்வினைக் கருவி யென்ன. (கி : 786)

**கத்திகை** - மாலை. வாசம் திணியும் இதழ்ப்பித்திகைக் கத்திகை சேர்த்து வாரும். (பா : 972)

**கத்துரு** - காசிப முனிவன் மனைவி. வியாளமெலாம் கருத்துருவாம் மின்னுமின்ருள். (ஆ : 204)

**கத்துவாரிதி** - ஒலிக்குங்கடல். கத்துவாரிதி மறுகுற அமிழ்தெழக் கடைமின். (பா : 498)

**கதக்கரி** - சினத்தையுடைய யானைகள். நீர்நாய் கதக்கரி கால் நிமிர்ந் துண்டன. (அ : 1081)

**கதங்கொள் சீற்றம்** - கறுவைத்தற்குக் காரணமான பெருஞ்சினம். கதங்கொள் சீற்றத்தை ஆற்றுவான் இனியனகழறி. (பா : 901)

**கதஞ்சிறத்தல்** - வெகுளி மிகுந்து தோன்றுதல். கதஞ்சிறப்பன மாற்றங்கூறுவான். (யுத் : 2959)

**கதத்தரவம் எட்டு – சீற்றம் மிக்க எண்பெரும் பாம்புகள். அட்டமா நாகங்கள்.** *(யுத் : 3643)* **எட்டுப் பாம்பு பார்க்க.**

**கதத்தொழிலோன் – வெகுளிச் செயலையுடைய அதிகாயன்.** *(யுத்:1732)*

**கதந்தீர்தல் – கோபம் நீங்குதல்.** *ஈன்றாளை வென்றோ இனி இக்கதந் தீர்வதென்றான். (அ : 431)*

**கதம்பம் - பலவகைச் சுண்ணம். நறுமணப்பொடி. கலவைச்சாந்து.** *கதம்பநாள் விரை கள்ளவிழ் தா தொடும். (பா : 1037)*

**கதம் புலர்தல் – கோபம் மாறுதல்** *கதம் புலர்ந்த சிந்தைவந்த காவல் யானை மாலொடு மதம் புலர்ந்த. (யுத் : 3336)*

**கதமலை - யானை.** *கருமலை நிகர்வன கதமலை கனல்வன. (யுத் : 1808)*

**கதமலைக்கரசு – சினங்கொண்ட அரச யானை.** *கவன வெம்பரியும் வேகக்கதமலைக் கரசும். (யுத் : 4344)*

**கதமா – சினம் மிக்க யானை.** *சியத்தால் தனிமதக் கதமா உலந்து விழ்தலில். (அ : 742)*

**கதமெனும் பொருண்மை – கோப மென்னும் பொருளின் தன்மை.** *கதமெனும் பொருண்மையிலர். (கி : 51)*

**கதலி – 1. பட்டம், காற்றாடி.** *ஆகாய மூற்ற கதலி. (சு : 85)*

2. **கொடி, பெரியகொடி.** *காலனெடுந்தேருயர் கதலியும். (யுத் : 1066)*

3. **வாழை.** *காரும் வார்சுவைக் கதலியின் கனி. (கி : 294), (கி : 864), (யுத் : 1066)*

**கதலிக்கானம் – கொடிகளின் தொகுதி.** *நிருதர் புயக்கற் செறிந்த கதலிக்கானம். (யுத் : 3566)*

**கதலியின் கனி – வாழைப்பழம்.** *(கி. 294)*

**கதவம் – கதவு.** *ஒண் மலர்க் கதவம் செய்ய கரத்தின் நீக்கினான். (கி : 410)*

**கதவலி – கோபம்மிக்க பெரியவலி.** *உங்கள் வெங்கத வலிக்கொருவன். (கி : 182)*

**கதவு – கதவம்** *தாளினால் தாக்கினான் அக்கதவினை நொய்தினின். (கி : 599)*

**கதழ் – 1. விரைவு.** *கதழ்தேர். (யுத் : 2340) கதழ்படர் கடுங் கனல். (யுத் : 1285)*

2. **கொடுஞ்சினம்.** *கல்லலைக் கிடங் தகடுவெந் தயர்கின்ற கதழ் பாம்பு. (அ : 731)*

**கதழ்தல் – 1. சினத்தல்.** கதழ் பாம்பு. (அ : 731)

**2. கொடுமையாதல்.** காந்துறு கதழெயிற்றரவின். (சு : :1052)

**3 உக்கிரமாதல், மிகுதல், விரைதல்.** காருலவைகள் கதழெரி கதுவ. (ஆ : 448)

**4. மூளுதல்.** (உ. வி.) (ஆ : 448)

**5. விரைதல்.** கதழ்வால். (யுத் : 1812), கதழ்தேர். (யு : 2340)

**கதழ்படர் கடுங்கனல் – விரைந்துசெல்லும் தன்மையுடைய கொடிய வடவைக்கனல்.** கடர்கிடந்து நின்றதன்மேற் கதழ் படர் கடுங்கனல் போன் மயிர்ப் பங்கியான். (யுத் : 1285)

**கதழ்வம் – அக்கினி.** நவைதீர் கதழ்வமாய் நறுநெயுண்டு அன்பர் கருதிற்றுதவு சேவடி. (ஆ : 45) [பா. பே.]

**கதழ்வு – விரைவு.** காத்தோர் மரம் வீசுறு கைக்கதழ்வன் போத்தோர் புலி போற் பனசன் புரள. (யுத் : 2345) கதழ்வட கடுங்கனல். (யுத் : 1285)

**கதழெரி – மிக உக்கிரமான எரி.** (ஆ : 448)

**கதனம் – கலக்கம். கலக்கத்தை உண்டுபண்ணுவது.** கதனவாயில் (யுத் : 994)

**கதனவாயில் – கலக்கத்தை உண்டாக்கும் கோட்டை வாயில்.** (யுத் : 994)

**கதி – 1. பிறப்பு.** செல்லுறு கதியிற் செல்லும் வினை யெனச் சென்ற தன்றே. (பா : 28)

**2. நடை.** பிடியின் கதியினை நகுவன அவர் நடை. (பா : 75) கதிகொண்டு. (சு : 918) (யுத் : 815) மடவன்னக்கதி. (அ : 677)

**3. வேகம். விரைவு.** வெயிலுங் கண்டுளம் கதி குறைந்திட. (ஆ : 8) கதித்துப்பு அழிந்து கழிந்தார். (சு : 859) கதிக்கொரு கல்வி வேறே காட்டுவது ஒத்ததன்றே. (ஆ : 801) இடறுங்கதி யாற்பல. (யுத் : 1835)

**4. தீக்கதி. நரகம்.** சோறு தன் அயலுளோர் பசிக்கத் துய்த் துளோன் ஏறுமக்கதியிடை யானும் ஏறவே. (அ : 898)

**5 சக்தி.** நெடுவாயுவின் நிலை கண்டவர் கதியால் மற்றங்கொரு வடிவுற்று அது மாருடுறு காலை. (யுத் : 1141)

**6. செலவு போக்கு.** கதிய. (யுத் : 3721)

**கதி குலைதல் – வேகம் குன்றுதல்.** அவுணர் அமரர் கப்களென அவுணர் கால்கள் கதி குலைவ. (யுத் : 168)

**கதி செல்லல் – உயிர்கள் நால்வகைப் பிறப்பு நெறியிற் செல்லல்.** *செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்றதன்றே.* (*பா : 28*)

**கதித்தல் – 1. பெருத்தல்.** *கண்ணிரண்டு கதிமுலை.* (*பா : 707*)

**2. சினத்தல்.** *கதிக்குஞ் சொல்லினுள்.* (*அ : 137*)

**3. அதட்டுதல், உரத்துப்பேசுதல்.** *கதித்த சொல்லார்.*(*பா : 880*)

**4. வேகங்கொள்ளுதல்.** *கதிகொண்டு குதித்தவன்.* (*சு : 914*)

**கதித்துப்பு – விரைவுள்ள வலிமை.** (*சு. 858*)

**கதிபெறல் – நற்கதியடைதல்.** *வானதி கடிதணுகி என்புதோயுமேல் நற்கதி பெறுவர்.* (*பா : 523*) *கழிந்த மன்னவர் கதிபெற முடுகிய கதியால்.* (*பா : 534*)

**கதியுறுபொறி – விரைவு பொருந்திய இந்திரியம்.** (*வை. மு.*) **விரைவுடைய மனம்.** (*அண்*) *கதியுறு பொறியின் வெய்ய காம நோய்.* (*ஆ : 645*)

**கதிர் – 1. சூரியன்,** *கதிரின் செம்மல்.* (*கி : 703*)

**2, சூரிய கிரணம்.** *நிமிர்ந்த வெங்கதிர்க்கற்றை.* (*பா : 695*)

**3. ஒளி.** *நோன்கதிர் வாள் வேல்.* (*அ : 596*) (*அ : 629*) *கதிர்மணி முடியன்.* (*யு. 448*)

**4. கூர் நுனி.** *கதிர்கொண்ட சுடர்வேல்.* (*பா : 239*)

**5 சூரிய சந்திராதியர்.** *கானும் வானமும் கதிரும் நாகமும்.* (*கி : 120*)

**6. நெற்கதிர்.** *கதிரவாள்.* (*யுத் : 1281*)

**7. சந்திரன் ஒளி.** *கதிரவாள் வயிரக்கழல்.* (*யுத் : 1281*)

**கதிர்க்குழாம் – ஒளித் தொகுதிகள்.** *கதிர்க்குழாம் புடை நிரைத் தொளிர் பல்கலன்.* (*யுத் : 1291*)

**கதிர்சுழல் பொருப்பு – மேரு.** *கதிர்சுழல் பொருப்பை ஒப்பவன் இன்று பொன்றினுன்.* (*யுத் : 1054*)

**கதிர்த்தல் – இறுமாத்தல்.** *கண்ணிரண்டு கதிர்முலை தாமிரண்டு.* (*பா : 707*) [*பா : பே*]

**கதிர்த்தலம் – சூரிய மண்டலம்.** *கதிர்த்தலஞ் சூழ் வடவரையின் காட்சியான்.* (*புத் : 1520*)

**கதிர்நாறும் அளவை – சூரியன் அத்தமிக்கும் காலம்.** (*அண்*) **உதயம்.** (*கலா*) (*அ : 718*)

**கதிர்நெல் – நெற்கதிர்.** *ஆய்கதிர் நெற்றெடுத் தன்ன குஞ்சியன்.* (*அ : 643*) [*பா : பே*]

**கதிர் மண்டலம் - சூரிய மண்டலம்.** *கமலத்து ஒண்கதிர் மண்டலம் மறைந்துறையும் மாண்பது.* (கி : 849)

**கதிர்மணி எறிக்கும் ஓடை - ஒளி செய்கின்ற இரத்தினங்கள் இழைத்த முக படாம்.** *எல்லிடு கதிர்மணி எறிக்கும் ஓடையால் வில்லிடும் முகிலெனப் பொலிந்த வேழமே.* (பா : 826)

**கதிர் மீச்செலாக் கொடிமதில் - சூரியனும் நேரே மேற்செல்லமாட்டாத கொடி நாட்டிய மதில்.** *கடுமின் இப்பொழுதே கதிர்மீச் செலாக் கொடிமதிற் குடுமித்தலைக் கொள்கென்ருன்.* (யுத் : 965)

**கதிர் முகம் வருடல் - வெயில் முகத்திலே விழுதல்.** *பொறைதீர் வாழி வெங்கதிர் மணி முகம் வருடவும் வளர்ந்தான்.* (யுத் : 540)

**கதிர் முத்தம் - விளக்கம் அமைந்த முத்தம்.** *வேயினம் சொரி கதிர் முத்தம்.* (அ : 763)

**கதிர் மெலிதல் - உக்கிரந் தணிதல்.** *வெங்கதிர் தண்ணிய மெலிந்தன.* (கி : 446)

**கதிர் வாள் - ஒளி பொருந்திய வாட்படை.** *கதிர்வாள் இலங்கை வேந்தன்.* (யுத் : 527)

**கதிர்வாள் நிலவு - மிக்க ஒளியையுடைய நிலவு.** *கல்லாமதியே கதிர் வாள் நிலவே.* (சு : 492)

**கதிர் வேந்தன் - கிரணங்களையுடைய சுடர்களுக்கெல்லாம் தலைவஞன சூரியன்.** *இம்மதில் இலங்கை நாப்பண் எய்துமேல் தன்முன் எய்தும் மிம்மினி அல்லனே அவ்வெயிற் கதிர்வேந்தனம்மா.* (சு : 193)

**கதிரவன் - சூரியன்.** *கதிரவன் ஒளிபுகா.* (சு : 118)

**கதிரவன் கனல் வெங்கதிர்க்கற்றை - சூரியனது சுடுகின்ற வெம்மை மிக்க கிரணம்.** (சுத் ; 680)

**கதிரவன் சிறுவன் - சுக்கிரீவன்.** (யுத் : 430)

**கதிரவன் படை - சூரியாஸ்திரம்.** *கன வெங்கதிரவன் படை துரந்தான் மனங்கரியான்.* (யுத் : 3021)

**கதிரவன் காதல் மைந்தன் - சூரியனுடைய காதற் புதல்வஞகிய சுக்கிரீவன்.** *கதிரவன் காதல் மைந்தன்.* (யுத் : 2152)

**கதிரின் காதலன் - சுக்கிரீவன்.** *கார்வரையிருந்த கதிரின் காதலன்.* (சு : 1275)

**கதிரின் நாயகன் - ஒளிகளுக்குத் தலைவஞன சூரியன்.** *கதிரின் நாயகன் சேனைலாம் புல்லொளி செலுத்திச் சிந்தையின் நாணலன்.* (ஆ: 244)

**கதிருகுத்தல் - கிரணம் வீசுதல்.** ஓங்கு வெய்யவன் உடுபதியெனக் கதிருகுத்தான். (அ : 728)

**கதிரும் வானமும் - சூரியன் முதலிய சோதிகளும் மேலுலகமும்.** கதிரும் வானமும் சுழன்றன. (யுத் : 209)

**கதிரோன் - சூரியன்.** உதிக்கின்ற கதிரோன். (யுத் : 2986)

**கதிரோன் மகன் - சுக்கிரீவன்.** செங்கதிரோன் மகன் முன்பு சென்றனன். (யுத் : 1987)

**கதிரோன் மண்டிலம் - சூரியனுடைய மண்டலம்,** கதிரோன் மண்டிலங்களை மேருவிற் குவித்தென வயங்கும் அண்டம். (யுத் : 3626)

**கதுப்பின் மூலம் - கன்னத்தின் அடி. (கன்னம் - காது)** கதுப்பின் மூலத்திடைப் புடைத்தான். (யுத் : 1847)

**கதுப்பு - 1. கூந்தல்.** கதுப்புறு வெறியே நாறும் கருங்கடல் தரங்கம். (பா : 42)

**2. கன்னம். காது.** நீண்டு கதுப்பினை அளப்ப. (பா : 1163)

**கதுமென - விரைவாக.** நீர் கதுமென எழுந்து போமின். (பா : 499) (சு : 867) (யுத் : 214)

**கதுவல் (கதுவுதல்) - 1. சென்று பற்றுதல்.** அக்கன்னி நன்னகர் நிழல் கதுவலாலரோ பொன்னுலகாயது. (பா : 132) கட்புலன் கதுவா வண்ணம். (சு : 17) கட்புலன் கதுவலாகா வேகம். (சு : 25) கட்பொறி கதுவா. (கி : 781)

**2. மேற்படுதல்.** அஞ்சன வண்ணத்தான் தன் அடித்துகள் கதுவா. முன்னம். (பா : 562)

**3. நெருங்கியிருத்தல் சுற்றுதல்.** காவலர் குழூ வந்து அடிகதுவ (பா : 1350)

**4. நுழைதல்.** காய்ந்தன சலாகை யன்ன உரைவந்து கதுவா முன்னம். (சு : 444)

**5. கவ்வுதல்** அயில் வெங்கணை கதுவுற்று ஈராயிர மதமால் கரி விழுகின்றன. (யுத் : 1822)

**6. பற்றுதல்.** வெப்பொறி கதுவ. (யுத்: 2055) கதுவிய காலையில். (யுத் : 216)

**கதுவலி - கதுவுவலி. நீங்காது பற்றிய வலி. கொடிய வலிமை.** கதுவலிச் சிலையை வென்றி அங்கதன் கையதாக்கி. (யுத் : 2140)

**கதுவிட - கவிந்துகொள்ள,** கணையிருள் கதுவிட அமரர்கள் கதற. (யுத் : 3760)

**கதுவுறுதல் - கவ்வுதல்.** வெங்கணை கதுவுற்று. (யுத் : 1822)

**கதை – 1. தண்டாயுதம்.** *கால பாசம் கதை பொருகையினர்.* (ஆ : 378) (யுத் : 1751)

**2. தடி.** *கதைபற்றிய கையர்.* (யுத் : 818)

**3. இராமாவதரமாகிய கதை.** *தொடை நிரம்பிய தோமறு மாக்கதை.* (பா : 11)

**கந்தடு களிறு – கட்டுத்தறியை முறிக்கின்ற யானை.** *கந்தடு களிறும் தேரும்.* (பா : 1117) (யுத் : 4343)

**கந்தடு கோயில் – கம் தடு கோயில். மேகத்தையும் தடுக்கும் உயர்ந்த அரண்மனை.** *இந்திரன் முதலிய அமரர் ஈண்டவன் கந்தடு கோயிலின் காவலாளரே.* (ஆ : 857)

**கந்தம் – 1. வாசனை.** *கந்த நாறு பங்கயத்த.* (பா : 108)

**2. கிழங்கு.** *நெடுங்கந்தம் மூலமின்றியும் முகிழ்த்தன.* (அ : 733)

**கந்தம் நோக்கிய சோலை - மணம் வீசுகின்ற சோலை.** (ஆ : 315)

**கந்த மலர் – மணமுள்ள தாமரை மலர்.** *கந்தமலரிற் கடவுள்.* (பா : 321)

**கந்த மாதனம் – எட்டுக் குல வரைகளுள் ஒன்று.** *கந்தமாதனம் என்பதிக் கருங்கடற் காப்பான் மந்த மாருதமூர்வ தோர் கிரி.* (யுத் : 3220) (யுத் : 4088)

**கந்தர்ப்ப நகரம் – கந்தர்வருடைய பட்டினம். இது பேய்த்தேர் போன்ற தொரு பொய்த்தோற்றம்.** *கந்தர்ப்ப நகரம் எங்கணும் தெரியுமால்.* (சு : 374)

**கந்தர்ப்ப மகளிர் – கந்தருவப் பெண்கள்.** *கந்தர்ப்ப மகளிர் ஆடும் நாடகம்.* (சு : 201)

**கந்தர்ப்பர் – தேவருள் ஒரு பிரிவினர்.** *துயக்கிய கந்தர்ப்பரைத் துரந்து வாரின.* (ஆ : 414)

**கந்தர்ப்பன் – கந்தருவன்.** *தனு எனும் நாமத்தோன் ஓர் கந்தர்ப்பன்.* (ஆ : 1191)

**கந்தரப் பொற்கிரி – குகையைக்கொண்ட பொன்மலையான மேரு.** *சுந்தரப் பொற்கிரி யான்மைக்களிறனையான்.* (யுத் : 1573)

**கந்தரம் – 1. கழுத்து.** *செக்கர் சூடிய கந்தரம் கயிலையை நிகர்க்கும் காட்சியான்.* (வை : மு) (ஆ : 904)

**2. மலைக்குகை.** *கந்தரப் பொற்கிரி.* (யு : 1573) *கந்தர சயிலம்.* (யுத்: 4088) *கந்தரக் கயிலை.* (ஆ: 904)

**கந்தருப்பந் நகர் - கந்தருவ நகரம்.** *கந்தருப்பந் நகர் விசும்பிற்கண்டன அந்தரத்தெழுந்தது அவ்வரக்கன் தேரரோ.* (யுத் : 3725)

**கந்தருவம் - கந்தருவர்.** *சுரபி என்பாள் தேனுவுடன் கந்தருவம் மற்றுமுள பிற பயந்தாள்.* (ஆ : 202)

**கந்தவேள் - சுப்பிரமணியக்கடவுள்.** *கந்தவேள் வேல் செலாதவன் மார்பின்.* (கி : 119)

**கந்தவோதியர் - நறுமணம் வாய்ந்த கூந்தலையுடைய மகளிர்.** *பிரிந்த கந்த வோதியர் சிந்தையிற் கொதித்தது.* (அ : 735)

**கந்தன் - முருகன்.** (பா : 73) (யுத் : 2598)

**கந்தனூர் தந்தை - சிவபிரான்.** *கந்தனூர் தந்தையாரைக் கயிலையோ டொருகைக்கொண்ட எந்தையார்.* (யுத் : 3057)

**கந்தாரம் - காந்தாரம்.** *கந்தாரத்தின் இன்னிசைபாடி.* (சு : 175)

**கந்தார வீணைக்களி - கந்தாரம் என்னும் பண்ணாகிய வீணையினின் றெழுகின்ற தேன்.** *தம் தாம் உலகத்திடை விஞ்சையர் பாணிதாழாக் கந்தார வீணைக்களி செஞ் செவி தாழ்ந்து நுங்க.* (சு : 75)

**கந்து - 1. கட்டுத்தறி.** *கந்து கொல் யானை.* (அ : 210)

**2. தூண்.** *மாமணிக் கந்து காணினும் கைத்தலம் கூப்புமால்.* (ஆ : 304)

**கந்துகம் - பந்து.** *கைபுகிற் சிவந்துகாட்டும் கந்துகம் பலவுங்கண்டார்.* (பா : 579) (யுத் : 862)

**கந்து கொல் களிறு - கட்டுத்தறியை முறிக்கின்ற யானை.** (பா : 894)

**கந்து கொல் யானை - கட்டுத்தறியை முறிக்கின்ற யானைப்படை.** *கந்து கொல் யானைக் களி மன்னர்.* (அ : 210)

**கந்தையே பொரு கரி - கட்டுத்தறியையே மோதி முறித்துத் தள்ளுகின்ற யானைச்சேனை.** *கந்தையே பொரு கரிச் சனகன்.* (பா : 1129)

**கப்பணம் - ஆனை நெருஞ்சி வடிவமாக இரும்பாற் செய்ததொரு கருவி. கைவேல்.** (கலா) *காலவரி விற் பகழி கப்பணம் முசுண்டி.* (சு : 164) (சு : 940) (யுத் : 2440)

**கப்பு - பிரிவு. பிளவு.** *கப்புடை நாவின் நாகர்.* (பா : 1115)

**கபாடம் - கதவு.** *அடைத்தன கபாடம்.* (சு : 257)

**கபாலம் - மண்டையோடு** *கண்டத்துங் கழுத்து மீதாய்க் கபாலத்துங் கடக்கலுற்ற சண்டப்போர் அரக்கர்.* (யுத் : 3480)

**கபிலன் - ஒரு முனிவன்.** *ஏறு மாதவக் கபிலன்.* (பா : 515) *கபில மா முனி.* (பா : 518)

**கபிலை - பசு.** பசுக்களில் ஒருவகை. *கபிலையின் தானம்.* (பாயி : 17) *பல்லோர் கைப்படை யதனினேடும் கபிலை மாட் டுதித்து.* (பா : 662)

**கபிலையின் தானம் - கோதானம்.** (பாயி : 17)

**கபோலம் - கன்னம்.** *துடித்தன கபோலங்கள்.* (அ : 859)

**கம் - 1. நீர்.** *விண்டலம்பு கம் நீங்கிய வெண் புனல்.* (சு : 718)

2. **தலை** *அம் கங்கள் நிரம்பி அலம்பியதால்.* (யுத் : 2932)

3. **மேகம்.** *இந்திரன் முதலிய அமரர் ஈண் டவன் கம் தடு கோயிலின் காவலாளரே.* (ஆ : 857)

4. **ஆகாயம்.** *விண்டலம்பு கம் நீங்கிய வெண் புனல்.* (உ. வி.) (சு : 718)

**கம்பக் கரி - கட்டுத்தறியில் கட்டத்தக்க யானை.** *கம்பக் கரியுண்டை கடா யெனவே.* (யுத் 2326)

**கம்ப நெடுங்களி யானை - அசைந்து ஆடும் இயல்புடைய நெடிய களிப்பு வாய்ந்த யானை.** *கம்ப நெடுங்களி யானை யன்ன மன்னன்.* (அ : 201)

**கம்பம் - 1. கலக்கம்.** *கம்பமில் கடுமனக் கான வேடன்.* (பா : 612)

2. **கட்டுத்தறி.** *கம்பக் கரி நின்றது,* (ஆ : 95) (உ. வி.) (அ : 201)

3. **அசைதல். ஆடும் இயல்பு.** *கம்ப நெடுங்களி யானை.* (அ: 201)

4. **நிலை பெயர்தல்.** *கம்பமில் திசையில் நின்ற களிறு.* (ஆ: 479)

5. **தூண்.** *கம்பத்தின் வழியே காட்டுதி.* (யு : 255)

6. **அசைவு. ஆடுதல்.** *கம்ப நெடுங்களி யானை.* (அ : 201)

**கம்ப மதத்துக் களி யானை - அசைந்தாடும் இயல்பினையுடைய மதக் களிப்பு மிக்க யானை.** (யுத் : 3142)

**கம்பமா - யானை.** *கம்ப மாவரை.* (பா : 856)

**கம்பமில் கொடு மனம் - கலக்கமில்லாத கடுமனம்.** (அண்) **தயை யில்லாத கொடிய மனம்.** (வை. மு) (பா : 612)

**கம்ப முறுதல் - நடுங்குதல்.** *உலகமியாவும் கம்பமுற் றுலைந்த.* (யுத்; 2055)

**கம்பலி -** ஒரு வாச்சியம். (புத் : 2397)

**கம்பலை - 1. ஆரவாரம்,** ஒலி. *கதறிய ஒலி.* பாண்டிலும் சங்கும் *வழங்கு கம்பலை.* (பா : 489) (கி : 558)

2. **முழக்கம்.** *கடல் கொள் பேரொலிக் கம்பலை என்பதும் கண்டார்.* (யுத் : 3639)

**கம்பளம் - மயிர்ப்படாத்தாலாகிய விரிப்பு.** *படர்ந்தெழுந்த புல் பசு சிறக் கம்பளம் பரப்பிக் கிடந்த போன்றன.* (அ : 732)

**கம்பித்தல் – 1. நடுங்குதல்.** *கம்பித்து அலை எறி நீருறு கலமொத்து.* (பா : 1356) *கம்பிப்பதோர் வன்றுயர் கண்டிலேனல்.* (யுத் : 1687) *கம்பிக்க.* (யுத் : 2443)

**2. அசைதல் – நடுக்கமுறல்.** (அண்) *நெடுநிலம் கம்பித்த.* (யுத் : 209)

**கம்மியர் – தொழிலாளர்.** *பொன் செய் கம்மியர் கூடம்.* (யுத்: 1416) **கர்மம் – தொழில்; அது செய்பவன் கர்மீ. அது கம்மி என விகாரப்பட்டது. அதன் பன்மை கம்மியர்.** (யுத் : 2098) (யுத் : 1416)

**கமஞ்சூல் – கருங்கொண்ட மேகம்.** *நீருண்ட கமஞ்சூற் காளமேகம்.* (அ : 738)

**கமண்டலு – கமண்டலம்.** *கமண்டலுவின் நன்னீர் மாதவர்கள் வீசி நெடு மாமலர்கள் தூவ.* (ஆ : 165)

**கமந்த – நிறைந்த.** *கமந்த மாதிரக் காவலர்.* (பா : 695)

**கமம் – நிறைவு** *கமந்த.* (பா : 695)

**கமர் – பிளவு. பிறப்பு.** *கமருறு பொருப்பின் வாழும் விஞ்சையர்..* (பா : 925)

**கமலக்கண் – தாமரை மலர் போன்ற கண்கள்.** *கண்டனன் தானும் தன் கமலக்கண்களால்.* (சு : 593)

**கமலக்கண்ணன் – தாமரை மலர்போன்ற கண்களையுடைய இராம பிரான்.** (யுத் : 4121)

**கமலக்கண்ணனூர் – தாமரை மலர்போன்ற கண்களையுடைய இராம பிரான்.** *கமலக்கண்ணனூர் உள்ளுறை உயிரினை ஒளித்து வைத்தவா* (சு : 394)

**கமலக்காடு – தாமரை மலரின் தொகுதி.** (அண்) **தாமரை மலர்களை யுடைய நீர் நிலை.** (கலா) (வை. மு.) *கற்பகக்காவது கமலக் காடது.* (கி : 850)

**கமலச்சரண் – தாமரை மலர்போலும் திருவடிகள்.** *இணைந்த கமலச் சரண் அருச்சனை செய்து.* (பா : 322)

**கமலச்சீரடி – தாமரை மலர்போன்ற சிறிய திருவடி.** *தடக்கையிற் கமலச்சீரடி பூண்டனன் புலம்பினனரோ.* (அ : 881)

**கமலச் செங்கண் – செந்தாமரைக் கண்.** *கமலச் செங்கண் ஐயன்.* (பா : 564)

**கமலச்செல்வி – திருமகள்.** *அரவணைத் துயிலினை நீங்கிய தேவனே அவன் இவள் கமலச்செல்வியே.* (சு : 395)

**கமலத்தடங்கண்ணன் தங்கை** - செந்தாமரை மலர்போன்ற பெரிய கண்களையுடைய திருமாலினது உடன் பிறந்தவளாகிய கொற்றவை. துர்க்கை. *கங்கையழுதாள் நாமடந்தையழுதாள் கமலத் தடங் கண்ணன் தங்கையழுதாள்.* (யுத் : 2628)

**கமலத்தண்ணல்** - பிரமன். *உலகம் பூத்த கண்ணகன் கமலத்தண்ணல்.* (சு : 1311) (யுத் : 3628)

**கமலத்தண்ணல் தன் எண்** - பிரமம் என்னும் பேரெண். (கலா) *கமலத்தண்ணல் தன் எண்ணினும் நெடிது அவன் எழுந்தசேனையே.* (அ : 876)

**கமலத்தவ்வை** - தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள். *கடிகமழ் சனகியாம் தமலத் தவ்வை நீங்குமென்று.* (அ : 185)

**கமலத்தவள்** - செந்தாமரை மலரிலுள்ள இலக்குமி. *அந்தக்கடி நறுங் கமலத்தவளை ஈகலம்.* (கி : 18)

**கமலத்தறங் கொள் நாண்மலர்க் கோயில்கள்** - கமலத்து நாண்மலர்க் கோயில். அறங்கொள் கோயில். கமலக்கோயில் - திருமகள் தங்கும் கமலாலயங்கள். அன்று பூத்த தாமரை மலர்க் கோயில்கள். அறக்கோயில்கள் - உணவூட்டும் தருமசாலையான கோயில்கள். *கறங்கு தண்புனற் கடிநெடுந் தாளுடைக் கமலத் தறங்கொள் நாண்மலர்க் கோயில்கள் இதழ்க் கத வடைப்ப.* (பா : 480)

**கமலத்தாள்** - கமல மலர்போன்ற பாதங்கள். (யுத் : 2852)

**கமலத்து முளைத்த தாதை** - தாமரையில் தோன்றிய மூதாதையாகிய பிரமன். (யுத் : 1363)

**கமலத்தோன்** - 1. பிரமன். (அண்) *கண்ணினை மறைத்தன கமலத் தோனையே.* (அ : 959)

2. சூரியன். (கலா) (அ : 959)

**கமல நாட்டம்** - தாமரை மலர்போன்ற கண்கள். *புரை தபு கமல நாட்டம் பொருக்கென விழித்து நோக்கி.* (அ : 588)

**கமலப் பொதி** - தாமரை மொட்டு. *கமலப் பொதியினை நகுவன புணர் முலை.* (பா : 75)

**கமலம்** - தாமரைப்பூ. *உள்ளங்களிக்கு மங்கையர் முகமெனப் பொலிந்தன கமலம்.* (கி : 480)

**கமலம் பூத்த மேகம்** - தாமரை மலர் பூத்த மேகம். *அமலத்திண் கரமும் காலும் வதனமும் கண்ணுமான கமலத்தின் காடு பூத்த காளமா மேகம் ஒத்தான்.* (யுத் : 784)

**கமலம் பூத்தான்** - தாமரையிலே தோன்றிய பிரமன். (யுத் : 3039)

**கமலமென் பொகுட்டு மேவிய வரசரோருகன் - மெல்லிய தாமரை மலரின் கொட்டையிலே தங்கிய சிறந்த நான்முகன். சரோருகன் - திருமாலின் உந்திக்கமலத்தில் வாழ்பவனாகிய பிரமன்.** கமல மென் பொகுட்டு மேவிய வரசரோருகன் மகன் மனத்தில் எண்ணினன். (பா : 184)

**கமழ்தல் - வாசனை வீசுதல்.** தெய்வ வெறியே கமழும் நறுங்குஞ்சி. (சு : 546)

**கமழ்ந்தின்று - கமழ்ந்த தன்று. கமழவில்லை.** ஏர்கடாம் கலவைதாம் கமழ்ந்தின் றென்பரால். (அ : 980)

**கமழ் நறுங்கண்ணி - நறுமணம் மிக்க மாலை.** கட்டேறு நறுங்கமழ் கண்ணி இக்காளை. (சு : 1005)

**கமித்தல் - க்ஷமித்தல். மனம் பொறுத்தல்.** சொன்ன சொல் அன்ன கமித்தியன். (ஆ : 1094)

**கமுகம் - கமுக மரம்.** அங்கவர் கழுத்தெனக் கமுகம் ஆர்த்தன. (பா : 127)

**கமுகு - பாக்கு மரம்.** கரும்புகால் பொரக் கமுகின் வார்ந்ததேன் வரம்பின் மீதிடு மருத வேலி. (பா : 339) [பா : பே] நாகிளங் கமுகு. (யுத் : 1218)

**கமை - 1. தாங்கும் (பொறுக்கும்) வல்லமை.** இவன் முனிந்துருத்த போது கமையிலன் ஆற்றல் என்று. (யுத் : 1855)

**2. பொறுமை.** கமையிலாள். (சு : 171) கமைப்பெருஞ் செல்வக் கடவுளும். (பா : 95) கமையறு. (யுத் : 572) கமைபிடித்து. (யுத் : 2588)

**கமை பிடித்தல் - பொறுமையைக் கடைப்பிடித்தல்.** கமை பிடித்து நின்றுங்களை இத்துணை கண்டேன். (யுத் : 2588)

**கமையாள் - பொறுமையை உடையவள்.** கமையாள் மேனி கண்டவர் காட்சிக்கரை காணர். (பா : 588) கமையினள். (சு : 339)

**கய் - 1. கை. போலி.** கய் நெகிழ்ந்தனன். (கி : 296) [பா : பே] கய் புகல். (யுத் : 427) (யுத் : 1272) (யுத் : 2051) கய் களிற் பற்றிக்கொண்டார். (யுத் : 2655)

**2. இடம்** கய்யகல் இஞ்சி. (யுத் : 2817)

**கய்க்குன்றப் பெருங்கரைய - துதிக்கையையுடைய மலை போன்ற யானைப் பிணங்களாகிய கரையையுடைய.** (யுத் : 3466)

**கய்கயன் தனையை - கேகய நாட்டரசன் மகளாகிய கைகேசி.** (யுத் : 4263)

**கய் கேசி - கை கேசி.** (யுத் : 2638) [பா : பே]

**கய் புகல் - குழுவிற் புகுதல்.** (யுத் : 427)

**கய்யன் - வஞ்சகன், கீழ்மகன்.** நிற்கபய மென்றுன் உயிரைத் தன்னுயிரின் ஓம்பாக் கய்யனும். (யுத் : 423) [பா : பே]

**கய்யனேன் - கீழ்மகனுகிய யான்.** (யுத் : 3160)

**கய - பெருமை.** குளிர் கயக் கோளி. (உ. வி) (பா : 959) [பா : பே] கய வாயர். (சு : 757)

**கயக்கம் - கலக்கம்.** கயக்கமில் துயிற்சிக் கும்பகருணன். (சு : 216)

**கயத்தி - கீழ்மகள்.** இன்ன தோர் கேடு சூழ் கயத்தி. (அ : 233)

**கயத்தொழில் - கீழ்மைத் தொழில்.** கயத் தொழில் அரக்கன். (சு: 571)

**கயப்பு - கசப்பு,** வாய் கயப்புற மந்தரை வழங்கிய வெஞ்சொல். (அ: 160)

**கயம் - 1. மென்மை.** (அண்) **குளம்.** (கு) (வை. மு) கயந்தரு நறும் புனல் கையில் தீண்டலும். (பா : 453)

**2. யானைக் கன்று. யானை.** திக்கயங்கள் எட்டும். (ஆ 643) குலக்கயம். (யுத் : 1428)

**3. நீர் நிலை. குளம்.** குளிர் கயம். கோளிபம் கயம் மூழ்க. (பா : 959) (யுத் : 2011)

**4. ஆழமான நீர் நிலை.** கயங்கள் போன் றுளிர் பளிங்கடுத்த கானமும். (பா : 1051)

**கயமை - கீழ்மைப் பண்பு.** இன்னதோர் கேடுசூழ் மா கயத்தி. (அ: 233)

**கயரத துரகம் - யானை, தேர், குதிரை.** கயரத துரக மாக்கடல் கொள் காவலன். (பா : 807)

**கயல் - கயல் மீன்.** செங்கயல் போற் கரு நெடுங்கண். (ஆ : 343) கயல்கள். (பா : 1242)

**கயவாயர் - பெரிய வாய்களையுடையவர்.** யானையும் பிடியும் வாரியிடுங் கயவாயர். (சு : 757)

**கயற்கண் - கயல்மீன் போற் பிறழ்கின்ற கண்.** காதொடு குழைபொரு கயற்கண் நங்கை. (பா : 609) கயற் கண் மாதர். (அ : 1052)

**கயன் - வானரத் தலைவருள் ஒருவன்.** (கி : 714)

**கயிடன் - கைடபன்.** மால்வரை போலுயர் கயிடனை மதுவைப் போன்றுளார். (யுத் : 3428)

**கயிர் - முட்டுவாய்.** (யுத் : 3759) [பா : பே]

**கயில் - முட்டுவாய்.** கயில் விரிவரு கவசமும். (யுத் : 3753)

**கயிலை - கைலாச மலை.** உமை யொரு பாகன் வைகுங் கயிலை. (யுத் : 2598)

**கயிலைக் கிரி – கைலாச மலை.** *கடமேய் கயிலைக்கிரி.* **(யுத் : 1734)**

**கயிலைப் பொருப்பு – கயிலாய மலை. (ஆ : 927)**

**கயிலையங்கிரி – கைலாச மலை.** *ஈசன் கயிலையங்கிரியு மல்லன்* **(சு : 1119)**

**கயிலையான் – சிவபெருமான். (யுத் : 2977)**

**கயிலை யிடந்தவன் – இராவணன். (யுத் : 1056)**

**கயிலையில் தொலைவிலோன் – சிவபிரான். (சு : 86)**

**கயிலையை வெருவல் கண்டாய் - கயிலை மலையை அசைத்தவனே. (வை. மு) (கலா) (யுத் : 1254)**

**கயிறு – 1. பிணிப்பு.** *மும்மைபுரி வன்கயிறு கொய்து.* **(பா : 918)** *வலிக் கயிறது ஒப்ப.* **(யுத் : 857)**

**2. பாசம்.** *கயிற்றார் செறுத்து எரி விழிப்பவர்.* **(சு : 849)**

**3. கச்சு.** *வலக்கொடு மாசுணம் விசு கயிற்றின் அசைத்த முலை.* **(ஆ : 1080)**

**கயிறு சேர் கழல் – கயிற்றினால் இணைக்கப்பட்ட (சேர்த்துக் கட்டப் பட்ட) வீர கண்டை.** *கயிறு சேர் கழற் கார் நிறக் கண்டகர்.* **(யுத் : 3382)**

**கர்க்கடம் – நண்டு.** *காயும் புள்ளிக் கர்க்கடம்.* **(அ : 596)**

**கரக்கருங் கொடுந்தொழில் – எவராலும் மறுத்தற் கரிய கொடுஞ் செய்கைகள். வெளிப்படையாகச் செய்கின்ற கொடுந்தொழில். (வை. மு) (கலா) யாவரும் தம்மை மறைத்துத் தப்பித்துக்கொள்ள இயலாதவாறு விரைந்து கொடுமை செய்யும் தொழில். (அண்)** *கரக்கருங் கொடுந் தொழிலரக்கர்.* **(ஆ : 123)**

**கரக்கல் – ஒளித்தல்.** *கரக்கலாகலாக் காதல்.* **(யுத் : 3529)**

**கரக்கவந்த காம நோய் – அறிவு மறையும்படி மிகுதியாக உண்டாகிய ஆசை நோய்.** *கரக்க வந்த காம நோய் துரக்க வந்த தோமினால்.* **(ஆ : 66)**

**கரக்குவது - உயிரைப் போக்குவது.** *இனிக் கரக்குவதல்லது ஓர் கடன் உண்டாகுமோ.* **(யுத் : 2733)** [பா : பே]

**கரக்கையர் – கைகளையுடையவர்கள். கரக்கை - மீமிசைச் சொல்.** *முக்கரக் கையர்.* **(யுத் : 3222)**

**கரகதக் கரி – துதிக்கையும் சினத்தையுமுடைய யானைகள்.** *கரகதக் கரி கால் நிமிர்ந்துண்டன.* **(அ : 1081)**

**கரகம் – 1. குண்டிகை. கமண்டலம்.** சூலமும் திகிரி சங்கும் கரகமுந்துறந்து. (சு : 1122)

**2. ஆலங்கட்டி.** கரக முந்திய மலைமுழையில். (யுத் : 2294)

**3. நீர்க்குடம்.** கரகம் உந்திய மலை. (யுத் : 2293)

**கரகமலம் – தாமரை மலர்போலும் கைகள். கைத்தாமரை.** கரகமலங் குவிந்திருந்த காலையில். (பா : 191) (யுத் : 4323)

**கரங்கள் – இரு கைகள்.** கரங்கள் மீச்சுமந்து செல்லும் கதிர்மணி முடியன். (யுத் : 448)

**கரஞ் செவி கூடுதல் – கைகள் காதிலே சேர்த்தல். கையினுற் காதுகளை மூடிக்கொள்ளுதல். இன்னுச் சொற்களைக் கேளாதவாறு கையினுற் காதுகளை மூடிக்கொள்ளுதல்.** சூடின மலர்க் கரஞ் சொல்லின் முன் செவி கூடின. (அ : 858)

**கரடி – ஒரு மிருகம்.** வெஞ்சினக் கரடி நாய். (ஆ : 412)

**கரடிக்கரசு – சாம்பவான்.** புணரிப் புலவோர் கலக்கும் அக்கால முளான் கரடிக்கரசாகி நின்றுன். (யுத் : 832)

**கரடிக்கிறை – சாம்பவான்.** (யுத் : 1665)

**கரடிக்கரசு – கரடிகளுக்கு அரசனுன சாம்பவான்.** (யுத் : 2724)

**கரடிகை – ஓர் இசைக்கருவி.** (யுத் : 2397)

**கரண் – கரணம். மனம்.** கரண்புகு சூழலே சூழ. (யுத் : 360)

**கரண்டம் – நீர்க்காக்கை.** கவ்வுமீனெடு முழுகின எழுவன கரண்டம். (கி : 17) கரண்ட நீர் இலங்கை. (ஆ : 875)

**கரண்புகு சூழல் – மனஞ் சென்ற வழி.** (யுத் : 360)

**கரணம் – 1. மனம்.** அடக்கும் ஐப்பொறியொடு கரணத்தப்புறம் கடக்கும் வாலுணர்வு. (அ : 557)

**2. ஐம்பொறிகள்.** கரணமென்றுள உன்னைவந் தறிவு காணுமே. (யுத் : 4026)

**3. அந்தக் கரணம்; மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன.** உணர்வோடுள்ளம் மேவிய கரணம் முற்றும் கொழுநரோடு ஒழிய. (சு : 213) (யுத் : 173)

**கரணம் ஐந்து – ஐம்பொறிகள்.** அருங்கரணம் ஐந்தும். (யுத் : 3654)

**கரணமிடுதல் – தலைகீழாகத் தலையை வைத்து உடலைத் தாக்கி உருண்டு விழுகை.** முனிவரொடு கவனமுறு கரணமிடுவர். (யுத் : 3423)

**கரத்தல் – 1. மறைதல்.** மேல் வெயில் கரந்தது. (பா : 330)

**2. மறைத்தல். ஒளித்தல்.** கரக்க வந்த காமநோய். (ஆ : 66) கரந்திலர். (ஆ : 188) கரந்தான். (யுத் : 179)

**3. உயிரைப் போக்குதல்.** வஞ்சனேன் இனிக் கரக்கும தல்லதோர் கடனுண்டாகுமோ. (யுத் : 2733)

**4. மறுத்தல்.** (வை. மு) **தப்பி மறைய முற்படல்.** (அண்) இசையாது கரந்தனனே யெனின். (ஆ : 1079) கரக்கருங் கொடுந் தொழிலரக்கர். (ஆ : 123)

**5. உய்த்துணர்ந்து காணுதல்.** (வை. மு) **ஒழித்தல்.** (கலா) நுரக்கும் மெய்யுணர்வு இரு வினைகளை யெனுஞ் சொல்லிற் கரக்கும் வீரதை தீமையை எனுமிது கண்டோம். (யுத் : 1441)

**6. போக்கிவிடுதல் –** கரக்கும் வீரதை தீமையை எனுமிது கண்டோம். (யுத் : 1441)

**7. உடலினுள்ளே அழுத்தி மறையும்படி செலுத்தல்.** கதிரொப்பன சில வெங்கணை அனுமானுடற் கரந்தான். (யுத் : 1842)

**கரத்துணை – இரண்டு கைகள்.** சினத்திகல் அரக்கன் பின் தொடர வந்திரு கரத்துணை பிடித்தான். (யுத் : 861)

**கரத்தொடு கரதலங்கிடைப்பப் பூட்டி – கையோடு கை பொருந்த அறைந்து.** (யுத் : 112)

**கரதலம் – கை.** கரதலமுற் றெளிர் நெல்லி கடுப்ப. (பா : 300) (சு : 325) (யுத் : 4118)

**கரதலமுற்றெளிர் நெல்லி – கையினிடத்துப் பொருந்தி விளங்குகின்ற நெல்லிக்கனி.** (பா : 300)

**கரதூடணர் - கரனும் தூடணனும்** கரதூடணர் முதலா. (ஆ: 337)

**கரந்து – மறைத்து.** கைக்கொள்ளும் அடைக்கலம் கரந்து வெள வினேன். (அ : 895)

**கரந்து கோடல் – மறைந்துகொண்டிருத்தல்.** (கலா) **களாமலே கவர்ந்துகொள்ளுதல்.** (அண்) இயற்கையும் தருமமும் எஞ்சக் கரந்து கோடலே நன்று. (யுத் : 545)

**கரந்துறை – ஒளிப்பிடம்.** கன்னி மாநகர்ப் புறத்தவன் கரந்துறை காண்பான். (சு : 240)

**கரந்துறைதல் – மறைந்துறைதல்.** கள்ளரிற் கரந்துறை காம மாதியாம் உள்ளுறை பகைஞர். (அ : 18)

**கரந்தை - ஒரு பூண்டு. திருநீற்றுப் பச்சை.** *கரந்தை மத்தமோடு எருக்கலர் கூவிளை கடுக்கை நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்து.* (பா : 529)

**கரந்தை சூடி - சிவபெருமான்.** (யுத் : 3155)

**கரபத்திரம் - வாள்; கை வாள்; கை ரம்பம்.** *வேண்டிற் கரபத்திரந் தீர்த்து விழுத்தலாகி.* (ஆ : 697)

**கரம் - 1. கை.** *கங்கணங்களு மிலங்கிய கரம் பிறழுவே.* (ஆ : 16) (யுத் : 1537)

**2. கிரணம்.** *நன்னெடுங் கரங்களை நடுக்கி ஓடிப்போய் முன்னை வெங்கதிரவன் கடலின் மூழ்கினுன்.* (பா : 624) *அவிர்கரநிரை.* (ஆ : 109)

**3. ஒளி.** *வெயிற்கர மணிகள் வீசும் விரிகதிர் விழுங்க.* (சு : 944) *வெயிற் கதிர்மணிகள் வீசும்.* (சு : 944) [பா : பே]

**4. இறைப் பொருள். கப்பம்.** *கரையிறந்தோர் இராவணற்குக் கரமிறுக்குங்குடி யென்ருல்.* (ஆ : 348)

**கரம் சிரத்திற் சேர்த்தல் - கைகளைத் தலையின்மேற் சேர்த்தல். தலையிற் மேற் கைகுவித்து வணங்குதல்.** *தேவரைக் கண்டேன் பைம் பொற் செங்கரம் சிரத்திற் சேர்த்தி மூவரைக் கண்டாலன்ன இருவரை முறையின் நோக்கி.* (யுத் : 2651)

**கரம் நெரித்தல் - விரலை மடக்கிக்கொண்டு கையை நெரித்தல். சோகத்தின் மிகுதியால் மகளிர் செய்வது.** *எழுந்தாள் இருந்தாள் மலர்க் கரத்தை நெரித்தாள்.* (யுத் : 2622)

**கரம் பற்றுதல் - பாணிக்கிரணம் என்னும் சடங்கு நிகழ்த்தி மணந்து கொள்ளல்.** *வந்தெனைக் கரம் பற்றிய வைகல்வாய்.* (சு : 640)

**கரம் பிசைதல் - 1. கை பிசைதல். சினமேற் கொண்டார் மெய்ப்பாடு.** *என்றாக்கி எயிறு கடித்திரு கரமும் பிசைந்தெழுந்து.* (சு : 316) (கலா) (சு : 469)

**2. திகைப்பவர் மெய்பாடு.** *காலன் வாழ் பெருங்கரம் பிசைந்தவன் பின்பு சென்றனன்.* (யுத் : 1491)

**3. கவலையின் மெய்ப்பாடு.** (வை. மு) *தன்கரம் பிசைந்திருந்தான்.* (சு : 469)

**கரம்பு - பாழ் நிலம்.** *பாங்கர்க் கரம் பெலாஞ் செந்தேன்.* (பா : 33)

**கரம் விதிர்த்தல் - அச்சத்தினுல் கை நடுங்குதல்.** *வள்ளலும் மலர்க்கரம் விதிர்ப்புற்றுன்.* (யுத் : 1571)

**கரமிறுத்தல் - கப்பங்கட்டுதல்.** *கரமிறுக்குங் குடி.* (ஆ : 348)

**கரவல் – கரத்தல். ஒளித்தல்.** *கரவல் அரும் கற்பகமும் உடுபதியும். (ஆ : 197)*

**கரவிலாளர் – தம்மிடத்திலுள்ளவற்றை ஒளிக்காது கொடுப்பவர்.** *கரவிலாளர் விழக்களைகண்ணிலா இரவலாளரின். (யுத் : 675)*

**கரவு – 1. ஒழித்தல்.** *கரவில் இன்னுயிர். (யுத் : 1198)*

**2. வஞ்சனை.** *கரவே புரிவார் வசமாயினையோ. (பா ; 1247)*

**3. மறைவு.** *கரவின் இன்னுயிர் துறந்தனர். (யுத் : 1198)*

**கரவே புரிவார் – வஞ்சனையே செய்பவர்.** *(பா : 1247)*

**கரன் – 1. கை.** *கரன் நெரித்து அது கண்டனளாமெனக் கவல்வாள். (சு : 347)*

**2. அரக்க வீரன்.** *கரன் எனும் விலங்கற் றேளான். (ஆ : 434)*

**கரன் பிசைதல் – கைகளைப் பிசைதல், கோபத்தின் செயல்.** *என்றாக்கி எயிறுகடித் திருகரனும் 'பிசைந்தெழுந்து நின்றாக்கி யுணர்ந் துரைப்பான். (சு : 316) [பா : பே]*

**கரன் புதல்வன் – மகரக்கண்ணன்.** *நீ கரன் புதல்வன் கொல்லோ. (யுத் : 2370)*

**கரனார் பாடு – கரன் இறப்பு.** *கானிடை அத்தைக்குற்ற குற்றமும் கரனார் பாடும். (சு : 998)*

**கரா – முதலை.** *கரா மலையக் கைக்கரி எய்த்தே. (பா : 299)*

**கராதலம் – கரதலம் எதுகைநோக்கி நீண்டது.** *பங்கயக் கராதலம். (பாயி : 27)*

**கராதியர் – கரன் முதலியோர்.** *கராதியர் விராதனது ... ... ... சிரம் ஒருங்கின. (யுத் : 102)*

**கராம் – முதலை.** *கடுத்த கரம் கதுவ. (ஆ : 49) கராத்தது நவில லுற்றது நாம். (பா : 106)*

**கரி – 1. யானை.** *கரியோ டரிகள் துருவித்திரிவேன். (அ : 369)*

**2. சாட்சி. சான்று.** *பொய்க்கரி புகலும் புன்கணார் குலம். (சு : 208)*

**கரிக் கரம்பொரு கைத்தலம் – யானையின் துதிக்கை போன்ற கை.** *அக்கரிக்கரம் பொரு கைத்தலத் துயர் காப்பு நாண் அணிதற்கு. (அ : 235)*

**கரிக்குவை – கரிக்குவியல்.** *கரிக்குவை நிகர்த்தன பவளம் காடெலாம். (யுத் : 581)*

**கரி களபம் – யானைக் கன்றுகள்** *களபமால் கரி குண்டிகை சொரிவன காணாய். (அ : 765)*

**கரிகுவ – நிறம் கரிந்துபோவன.** *இழையும் மாலையும் கரிகுவ தீகுவ கனல்வ காட்டலால். (பா : 615)*

**கரிணி – பெண்யானை.** *கரிணியில் வருவாரும் பார்மிசை வருவாரும். (பா : 1279)*

**கரித்தல் – கரியாக்குதல் எரித்தல்.** *கரித்த மூன் றெயிலுடைக் கணிச்சி வானவன். (சு : 139)*

**கரித்திரள் – யானைக்கூட்டம்.** *மாவொடு கரித்திரள். (யுத் : 4181) (பா : 60)*

**கரிதல் – 1. நிறங் கருகுதல்.** *கரிந்திருண்ட. (அ : 759)*

**2. தீதல்.** *இரவியும் கரியும். (கி : 726)*

**கரிந்த கண்டகர் – கரிந்துபோன துஷ்டர்களாகிய அரக்கர்கள்.** *கரிந்த கண்டகர் கண்மணி யெனப் பல கழல. (யுத் : 1153)*

**கரி நிருபர் – யானைப் படையையுடைய மன்னர்.** *புரசை மாக்கரி நிருபர்க்கும் புரத்துறைவோர்க்கும். (அ : 47)*

**கரிப் பிணத் தோங்கல் – யானைப் பிணங்களின் மலை.** *தறுகண் வெங்கரி நிறை தாங்கிய பிணத் தோங்கற் கோடமைந்த வெங்குருதி நீராறுகள். (யுத் : 1541)*

**கரிபடு திசை – திக்கயங்கள் அமைந்த இசை.** *கரிபடு திசையின் நீண்ட காவலா காவல் ஆற்றேம். (சு : 746)*

**கரி பரி – யானையும், குதிரையும்.** *படுமத கரி பரி சிந்தின. (யுத் : 3473)*

**கரி பரி இரதங் காலாள் – யானை குதிரை தேர் காலாள்.** *கரி பரி இரதம் காலாள் கணக்கறு கரையின் வேலை. (அ : 1040)*

**கரி மதம் – யானையின் மதம்.** *விலக்கரும் கரிமதம் வேங்கை நாறுவ. (பா : 150)*

**கரிமா – யானை.** *பொற்றேர் பரிமா கரிமா பொருதார் எற்றே. (யுத் : 2909)*

**கரியக் கரிய – கருகிக்கொண்டேயிருக்க.** *வீரியத் தளிர் மெல்லணை மேனியிற் காயெரிக் கரியக் கரியக் கொணர்ந்து ஆயிரத்தின் இரட்டி அடுக்கினர். (பா : 641)*

**கரிய கொண்டல் – கரிய மேகம்போன்ற இராமபிரான்.** *கரிய கொண்டலைக் கருணையங் கடலினைக் காண. (யுத் : 845)*

**கரிய செம்மல் – கரிய திருமேனியையுடைய இராமபிரான்.** *கடிய வேகச் சுடுசரம் கரிய செம்மல் அல்லொக்கும் நிறத்தினுள் மேல் விடுதலும். (பா : 413)*

**கரியதாம் கனகம் – கரும்பொன். இரும்பு.** *காசொடு முடியும் பூணும் கரியதாம் கனகம் போன்றும். (பா : 674)*

**கரிய நாழிகை – இராப்பொழுது.** *கரிய நாழிகை பாதியில். (சு : 252) [பா : பே]*

**கரிய மா – பன்றி.** *கரிய மா கிழங்கு அகழ்ந்தன கொணர்வன காணாய். (அ : 769)*

**கரிய மாசுணம் – கரும் பாம்பு.** *கற்பகக் கொம்பினைக் கரிய மாசுணம் பொற்புறத் தழுவிய தன்மை போன்றதால். (யுத் : 1074)*

**கரி முழங் கரவம் – யானைகள் பிளிறுகின்ற ஒலி.** *கார் முழங் கரவம் வெங்கரி முழங்கரவமே. (பா : 1122)*

**கரியவள் – 1. யமுனை.** *கங்கை யாற்றொடுங் கரியவள் பொங்கு நீர்ச்சுழி போவன போன்றவே. (அ : 640)*

**2. கொடியவள்.** *என்னைப் பெற்ற அக்கரியவள். (அ : 1122)*

**கரியவன் – 1. திருமால்.** *வள்ளச் சேக்கைக் கரியவன். (பா : 704)*

**2. இராமபிரான்.** *கரியவன் வறியன் கையென. (அ : 847)*

**கரிய வெள்ளாடு – கருநிறமுள்ள வெள்ளாடு.** *கரிய வெள்ளாட் டிருங் குருதி. (யுத் : 2557)*

**கரியின் குரல் – யானையின் குரல்.** *அக் கைக்கரியின் குரலேயன்று ஈதென்ன வெருவா. (அ : 371)*

**கரியின் ஏறனையான் – யானைகளிடையே சிங்கம் போல்பவன்.** *உயர் தோளான் வெங்கரியின் ஏறனையான். (அ : 1017)*

**கரு – 1. நடுப்புறம். நடுவிடம்.** *உள்ளூர்க் கரு வெலா முடல். (சு : 794)*

**2. மூல காரணம். நிமித்தம்.** *கருவினையது இப்பிறவி என்றுணர்ந்து. (கி : 870) கருக்கொள்காலம். (யுத் : 980)*

**3. இளம்பிஞ்சு. காய்.** *உயிரின் கருவே. (பா : 1258)*

**4. கருப்பம். (வை. மு) பிறவி. (கலா) (அண்)** *கருக்குளாய் வந்து தோன்றுதி. (யுத் : 4030)*

**5. பெருமை.** *கருவரை. (யுத் : 1569)*

**6. உள்ளீடு.** *கருக்கொள் காலம். (யுத் : 980)*

**கருக்கிளர் மேகம் – நீரினைக் கருக்கொண்டெழுகின்ற மேகம்.** *கருக் கிளர் மேகமன்ன களிறனையான். (யுத் : 2237)*

**கருக்குல மேகம் – கருக்கொண்ட மேகக்குழாம்.** *அண்டங்கள் அனைத்திலுள்ள கருக்குல மேகமெல்லாம் ஒருங்குடன் கலந்ததென்ன. (யுத் : 3212)*

**கருக்கொள் காலம் – (நல்ல) நிமித்தத்தை உள்ளீடாகக் கொண்ட காலம்.** *ஓர் கருக் கொள் காலம் விதிகொடு காட்டிட. (யுத் : 980)*

**கருகுதல் – கறுத்தல்.** கருகும் வார் குழற் சனகி. (யுத் : 4107) கருகு சேனே. (யுத் : 3251)

**கருங்கடல் – 1. பாற்கடல்.** கருங்கடற் பள்ளி நீங்கி. (பா : 601)

**2. பெருங்கடல்.** தானைக் கார்க் கருங்கடல். (யுத்: 523) (யுத்: 12)

**3. கரிய கடல்.** கருங்கடல் நோக்கி வருண மந்திரம் எண்ணினன். (யுத் : 539)

**கருங்கண் – கறுத்த கண்.** அங்கயற் கருங்கண் இயக்கியர். (சு : 416)

**கருங்கல் – மலைக்கல்.** கருங்கற் பாறை யதுதனைப் புறங் கையாலே அகற்றி. (சு : 1269)

**கருங்கழல் – 1. பெருமை பெற்ற வீரக்கழல். பெரிய வீரக்கழல்.** கன்றிய கருங்கழற் சேனை காவலன். (யுத் : 27) கருங்கழல் வீரா. (பா : 945)

**2. வலிமையுள்ள வீரக்கழல்.** (கலா) வள்ளல் கருங்கழற் கமலக் கால்மேல். (யுத் : 2852)

**கருங்கற் பாறை – கருங்கல்லாகிய பாறை.** (சு : 1269)

**கருங்கார் – கரிய மேகம்.** சூல்தடங் கருங்கார் புரை தோற்றத்தான். (அ : 829)

**கருங் குருதி – மிக்க குருதிப்பெருக்கு.** களிறு ஈர்த்துப் புக மண்டும் கருங்குருதித் தடஞ் சுழிகள் காண்மின் காண்மின். (யுத் : 3568)

**கருங்குவளை – நிலோற்பலத்தின் சாதி பேதம்.** காவியுங் கருங் குவளை யும் நெய்தலும் காயாம் பூவையும் பொரும் வானவன். (கி : 494)

**கருங்குழல் – கரிய கூந்தல்.** கருங்குழற் சேயரிக் கண்ணி. (ஆ: 1134)

**கருங்குழற் பாரம் – கருமையான கூந்தலின் தொகுதி.** (பா : 1164)

**கருங்கை – பெரிய கை.** காரளிக் கலுழிக் கருங்கைம் மலை. (ஆ : 34)

**கருங்கோளரி – கருநிறமுடைய வலிய சிங்கம்போன்ற இராமபிரான்.** திசைமேற் சரிந்தோடின கருங் கோளரிக் கிளையான் விடுசரமே (யுத் : 3004)

**கரு ஞாயிறு – கரிய சூரியன்.** வடதிசை சிகரி ஒன்றின் உதயம தொழியத் தோன்றும் ஒரு கருஞாயி றொத்தான். (யுத் : 783) (பா : 1048) (யுத் : 3367)

**கருணன் – கும்பகருணன்.** அவ்வழிக் கருணன்செய்த பேரெழிலாண்மை யெல்லாம். (யுத் : 1582) (யுத் : 1670)

**கருணாகரன் – அருளுக்கு இருப்பிடமானவன். இராமபிரான்.** கண்ணே அமுதே கருணாகரனே. (யுத் : 2616)

**கருணாலயன் – கருணைக்கு இருப்பிடமானவன். தசரதன்.** *எனை நீ கருணாலயனே என் என்று உரையா இதுதான் அழகோ.* (அ : 328)

**கருணை – அருள்.** *கருணை நோக்கி.* (யுத் : 2379)

**கருணைக்கடல் – கிருபா சமுத்திரம்.** *கண்டத் தெறுகணைக் காற்றினைக் கருணைக்கடல் கனகச் சண்டச் சரமழை கொண்டவை யிடையே யறத் தடுத்தான்.* (யுத் : 3715)

**கருணைக் கெல்லாம் நிலையம் – அருளுக்கெல்லாம் இருப்பிடமானவன்.** *நீந்த அரிய நெடுங் கருணைக்கெல்லாம் நிலயமே.* (ஆ : 100)

**கருணைக் கொண்டல் – கருணையைச் சொரியும் மேகம் போன்றவன்.** *கருணைக்கொண்டல் வறியன் கழுத்தென வருணற் கீந்த வருண சரம்.* (யுத் : 654)

**கருணைச் செல்வம் – அருட்செல்வம்.** *செயலருங் கருணைச் செல்வம் அருளினை.* (யுத் : 2220)

**கருணைத்து – கருணையுடையது,** *தீயோன் சேயே காதவும் கண்டுநின்ற கருமமே கருணைத் தம்மா.* (யுத் : 2842)

**கருணை நோக்கம் – அருள் நோக்கம்.** (யுத் : 4348)

**கருணையங் கடல் – கருணைக் கடலாகிய இராமபிரான்,** *கருணையங் கடல் கிடந்தது கருங்கடல் நோக்கி.* (யுத் : 539) (யுத் : 717) (யுத் : 4352)

**கருணையங் கோயில் – கருணையாகிய கோயில்.** *கருணையங் கோயிலுள் இருந்த கண்ணனை.* (யுத் : 356)

**கருணையான் – இராமபிரான்.** *சீறிக் கறுவுறப் பெயர்ந்து போந்து கருணையான் சரணம் பூண்டான்.* (யுத் : 4217)

**கருணையில்லோன் – கருணையில்லாதவனாகிய இராவணன்.** *நின்னையக் கருணையில்லோன் கொல்லுதல் செய்தானாகின்.* (யுத் : 875)

**கருணையின் கடலனையர் – அருளுக்குக் கடலை ஒத்தவர்.** *கதமெனும் பொருண்மையிலர் கருணையின் கடலனையர்.* (கி : 51)

**கருணையின் நலிதல் – அருளினால் வருந்துதல்.** *நாண் மலர்க் கிழவற்கும் முக்கணான் தனக்கும் நகையு நீங்கிய திருமுகம் கருணையின் நலிந்த.* (யுத் : 2596)

**கருணையின் நிலைய மன்னன் – அருள் என்னும் பண்பிற்கு நிலைக் களமாக விளங்கும் இராமபிரான்.** (யுத் : 920)

**கருணையைப் பருகுதல் – கருணையை (அழித்து) நீராகப் பருகுதல்.** *அறத்தைத் தின்று அருங் கருணையைப் பருகி வேறமைந்த மறத்தைப் பூண்டு.* (யுத் : 3263)

**கருணையோர்** – பேரருளுடையோர். *கருணையோர் கடன்மை ஈதால்.* (யுத் : 2223)

**கருணையோர் கடன்மை** – பேரருளுடையோரது தன்மை. (யுத் : 2223)

**கருணை வள்ளல்** – கிருபா சமுத்திரமாகிய இராமபிரான். அருளை யுடைய வள்ளல். *கருணை வள்ளல் இரங்கினன் நோக்குந்தோறும் நெடுநிலத் திரைஞ்சுகின்றான்.* (யுத் : 446)

**கருத்தர்** – கருத்து; கொள்கை. கருத்து என்பது கருத்தர் என நின்றது. (அன்) *மாயைப் புணர்ப்பறக் கல்வித் தம்மியல் பெய்துங் கருத்தர் போல்.* (சு : 1188)

**கருத்தழிதல்** – 1. மனம் வேறுபடல். *கேகயன் மகள்மேல் காதல் முற்றக் கருத்தழிந்தனு மென்பார்.* (அ : 400)

2. மனமழிதல். *இமைப்பில் காலையில் உருத்தவன் உயிர்குடித்து உடன் வந்தாரையும் கருத்தழித் தெய்துவென்.* (சு : 268)

**கருத்தனல்லன்** – கருத்துக் குட்பட்டவனல்லன். மனவறிவுக்கு எட்டியவனல்லன். *காயத்தால் இணையனென்று நினையலாங் கருத்தனல்லன்.* (யுத் : 2382)

**கருத்தியல்பு** – மனத்திலுள்ள எண்ணங்கள். (சு : 202)

**கருத்திலா இறைவன்** – ஆலோசனை இல்லாத தலைவன். *கருத்திலா இறைவன் தீமை கருதினால்.* (யுத் : 1375)

**கருத்து** – 1. சிந்தை. *காமனும் ஒரு சரம் கருத்தின் எய்தனன்.* (பா : 605)

2. மனம். *என் கருத்தும் அவ்வழிக் கண்டதுண்டோ என்றான்.* (பா : 1185) *கருத்தியல் புரைக்கும் உண்கண் கருங்கயல் செம்மை காட்ட.* (சு : 202)

3.விவேகம். பகுத்தறிவு. ஆலோசனை. *கருத்திலா இறைவன் தீமை கருதினால்.* (யுத் : 1375)

4. கருதப்படும் பொருள். *யாரும் உண்ணினை கருத்தினை.* (ஆ: 159)

5. ஆராய்ச்சி. ஒன்று கூறற்கு எடுத்தது. *கேட்டீர் நீருங் கருத் துளீர் ஏது நோக்கின்.* (யுத் : 3313)

**கருத்துட்கொள்ளல்** – நன்றென மனத்துட்கொள்ளல். *அன்னகட்டுரை கருத்துட் கொண்டான்.* (கி : 355)

**கருத்து முற்றல்** – மனத்திருந்தியாதல். *கருத்து முற்றத் தோய்ந்தே கடந்தான் திருவின் தொடர்போக பௌவம்.* (பா : 172)

**கருத்து வேறுறுதல்** – மனக்கருத்து மாறுபடல். *அருத்தியுண்டாயினும் அவலந்தான் தழிஇக் கருத்து வேறுற்றபின் அமிழ்தும் கைக்குமால்.* (கி : 676)

**கருத்துற நோக்குதல் - மனத்தால் நன்கு ஆராய்தல்.** கருத்துற நோக்கிப் போந்த காலமும் நன்று. (யுத் : 413)

**கருதாதார் - பகைவர்.** காலன் என்பர் இவனைக் கருதாதார். (யுத்: 830)

**கருதிய கருதிய - நினைத்தவற்றையெல்லாம்.** கருதிய கருதிய புரிவன கனலும் பருதியை மதியொடு பருகுவ பகழி. (யுத் : 3758)

**கருதியூன்றுதல் - ஆழ்ந்து கருதுதல்.** இவனை வீட்டுதற்கு ஒல்வினை இதுவெனக் கருதி ஊன்றினான். (யுத் : 1533)

**கருதின கருதின காட்டுகின்றது - நினைத்த நினைத்த பயன்களை யெல்லாம் கருதினபடியே நுகர்விப்பது.** கருதின கருதின காட்டு கின்றது தரு பரன் அருள். (யுத் : 197)

**கருதுதல் - 1. எதிர்பார்த்தல்.** கருதலாதமுன். (யுத் : 1039)
**2. நினைத்தல்.** கருதவே உலக மெல்லாம் சரங்களாய்க் காட்டு மன்றே. (யுத் : 1239)

**கருந்தடங்கண் - கருமையும் அகலமும் வாய்ந்த கண்.** (யுத் : 3975)

**கருந்தடங்கண்ணி - கரிய நீண்ட கண்களையுடைய சீதை.** (யுத் : 4232)

**கருந்தடங்கண்ணினள் - கரிய பெரிய கண்களையுடைய பிராட்டி.** கருந்தடங் கண்ணினாளை நாடலாங் காலங்காறும். (கி : 428)

**கருந்தட முகிலன்னான் - கரிய பெரிய மேகம் போன்றவனாகிய இராமன்.** (யுத் : 4299)

**கருந்தலைக்கலம் - கரிய தலையாகிய கலம்.** கணவனைக் கொன்று போந்தோன் கருந்தலைக் கலத்தினல்லாற் கடனது கழியேன் என்றாள். (யுத் : 2358)

**கருந்தனி முகில் - கரிய ஒப்பற்ற மேகம்போன்ற இராமன்.** கருந்தனி முகிலினைப் பிரிந்து. (சு : 507)

**கருந்திணாகம் - திண் கருநாகம். வலிமை பொருந்திய கிருஷ்ண சர்ப்பம்.** கருந்திண் நாகத்தை நோக்கிய கலுழனிற் கனன்றான். (சு : 1097)

**கரு நறுங்குஞ்சி - கரிய நல்ல மயிர் முடி.** துன்று கரு நறுங்குஞ்சி எயினர் கோன். (அ : 1020)

**கரு நாயிறு - கருநிறக் கதிரவன்.** கரு நாயிறு போல்பவர் காலொடு போய் வருநாளயலே வருவாய் மனனே. (பா : 1248)

**கரு நாழிகை - இரவு.** கனையேய் கடல் போற் கரு நாழிகைதான் விடியாவிடின். (பா : 1249)

**கருநிறம் - கரிய நிறம்.** கருநிறச் செம்மயிர்க் காலன்: (பா : 625)

**கருநெடுங்கண் - கரிய நெடிய கண்.** செங்கனிவாய்க் கரு நெடுங்கண்... மின்னுடங்கும் இடையார். (பா : 735) (ஆ : 343)

**கருநெருப்பு - கடல்.** (கலா) **இருள்.** (அண்) (வை. மு) கரு நெருப் பினிடையே எழுந்த வெண்ணெருப்பே. (பா : 639)

**கருப்பம் – சூல்.** இலங்கை வேந்தனென் றுரைத்தலும் இடியுண்ட அரவிற் கலங்கு மாலினந் தானவர் தேவியர் கருப்பம். (யுத் : 516)

**கருப்பு – பஞ்சம். பஞ்சகாலம்.** கருப்புக் கார் மழை வண்ண, (யுத் : 3788)

**கருப்புக் கார் மழை வண்ண – பஞ்சகாலத்துத் தோன்றிய கரிய (நீருண்ட) மேகத்தைப் போன்றவனே.** (வை. மு) (யுத் : 3788) **கார்காலத்துத் தோன்றும் கரிய மேகம் போன்ற நிறத்தை உடையவனே.** (அண்)

**கருப்புச் சிலையான் – மன்மதன்.** கன்னல் இன் கருப்புச் சிலையான். (பா : 708)

**கருப்புரம் – பச்சைக் கற்பூரம்.** கருப்புரச் சாந்தும் கலவையு மலரும் கலந்துமிழ் பரிமள கந்தம். (சு : 408)

**கருப்புவில் – கரும்புவில். கரும்பாகிய வில்.** கருப்புவில் லிறுத்தாட் கொண்டு காளன்றுள். (பா : 1169) (பா : 617)

**கருப்பூரம் – பச்சைக் கற்பூரம்.** நந்தலில் வியன் கருப்பூரம். (ஆ : 577)

**கருப்பேந்திரம் – கரும்பாலை.** கருப் பேந்திரம் முதலாயின கண்டாள் இடர் காணுள். (அ : 623)

**கருப்பை – எலி.** கருப்பை போற் குரங்கு எற்ற. (யுத் : 1054)

**கரும் – பெரிய.** கருங்கடல் கலக்கும் மத்து. (யுத் : 2010)

**கரும்பழி சொல்லி – கருப்பஞ் சாற்றை சொல்லின் இனிமையால் வெல்லுகின்றவள்.** கரும்பழி சொல்லியைப் பகைவன் கைக்கொள. (கி : 219)

**கரும்பின் பாடலார் – கரும்பு போலினிய வாய்ப் பாடலையுடையவர்.** அந்தர வானத் தரம்பையர் கரும்பின் பாடலார் அருகுவந்தகவ. (சு : 419)

**கரும்பு - கருப்பஞ்சாறு.** கரும்புண்ட சொல் மீள்கிலள். (ஆ : 916) கரும்பையுஞ் சுவை கைப்பித்த குதலையர். (பா : 487) கரும்பையுஞ் சுவை கைப்பித்த சொல்லியர். (சு : 292)

**கரும்புண்ட சொல் – கருப்பஞ்சாற்றை ஒத்த இனிய சொல்லைப் பேசுகிறவள். சீதாபிராட்டி.** (ஆ : 916)

**கரும்புறக்கடல் – கறுத்துத் தோன்றுகின்ற மேற்புறத்தைக் கொண்ட கடல்.** கரும்புறக் கடல்களோடு உலகங் காய்ச்சிய இரும்புறச் செல்வன. (யுத் : 584)

**கரும் பூதம் - கரிய பூதங்கள்.** *காலன் தனதுருவங்களும் கரும் பூதமும் பெரும் பேய்ச் சாலங்களும் நிமிர்கின்றன.* (யுத் : 3044)

**கரும்பையுஞ் சுவை கைப்பித்தல் - கருப்பஞ் சாற்றையும் கைப்புச் சுவையுள்ள தென்னும்படி மிக இனிமையை யுடையதாதல்.** *கரும்பையுஞ் சுவை கைப்பித்த குதலையர்.* (பா : 487) *கரும்பையும் சுவை கைப்பித்த சொல்லியர்.* (சு : 292)

**கருமக்கம்மியன் - இரும்பு வேலை செய்பவனாகிய கருமான்.** *தீயினூற் காய்த்திரும்பைக் கருமக் கம்மியன் தோய்த்த தண்புனல் ஒத்தது தோயமே.* (கி : 37)

**கருமகன் - கருமான்.** *தொகைக்கனற் கருமகன் துருத்தித் தூம்பென.* (ஆ : 1152)

**கருமச் சூழ்ச்சியர் - காரியத்தை ஆராயுந் தன்மையர்.** *கனைகழற் காலினர் கருமச் சூழ்ச்சியர்.* (யுத் : 320)

**கருமச்செயல் - செய்த செய்திகள்.** *இராகவன் தென்றிசைக் கருமச் செயல் திருத்தினும்.* (4124)

**கருமணிக் கண்டத்தான் - நீல மணிபோன்ற கண்டத்தையுடையவனான சிவபெருமான்.** *கருமணிக் கண்டத்தான் தன் சென்னியிற் கறை வெண்திங்கள்.* (யுத் : 886)

**கருமத்தாலன்றிக் காரணத்தாலுள்ள காட்சி - நேர்முகமாக நடைபெறும் தொழிலாலன்றி காரணப் பொருளைப்பற்றி அனுமானத்தால் காணும் (இந்த) அறிவு** *கருமத்தாலன்றிக் காரணத்தாலுள்ள காட்சி திருவிலி மற்றிது எம்மறைப் பொருளெனத் தெரிந்தாய்.* (யுத் : 182)

**கருமத்தினிற்றல் - உரிய தொழிலிலே தலைப்பட்டு நிற்றல்.** *கருமத் தினின்ற கவி சேனை.* (யுத் : 2217)

**கருமத் தீட்டு - கருமத் தொகுதி.** *இறந்தோ ருயிருடன் கருமத் திட்டினூற் பிறந்துள தாமெனை.* (யுத் : 3819)

**கருமம் - 1. தக்க காரியம்.** *கருமமே இது.* (அ : 35)

**2. செயல்.** *நாட்டொரு கருமஞ் செய்தாய்.* (கி : 318) *கருமம் கட்டளை.* (கி : 405)

**3. செய்தி.** *கருமமிங்கிதெங் கடவுள் என்றனர்.* (கி. : 145)

**4. வினை. நல்வினை.** *கருமத்திட்டு.* (யுத் : 580)

**5. முயற்சி.** *கருமமும் பிரிதோர் பொருள் கருதியன்று.* (கி : 50)

**6. செயல்களாகிய காரியம்.** (யுத் : 182) *கரும முண்டுரைப் பதென்றான்.* (யுத் : 1356)

**கருமம் கட்டளை - அவரவர் செயல்களே அவரவர் பண்பினை அறிதற் குரிய உரைகல்லாகும்.** (கி : 405)

**கருமம் பிடித்தல் — தொழிலைக் கைக்கொண்டு நடத்தல்.** பேர்வில் எண்டிசைக் காவலர் கருமமும் பிடிக்கும். (யுத் : 136)

**கருமலை — கரிய மலை.** கருமலை செம்மலையனைய காட்சியர். (ஆ : 191)

**கருமனம் — வஞ்சக மனம்.** (வை. மு) **இருண்ட மனம்.** (அண்) கருமன நிருதக் கள்ளர். (யுத் : 720)

**கருமா — பெரிய உருவமுள்ள வராகம்.** உருத்துலகெடுத்த கருமாவினை யும் ஒத்தான். (கி : 886)

**கரு முடித்தமைந்த மேகம் — கருவை நிரம்பப் பெற்றுள்ள மேகம்.** கரு முடித்தமைந்த மேகம் கால்பிடித்தெழுந்த காலம். (யுத் : 2371)

**கரு முதற் கலக்கல் - கருப்பச் சிசுவுடன் கலங்கச்செய்தல்.** அரக் கரைக் கரு முதற் கலக்கி. (யுத் : 2585)

**கரு முறை நிறைந்த மேகம் — கரு நிறம் நிறைந்த மேகங்கள்.** (வை. மு) **கரிய நீர்த்துளிகள் நிறைந்தமேகம். (கரும் உறை)** (கலா) (யுத்: 2377)

**கரு மேதிகள் — கரிய எருமைகள்.** கார்கள் என்ன வருங் கரு மேதிகள். (பா : 56)

**கருமை — 1. பெருமை.** கருங்கடற் பள்ளி. (பா : 601)

**2. கொடுமை.** அந் நெடுங் கருங்கண்தி. (யுத் : 713)

**3. வலிமை.** கருங்கழல் அரக்கன். (யுத் : 1556)

**கருவரை — கரிய மலை.** கருவரை கனகக் குன்றம் என்னலாம் காட்சி தந்த இருவர். (யுத் : 1381) (யுத் : 624)

**கருவறுத்தல் — வேரோடு அறுத்தல்.** இதில் யாருங் கெடக் கரு வறுத்தனன். (பா : 393)

**கருவாய் அளிக்கும் கனிகண்ணே — கருவுற்றுப் பிறந்து எம்மைப் பாதுகாத்தருளும் பற்ருகிய பெருமானே.** (யுத் : 2620)

**கருவி — 1. சேணம். கல்லணை,** கருவி மாவொடு கார்மதக் கைம்மலை. (ஆ : 446)

**2. தொகுதி.** கருவி மாமழை. (அ : 750)

**3. மெய்ப்பை.** சமையக் கருவி புக்கனர் அரக்கர். (சு : 870)

**4. அளவு கருவி.** கருவி நாழிகை பாதியில். (சு : 252)

**5. மேகம்.** கருவியற்ற ககனமெலாம் புகை உருவி யுற்றிட உம்பர் துளங்கினர். (பா : 696)

**6. கைத்தளம் என்னும் கேடயம்.** கருவியும் கைகளும் கவச மார்பமும் உருவின. (அ : 1097)

**7. படைக்கலம்.** கருவியோடின கச்சையும் கவசமும் கழல, (ஆ : 517)

8. **வாத்தியம்.** *வார்விசி கருவியோர் வகுத்த பாணியின் ஆரியர் அரு நடம்.* **(ஆ : 58)**

9. **கவசம்.** (கலா) **(ஆ : 58)**

10. **காரணம். துணைக்கருவி.** *கருவி நான் முகன் வேள்வி.* **(யுத் : 3609)**

**கருவி நாழிகை – கருவியால் அளக்கப்படும் நாழிகை. (சு : 252)**

**கருவி மாமழை – மின்னல் முழக்கு முதலிய தொகுதியையுடைய மேகம். (அ : 750)**

**கருவிளை மலர் - கருவிள் மலர்.** *கருவிளை மலரின் காட்சிக் காசறு தூசு.* **(யுத் : 3965)**

**கரு வைத்தல் – நகரைத் தோற்றுவித்ததற்கு நாட்கொள்ளல்.** *கரு வைக்கும் நெடு நகரைக் கடலிடையே கரையாதே.* **(சு : 327)**

**கருள் – கருநிறம். (பா : 1253)**

**கருளன் – கருடன்.** *எறும் வலிக் கருளன்.* **(சு : 1054)** *விண்ணுறு கருளன் மேல்.* **(சு : 678)** [பா : பே]

**கரை – 1. எல்லை. அருகு.** *கையினிடை சென்று கரைகண்ட கரை யில்லை.* **(யுத் : 700)** *காட்சியுங் கரையிற்றுமே.* **(சு : 95)**

2. **அளவு.** *நிருதர் தங்கரையில் யாக்கைகள்.* **(யுத் : 1780)**

**கரை காணுதல் – முடிவு காணுதல்.** *உயர்ந்த வேள்வித் துறை யெலாங் கரையுங் கண்டாய்.* **(யுத் : 1616)**

**கரை செயல் – 1. சொல்லுதல்.** (கலா) **வரம்பு கட்டுதல்.** (வை. மு) *கரை செயற் கரிய தோர் களிப்பு.* **(பா : 317)**

2. **எல்லை காண்டல்.** *கரை செயற் கரிய தோர் தேவர்.* **(யுத்: 3973)**

3. **அளவிடல்.** *கரை செயலரிய போகம்.* **(யுத் : 4121)** *கரை செயற் கரிய காதல்.* **(பா : 1203) (பா : 326)**

**கரை செயா வேலை – கரையில்லாத கடல்.** (அண்) **கரை செய்யப் பெருத கடல்.** (கலா) **கரைகட்ட முடியாத கடல்.** (வை. மு) *கரை செயா வேலையிற் பெரிய கற்பினள்.* **(கி : 811)**

**கரை செறிவு – கரை சேர்தல்.** *கரை செறிவரிதாகும் இரவொரு கரை கண்டார்.* **(பா : 1264)** [பா : பே]

**கரை சென்றிலன் – கரை காணுதவனாய்.** *கரை சென்றிலன் அனையான் நெடு முடிவின் கனல் கால்வான்.* **(பா : 1365)**

**கரைத்தல் – 1. பெருக்குதல்** (வை. மு) **வீழ்த்தல்.** *கரைத்திலன் கண்ணினீரை.* **(யுத் : 2967)**

**2. உருக்குலையும்படி கரைத்தல்.** நெடுநகரைக் கடலிடையே கரை யாதே. (சு : 323)

**கரைதல் – மனமுருகுதல். உடல் உருகுதல்.** (வை. மு) உழுவை தின்னிய வந்த கலையிளம் பிணையெனக் கரைந்தாள். (சு : 427)

**கரை தெரிவிலாத போகக்களிப்பு – அளவிடமுடியாத போகங்களை அனுபவிப்பதனாலான களிப்பு.** நாளும் கரை தெரிவிலாத போகக் களிப்பினுள் இருந்தான் மன்னே. (யுத் : 4320)

**கரைப் பரப்பு – கடற்கரைப் பகுதி.** (யுத் : 683)

**கரையளித்தல் – அளவிடல்.** கரையளித்தற் கரிய படைக்கடலரக்கர். (ஆ : 360)

**கரையிலர் – கணக்கில்லாதவர்.** கண்ணிலர் கரையிலர் கரந்து போயினர். (யுத் : 485)

**கரையிறந்தோர் – அளவற்றவர்.** நான் முகனே முதலமரர் கரை யிறந்தோர். (ஆ : 348)

**கரையெறிதல் – கரையைக் கடந்து வருதல்.** வேந்தன் வேண்டலால் கரை யெறியாதலை கடலும் போன்றனன். (பா : 230)

**கரைவித்தல் – கரைந்து உருகும்படி செய்தல்.** கரைவித்தான் உயிரைக் கண்போல். (யுத் : 2162) இருதோளெனச் சோம்பி ஓங்குங் கல்லுஞ் சுமந்தேன். (அ : 432)

**கல் – 1. மலை.** கல்லரக்கும் கரதலம். (சு : 325)

**2. கல்லின் தன்மையாகிய திண்மை.** கல்லொடுந் தொடர்ந்த நெஞ்சம் கற்பின்மேற் கண்ட துண்டோ. (சு : 449)

**3. ஒலிக் குறிப்பு.** கல்லென்ற ஒலியிற் சென்றார் கரன் முதற் காளைவீரர். (ஆ : 623)

**4. எடைக்கல்.** மேரு விழுக்கலால் நிறுக்க் நேர் வரும் வீரர். (யுத் : 977)

**5. கல்லின் வல்லென்ற தன்மை.** கற்படி வயிரத்திண் கால். (யுத் : 792)

**6. சிலை.**

**கல்பரிசை – கல்லாலியன்ற கேடகம்.** வாமவில் வலயங் கற்பரிசை மற்றுள சேம வெம்படை. (யுத் : 1323)

**கல் மழை – கல் மாரி.** கல் மழை நிகர்த்தன கற்கள். (யுத் : 1152)

**கல்லணை கிழங்கு – மலையிற் பொருந்திய கிழங்கு.** கல்லணை கிழங் கொடு கனியு முண்டிலன். (அ : 991)

**கல்லதர் – 1. மலைக்கற்கள் செறிந்த காட்டுவழி. கல் அதர்.** *கல்லதர் தான் புக முடுகினன் என்னுந் தன்மையான்.* **(அ : 534)**

**2. கற்கள் நிறைந்த வழி.** *தாள்களிற் கல்லதர் சுடுந்தன கதிரின் என்னவே.* **(யுத் : 4193) (அ : 156)**

**கல்லளை – கல்லிடுக்கு. மலைக்குகை** *கல்லளைக் கிடந் தகடு வெந் தயர்கின்ற கதழ் பாம்பு.* **(அ : 731)**

**கல்லாத கலை - கற்றுக் கொள்ளாத கலை.** *இல்லாத உலகத் தெங்கும் ஈங்கிவன் இசைகள் கூரக் கல்லாத கலையும் வேதக்கடலுமே என்னும் காட்சி சொல்லாலே தோன்றிற்றன்றே.* **(கி : 61)**

**கல்லாப் புல்லர் – ஒன்றையுங் கல்லாத மூடர்** *கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்றன்றே.* **(பா : 413)**

**கல்லார் மலர்சூழ் கழி – 1. மலையிடங்களும் தேன் நிறைந்த மலர்கள் சுற்றிலும் இருக்கப்பெற்ற கழிக்கரை இடங்கள். (வை. மு)**

**2. செங்கழுநீர் மலர் நிறைந்த கழி. (கலா) கல்லாரம் என்பதன் விகாரம்.** *கல்லார் மலர்சூழ் கழிவார் பொழிலோடு எல்லாமுள வாயினும்.* **(பா : 1262)** *[பா : பே]*

**கல்லாரம் – செங்கழுநீர். கல்லார் என விகாரப்பட்டு வந்துள்ளது. (பா : 1262)**

**கல்லிடைப் படுத்த புல் – கல் தலத்தமைந்த தருப்பை.** *கல்லிடைப் படுத்த புல்லின் வார் சிலைத்தடக்கை வள்ளல் வைகிய பள்ளி கண்டான்.* **(அ : 1031)**

**கல்லின் மாப்படி – மலைகளையுடைய பெரிய பூமி.** *கல்லின் மாப்படி கலக்கவான் கனலெனக் காந்தி.* **(யுத் : 503)**

**கல்லின் மா மதில் – கற்களினாலாகிய பெரிய மதில்.** *மதிதொடுங் கல்லின் மா மதின் மணிக்கடை கடந்திடுமுன்.* **(கி : 815)**

**கல்லின் மா மாரி – கல்லாலான பெரிய மழை.** *மழையின் வாய்ந்த கல்லின் மா மாரி வரத்தினாற் சொரியுங்காலை.* **(யுத் : 3113)**

**கல்லின் மாரி – 1. மலைகளின் மழை.** *கடல் தூர்ப்பதோர் கல்லின் மாரியைக் கைவகுத்தாள்.* **(பா : 412)**

**2. கல் மழை.** *ஊழிநாளிற் காசறு கல்லின் மாரி.* **(யுத் : 2538) (யுத் : 2377)** *கன்னெடு மாரி பெய்யக்கடை யுகத் தெழுந்த மேகம்.* **(பா : 414)**

**கல்லீரும் படை – கல்லையும் பிளக்கவல்ல ஆயுதம்.** *கல்லிரும் படைந் தடக்கை அடற் கர தாடணர்.* **(ஆ : 337)**

**கல்லுதல் - 1. தோண்டுதல். அகழ்தல்.** *கல்லுவென் மலே மேலும் கவலேயின் முதல் யாவும்.* **(அ : 683)** *கல்லில் அங்கை உலகங் கவர் கிற்போர்:* **(யுத் : 815)** *அம்பு கொடு கல்லினுன்.* **(யுத் : 2035)** *களிற்றின் மருப்புக் கல்லிய தோளவன்.* **(யுத் : 3788)** *கல்லலாம் உலகினே.* **(யுத் : 1299)** *கல்லுவ.* **(யுத் : 1638)**

**2. பேர்த்துத் தள்ளுதல்.** *மாய விஞ்சை வகுத்தன அறிந்து மாளக் கல்லுதி.* **(யுத் : 2895)**

**3. அகழ்ந்தெடுத்தல்.** *கல்லலாம் உலகினே.* **(யுத் : 1299)**

**4. அழித்தல்.** *வேரோடும் கல்லுமா முயல்கின்ருன் இவனென்றும் கறுவுடையான்.* **(யுத் : 1576)**

**கல்லெடுக்க உரியான் - 1. கல்லெடுத்தலாகிய சவச் சடங்கைச் செய்தற்கு உரியவனுன விபீடணன்.**

**2. கல்லெடுத்து (மலேயை யெடுத்து)ப் போர் புரிதற்குரிய யான். சிலேடைப் பொருள்.** *கல்லெடுக்க உரியானு நின்றனன் அது இன்று நாளேயிடை காணலாம்.* **(யுத் : 2026)**

**கல்லெடுப்பு - சவச்சடங்கு பிரேதக்கிரியைகளில் இறந்தவருக்கு அறிகுறியாக நட்டகல்லே அந்த கிரியை முடிவில் எடுத்துவிடுதல்.** (வெ. ப) **[பாஷாணுேத் வாசனம். பாஷாணம்-கல்; உத்வாசனம்-அகற்றல்]** *கல்லெடுக்க உரியானும் நின்றனன்.* **(யுத் : 2026)**

**கல்லென்ற ஒலி - கல்லென்றெழுந்த பேராரவாரம்.** *கல்லென்ற ஒலியிற் சென்ருர் கரன் முதற் காளே விரர்.* **(ஆ : 623)**

**கல்லென - 1. ஒலிக்குறிப்பு. இரைத்து.** *குரக்குச் சேனே கல்லெனக் கலந்து புல்ல.* **(யுத் : 2552)** *கவியின் சேனே கல்லெனக் கலந்து புல்ல.* **(சு : 1267) (யுத் : 2293)**

**2. கல்லேப்போல. (கல்-மலே)** *கல்லெனத் திரண்ட தோள்.* **(யுத் : 1623)**

**கல்லே - தொன்னே.** *என்முன் உடன் வந்தான் கையார் கல்லேப் புல்லடகுண்ண.* **(அ : 873)**

**கல்லேயாண்டுயர்ந்த தோள் - மலேயைக் கீழ்ப்படுத்தி உயர்ந்த தோள்.** *கல்லே யாண்டுயர்ந்த தோளாய்.* **(அ : 1034)**

**கல்லொடுங் தொடர்ந்த நெஞ்சம் - கல்லின் தன்மையாகிய திண்மை யோடு கூடிய மனம்.** **(சு : 445)**

**கல்வி - 1. மந்திர பலம்.** *கள்ளவினே மாய அமர் மாயவினே கல்வியின் விளேத்தான்.* **(ஆ : 541)**

**2. கற்பனே.** *நயந்தோர் தத்தம் கல்வித்தாம் வார்த்தை யென்று கரைவித்தான் உயிரை கண்போல்.* **(யுத் : 2162)**

**3. யானையைப் பழக்கும் உரைகள்.** கல்வியின் நில்லா............ கொலை யானை. (யுத் : 2278)

**4. கற்கும் கல்வி.** ஆற்றலும் நிறைவும் கல்வி யமைதியும். (கி : 60)

**5. திறமை.** சேமத்தார் வில்லிறுத்தது...... தோகைபால் காமத் தாலன்று கல்வியினால் என்றாள். (பா : 1187)

**6. பாடம்.** கதிக்கொரு கல்வி வேறே காட்டுவது ஒத்ததன்றே. (ஆ : 801)

**7. ஞானம்** – மாயப் புணர்ப்பறக் கல்வித் தம்மியல் பெய்தும் கருத்தர்போல். (சு : 1188)

**கல்விக்கண் மிக்கோன் - கல்வியாகிய கண்ணால் சிறப்புற்றவன்.** (அண்) **விபீடணன்.** (யுத் : 720)

**கல்விக்கு நிமிர்ந்த கீர்த்தி – கல்வியிலே மிக்க புகழ்.** கல்விக்கு நிமிர்ந்த கீர்த்திக் காகுத்தன் தூதனாகிச் சொல்விக்க வந்துபோனேன். (யுத் : 2843)

**கல்வி கரையுற்ற முனி – கல்வியின் கரையைக் கண்டுணர்ந்த முனிவன்.** கல்வி கரை யுற்ற முனி கௌசிகன். (பா : 1241)

**கல்வி காட்டுதல் – பாடங் கற்பித்தல்.** கதிக்கொரு கல்வி வேறே காட்டுவது ஒத்தன்றே. (ஆ : 801)

**கல்வித்து – கல்வியளவினையுடையது. கற்பனையின் அளவாக அமையும்** (அண்) நயந்தோர் தத்தங் கல்வித்தாம் வார்த்தை. (யுத் : 2162)

**கல்வி மாண்பு – கல்வியின் பெருமை.** நாமநூல் நவின்ற கல்வி மாண்பு ஒரு வகையிற்றன்று. (யுத் : 2057)

**கல்வியாளர் – தேர்ந்த கல்வியினர்.** வீறின் ஓதிய கல்வியாளர். (யுத் : 2245)

**கல்வியின் பிரை - கல்வியாகிய பாலுக்குப் பிரை போன்றது; பிறரது கல்விஞானம் முழுவதையும் தன்வசமாக்க வல்லது.** உரையுள துணர்த்துவது...... கற்கும் கல்வியின் பிரையுளது. (யுத் : 187)

**கல்வியின் மெய்ந்நெறி வாரம் – அறிவுநூல்களைக் கற்றவாறு ஒழுகும் மெய்ம்மையான ஒழுக்கநெறியின் பகுதி.** (கி : 336)

**கல்வி வேறே காட்டுதல் – புதியதொரு வகையைக் கற்பித்துக் காட்டுதல்.** (வை.மு) **மற்றொரு பாடங் கற்பித்தல்.** (அண்) (ஆ: 801)

**கலக்கடை – அணிகலக் கடைகள்.** கலக்கடை கணிப்பருங் கதிர்கள் நாறுவ. (பா : 150)

**கலக்கம் – மனங்குழம்புதல்.** கள்ள நெடு மான்விழி யரக்கியர் கலக்கமொடு கால்கள் குலைவார். (யுத் : 3403) (யுத் : 2426)

**கலக்கம் காண்டல் - மனங் கலக்கும்படி செய்தல். இடர் நிலையை உண்டாக்கி மனங் கலங்கும்படி செய்தல்.** *கண்களால் அரக்கன் கண்டான் அவனை ஓர் கலக்கங் காண்பான்.* **(யுத் : 1588)**

**கலக்கல் - கலங்கும்படி செய்தல்.** *அரக்கரைக் கரு முதல் கலக்கி.* (யுத் : 2647)

**கலக்கு - கலக்கம்.** *கலக்குறு கண்ணராகி.* (யுத் : 2047)

**கலக்குதல் - 1. கடைதல். குழம்பும்படி செய்தல்.** *கனலெழக் கலக்கக் கண்டும்.* **(யுத் : 434)** *மந்தரப் பொருப்பால் வேலை கலக்கினுன் மைந்தன் என்முன்.* **(யுத் : 943)** *ஆலமெழப் புணரி புலவோர் கலக்கும் அக்காலம்.* **(யுத் : 832)**

**2. கலங்கச்செய்தல்.** *நும் வீரம் கலக்குவென்.* **(யுத் : 2456)**

**கலக்குறு கண்ணர் - கலக்கம் மிக்க கண்பார்வையுடையவர்.** (அண்) *விண்ணோர் கலக்குறு கண்ணராகிக் கடையுறக் காணலாற்ருர்.* (யுத் : 2047)

**கலகம் - போர்.** *உன்திறத் தனங்கன் தரு கலக மல்லது எளிமையுங் காண்டியோ.* (சு : 433) *கலக வாணிருதர் கோன்.* **(யுத் : 4324)**

**கலகவாணிருதர் கோன் - போர் விருப்பமுள்ள வாளேந்திய அரக்கர் தலைவனுகிய இராவணன்.** (யுத் : 4324)

**கலங்கல் - குழம்புதல்.** *அங்கு மிங்கும் கலங்கின வெருவிப் பாயுங் கயற்குலம்.* (அ : 1047)

**கலங்கலில் கடுங்கதிர்கள் - நிலை கலங்குதல் இல்லாதனவும் விரைவை யுடையனவுமான சூரியன் முதலிய விண்ணொளிகள்.** (வை.மு) (அண்) **நிலைகலங்குதல் இல்லாத வெப்பமான சூரியனின் கிரணங்கள்.** (கலா) *கலங்கலில் கடுங்கதிர்கள் மீது கடிதேகா.* **(சு : 158)**

**கலங்கலிர் - கலங்க வேண்டாம்.** *கலங்கலிர் உரைத்த மாற்றம் முடிக்குவல் கடிது காண்டிர்.* **(கி : 1030)**

**கலங்கலீர் - நீங்கள் அஞ்சவேண்டா.** *கவித்தனவ் கரதலம் கலங்கலீர் எனச் செவித்தலம் நிறுத்தினன்.* **(பா : 469)**

**கலங் கழித்தல் - ஆபரணங்களைக் கழற்றி எறிதல்.** *வினையி னேனும் இவ்விலங்கு விற்கரத்தினன் இருக்கவே அவள் கலங் கழித்தனள்.* (கி : 214) [பா : பே]

**கலங்கள் - ஆபரணங்கள்.** *அன்று தானணிந்த கலங்களோடு மச் சாத்திய துகிலொடும்.* **(யுத் : 527)**

**கலங்காமதி - காலந்தவருது தோன்றும் சந்திரன்.** (பாயி : 28)

**கலங்குதல் - 1. நீங்குதல்.** *வேறுபாடுற்ற விக்கம் கலங்குவ தெவரைக் கண்டால்.* **(சு : 1)**

**2. குழம்புதல்.** *குடர் கலங்க.* **(யுத் : 1581)**

**கலங்குவது – மாயைத் தோற்றம் நீங்கி உண்மை வெளிப்படுவது.** (கலா) (சு : *1*)

**கலங்குரு வணம் – கலங்குரு வண்ணம். கலக்கமடையாதபடி,** *கலங்குரு வணம் காத்தி போந்தெனு.* (அ : *1178*)

**கலசத்துணை – இணைக்கலசம்.** *அருப்பேந்திய கலசத்துணை அமுதேந்திய மதமா மருப்பேந்திய எனவா முலை.* (அ : *623*)

**கலசம் – 1. கலச நீர்.** *கண்ணருவி நெடிய கரதலங் கல சமதாட்டினன்நெடி யோன்.* (யுத் : *4106*)

**2. பொற்கலசம். கும்பம்.** *காராழிக் கலசக் கொங்கை.* (கி : *641*)

**3. குடம்.** *மழைத் தண்ணீரால் ஆயிரங்கலசம் ஆட்டி.* (சு: *1324*)

**கலச மாட்டல் – கலச நீரால் அபிடேகஞ் செய்தல்.** (சு : *1324*)

**கலத்தல் – 1.** பரவுதல் *வலி கெழு சேனைக் கம்மா கானிட மில்லை யென்னும் கட்டுரை கலந்த காலை.* (ஆ : *435*)

**2. நட்டல்.** *வானவர் விருந்தெனக் கலந்தார்.* (யுத் : *2575*)

**3. பொருந்துதல்.** *தொடை கலந்து.* (யுத் : *907*) *மாண் கலந் தளந்த மாயன்.* (யுத் : *3114*)

**4. கூடுதல்** *காற்றின் மகன் தனை வந்து கலந்தான்.* (யுத்: *2822*)

**5. பணிதல்.** *கடுவமர் களனடி கலந்து கூறலும்.* (பா : *186*)

**6 தன்னோடு தொடர்புடைய தாதல்.** *நலங் கலந்து தன்குல நன்மையும் போயடங்க.* (ஆ : *238*)

**7. சென்று சேர்தல்.** இலங்கையைக் கலந்தான். (யுத் : *2476*)

**கலந்தவர் – மகளிரும் மைந்தருமாகக் கலந்திருப்பவர்கள்.** *கலந்தவர்க் கினிய தோர் கள்ளுமாய்.* (பா : *1048*)

**கலப்பை – 1. உபகரணங்கள். வேள்விக்கமைந்த உறுப்புக்கள். துணைக்கருவிகள். உழு படையுமாம்.** *ஆயதற்குரியன கலப்பை யாவையும் ஏயெனக் கொணர்ந்தனர்.* (பா : *204*)

**2. ஓமத்திற்குரிய சாமக் கிரியை.** *ஓம வெங்கன லவிந்துழைக் கலப்பையும் காமர் வண்டருப் பையுங் கட்டற.* (யுத் : *2947*)

**கலம் – 1. கப்பல். மரக்கலம்.** *உந்து கடலிற் பெருங்கல மொன் றுடையா நிற்ப.* (அ : *605*) *கலம் பொற் றேரும்.* (யுத் : *2010*)

**2. அணிகலம்.** *கலக்கடை கணிப்பரும் கதிர்கள் நா றுவ.* (பா: *150*) *கலத்தினிற் பிறந்த மாமணி.* (யுத் : *3985*)

**3. ஆயுதம்.** *பரிதி பற்றிய பல்கலன் முற்றினர்.* (அ : *626*) *[பா. பே]*

**கலம் பொற்றேர் – பொன்மயமான தேர்களாகிய மரக்கலம்.** (யுத்: *2010*)

**கல ராசி – உண்கலவகை (அண்) ஆபரணத் தொகுதி. (வை. மு)** செம் பொனின் கல ராசி திருத்தினர். (அ : 1075)

**கல ராசி திருத்துதல் – இலையில் முதலில் வைக்கத்தக்க உண்டிகளை வைத்தல். ஆபரண வகைகளைச் செம்மை பெற அணிவித்தல்.** (அ : 1075)

**கலவி – புணர்ச்சி.** ஒநிமங் கண்ணுறு கலவியால் வெல்லக் கண்டவன். (யுத் : 338)

**கலவிப் பூசல் – புணர்ச்சியாகிய போர்.** கலவிப் பூசலால் நெருங்கிய வனமுலை சுமக்க நேர்கலா மருங்குல்போல். (பா : 1112)

**கலவிப்போர் – புணர்ச்சியாகிய யுத்தம்.** கலவிப் போரின் ஓசிந்த மென் மகளிர். (பா : 571) (சு : 255)

**கலவியின் குறி – கலவிக்குறி.** அலைவில் வெள்ளெயிற் றுலிதழ் மறைத்துளது அயலாள் கலவியின் குறி காண்டு மென்றுமெனக் கனன்றார். (யுத் : 2317)

**கலவை – கலவைச் சந்தனம். சந்தனக் குழம்பு** முலையுறு கலவை தீய. (சு : 208) (யுத் : 3962)

**கலவைக் களி – கலவைச் சந்தனக் குழம்பு** வாச மென் கலவைக் களி வாரிமேல் பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள். (பா : 643)

**கலவைப் புனை சாந்து – கலவையாகிய சந்தனக் குழம்பு.** பூசு வெண் கலவைப் புனை சாந்தினை ஆசை மாதர் அழித்தனர் என்னவே. (பா : 712)

**கலன் – 1. துஷ்டன்.** தானவர்க்குமே யரிய தன்மை யானன அக்கலன். (கி : 895)

**2. ஆபரணம்.** உமிழ் சுடர்க் கலன்கள். (பா : 112)

**கலன் கழித்தல் – அணிகலன்களைக் களைதல். மகளிர் கலன் கழித்தல் அமங்கலமானது.** இவ்விலங்குவில் கரத்திருக்கவே அவள் கலன் கழித்தனள். (கி : 214)

**கலாபம் – 1. பதினாறு கோவையுள்ள மாதர் இடையணி.** கலாபஞ் சூழ்ந்த பாந்தளின் அல்குலார். (பா : 873)

**2. 25 கோவையுள்ள இடையணி.** பூந்துகில் கலாபம் பீறி. (சு : 284)

**3. மயில் தோகை.** ஓர் கலாபம் வழங்க நிழல் மின்னவரு மஞ்ஞை யென வந்தாள். (பா : 1226) கலாப மயில். (பா : 996) கலாப மஞ்ஞை. (ஆ : 588)

**கலாம் – 1. கோபம்.** அருங்கலாம் உற்றிருந்தா னென்னிலும். (ஆ : 365)

2. **போர்.** *வன் கலாம். (யுத் : 2195)*

3. **கலகம். ஊடல்.** *கொழுந ரோடு உட் கலா முடையாரின் உயங்கினர். (அ : 814)*

4. **மாறுபாடு.** *திக்கலாம் கொண்ட தேவர். (யுத்: 1368) [பா.பே]*

**கலாமுடையார் – ஊடலுடையார். (அ : 814)**

**கலி – 1. வலிமை.** *உயிர்த்துணை நுழைக் கலிக் கருங் கண்ணியர். (பா : 863)*

2. **ஒலி.** *கலிவானின் மேலுள பொருள். (அ : 679)* **கலிப் பேர்** *வான். (அ : 438)*

3. **மகிழ்ச்சி மனவெழுச்சி.** *வகுத்த போகம் கலிக்கடனளிப்ப னென்று கருதினுயேல். (யுத் : 3589)*

4. **கலிபுருடன்.** *கலியினும் கொடியர். (யுத் : 3310)*

**கலிக்கடன் – மகிழ்ச்சியின் கடமை.** *(யுத் : 3589)*

**கலி காலம் – கலியுகம்.** *கங்குல் பூசி வருகின்ற கலிகாலம் எனவே. (ஆ : 15)*

**கலிகெழு விசும்பு - ஒலிமிக்க ஆகாயம்.** *வலயமாச் சுடர்கள் நாடொறுந் தொடருங் கலிகெழு விசும்பின் நாளொடு கோளினை நக்க. (சு : 412)*

**கலிங்கக் கம்மியர் – ஆடை நெய்வோர்.** *கலிங்கக் கம்மியர் நூலென. (யுத் : 2942)*

**கலிங்க நுண்ணூல் வடகம் – நுண்ணிய நூலிழைகளால் அமைத்த மேற்போர்வை.** *(பா : 580)*

**கலிங்கம் – ஆடை.** (கலா) **மேற்போர்வை; கலிங்க நாட்டுப் போர்வை.** (அண்) *கலிங்க நுண்ணூல் வடகம். (பா : 580) கலிங்கக் கம்மியர் நூலென. (யுத் : 2942)*

**கலிங்கர் – கலிங்க நாட்டரச பரிவாரங்கள்.** *கங்கர் கொங்கர் கலிங்கர் குலிங்கர்கள். (பா : 1194)*

**கலித்தல் – 1. ஒலித்தல்.** *வெள்ளக் கலிப்பறை. (பா : 30) பேரி கலித்தன. (யுத் : 2277)*

2. **முழங்குதல்.** *கலையாழிக் கதிர்த்திங்கள் உதயத்திற் கலித் தோங்கும் அலையாழி. (பா : 743)*

3. **வீர ஒலி செய்தல்.** *கலித்தான் சிலையைக் கையால் வாங்கிக் கழுத்திடையிட்டு. (சு : 858)*

4. **வலிமை வாய்ந்திருத்தல்.** *உயிர்த்துணை நுழைக் கலிக் கருங் கண்ணியர். (யா : 863)*

5. **தடுமாறுதல்.** *கான்றெரி நயனத்தாள் கலிக்குஞ் சொல்லினுள். (அ : 137) [பா. பே]*

6. **செருக்குறல்.** *(உ. வி) (சு : 858)*

7. **ஆரவாரித்தல்.** *வாரி கலித்தன வாமென. (யுத் : 2277)*

8. **கனைத்தல்.** *மாரி கலித்தென வாசி கலித்த. (யுத் : 2277)*

**கலித்தானைக் கடல் – ஆரவாரமுடைய சேனை சமுத்திரம்** *கலித்தானைக் கடலோடும் கைத்தானக் களிற்றரசர் ஒலித்தாழியென வந்து. (பா : 769)*

**கலிதல் – மிகுதல்.** *அமரர் சொரி மலர்கள் நனைய விசையி னெழுதுவலை மழை கலிய. (யுத் : 3416)*

**கலிநடம் – மகிழ்ச்சியைத் தரும் நடனம்.** *(கலா)* **ஆரவாரத்தோடு கூடிய கூத்து** *(அண்) நீர் நாய் கலிநடக் கழைக் கண்ணுளராமென நடங்கவின. (கி : 22)*

**கலிப்பு - சப்திப்பது.** *முரசம் தழங்கு பேரொலி வாசியின் கலிப்போ. (யுத் : 3276) கலிப்பது. (யுத் : 3277)*

**கலிப் பேர் வான் – ஒலிக்கிடமாகிய பெரிய விண்.** *(அ : 438)*

**கலிமா – கடிவாளம் பூண்ட குதிரை.** *யானைக் கடங்களும் கலினமா விலாழியும். (சு : 135)*

**கலிய – மிக.** *(யுத் : 3416)*

**கலியினுட்சி – கரிபுருடனின் ஆட்சிக்குரிய காலம்.** *இடைவரும் காலம் ஈண்டிரண்டும் நீத்து இது கடைவருந் திநெறிக் கலியின் ஆட்சியோ. (அ : 948)*

**கலிவான் – 1. ஒலியினைப் பண்பாக உடைய ஆகாயம்.** *(அ : 678) (யுத் : 3001)*

2. **பெருத்த விண்.** *(கலா)* **கனல் வெங்கணை கலி வானுற.** *(யுத் : 3001)*

**கலினப் பாய் மா – கடிவாளம் பூண்ட குதிரைகள். கால் திரண்டனைய** *கால கடு நடைக் கலினப் பாய்மா. (அ : 1045)*

**கலினம் – கடிவாளம்.** *கொட்புறு கலினப் பாய்மா. (பா : 576)*

**கலினமா – கடிவாளம் பூண்ட குதிரை.** *காற்றுறு கலின மான் தேர். (யுத் : 1118) கலினமாக் கடல். (பா : 1117) கலினமா விலாழி. (யுத் : 4260)*

**கலினல் – ஒலித்தல்.**

**கலுழ்தல் – 1. சிந்துதல்.** *கடங்கலுழ் தடங்களிறு.* **(ஆ : 531)** *(பா : 391) வாரி கலுழ்ந்த* **கண்ணினுன். (கி : 988) [பா : பே]**

**2. அழுதல்** கண்ணினீர் கடல்புகக் கலுழ்வாள். (சு : 336) கலுழுங் கண்ணுள். (யுத் : 2184)

**3. நீரைப் பெருக்குதல்.** நல்லாள் நல்ல கண்கள் கலுழ்ந்தே நகுகின்றுள். (சு : 486)

**கலுழன் – கருடன்.** கறங்கு வெஞ்சிறைக் கலுழன் தன் கடுமையிற் கரந்தான். (யுத் : 179) கடையுக முடி கெழு கடல்புரை கலுழன். (யுத் : 3752)

**கலுழி – 1. கலங்கல். கண்ணீர். கலங்கிவிடுகின்ற கண்ணீர்.** கடலிடைப் புகுந்த கன் கலுழி ஆறரோ. (அ : 476)

**2. நீர்ப்பெருக்கு. ஆருகப பெருகல் [கலுஷம் – கலங்கின நீர்; திரிபு].** கண்ணெனுங்கடல் நெடுங்கலுழி கான்றிட. (அ : 1151) கலுழிக் கண்ணுள். (யுத் : 2184)

**கலுழிகொள்ளல் – வெள்ளத்தைக் கொள்ளல்.** நின்றன நெடுங்கணின் நீர் கலுழிகொள்ள. (கி : 871)

**கலுழிப்புனல் – கலங்கல் நீர்.** செந்தாமரைக் காட்டை வென்றெழு கண் கலுழிப் புனல். (யுத் : 4133)

**கலுழி மாரி – கண்ணீர் பெருக்கு.** ஞாலம் அழுகின்ற கலுழி மாரி. (கி : 918)

**கலுழியாறு – கண்ணீராகிய ஆறுகள்.** மேகலைத் தடங் கடலிடைப் புகுந்த கட் கலுழி யாறரோ. (அ : 476)

**கலுழியூற்று – கண்ணீராகிய ஊற்று.** வழி ஒழுக்கிய கண்ணினில் கலுழியூற்றிடை இழுக்கலில் வழுக்க வீழ்ந்து இடருற்றுர் சிலர். (அ : 486)

**கலுழிவாரி – கலங்கலாகிய கண்ணீர்ப் பெருக்கு.** ஞாலம் அழுகின்ற கண்ணீர் வாரி யாமெனப் பொலிந்த தன்றே. (கி : 918)

**கலை – 1. பாஷை. மொழி.** வடகலை தென்கலை வடுகு கன்னடம். (பாயி : 18)

**2. மேகலை.** தழங்கிய கலைகளும் நிறையும் சங்கமும். (பா : 607)

**3. சந்திரன் கலை.** நற்கலை மதியுற வயங்கு நம்பி. (ஆ : 246)

**4. ஆடை.** சோர் குழல் காணுர் கலை பேணுர். (பா : 997)

**5. அழித்தல். விலக்குதல்.** எற்கலை திருவரை எய்தி. (ஆ : 246)

**6. மீன்.** கலை குலாம் பரவை ஏழும். (யுத் : 919)

**7. தொழில்.** கலையிற் படு கம்மியர் கூட மலைப்ப உலையிற் படு இரும்பென. (யுத் : 1922)

**8. வித்தை.** கலை தெரி கழகம். (பா : 79)

9. **சாஸ்திரம்.** *கலை தெரி பட்டிமண்டபம். (பா : 154)*

10. **பகுப்பு.** *இரு கலையுடைய இந்தச் செகத் துளோர். (பா: 212)*

11. **ஒரு வகை மான்.** *ஒரு கலை முகச்சிருங்க உயர் தவன். (பா : 212)*

12. **கொம்போடு கூடிய (ஆண்) மான்.**

13. **உவமவுருபு.** *விற் கலை நுதலினும் மைந்தரும் வெறுத்து நீத்த பொற்கலன். (பா : 569)*

14. **நூல்கள்.** *வட சொற் கலைக் கெல்லை தேர்ந்தான். (அ : 433)*

15. **கதிர்.** *கலையுவா மதியே கறியாக. (ஆ : 298)*

16. **அரைப்பட்டிகை.** *குவித்த பன்மணிக் குப்பைகள் கலையொடுங் கொழிப்ப. (உ. வி) (சு : 1084)*

17. **நீதி நூல்கள்.** *கலைத் தருமம் நீயலது இல்லெனும் தன்மை யாய். (யுத் : 4155)*

**கலைக்கண்ணுல் அளந்த பாடல் - நூல்களாகிய கண்களால் (இசை நூன் மரபுப்படி) அளவிட்டு எழுப்பிய இசைப்பாட்டு.** *களந்தவா நெடுங் கருவியிற் கைகளிற் செயிரியர் கலைக் கண்ணுல் அளந்த பாடல் வெவ் வரவு தஞ்செவிபுக அலமரலுறு கின்ருர். (சு : 287)*

**கலைக் கோட்டு முனி - கலைமான் கொம்பையுடைய ஒரு முனிவன்.** *கலைக் கோட்டு முனிவரின் வான் பிலிற்றும் என்ருன். (பா : 216)*

**கலை கண்ட கருங்கடல் - கலைதல் பொருந்திய (ஒழியப் பெற்ற) கரிய கடல். (கும்பகருணன்)** (வை. மு) **நூலினுல் அளவிடும் கடல்.** (பழையவுரை-கலா) *மலை கண்டன போல் வரு தோளொடு தாள் கலை கண்ட கருங்கடல் கண்டுமுலவான். (யுத் : 1704)*

**கலை குலாம் பரவை - நூல்களிற் கூறப்பட்ட கடல்கள்.** *கலை குலாம் பரவை ஏழும் கால் கிளர்ந் தெழுந்த காலத்து. (யுத் : 919)*

**கலை கொண்டோங்கிய மதியம் - கலைகள் அனைத்தும் தன்னிடத்தே தோன்றி வளர்ந்த சந்திரன்.** *கலை கொண்டோங்கிய மதியமும் சந்திரன் தானும் தலை கண்டோடுதற் கருந்தவம் தொடங்கும். (கி : 161)*

**கலைத் தருமம் - நூல்களிற் கூறப்படுந் தருமம்.** *கலைத்தருமம் நீயல தில்லெனும் தன்மையாய். (யுத் : 4154)*

**கலைத் தோல் - மிருகத்தோல். தோலாலாகிய ஆடை.** *கலைத் தோல் மூடி முற்றியும் முண்டித்தும் நீட்டியும் முறையால் வீடு பெற்றவர். (யுத் : 161)*

**கலேதல் – ஒழித்தல். (துண்டிக்கப்படல்)** *கலே கண்ட கருங் கடல் கண்டுழல்வான். (யுத் : 1704)*

**கலே தெரி கழகம் – விற் கலே வாட்கலே முதலியன பயிலும் இடங்கள்.** *கந்தனேயனேயவர் கலே தெரி கழகம் சந்தனவனமல சண்பக வனமாம். (பா : 79)*

**கலே தெரி பட்டி மண்டபம் - கலேகளே ஆராய்கின்ற சாத்திர அறிஞர் கூடும் மண்டபங்கள்.** *பன்னருங் கலே தெரி பட்டி மண்டபம். (பா : 154)*

**கலே மகட்குத் தலேவர் – நாமகளுக்கும் மேம்பட்டவர்.** *தலேயாய பேருணர்விற் கலே மகட்குத் தலேவராய். (பா : 743)*

**கலேமகள் – சரசுவதி.** *போர் மகளேக் கலே மகளேப் புகழ் மகளேத் தழுவிய கை. (யுத் : 3893)*

**கலே மறை முனிவர் – தருமநூல் முதலிய கலேகளேயும் வேதங்களேயும் அறிந்த முனிவர்கள்.** *கலே மறை முனிவர்க் கல்லால் திண்டிறல் வலி யுந் தேசும் உளவெனல் சிறிதன்ருல். (பா : 667)*

**கலே மறையோர் – சாஸ்திரங்களிலும், வேதங்களிலும் வல்ல அந்தணாளர்.** *(பா : 303)*

**கலேயருத் திங்கள் – மானிஞல் அற்றுப்போகாத பிறைச் சந்திரன். பூர்ண சந்திரனின் இடைப்பகுதி கலேயிஞல் (மானிஞல்) அற்று (அறுபட்டு)த் தோன்றும். பிறைச் சந்திரனது இடையிடமோ அவ்வாறு தோன்ருது; ஆதலால் பிறைச் சந்திரன் கலேயருத் திங்கள் எனப்பட்டது பிறைச் சந்திரன்.** *(அண்) கலேயருத் திங்களன்ன வாளி. (யுத் : 3116)*

**கலேயாழிக் கதிர்த் திங்கள் – கலேகளின் நிறைவும் வட்ட வடிவும் ஒளியுமுடைய பூரண சந்திரன்.** *கலேயாழிக் கதிர்த் திங்கள் உதயத்திற் கலித் தோங்கும் அலேயாழி. (பா : 743)*

**கலேயிற் படு கம்மியர் – தொழிலிற் பயின்ற கம்மியர்.** *கலேயிற் படு கம்மியர் கூடம். (யுத் : 1922)*

**கலேயின் கடல் - கல்விக்குக் கடல்** *(வை. மு) நிரையார் கலேயின் கடலே நெறியார் மறையின் நிலேயே. (அ : 328)*

**கலேயின் குப்பை - கலேகளின் குவியல்.** *குல முதல் தொன்மையும் கலேயின் குப்பையும். (அ : 6)*

**கலேயுடைத் தேர் – ஆடையணிந்த அல்குல்.** *சிந்தி யோடு கலேயுடைத் தேர் கொலோ முந்தி ஓங்கின யாவை. (யுத் : 3942)*

**கலேயுவா மதி – கலேகள் நிறைந்த முழுமதி.** *கலேயுவா மதியே கறியாக வன்சிலேயின் மாரனேத் தின்னும் நினேப்பினுள். (ஆ : 298)*

**கலையூர் கன்னி – மானை ஊர்தியாகக்கொண்ட துர்க்கை.** *காவலிற் கலையூர் கன்னியை ஒக்கும். (பா : 101)*

**கலையூர் பெண் – கலைமானை ஊர்தியாகக் கொண்ட மலைமகள்.** *மண்ணிஞு நல்லள் மலர் மகள் கலைமகள் கலையூர் பெண்ணிஞு நல்லள். (அ : 40)*

**கலையோர் எண் – கலைவல்லோரின் மனம்.** *கலையோர் எண்ணுர்த்தது மறை யார்த்தது. (யுத் : 3050)*

**கலை வலாளன் – நூல்களிலே வல்ல முனிவன். (கலைக் கோட்டு முனிவன்)** *கருந்தடங் கண்ணியர் கலை வலாளளிற் பொருந்தினர். (பா : 220)*

**கலை வாழ் மதி – கலை நிரம்பி வாழ்கின்ற நிறைமதி.** *கலை வாழ் மதியினை நகுவன வனிதையர் வதனம். (பா : 75)*

**கலை வெண் திங்கள் – கலைகள் நிரம்பப்பெற்ற வெண்மையான முழுமதி.** *கலை வெண்டிங்கள் விண்ணுற வளர்ந்த தென்ன வெண்குடை விளங்க. (கி : 666)*

**கவ்வரவு – கடிக்கும் பாம்பு** *கவ்வரவு இதுவென இருத்திர். (அ: 861)*

**கவ்வயில் – கவ்வும் தன்மையுடைய கூரிய முனை.** *கவ்வயில் கால நேமிக் கணக்கையுங் கடந்த தென்பர். (யுத் : 765)*

**கவ்வல் (கவ்வுதல்) - 1. கடித்தல்.** *கவ்வரவு. (அ : 867) கற்றையந் தளிர் களென்னக் கவ்விய நிமிர்வ காணுய். (யுத் : 790) பொய்கையின் இடங்கர் கவ்வபுராதனு போற்றி யென்று கையெடுத்தழைத்த யானை. (யுத் : 635) கவ்வி. (யுத் : 1641) கவ்வாநின்ற மால் வரை. (யுத் : 3807)*

**2. பற்றுதல்.** *கவ்வு திக்கனை. (சு : 272) கால வான் கடுங்கனை சுற்றுங் கவ்வலால். (யுத் : 589)*

**3. மிகுதியாக உடைமை.** *இருளைக் கவ்விய நிசி. (ஆ : 108)*

**கவ்விய நிமிர்வ – கவ்வும் பொருட்டு நிமிர்வன.** *(யுத் : 799)*

**கவ்வுறல் – கடித்தல்.** *முடித்தலத்தினில் கவ்வுற. (யுத் : 1029)*

**கவ்வை – 1 காரியம்.** *இவண் நீ சேர்ந்த கவ்வை யுரைத் தருளுகென. (பா : 242)*

**2. துன்பம்.** *வேந்தர் வேந்தன் கவ்வையொழிந் துயர்ந்தனன். (பா : 245) (அ : 565)*

**3. பேராரவாரம். ஒலி.** *கவ்வை முது வாயில். (சு : 167) கவ்வையின் ஏகுகின்ற நீர்மை. (யுத் : 4277)*

**4. பழி. பழிப்பான காரியம்.** (உ. வி) *வெவ்வியது அன்னையால் விளைந்த தீண்டொரு கவ்வை யென் றிறையுந்தன் கருத்தின் நோக்கலன். (அ : 565)*

**கவ்வயைம் பெருங்கடல் – துன்பமாகிய பெரிய கடல்.** கவ்வையம் பெருங்கடல் முனியுங் கால் வைத்தான். *(அ : 454)*

**கவ்வையர் – ஆரவாரஞ் செய்பவராய்.** கவ்வையர் விசும்பிடைக் கழறன் மேயினர். *(அ : 1195)*

**கவ – கவ்வ.** பெரியோனை மன்ன கவ சத்துற வரித் தெனல். *(யுத் : 3643)*

**கவச பாசம் – கவசக்கட்டு.** தோளொடு மார்பைச் சுற்றி வீக்கிய கவச பாச மொழித்து. *(யுத் : 3143)*

**கவசம் – இரட்சை. மெய்புகு கருவி.** (கலா) **இரும்பு முதலியவற் ருலாகிய உடம்பின் மேற்சட்டை.** கவசமற்ருர். *(யுத் : 2051)* கண்ணுதற் பெருங் கவசத்தைக் கடந்தில கதிர் வாளி. *(யுத் : 1552)*

**கவசம் சுற்றுதல் – கவசமணிதல்.** பற்றினன் கவசம் படர் மார்பிடைச் சுற்றினன். *(யுத் : 1059)*

**கவசம் பற்றற்று அருகுதல் – கவசங்கள் பற்றுவிட்டு அழிதல்.** கவசம் பற்றற்று அருகின பின்னைச்சால அலசினென். *(யுத் : 2239)*

**கவச மார்பு – கவசத்தோடுகூடிய மார்பு.** கவச மார்பு இறும். *(யுத் : 2443) [பா. பே]*

**கவசர் – படைவீரர்.** ருறுகின கவசரும் மின்போல் குரைகழலுரகரும். *(சு : 766)*

**கவடி – பலகறை. சோழி.** பற்ருெடுத்தன்ன பல்கு கவடியன். *(அ : 649)*

**கவடு – கிளை.** காரொடுந் தொடர் கவட்டெழின் மரா மரக்குவடு. *(பா : 899)*

**2. கிளைக் கொம்பு.** இளவரிக் கவட்டிலை ஆரொடு துளவொடு தும்பையுஞ் சுழியச் சூடினன். *(யுத் : 1077)* கவடுகப் பொருத காய்களி றன்னன். *(யுத் : 805)*

**3. கபடம்.** (கலா) கவடுகப் பொருத காய்களிறன்னன். *(யுத் : 805)*

**கவண் கல் – கவண் கயிற்றில் வைத்து எறியப்படும் கல்.** கப்பணம் கவண்கல் கன்னகம். *(யுத் : 2440)* கனத்திடை உருமின் வெருவருங் கவண் கல். *(பா : 104)*

**கவண் விடு கல் – கவண் கல்.** கப்பணங்களும் வளையமும் கவண் விடு கல்லும். *(யுத் : 2500)*

**கவணுமிழ் கல் – கவண் வீசுகின்ற கல்.** *(யுத் : 2500) [பா : பே]*

**கவந்தக் குலம் – கவந்தங்களின் தொகுதி.** கவந்தக் குலம் எழுந் தாடலின் எல்லாம் நடுக்குற்றன. *(யுத் : 3366)*

11

**கவந்த நாடகம் – கவந்தம் நடிக்கின்ற நாடகம்.** *கண்டனர் தம்முடற் கவந்த நாடகம். (ஆ : 488)*

**கவந்தப் படை – தலையற்ற உடற்றொகுதி.** *பனிக் கற் சுரத்துக் கரன் முதலோர் கவந்தப் படையும். (சு : 544)*

**கவந்த பந்தக் களிநடம் – தலையற்ற குறையுடலங்களின் கூட்டங்கள் ஆடுகின்ற களிப்புமிகும் கூத்து.** (அண்) *தீயவர் கவந்த பந்தக் களிநடங் கண்டிட அமைந்த வில்லும் அருங்கணைத் தூணியும். (ஆ : 137)*

**கவந்த பந்தம் – கவந்தத் தொகுதிகள். (ப்ருந்தம் – கூட்டம்)** *கவந்த பந்தங்கள் களித்தன. (ஆ : 454) ஆடின கவந்த பந்தம். (யுத் : 1391) (யுத் : 2594)*

**கவந்தம் – 1. தலையற்ற உடல்கள்.** *கூளியுங் கவந்தமும் உவந்தன குனிப்பக் காண்டி. (அ : 1100)*

**2. தலையற்றதும் தொழிலுடன் கூடியதுமான உடல்.** *கவந்தக் குலம் எழுந்தாடலின் எல்லாம் நடுக்குற்றன. (யுத் : 3366)*

**கவந்த மாடுதல் – உடற்குறை துள்ளுதல்.** *கவந்தமும் கையெடுத்து அங்குமிங்கு நின்றாடின வாமரோ. (யுத் : 991)*

**கவந்தன் – ஓர் அரக்கன்.** *இருந்தே நீட்டி எவ்வுயிரும் கையின் வளைத்து வயிற்றடக்குங் கவந்தன் வனத்தின் கண்ணுற்றார். (ஆ : 1140)*

**கவயம் - கவசம்.** (இலக்) **இரட்சகம்.** *நாயக நீயே சிறிற் கவயம் நின் சரணமல்லாற் பிறிதொன்று கண்டதுண்டோ. (யுத் : 601) கவயம் உமக்கென் றேளினை. (யுத் : 3048) [பா : பே]*

**கவயன் – ஒரு வானர வீரன்.** *இவன் காண் கவயன். (யுத் : 834) (யுத் : 4208)*

**கவயாக்கன் – பசுவின் கண்ணைப்போன்ற கண்ணையுடைய ஒரு வானர வீரன்.** *கவயாக்கனும் ஈங்கிவன் காண். (யுத் : 834)*

**கவர் – பிளவுபட்ட.** *கவருடை எயிற்றினர்.* (பா: ௰65)

**கவர் அயில் – கவர்த்த சூலப்படை.** *கையுறு கவரயில் பிடித்த காலன்தான் ஐயை நூறுயிரம் உருவமாயின மெய்யுறு தானையான். (அ : 1000)*

**கவர் எஃகம் – முத்தலைச் சூலம்.** *உருளு நேமியும் ஒண்கவர் எஃகமும். (அ : 108)*

**கவர்தல் – 1. முயங்குதல்.** *வாயு வெய்திக் கவர் மனத்தினனாய் அந்தக் கன்னியர் தம்மை நோக்கி. (பா : 426)*

2. **பிடித்தல். அகப்படுத்தல்.** *நெகிழ்ந்திலன் கடுங்கணை கவர்தல்.* (கி : 296)

3. **விரும்புதல்.** *கதிர்மணி ஒளிகாலக் கவர் பொருள் தெரியாவால்.* (1278)

**கவர்ந்துணல் – கைப்பற்றி அனுபவித்தல்.** *நாடு அரும்பகை கவர்ந்துண ஆவி பேணினேன்.* (அ : 908)

**கவர் மனம் – முயங்கும் விழைவுள்ள மனம்.** (அண்) **காதலால் பேதிக்கப்பட்ட மனம்.** (கலா) **கவரப்பட்ட மனமுமாம்.** (கலா) (பா : 426)

**கவரி – 1. சாமரை.** *கவரி இங்கிதுவெனக் கரதலங் கொடு திரிந்திவர் தலும்.* (கி : 191)

2. **எருமை** (உ. வி) (கி : 191)

**கவரியின் கற்றை – கவரியின் வால் மயிர்க்கற்றை.** *கண்ணுறு கவரியின் கற்றை சுற்றுற எண்ணுறு சூழ்ச்சியின் இருக்கை எய்தினன்.* (அ : 2)

**கவரி மா – மயிர் நீப்பின் வாழாக் கவரிமான்.** *மான நோக்கிற் கவரி மா அனைய நீரார்.* (அ : 7)

**கவரி வால் – கவரிமானின் வால்.** *ஆரமும் கவரி வாலும்.* (பா: 574)

**கவரி வீசுதல் – வெண்சாமரை இரட்டல்.** *இருவருங் கவரி வீச.* (யுத் : 4316)

**கவருடை எயிறு – பிளவுபட்ட கோரப் பற்கள்.** *கவருடை எயிற்றினர் கடித்த வாயினர்.* (பா : 465)

**கவரெஃகம் – மூன்றுகக் கவர்ந்த சூலப்படை.** (அ: 108)

**கவல்தல் – மனம் வருந்துதல்.** *கன்று படப் பிழைத்த தாய் போற் கவல்வானை.* (யுத் : 1950)

**கவலை – 1. கவர்ந்த வழி.**

2. **குறிஞ்சி நிலத்திற் கிடைக்கும் ஒருவகைக் கிழங்கு.** *கல்லுவென் மலை மேலும் கவலையின் முதல் யாயும்.* (அ : 683)

3. **துயரம்.** (யுத் : 749)

**கவலை அவல மெய்தல் – கவலை நீங்குதல்.** *கவலை வேலை யெனுங் கரை கண்டிலா அவல மெய்த அடைத்துழி.* (யுத் : 749)

**கவவு – ஆலிங்கனம். முயக்கம்.** *கவவுறத் தழுவி.* (யுத் : 1198)

**கவவுதல் – முயங்குதல்.** (யுத் : 1198)

**கவவுறத் தழுவி – இறுகத் தழுவி.** (யுத் : 1198)

**கவளம் - வாயளவுகொண்ட உணவுத்திரள்.** *கவள யானையனுற்கு.* (*கி : 18*)

**கவள யானை - கவளம் பெற்று வளர்ந்த யானை.** (*கி : 18*)

**கவற்சி - கவலை.** *கால நீளிது காரு மாரியும் வந்ததென்ற கவற்சியோ.* (*கி : 508*)

**கவற்றுதல் - மயக்குதல்.** *கண்பாலுறு மாயை கவற்றுதல் கற்ற நம்மை.* (*ஆ : 709*)

**கவனம் - 1. ஓடிச்செல்லுதற்குரிய வல்லமை. செல்லுந் தன்மை** *கவனமாண்டவரெனச் சலித்திரோ.* (*கி : 965*)

2. **வேகம். விரைவு.** *கவனமுறு கரணமிடுவர்.* (*யுத் : 3423*)

**கவனமா - விரைந்து செல்லுகிள்ற குதிரை.** *கவனமாக் காலும் ஓய்ந்த.* (*யுத் : 1272*)

**கவன மாண்டவர் - ஓடிச்செல்லுதற்குரிய வல்லமை குறைந்தவர்.** (*கி : 965*)

**கவன வெம்பரி - விரைந்த செலவினையுடைய விரும்பத்தக்க குதிரை.** (*யுத் : 4344*)

**கவன வேகம் - மிக்க வேகம்.** *கவன வேகத் துரங்கம்.* (*பா : 429*)

**கவான் - தொடை.** *பவளக் கோலிவர் கவானர சன்னம்.* (*கி : 4*) *மணிக்கவான்.* (*யுத் : 283*) (*கி : 779*) (*யுத் : 1589*)

**கவி - 1. குரங்கு.** *கவி குலக் கோன்.* (*கி : 631*)

2. **பாடல்.** *கவியமை ஓர்த்தியக் காலை.* (*அ : 123*)

3. **வித்துவான்.** *கவிகளாகுவார் காண்குவர் மெய்ப்பொருள்.* (*யுத் : 162*)

**கவிக்கடல் - குரங்குச் சேனையாகிய கடல்.** (*யுத் : 918*)

**கவிக்கு நாயகன் - 1. குரக்கினத் தலைவன். (அனுமன்)** *இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகன்.* (*சு : 227*)

2. **சுக்கிரீவன்.** *நளன் வருகென்றனன் கவிக்கு நாயகன்.* (*யுத்: 620*)

**கவிக்குலத்தரசன் - சுக்கிரீவன்.** *கவிக்குலத்தரசன் கையால் மண்மகள் வயிறு கிற மரமொன்று வாங்கிக் கொண்டான்.* (*யுத் : 1091*)

**கவிக்குலத்திறைவன் - சுக்கிரீவன்.** *எவ்வழி இருந்தான் சொன்ன கவிக்குலத்திறைவன்.* (*கி : 63*)

**கவிக்குல நாதன் - சுக்கிரீவன்.** *கான வாழ்க்கைக் கவிக்குல நாதன்.* (*யுத் : 690*)

**கவிக்குலம் - வானரக் குழாம்.** (*யுத் : 1019*) *கவிக்குல வீரர்.* (*யுத் : 2303*)

**கவிகள் தம்மனை – புலவர்கள் வாழும் மனை.** புவிபுகழ் சென்னி பேரமலன் தோள்புகழ் கவிகள் தம் மனையென. (கி : 852)

**கவிகுலக் கோன் – சுக்கிரீவன்.** *கவிகுலக் கோன் கொண்டு வருமென் றிருக்கும்.* (சு : 322)

**கவிகுலத்தரசு – வாலி.** *கவிகுலத்தரசும் அன்னகட்டுரை கருத்திற் கொண்டான்.* (கி : 355)

**கவிகை – வெண்கொற்றக் குடை.** *பிச்சமும் கவிகையும் பெய்யும் இன்னிழல் நிச்சயமன்றெனின்.* (அ : 26)

**கவிகை பாய் நிழல் – வெண்கொற்றக் குடையின் பரவிய நிழல்.** *நின் கவிகை பாய் நிழல் நிற்பன பல்லுயிர் உணங்க.* (அ : 844)

**கவிகை பெய்யும் இன்னிழல்–கொற்றக்குடை பெய்கின்ற இனிய நிழல்.** *பிச்சமும் கவிகையும் பெய்யும் இன் நிழல்.* (அ : 26)

**கவிகை மன்னன் – கொற்றக்குடையையுடைய அரசன். (தசரதன்)** *கருணையன்ன கண்ணன் அக்கவிகை மன்னன்.* (கி: 69)

**கவி சேனை – குரங்குச்சேனை. குரங்குக் கூட்டம்.** (யுத் : 2217)

**கவிஞர் – நல்லறிவு பெற்றவர்.** *கவிஞரின் அறிவு மிக்காய்.* (யுத்: 1349)

**கவித்தல் – சூட்டுதல்.** *இளையவற் கவித்த மோலி.* (யுத் : 451)

**கவி நீத்தம் – குரங்கு வெள்ளம்.** *அன்றனை வேண்டிய நிலையுடைக் கவிநீத்த மநீத்தமே.* (பா : 20)

**கவிப்படை – வானர சேனை.** (யுத் : 2254)

**கவிப் பெருந்தானை – பெரிய குரங்குச்சேனை.** (யுத் : 2405)

**கவியமை கீர்த்தி – பாடலில் அமைத்தற்குரிய புகழ்.** (அ : 123)

**கவியரசு – சுக்கிரீவன்.** (யுத் : 1513)

**கவியின் குலம் ஆளுடையான் – கவிக்குலத்தையெல்லாம் தன் கீழ்க் குடிகளாகப் பெற்றவனான சுக்கிரீவன்.** *பின்றுத வலத்துயர் பெற்றியனைக் கொன்றான் கவியின் குலம் ஆளுடையான்.* (யுத்: 2339)

**கவியின்பம் – கவிகளின் இன்பம். கவிகளின் இன்பம் போன்றவளாகிய சீதாபிராட்டி.** *தீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்.* (பா : 586) [பா : பே]

**கவியின் மாலை – வானரத் தொகுதிகள்.** வால்பிடித் தொழுகின *கவியின் மாலையே.* (யுத் : 1776)

**கவியின் வீரர் – வானர வீரர்.** (யுத் : 2005)

**கவியின் வெள்ளம் – குரங்குத் தொகுதி.** *கவியின் வெள்ளம் ஊற்றமே தெமக்கென் றெண்ணி யுடைந்தது.* (யுத் : 1406)

**கவியின் வேந்தன் - சுக்கிரீவன்.** இனிய சோலைவாய் மேய வேந்தனும் *கவியின் வேந்தனும்......... பொலிந்து தோன்றினர்.* (கி : 111) *கவியின் வேந்தை.* (யுத் : 428)

**கவிர் - முள் முருக்க மலர்.** *கவிரொளிச் செக்கர்.* (சு : 277)

**கவிர் வாய் - முருக்க மலர்போன்ற வாய்.** *கவிர் வாய்ச் சீதை.* (அ : 59) [பா : பே]

**கவியின் வீரர் - குரங்கின் வீரர்.** *மற்றவர் வேல்படப் புரண்டனர் கவியின் வீரரே.* (யுத் : 1771)

**கவி வீரர் - வானர வீரர்.** (யுத் : 2015)

**கவின் - 1. அழகு.** *கரும்பொடு செந்நெல்லும் கவின் கொண்டோங்கிட.* (பா : 226)

2. அழகு. **வேடம். வடிவம்** *கதிரவன் வேறொரு கவின் கொண்டான் என.* (அ ; 128)

**கவின் குலாம் - அழகு விளங்குகின்ற.**

**கவின் கொள்ளல் - கவினுர் வேடங்கொள்ளுதல்.** (அ : 128)

**கவின - 1. அழகுடையதாகச் செய்ய.** *நீர் நாய் கலி நடக் கழைக் கன்னுளரென நடங் கவின.* (கி ; 22)

2. **விளங்க.** *கற்பக முழுவனங் கவின.* (சு : 413)

**கவினி - அழகு பொருந்தக் கூடி.** *வேற் கண்ணரும் மைந்தரும் கவினி.* (பா : 878)

**கவினு - போன்று.** (பழையவுரை) **விளங்கும்.** (கலா) *கடல் கவினு சோலையேய் மலைதழுவுகானம்.* (கி : 43)

**கவினுதல் - 1. அழகு பொருந்த நிற்றல்.** (பா : 878)

2. **விளங்குதல்.** (கி : 43)

**கவுசலை - கோசலை.** *கவுசலை தயரதன் எனவே.* (பா : 312)

**கவுசிகி - கோசிக முனிவன் தங்கை. பின்பு நதியாக மாறியவள்.** *மன்னவன் காதிக்கு யானும் கவுசிகியென்னும் மாதும் முன்னர் வந்துதிப்ப.* (பா : 430) (பா : 432)

**கவுதாரி - ஒரு பறவை.** *நெடும் பொறி மயிர்க் கவுதாரிகள்.* (அ : 806)

**கவுள் - கன்னம்.** *அழி கவுள் யானை.* (பா : 395) *கழி கவுள் தும்பிசுட்டம்.* (அ : 607)

**கவை - 1. கவ்வை. துன்பம்.** (வை. மு) *கவையுறு செஞ்சன்.* (யுத் : 1232)

2. **பிளவு.** (கலா) (யுத் : 1232)

**கழகம் – பயிலுமிடம். ஆராய்ச்சிச்சாலை.** *கந்தனையனைவர் கலைதெரி கழகம். (பா : 79)*

**கழங்கு – கழற்சிக்காய்.** *வானமீன் கையின் வாரி மணிக்கழங்காடு வாரும். (சு : 278) கழங்கு பயின் மங்கையர். (பா : 919)*

**கழங்கு பயின் மங்கையர் – கழங்காடுதல் புரியும் மாதர்கள்.** *(பா: 919)*

**கழல் – 1. வீரக்கழல். வீரகண்டை.** *பூவிரி பொலன் கழல் பொருவில் தானையான். (அ : 993) பொன்னுருவப் பொருகழலீர். (ஆ : 357)*

**2. வீரக்கழலின் ஒலி.** *மன்னவர் கழலொடு மாறுகொள்வன பொன்னணித் தேரொலி. (பா : 157)*

**3. கால்.** *பூண்டேன் எங்கோன் பொலங்கழலும். (சு : 602)*

**4. செருப்பு. (உ. வி)** *(அ : 993) தொடு கழல் செம்பொன்மௌலி. (யுத் : 453)*

**5. கழற்சிக்காய்.** *கழல் திண் பசுங்கா யொத்தனர். (யுத் : 3369) பசுங்கழற் கண்ணபேய். (யுத் : 1910)*

**கழல் சேவித்தல் – அடிவணங்குதல்.** *தேவா நின் கழல் சேவிக்க வந்தனென். (அ : 655)*

**கழல் வேந்து – வீரக்கழலணிந்த வேந்தன். (இராமபிரான்)** *கோல் துறந்து கானுங் கடலுங்கடந்து இமையோர் இடுக்கண் தீர்த்த கழல் வேந்து. (அ : 1)*

**கழலல் (கழலுதல்) – 1. விடுபடல்.** *கழலுந் தேவரொடு. (கி : 116)*

**2. சிறிது நெகிழ்தல்.** *காலினுல் நெடுங்கால் பிடித்துடற்றுவர் கழல்வர். (கி : 285)*

**3. நீங்கப் பெறுதல்.** *கறை கழன்று. (யுத் : 3872)*

**கழலிளம் பசுங்காய் – இளைய பசிய கழற்சிக்காய்.** *கழலிளம் பசுங் காயன்ன எதிரெதிர் பகழிதைத்த யாக்கையன். (யுத் : 2152)*

**கழலொதுங்குதல் – திருவடியே புகலிடமெனப் புகுந்து ஒதுங்குதல்.** *இருக்குஞ் சார்பிழந் தும்பர் வந்து உன் கழல் ஒதுங்கினர் கொலாம். (அ : 845)*

**கழலோன் - வீரக் கழலணிந்தவன். (இராமபிரான்)** *நிலமகள் மற்றுனைப் பிரிந்து கண்ணிழந்திலள் எனச் செய்யும் நீதந்த கழலோன். (அ : 36)*

**கழற்காய் – கழற்சிக்காய்.** *கழல்திண் பசுங்காய் ஒத்தனர். (யுத்: 3369)*

**கழற்கால் வீரன் – கழல்கட்டிய காலையுடைய.** *(யுத் : 2135)*

**கழற்பொடி - பாதங்களில் ஒட்டியுள்ள மண்பொடி. (தூசி)** *வீரர்கள் பூமரு பொலங்கழல் பொடியினேடும் ஒப்பாமென அறிகிலன். (ஆ : 189)*

**கழறிக்கான் - பகர்வாயாக.** (யுத் : 2186)

**கழறுதல் - 1. சிறப்பித்துச் சொல்லல்.** கழறு தேவரோடவுணர். (கி : 116) [பா : பே]

**2. சொல்லுதல்.** கண்டு வருகிற்றிலென் எனக் கழறுகேனே. (சு : 613) கழறி. (யுத் : 545) கழறுதிர். (யுத் : 724) கழற. (அ: 2-b) கழறிற்றெல்லாம். (ஆ: 1202) கழறிக்காண். (யுத்: 2186) கழறலுற்றான். (யுத் : 1356)

**கழனி - நெல்வயல்.** காவிரி நாடன்ன கழனி நாடு. (அ : 993)

**கழனிக் கானநாடு - கழனிக் காட்டையுடைய நாடு.** கரும்பலர் செந்நெலங்கழனிக் கானநாடு அரும்பகை கவர்ந்துண ஆவிபேணினேன். (அ : 908)

**கழி - 1. உப்பங்கழி.** கானலும் கழிகளும் மணலும் கண்டலும். (யுத் : 332) (யுத் : 1390) [பா : பே]

**2. மிகுதி.** கழி நெடும் புண்ணுளார். (கி : 81)

**கழித்தல் - 1. கழற்றி எரிதல்.** அவள் கலன் கழித்தனள். (கி : 214)

**2. வெட்டுதல்.** காரினைக் கழித்துக் கட்டி. (கி : 802)

**3. ஒழித்தல்.** யாம் கழித்தும் இவ் யாக்கையைப் புகழைக் கண்ணுற. (யுத் : 3435)

**கழித்துக் கட்டல் - வெட்டிக் கட்டுதல்.** (கி : 802)

**கழித்தும் - ஒழிக்கக் கடவேம்.** (யுத் : 3435)

**கழிதல் - 1. இறத்தல்.** கழியீரே. (அ : 869) அவர் கழிந்தனரேல் இழைத்த வேள்வி இன்றிழப்பதோ. (பா : 517) கணவனை இனைய கண்டாலல்லது கழிகின்றேனோ. (யுத் : 1624) கருதுவயாவினுங் கழியான். (யுத் : 144) கழியீரே. (அ : 869)

**2. கடத்தல்.** கழிந்தனன் பல கவாதம் காலினே. (அ : 1063)

**3. அப்பாற் போதல்.** கைபுகற் பாலனோ கழியற் பாலனோ. (யுத் : 364)

**4. பிற்படுதல்.** நெறியும் மலையுங் கழியப் போனார். (யுத் : 2906)

**5. மிகுதல்.** கழிந்த தீயோடு காலையும் பிழிந்து. (யுத் : 1337)

**6. விட்டு நீங்குதல். நீங்குதல்.** கழிவிரலிர். (சு : 496) கழியா உயிர். (பா : 1259)

**7. முடிவுறல்.** கைத்தலமதனால் திண்டில் கழிவது. (சு : 189)

**8. பிரிதல்.** கண்ணெதிர் நின்றும் கழிவானேல். (அ : 218)

**9. வெளிப்படல்.** அம்கடங் கழிந்தபேர் அருவிக்குன்று. (யுத்: 2938)

**கழிந்த சேண் - நெடுந்தூரம்.** *கவ்வையின் அரற்றினள் கழிந்த சேணுளாள்.* (கி : 196)

**கழிந்து போதல் – இறந்தொழிதல்.** *கழிந்து போயினர் மானிடரென்னுங்கால் அழிந்ததோ இவ் வரும்பழி என்னுமால்.* (ஆ : 376)

**கழிநெடும் புண்ணுளார் - மிகவும் அதிகமான இரணங்களையுடையவர்.** (கி : 81)

**கழிப்பன - மிகுவன. மிகுதியாகப் பெறுவன.** *கட்டகாவியங்கட் கடை கழிப்பன கழனி.* (பா : 542) [பா : பே]

**கழிப்பிலள் – நீக்கத்தக்கவள் அல்லள்.** *பழிப்பிலள் என்றனை பழியுமின்றினிக் கழிப்பிலள் என்றனன்.* (யுத் : 4017)

**கழிப்பு – நீக்குதல்.** (யுத் : 4017)

**கழி பேரவலம் – மிக்க பெருந்துயரம்.** *இனி நீ ஒழிவாய் கழி பேரவலம்.* (அ : 335)

**கழிய – மிகவும்.** *கழிய கூரிய என்றொரு காரிகை.* (பா : 849)

**கழிய ஓட்டல் – துளைத்து ஊடுருவிச் செல்லுமாறு செலுத்துதல்.** *வாளி மருமத்தைக் கழிய ஓட்டி வதைத் தொழில் புரிதி.* (யுத் : 2896)

**கழியற்பாலன் – திரும்பிப் போதற்குரியவன்.** (யுத் : 361)

**கழிவது – இறந்துபடுதல்.** *களைவரு தானையோடும் கழிவது காண்டி.* (யுத் : 1251)

**கழிவித்தல் – ஒழித்தல்.** *முன்னே கழிவிப்பான் சூலங் கொண்டான்.* (யுத் : 3792)

**கழீ இய – கழுவிய.** *நான்முகன் கழீ இய நன்னீர்.* (யுத் : 459)

**கழீ இய நன்னீர் - கழுவியதனுற் போந்த நன்னீர்.** (யுத் : 459)

**கழு - ஒருவகை ஆயுதம். சூலாயுதம்.** *தொட்ட முத்தலை அயிற்றெழுமின் மிடற் கழுவொடே.* (ஆ : 6)

**கழுக்கடை எழு – கூர் நுனியையுடைய இருப்புத் தடிகள்.** *கழுக்கடை எழுக்கள் மின்ன.* (சு : 758)

**கழுகின் வேந்தன் – சடாயு.** *வெவ்விய விதியின் கொட்பால் வீடினன் கழுகின் வேந்தன்.* (சு : 570) (யுத் : 879)

**கழுகினுக் கரசன் – சடாயு.** *இராவணன் தன்மேல் உள்ளம் போற் செலும் கழுகினுக் கரசனு மொத்தான்.* (யுத் : 844)

**கழுகு – பருந்து.** *காகமும் பருந்தும் பேயும்.* (சு : 942)

**கழுத்தின் நாண் காப்பின் நாணுதல் – கழுத்திலுள்ள மங்கல சூத்திரம் முடிசூடுதற்குரிய காப்புக்கயிறு ஆதல். முடிசூடுமுன் கணவனை இழத்தல் நிகழும் என்பது குறிப்பு.** மாணுப்பாவி இனியென் பல உன் கழுத்தின் நாண் உன் மகற்குக் காப்பின் நாணும் என்றான். (அ : 344)

**கழுத்து - கண்டம்.** கழுத்தறப் பிடித்த வள்ளுகிராற் பிளவாக்கின. (யுத் : 987) (யுத் : 1993)

**கழுதின் தேர் - பேய்த்தேர். கானல் நீர்.** கானகத் தியங்கிய கழுதின் தேர்க்குலம். (பா : 354)

**கழுதினம் - பேய்க்கூட்டம்.** கழுதினமும் நமனும் வரிசிலையும் அறனும் நட நவில. (யுத் : 3423)

**கழுதுகள் – பேய்கள்.** வெந்த வெம்பிணம் விழுங்கின கழுதுகள் விரும்பி. (யுத் : 2448)

**கழுதை – கழுதை.** கழுதைபேய் பூண்டதேர். (சு : 369) (யுத்: 497) (யுத் : 2515)

**கழுந்தர் – உலக்கைக் கழுந்துபோல மழுங்கிய அறிஞர்.** கழுந்த ராயுன கழல் பணியாதவர். (பாயி : 7)

**கழுந்து – 1. ஆயுதத்தின் வழுவழுப்பான பாகம். கை பிடி.** கழுந்துடை வரிசிலைக் கடல். (அ : 1091)

2. **உலக்கைக் கழுந்து. வில். உலக்கை முதலியவற்றின் திரண்ட நுனி.** கழுந்தோடும் வரிசிலைக்கை. (பா : 238)

3. **உறுதி. தனுர்த்தண்டம்.** (உ. வி) (பா : 238)

**கழுந்தோடும் வரிசிலை - திரண்ட நுனியையுடைய வில்.** (பா : 238)

**கழுவுதல் – சாணை பிடித்தல்.** கறையறக் கழுவிய காலவேல். (அ: 972)

**கழை – 1. கரும்பு.** ஊறுபடு செம்புனல் உடைந்த கழை யுற்றது ஆறுபடர்கின்றன எனப்படர. (யுத் : 857)

2. **புல்லாங்குழல்.** கழை யொலித்தன. (அ : 243) [பா : பே]

3. **மூங்கில்.** வல்லிதாங் கழை தாக்கலின். (அ : 749) (யுத் : 707)

4. **புனர்பூசம்.** (பா : 289-a)

5. **காசிபன் மனைவி.** கழை யெனுமக் கொடி பயந்தாள் கொடி யுடனே செடி முதலாக்கண்ட வெல்லாம். (ஆ : 203)

**கழைக் கண்ணுளர் – கழைக் கூத்தாடிகள்.** நீர்நாய் கலி நடக் கழைக் கண்ணுளரென நடங்கவின. (கி : 22)

**கழைக்கரும்பு – அடித் தண்டினையுடைய கரும்பு** மென் கழைக் கரும்பும் வண்டும். (பா : 38) [பா : பே]

**கழை தொடர் வனம் - மூங்கில் நிறைந்த காடு.** *கழை தொடர் வனம் எரியுண்டாலென எறிபடைஞர் கலந்தார்.* **(சு : 773)**

**கழை படு முத்தம் – மூங்கிலிற் பிறந்த முத்து** *கழைபடு முத்தமும் கலுழிக் கார்மத மழை படுதரளமும்.* (கி : 11)

**கள் – 1. வண்டு.** *கட்சிலம்பு கருங்குழலார்.* (பா : 861) **(அ : 502)**

**2. தேன்.** *கள்ளவிழ் கோதை.* **(அ : 192) (சு : 329)**

**3. மது** *கட் கொந்தார் குழலினர்.* **(யுத் : 4096)** *செந்தேன் பருகித் திசை திசையும் நீ வாழ.* **(யுத் : 1667)**

**கள்வர் ஊர் – மாயச் செய்கையுடைய அரக்கர் வாழும் ஊர்; இலங்காபுரி.** *கள்வர் ஊர் இருந்தவள் இவள் என ஏச நிற்பெனோ.* **(சு : 503)**

**கள்வன் – வஞ்சகன். (இராவணன்)** *அக்கள்வன் வைகும் திடரினை நோக்கும்.* **(யுத் : 471)**

**கள்வனேன் – வஞ்சகனாகிய யான்.** *கடியவள் வயிற்றினிற் பிறந்த கள்வனேன்.* **(அ : 884)**

**கள் வாயரக்கி - கள் ஒழுகும் வாயையுடைய அரக்கி.** *கள் வாயரக்கி கதற.* **(சு : 84)**

**கள்வார் – திருடுபவர்கள்.** *கள்வாரிலாமைப் பொருட் காவலுமில்லை மாதோ.* (பா : 165)

**கள்வி – வஞ்சகி.** *நற் பொறை நெஞ்சின் இல்லாக்கள்வி.* **(ஆ : 292)**

**கள்ளக் கறையுள்ளம் – கள்ளத்தினால் மாசுபடிந்த மனம்.** *கள்ளக் கறையுள்ளத்ததிர் கழல் வெய்யோன்.* **(யுத் : 1147)**

**கள்ளங்கற்ற கண் – வஞ்சனையைப் பழகிய கண்.** *கள்ளங்கற்ற மீனினும் பெரிய வாட் கண்.* **(யுத் : 2233)**

**கள்ளத்தின் விளைவு – திருட்டுத்தனத்தினால் விளைவன.** *கள்ளத்தின் விளைவெலாம் கருத்திலா இருட் பள்ளத்தினன்றியே வெளியிற் பல்குமோ.* **(யுத் : 397)**

**கள்ள நீர் வாழ்க்கை – கள்ளத்தன்மை பொருந்திய வாழ்க்கை.** *கள்ள நீர் வாழ்க்கை யேமைக் கைவிட்டுக் காலும் விட்டான்.* **(யுத் : 1397)**

**கள்ளம் – 1. வஞ்சனை. வஞ்சகம்** *கள்ள அரக்கர் கடியிலங்கை.* (சு : 604) *கள்ளந்திரிவார்.* (யுத் :235)

2. **மாயை** *கள்ளவுள்ளத்தன்.* **(யுத் : 214)**

**3. சூது** *கள்ளம் மனனகத் துடையராய வஞ்சகர்.* **(சு : 517)**

**கள்ள மாய வாழ்வு – கள்ளம் ஆய வாழ்வு. பொய்யாகிய வாழ்வு.** *கள்ள மாய வாழ்வெலாம் விள்ளு ஞானம் வீசுதாள்.* (ஆ : 63)

**கள்ள மாயை – பிறர் அறிய இயலாத மாயச்செயல்.** (அண்) **திருட்டுத் தன்மையுள்ள மாயச்செய்கை.** (வை. மு) *வஞ்சனை இழைத்தனன் கள்ள மாயையால்.* (ஆ : 954)

**கள்ளவன் கனவு – வஞ்சகம் வாய்ந்த வலிய கனவு.** *மன அனுக்கம் விடத் தனித்தனி வள்ளலைப் புணர் கள்ள வன்கனவினுக் கிடையூறடுக்க மயங்கினர் சில கன்னிமார்.* (அ : 237)

**கள்ள வாசகம் – வஞ்சனைப் பேச்சுக்கள்.** *கன்னெடு மனத்தி சொல்லும் கள்ள வாசகங்கள்.* (ஆ : 296)

**கள்ள வினை – திருட்டுத் தொழில்.** *கள்ள வினை வெவ்வலி யரக்கர்.* (சு : 163)

**கள்ள வுள்ளத்தன் – மாயைவல்ல மனமுடையவன்.** *கள்ள வுள்ளத்தன் கட்டினன் கருவிகள்.* (யுத் : 214)

**கள்ளிசை யரக்கர் மாதர் – மதுவைப் பருகிய அரக்கியர்.** (சு : 133)

**கள்ளியின் தாய் – கள்ளியின் அடிப்பகுதி.** *உலர் பெருங் கள்ளியின் தாய் பிளந்துக்க கார் அகில்கள்.* (பா : 349)

**கள்ளு – மணம்.** (இலக்) *கோதையிற் கள்ளு நாறலின்.* (கி : 910)

**கள்ளுண் மாந்தர் – கள் குடிப்பவர்கள்.** *கள்ளுண் மாந்தரில் கைப்பன தேடியே.* (பா : 852)

**கள்ளுயிர்த்தல் – தேனை உமிழ்தல்.** *கள்ளுயிர்க்கும் புன்னைக் குறும்பூ நறுஞ் சுண்ணம்.* (யுத் : 6)

**கள்ளுறக் கனிந்த பங்கி – (சூடிய மலர்களின்) தேன் பெருகுவதால் (செந்நிறம்) மிக்குத் தோன்றுகின்ற தலைமயிர்.** *கள்ளுறக் கனிந்த பங்கி அரக்கர்.* (சு : 132)

**கள்ளூறு செவ்வாய்க் கணிகை – கள்ளைச் சுரக்கின்ற சிவந்த வாயினையுடைய வேசி.** *கள்ளூறு செவ்வாய்க் கணிகை காண் கைகேசி.* (அ : 402)

**கள்ளென நரம்பு – தேன் தாரை போன்ற நரம்புகள்.** *வார்ந்த கள்ளென நரம்பு வீக்கி.* (பா : 575)

**கள்ளை மாக்கவர் கண்ணியன் – தேனை வண்டுகள் கவர்ந்துண்ணும் கண்ணியைச்சூடிய பரதன்.** *கள்ளை மாக்கவர் கண்ணியன் கண்டிலன்.* (அ : 824)

**களக அன்னம் - கள ஹம்சம்.** *கன்னியர் குடை துறைக்களக அன்னமே.* (பா : 157) [பா : பே]

**களகள வுதிர்தல் – களகளவென உதிர்தல். களகள - இரட்டைக் கிளவி** களகள உதிர்ந்தது கயற்கண் ஆலியே. **(பா : 1075)**

**களங்கோடல் – போர்க்களத்தை இடமாகக் கொள்ளுதல்.** களங் கோடற்குரிய செருக் கண்ணியக்கால். **(ஆ : 364)**

**களந்தவா நெடுங்கருவி – மிடற்றேடு மாறுபடாதபடி ஒத்திசைக்கின்ற இசைக்கருவிகள்.** களந்தவா நெடுங்கருவியிற் கைகளிற் செயரியர் கலைக்கண்ணுல் அளந்த பாடல். **(சு : 287)**

**களநவில் அன்னம் – காரன்னம்.** களநவிலன்னமே முதல. **(கி : 7)**

**களப்படல் (களப்படுதல்) – போர்க்களத்தில் சாதல்.** அரக்கர் ஈண்டிய குழுவினைக் களப்படக் கொன்று நீக்கினுன். (சு : 908) [பா : பே] நீயுங் களப்பட்டாயே. (யுத் : 3887) களப்பட்ட வெல்லாம் ஈசனிற் பெற்ற வரத்தினுல் எய்திய என்ன. **(யுத் : 3781)**

**களப் பெருந் தானை – முனை முகத்துச்செல்லும் பெரிய சேனை. (வானர சேனை)** வளத்தடந் தாமரை மலர்ந்த தாமெனக் களப்பெருந் தானை யைக் கண்ணின் நோக்கினுன். **(யுத் : 322)**

**களபம் – 1. கலவைச் சந்தனக் குழம்பு.** எண்ணெயும் களபமும் இழுதும் மானமும் சுண்ணமும் தாவினுர் வீதிதோறுமே. **(பா : 296)**

**2. யானை.** மையார் களபந்துருவி மறைந்தே வதிந்தேன். **(அ: 376)**

**3. யானைக் கன்று.** அருவிநீர் கொணர்ந்து களப மால்கரி குண்டிகைச் சொரிவன காணுய். **(அ : 765)**

**4. சேறு.**

**களப மால் கரி – மத மயக்கத்தையுடைய யானைக் கன்று** (அ : 765)

**களம் – 1. போர்க்களம். முனை முகம்.** களப் பெருந்தானையைக் கண்ணின் நோக்கினுன். (யுத் : 322) **(யுத் : 1763)**

**2. கண்டம். கழுத்து.** களந்தவா நெடுங்கருவி. (சு : 287)

**3. இன்னேசை.** களவியல் அன்னம். **(கி : 7)**

**களவியல் – களவுத்தொழில். கள்ளத்தன்மை.** களவியல் அரக்கன் பின்னே தோன்றிய கடன்மை தீர. (யுத் : 451) களவியல் வஞ்சனை இலங்கைக் காவலற்கு. (யுத் : 358)

**களவு – 1. ஒளிப்பு.** உப நிடதங்கள் உனது களவை ஆய்ந்துறத் தெளிந்தில தாயினும். **(யுத் : 4025)**

**2. மாயத்தன்மை. மாயம்.** உப நிடதங்கள் ஓதுறு கிளவியார் பொருள்களாற் கிளக்குருதவன் களவை யாரறிகுவார். **(யுத் : 192)**

**களன்** - 1. **கண்டம்** *கடுவமர் களன்.* (பா : 186)

2 **இனிய ஒலி.** *களனவில் அன்னம்.* (கி : 7)

3. **நெற்களம்.** *களனமர் கமல வேலிக் கோசலம்.* (யுத் : 4347)

**களி** - 1. **செருக்கு. மதச்செருக்கு.** *பிளிறின களி நல்யானை.* (சு : 6) (கி : 17)

2. **களிப்பு. மகிழ்ச்சி.** *ஓடா நின்ற களி மயிலே.* (கி : 27)

3 **மதர்ப்புக் குணம்.** *செங்களி சிதறி நீலஞ் செருக்கிய தெய்வ வாட்கண்.* (கி : 791)

4. **தேன்.** *புள்ளிநெடு வண்டு ஞிமிருங் களிகொள் பூவும்.* (சு: 706)

5. **கட்குடித்தவர்.** *இன்றுயில் வதியுஞ் சேக்கை யுட் களிகளை நிகர்த்தன களி நல் யானையே.* (ஆ : 681)

6. **செல்வம், வலிமை, அழகு முதலியவை காரணமாகக் கொள்ளும் மதம்.** *களியாலிவன் அயர்கின்றனவுளவோ.* (பா : 1368)

7. **மதமயக்கம்.** *ஆடுங் களி மாமத யானையனுன்* (ஆ : 1112) *வெம்பிக் களியோடு விளித்தெழு...... கரி.* (யுத் : 2326)

8. **குழம்பு.** *வாசமென் கலவைக் களி.* (பா : 643)

**களி அன்னம் - ஆண் அன்னம்.** *களி யன்னமும் மட அன்னமும் நடமாடுவ கண்டான்.* (அ : 619)

**களிகள் - கட்குடியர்.** *களிகளை நிகர்த்தன களி நல் யானையே.* (ஆ: 68)

**களிச் செருக்கு - மதச்செருக்கு** *நின்றன திசைக் கண் வேழம் நெடுங் களிச் செருக்கு நீங்க.* (சு : 829)

**களித்தல் - செருக்குறல்.** *களிக்கின்றோயை......... அறிவு காட்டி இடிக்குநர் இல்லை.* (சு : 465)

**களிதுளக் குறுத்தல் - களிப்பு ஆட்டுதல்.** (அண்) (பா : 499)

**களிதுளக்குறுதல் - மகிழ்ச்சி ஆட்டுதல்.** *நல் குர வொழிந்த தாமெனும் பெருங்களி துளக்குறுதலால்.* (பா : 499)

**களிதுளங்குதல் - மகிழ்ச்சியினால் அசைதல்.** (அண்) **மகிழ்ச்சி மிகுதல்.** (வை. மு) *தொழுந் தொறும் தொழுந் தொறும் களி துளங்குவார்.* (பா : 193)

**களி நடம் - களிப்போடுகூடிய நடனம்.** *பல்பேய் கற்றியல் பாணி கொட்டக் களி நடம் பயிலக் கண்டான்.* (யுத் : 3601) (சு : 1308)

**களி நல் யானை - மதக்களிப்புக்கொண்ட அழகிய (சினந்த) யானைகள்.** *புராதனா போற்றியென்று கையெடுத் தழைத்த யானை போன்ற களி நல் யானை.* (யுத்: 635) *தறி பொரு களி நல் யானை.* (யுத்: 2791)

**களி நெடுங்களிறு – களிப்புள்ள பெரிய யானை.** *பட்டமை தேரின் மேலும் களி நெடுங்களிற்றின் மேலும்.* (யுத் : 1106)

**களிப்பில் இந்தியம் – புலன்வழியே செலுத்திக் களித்தல் இல்லாத இந்திரியம். பொறியடக்கம்.** *களிப்பில் இந்தியத்து யோகியைக் கரக்கிலன்.* (அ : 747)

**களிப்பு – 1. பெறுதற்கரிய பேறுபெற்ற காலத்து உளதாம் உள்ளச் செருக்கு.** *அவரை ஈன்ற அக் காய் சினத் தரக்கனும் களிப்பின் மேன்மையான்.* (பா : 374)

**2. செருக்கு. கர்வம்.** *களித்தவர்க் களிப்பு நீக்கி.* (யுத் : 915) (யுத் : 2279)

**3. செருக்கோடு கூடிய மகிழ்ச்சி. உவப்பு.** *என்று சிந்தை களித்துவந் தேத்தினுன்.* (சு : 633)

**4. மயக்கம்.** *காமமும் வெகுளியும் களிப்பும் கைத்தெழு கோமுனி.* (பா : 227)

**களிப்புத் தீர்த்தல் – செருக்கை ஒழித்தல்.** *காலன்தன் களிப்புத் தீர்த்த மகோதரக் காளை.* (யுத் : 910)

**களிப்பு வீங்கல் – களிப்பு மிகுதல்.** *உவகையும் களிப்பும் வீங்க எழுந் தெதிர் வந்த வீரன்.* (யுத் : 3139)

**களி மயக்கு – களிப்பை விளைவிக்கும் மயக்கம்.** (அண்) **களிப்பினுல் ஆகின்ற மயக்கம்.** *மழை குலாம் ஓதி நல்லார் களி மயக்குற்று நின்றுர்.* (பா : 1221)

**களி மால் கரி – மதமயக்கங்கொண்ட பெரிய யானை.** *திண் கொலை வெங்களி மால் கரி செம்புனல் கொண்டு.* (யுத் : 2923)

**களியாட்டம் – 1. கள்ளுண்டு ஆடும் ஆட்டம்.** *கன்னி நன் மயிலன் ஞரை நெடுங்களியாட்டங் கண்டான்.* (யுத் : 2773) (யுத் : 2786)

**2. களிப்புமிக்க ஆடல்.** *மகளிர் ஆடும் புதுக்களியாட்டம் நோக்கி.* (அ : 285)

**களியானை – மதக்களிப்பையுடைய யானை.** *இருங் களியானை யன்ன மகரமும்.* (யுத் : 2010)

**களியுறுதல் – மகிழ்ச்சி மிகுதல்.** *களியுறக் கனிந்த காமர் பண்ணுறு கிளவிச் செவ்வாய்ப் படையுறு நோக்கினுளை.* (கி : 916)

**களில் – கள்ளில்.** *மாலருா அருங்களில் திரிகின்ற தோர் ஆசையான்.* (யுத் : 1282)

**களி வண்டு – தேனைக்குடித்து மயங்கும் வண்டுகள். களிக்கின்ற வண்டுகள்.** *களி வண்டார்க்கும் குஞ்சி.* (சு : 131)

**களிற்றிறை – களிற்றையுடைய அரசன். தசரதன்.** சூழிவெங்கட களிற்றிறை தனக்குச் சொல்லிப் பின். (அ : 567) [பா : பே]

**களிற்றேங்கல் – யானையாகிய மலைகள்.** ஒற்றை வாளியோடு ருண்டன கருங்களிற் றேங்கல். (யுத் : 1496)

**களை கட்டல் – 1. களை பறித்தல்.** களைகட்டவர் தளைவிட்டெறி குவளைத் தொகை கண்டான். (அ : 622)

2. **களை களைவது போன்று அழித்தல். களைந்து ஒழித்தல்.** நில மன்னவர் குலமும் கருவற்றிட மழுவாள் கொடு களைகட்டுயிர் கவரா· (பா : 1361) மழுவின் வாயால் வேரறக் களைகட்டு. (பா : 1381) கரன்படை படுத்தவனை வென்று களைகட்டால் நிரம்பிடுவதன்றிது. (யுத் : 66)

**களை கட்டவர் – களை களைந்தவர்.** (அ : 622)

**களைகண் – 1. பற்றுக்கொடு. பாதுகாப்பு துன்பங்களையும் கண்ணோட்டமுடையார்.** எப்பெருமா அன் எமைக் கைவிடிற் பினை யார் களைகண்ணுளார். (ஆ: 210) கருவாய் அளிக்கும் களைகண்ணே. (யுத் : 2620) (யுத் : 675) வானவர் களைகணை அனகன். (யுத் :273)

2. **புகலிடம்.** உளைவுறு மனத்தவன் உலகம் யாவுக்கும் களைகணைத் தொழ. (யுத் : 3998)

3. **ஆதரவு.** கண்ணிய யாவர்க்கும் களைகணாகிய புண்ணிய. (பா : 1338)

**களை தடவல் (களை தடவுதல்) – களைகளைக் களைதல்.** வான் களை தடவும். (பா : 540) [பா : பே]

**களைவருந் துயர் – எவராலும் போக்குதற்கரிய துன்பம்.** களைவருந் துயரறக் ககனமெண்டிசை யெலாம். (பா : 1137)

**களை வருந் துன்பம் – போக்குவதற்கு அரிய துன்பம்.** களை வருந் துன்ப நீங்கக் கண்டன னென்ப மன்னோ. (யுத் : 2536)

**களைவு – நீக்கம்.** களை வருந் துன்பம். (யுத் : 2536)

**கற்கள் – மலைகள்.** கன மழை நிகர்த்தன கற்கள். (யுத் : 1152)

**கற்கனியக் கரைகின்ற துயர் – மலையும் கனியும்படி வருந்துகின்ற துக்கம்.** (கலா) (அ : 1021) [பா : பே]

**கற்கனியக் கனிகின்ற துயர் – கல்லும் இளகும்படி முதிர்கின்ற துயரம்.** கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான். (அ : 1021)

**கற்காணும் திண்மையான் – மலைபோலும் திண்மை யுடையவன்.** (அ : 1018)

**கற்கும் – சொல்லப்பட்ட.** *கார்த்த வீரியன் என்பானுற் கட்டுண்டான் என்னக் கற்கும் வார்த்தையுண்டு.* (யுத் : 3875)

**கற்குலம் – மலைகளின் தொகுதிகள்.** *கற்குலம் கண்ணற இடித்த காலத்து.* (யுத் : 3153)

**கற்குவடு – கல்மலை.** *கற்குவடடுக்கி வாரிக்கடலினைக் கடந்த காட்சி.* (யுத் : 785)

**கற்பகக்கா – கற்பகச்சோலை.** *கற்பகக்கா ஓங்கு நீழலிருந்தாலும்.* (பா : 11) *கற்பகக் காவது கமலக் காடது.* (கி : 850) [பா : பே]

**கற்பகக் கான் – கற்பகச்சோலை.** *கற்பகக் கானது.* (கி : 850)

**கற்பகக் கொம்பு – கற்பகக் கிளை.** *கற்பகக் கொம்பினைக் கரிய மாசுணம் பொற்புறத் தழுவிய தன்மை போன்றதால்.* (யுத் : 1074)

**கற்பகக் கொழுந்து – கற்பகதருவின் இளந்தளிர்.** *மீது கற்பகக் கொழுந்துமான மின்ன.* (பா : 1217)

**கற்பகச் சோலை கற்பக மரங்களையுடைய சோலை.** *பசுந்தேன் துளிக்குங் கற்பகத் தண்ணறுஞ் சோலைகள் தோறும்.* (சு : 125)

**கற்பகந்தாங்கிய மலராடை – கற்பக மரங்கள் ஏந்தியுதவிய பூப்போலும் மெல்லிய ஆடை.** *கான மாமணிக் கற்பகந் தாங்கிய ஊனமில் மலராடை யுடுத்தினர்.* (அ : 1074)

**கற்பக நறுமலர் – நறுமணங் கமழும் கற்பக மலர் மாலைகள்.** *அரம்பையர் அறல்புரை கூந்தல் கழித்து நீக்கிய கற்பக நறுமலர் காணுய்.* (அ : 757)

**கற்பக நாடு – தேவருலகம்.** *கற்பக நாட்டணி நகர்.* (பா : 324) *நனைவரு கற்பக நாட்டு நன்னகர்.* (பா : 318) *அசும்புடைப் பிரசத் தெய்வக் கற்பக நாட்டை அண்மி.* (சு : 90)

**கற்பக நீழல் தலைவன் – கற்பகத் தருநிழலிலிருக்கும் இந்திரன்.** *சந்த மலர்த்தண் கற்பக நீழல் தலைவற்கும் அந்தகனுக்கும் அஞ்ச அடுக்கும் அரசாள்வாய்.* (ஆ : 731)

**கற்பகப் பொதும்பர் – கற்பகச் சோலை** *பூவுயிர்த்த கற்பகப் பொதும்பர்க் கொதுங்குமால்.* (பா : 115)

**கற்பகம் – தேவருலகில் மாலையாகப் பூக்கும். பூவுலகின் வந்தபின் மலராகவே பூக்கும். (அண்)** *கொடியிடைத் தரள வெண் கோவை சூழ்வன கடியுடைக் கற்பகங்கான்ற மாலையே.* (பா : 129)

**கற்பக மரம் – கற்பக தரு.** *வானிடைக் கற்பக மரங்களுந் தீய.* (யுத் : 555)

**கற்பகமனைய வள்ளல் – இராமபிரான்.** (யுத் : 2852)

**கற்பக மாலை — கற்பக மலர் மாலை.** *மைந்தர் சூடிய கற்பக மாலையும் புலவு காலுமால்.* (சு : 373)

**கற்பகவல்லி — கற்பகத்திற் படர்ந்த காமவல்லி.** *கடலிடைத் தோன்றும் மென்பூக் கற்பகவல்லி ஒத்தாள்.* (பா : 1029)

**கற்படி வயிரத்திண் கால் — வன்மைவாய்ந்த வயிரத்தைப்போன்ற திண்மை பெருந்திய கால்.** (யுத் : 792)

**கற்படை — கல்லாகிய படைக்கலங்கள்** (யுத் : 2913)

**கற்பணம் — கப்பணம்.** *கற்பணம் தண்டு பிண்டிபால மென்றிவை காந்து நற்படை பெரிதென்கேனே.* (சு : 136)

**கற்பம் — 1. கற்பக விருட்சம்.** (வை. மு) **கால அளவில் ஒரு பேரெல்லை.** (அண்) *நிலையார் கற்பமும் நின்றது.* (கி : 980)

**2. பல யுகங்களைக்கொண்ட காலம். பல ஊழி.** *என் அருந்தவமோ கற்பம் பல சென்றது காணுதியால்.* (ஆ : 9)

**3. பிரமன் வாழ்நாளில் ஒருநாள். 432 கோடி வருடம். பிரமன் ஆயுள்.** *ஆயிரங் கற்பங்கள் போக்குவான் கண்டிலன் கங்குலின் ஈறரோ.* (அ : 1055)

**4. ஊழிக்காலம். யுகாந்த காலம்** *கற்பத்தின் அரனே ஒக்கும்.* (யுத் : 1237) (யுத் : 3208)

**5. யுகம்.** *கற்பத்தின் இறுதி யென்றயிர்த்தார்.* (கி : 171)

**கற்பமைந்தார் — கற்பையுடைய பெண்டிர்.** *காவற்றின் கற்பமைந்தார் தம் பெருமை தாங்கழுரூர்.* (ஆ : 351)

**கற்பழியாமை — பதிவிரதா தருமம் அழியாதிருத்தல்.** *கற்பழியாமை என் கடமையாயினும்.* (ஆ : 947)

**கற்பினில் வையம் ஆளுதல் — கற்பின் தன்மை அமையும்படி ஆட்சிசெய்தல்; பல அரசர்களுக்குப் பொதுவாகாது தனக்கே உரியதாகும்படி ஆளுதல்.** (அண்) **பிற அரசர் நெருங்காதவாறு சிறந்த காவலுடன் ஆளுதல்.** (கலா) **கல்வியினால் உலக முழுவதையும் ஆட்சி செய்தல்.** (வை. மு) *மறுவறு கற்பினில் வையம் யாவையும் அறுபதினாயிரம் ஆண்டும் ஆண்டவன்.* (அ : 1137) (அ : 15) பார்க்க

**கற்பினுக்கணி — கற்பினுக்கு அணிகலனாய்த் திகழ்பவள். அணியாம் தன்மைகள்.** (அண்) **பதிவிரதா தர்மத்துக்கு ஆபரணம்போல் அழகு செய்பவளான சீதாபிராட்டி.** *கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்.* (சு : 1304) (யுத் : 3969)

**கற்பினுக்கரசி - கற்பினுக்குத் தலைவி. கற்புக்கரசியாகிய சீதை.** கற்பினுக் கரசினைப் பெண்மைக் காப்பினை. (யுத்: 3980) (யுத்: 4093) (ஆ: 838)

**கற்பு - 1. கல்வியறிவு.** நின்று கற்பினின் நினையும். (கி: 47) (யுத்: 78)

**2. உய்த்துணர்ச்சி.** (அண்) (கி: 47)

**3. நினைவு எண்ணம். சங்கற்பம். உறுதியான கொள்கை.** (அண்) **கருத்து** ஏகுவான் தன் கருத்தென்கொல் என்னும் கற்பால். (சு: 37) (சு: 933) கண்ணிடை நிறுத்துவ னென்னும் கற்பினன். (யுத்: 1526)

**4. பதிவிரதா தருமம்** அவள் கற்பும் நன்றெனக் கொண்டனன். (சு: 1302) கற்போயை. (சு: 647)

**கற்பனை - 1. மனோபாவம்.** நின்று கற்பனை நினையும். (கி: 47) [பா: பே]

**2. ஏமாற்றச் செயல்.** பேதைபால் வஞ்சன் செய்த கற்பனை என்ன ஓடிக் கலந்தது கள்ளின் வேகம். (யுத்: 2778)

**கற்பாறை - கருங்கற் பாறை** மலைகளும் மரங்களும் மணிக்கற் பாறையும். (ஆ: 119)

**கற்பித்தல் - தெரிவித்தல். கூறுதல்.** கங்குன் மாலை கழிந்த தென்பது கற்பியா. (அ: 236)

**கற்பிறத்தல் - கற்பு அழிதல்.** இற்பிறந்தார் தமக்கியைவ செய்திலள் கற்பிறந்தாளென. (ஆ: 591)

**கற்பின் கடல் - நற்குணக் கடல்.** (அண்) **கற்பாகிய சமுத்திரம்** (வை. மு) பூங்கோதை கற்பின் கடலிற் படிவார்க்குப் புள்ளும் சிலம்பும். (ஆ: 1065)

**கற்பின் கனலி - கற்பினையுடைய நெருப்பாகிய சீதை** அரக்க ரென்னும் கான்சுட முளைத்த கற்பின் கனலி. (ஆ: 282)

**கற்பின் செல்வி - கற்பினையுடைய சீதை.** (யுத்: 1298)

**கற்பின் வாழ்வு - கற்பு வாழ்ச்சி பெறுதற்கு இடனான சீதாபிராட்டி; கற்பு நிலைபெற்று வாழ்வதற்குரிய நிலைக்களமாகத் திகழ்பவள். சீதாபிராட்டி.** (யுத்: 3981)

**கற்புடை நங்கைமார் - கற்புடைய மகளிர்.** ஓடுகின்ற உதிரம் புகுந்துயிர் நாடுகின்றனர் கற்புடை நங்கைமார். (யுத்: 1011)

**கற்புடைப் பத்தினி - கற்பினையுடைய ஒரு பத்தினி.** ஓர் சீதை யென்றிருந்தவத்தியைந்தாள் பொது வியற்கைதீர் கற்புடைப் பத்தினிப் பொருட்டால் விதி விளைத்தது. (யுத்: 3253)

**கற்புடைப் பெண்ணருங்கலம் - கற்புடைய பெண்டிர்க்கெல்லாம் அரிய அணிகள் போன்ற சீதை.** *(யுத் : 4243)*

**கற்பெனுங் கடல் - பதிவிரதா தருமமாகிய சமுத்திரம்.** *காந்தள் மெல்விரல் சனகி தன் கற்பெனுங் கடலை நீந்தி ஏறுவதெங்ஙன் என்று ஒருமுகம் நினைய. (சு: 1093)*

**கற்பெனுங் கடவுள் தீ - கற்பு என்னும் தெய்வத்தன்மை செறிந்த தீ.** *கனிந்துயர் கற்பெனும் கடவுட்டீயினுல் நினைந்திலை என்வலி நீக்கினுய் என. (யுத் : 4009)*

**கற்பெனுந் திண்மை - கற்பு என்னும் உறுதியான மனப்பான்மை.** *பெண்மையும் பெருமையும் பிறப்பும் கற்பெனுந் திண்மையும். (யுத் : 3986)*

**கற்பெனும் பொங்கு வெந்தீ - கற்பாகிய பொங்கி எழும் கடுமையான நெருப்பு.** *அங்கியான் என்னை இவ்வன்னை கற்பெனும் பொங்கு வெந்தீச் சுடப் பொறுக்கிலாமையால்.* **(யுத் : 4011)**

**கற்பெனுமிருஞ் சிறை - கற்பு நிலையாகிய பெரிய சிறகு.** *பொருஞ் சிறை இற்றதேற் பூவை கற்பெனும் இருஞ்சிறை இருதெனு இடரு நீங்கினுள். (ஆ : 955)*

**கற்போயை - கற்புடைய உன்னை.** *கைத்து ஓடும் சிறை கற்போயை வைத்தோன். (சு : 647)*

**கற்றடங் தோளினுன் - மலைபோன்ற பெரிய தோளையுடையவன்.** *மகோதரப் பெயர்க் கற்றடங் தோளினுன். (யுத் : 34)*

**கற்றடம் - மலைகளையுடைய காடு. [கல் தடம்]** *ஓங்கிய கற்றடங் கானுதி யென்னில். (அ : 548)*

**கற்ற போர் - பயின்ற போர்கள். கற்றறிந்த போர் வகைகள்.** *கற்ற போர்களெலாஞ் செய்த காலையில். (யுத் : 1050)*

**கற்றல் - பழகியிருத்தல்.** *அடியிணை உறைகல்லா. (வை.மு) (அ: 705)*

**கற்றலம் - பளிங்குக்கல் பூமி.** *தளிந்த கற்றலத்தொடு அச்சலத்தினைத் தனித்துறத் தெளிந்துணர்ந்து இற்றுமென்பது தேவராலுமாவதே. (பா : 112)*

**கற்றவர் - படித்தவர்.** *(யுத் : 590) (அ : 40)*

**கற்றவர் கற்றவர் - படித்தவர் மற்ருெரு படித்தவரது.** *கற்றவர் கற்றவர் உணர்வு காண்கிலர். (யுத் : 590)*

**கற்றிண் மார்பு - மலைபோன்ற வலிய மார்பு.** *(யுத்: 3173)*

**கற்றியல் பாணி - கற்றுத் தேர்ந்த தாளம்.** *(யுத் : 3601)*

**கற்றிரள் தோள் - கல் திரள் தோள் மலைபோலத் திரண்ட தோள்கள்.** *காயும் வில்லினன் கற்றிரள் தோளினன். (அ : 645)*

**கற்றிரள் வயிரத்திண்டோள் - கல்போலத் திரண்ட உறுதி பொருந்திய திண்ணிய தோள்.** (யுத் : 4330)

**கற்றிலாதவர் - கல்லாதவர்.** *கற்றவர் கற்றிலாதவரும் உண்ணு நீரினும் அவனையே உவப்பார்.* (அ : 40)

**கற்றுண்டாய் - எல்லா நூல்களையுங் கற்றுணர்ந்த மனங்கொண்டாய்.** (சு : 1074)

**கற்றுணர் மாருதி - நூல்களைக் கற்றுணர்ந்த அறிவனான அனுமன்.** *முற்றினர் முற்று முனிந்தார் கற்றுணர் மாருதி கண்டான்.* (சு: 1235) [பா : பே]

**கற்றுறுமாட்சி - நூலறிவு. (அன்) கற்றதனுற் பொருந்திய பெருமை.** *கற்றுறு மாட்சியென் கண்ணின்றுயினும்.* (யுத் : 86)

**கற்றை - திரட்சி.** *கற்றை மாசுணம் உரித்த உரிக்கச்சு.* (ஆ : 15) *கற்றை வார்சடைமுடிக் கணிச்சிவானவன்.* (பா : 820) *கற்றைப் பூங்குழலாள்.* (சு : 318) *கற்றை வெஞ்சுடர்க் கவசம்.* (யுத் : 1205)

**கற்றைவார் சடையினுன் - தொகுதியாக நீண்ட சடையினையுடைய சிவபெருமான்.** *கற்றைவார் சடையினுன் கைச்கொளுந்தனுஇற.* (யுத் : 1138)

**கற்றை வெண்ணிலவு - தொகுதியான வெண்மை நிறமுள்ள நிலா.** *கற்றை வெண்ணிலவு நீக்கிக் கருணையால் அமிழ்தங்காலும் முற்றுறு கலையிற்றுய முழுமதி முகத்தினுனை.* (யுத் : 442)

**கறங்கிட - ஒலிக்க.** *முரசினங் கறங்கிட.* (பா : 277)

**கறங்கு - காற்றுடி.** *கடுப்பினிற் பெருங் கறங்கெனச் சாரிகை திரிவர்.* (கி : 284) (சு : 786)

**கறங்குதல் - 1. ஒலித்தல்.** *பொங்கியம் பலவுங் கறங்கின.* (அ : 245)

**2. சுழலுதல்.** *கறங்கு கால்புகா.* (சு : 118)

**3. சுழன்று பறத்தல்.** *கறங்கு வெஞ்சிறைக் கலுழன்.* (யுத் : 179)

**கறங்குபு திரியும் - சுழன்ற வண்ணம் திரிந்து காவல்புரியும்.** *கறங்குபு திரியும் என் கன்னி மாமதில்.* (பா : 622)

**கறத்தல் - பசுவினிடமிருந்து பால் கறப்பது போன்று சுரத்தல்.** *கறந்தாலென நீர்தரு சந்திரகாந்தம்.* (ஆ : 714)

**கறவை - பசு. பாற்பசு.** *கன்று பிரிந்துழிக் கறவை ஒப்பக் கரைந்து கலங்கினுள்.* (அ : 309) (யுத் : 3541)

**கறவை ஆன் - பாற்பசுக்களான காமதேனு.** (ஆ : 578)

**கறி - உணவுக்குத் துணையாக நிற்கும் பண்டம். வியஞ்சனம்.** *கலையுவாமதியே கறியாக.* (ஆ : 298) *கறி கிழங்கென.* (யுத்: 563)

**கறித்தல் - கடித்தல்.** *தன் பவளவாய் கறிக்கும்.* (*யுத் : 2176*) *எயிற்ருற் கறித்தான் சில.* (*யுத் : 1836*)

**கறியமுது - கறியாகிய அமுது.** *எள்ளரிய பல விதத்துக் கறியமுதும்.* (*யுத் : 4181/5*)

**கறு - வைரம்.** *கறுவுடைய வாலி.* (*கி : 43*)

**கறுத்தமணி கண்டர் - கறுத்த அழகிய கழுத்தினையுடைய சிவபெருமான்.** (*ஆ : 538*)

**கறுத்தல் - 1. வெகுளுதல். சினத்தல்.** *கறுத்த மாமுனி.* (*பா: 331*) *கறுத்த சிந்தைய னிராவணன்.* (*யுத் : 1154*)

**2. களங்கம்.** *கறுத்தலில் சிந்தனையாள்.* (*சு : 1072*)

**3. இருளுதல்.** *அந்திவந்திறுத்தது கறுத்த தண்டமே.* (*யுத் : 462*)

**கறுத்தலில் சிந்தையாள் - களங்கமற்ற மனமுடையவள். (திரிசடை)** *கறுத்தலில் சிந்தையாள் கவன்று கூறினுள்.* (*சு : 1072*)

**கறுத்த வாளரவு - கொடிய கிருஷ்ண சர்ப்பம். சினந்த கொடிய அரவு.** *கறுத்த வாளெயிற்றினோடு அமுதுகக் களித்த.* (*பா : 729*)

**கறுத்தே யருளாய் - கோபித் தருளாய்.** *அறுத்தாய் கணையால் எனவே அடியேன் தன்னை ஐயா கறுத்தே யருளாய்.* (*அ : 378*)

**கறுப்பு - கோபம். வெகுளி.** *கடைந்து தெள்ளமுது கொள்ளும் வள்ளலென மேனிமிர்ந்ததொர் கறுப்பினுன்.* (*யுத் : 2022*)

**கறுப்புண்ட மனம் - சினங்கொண்ட மனம்.** *கருப்புண்ட மனத்தன் கண்டான்.* (*சு : 999*)

**கறுப்புறு மனம் - வெகுளியுற்ற மனம்.** *கறுப்புறு மனமும் கண்ணிற் சிவப்புறு குட்டுங்காட்டி.* (*பா : 47*)

**கறுவு - 1. மனவைரம்.** *உள் கிடந்ததோர் கறுவு காதலால்.* (*அ : 1092*) (*யுத் : 1576*)

**2. சினம்.** *கண்டனர் அரக்கரைக் கறுவு கைம்மிக மண்டமர் தொடங்கினுர்.* (*சு : 1280*) *கறுவுற்ற பொருளுக்கு என்னே காரணம் கண்டது.* (*கி : 644*)

**கறுவு காதல் - வைரம் வாய்ந்த கொல்லுகை. காதல் - கொல்லுகை. (அண்) கறுவுகாதல் - கறுவோடு கூடிய பேராசை. (வை. மு)** *மறங்கருதி யுட்கிடந்ததோர் கறுவு காதலால் விரதமுற்றிருந்தவன் மேல் வந்தான்.* (*அ : 1092*)

**கறுவு காந்தல் - நெடுஞ்சினம் வெதுப்புதல்.** *உட்கிடந்ததோர் கறுவு காந்தலால்.* (*அ : 1092*) [*பா : பே*]

**கறுவுடைமை – கறுக் கொண்டுள்ளமை.** வேரோடுங் கல்லுமா முயல்கின்ருன் இவன் என்னும் கறுவுடையான். (யுத் : 1576)

**கறுவுதல் – பகை கொள்ளுதல்.** சலமுறு கறுவினர். (யுத் : 1814)

**கறுவுறல் – 1. வெகுளுதல்.** கறுவுற்ற பொருளுக்கென்றே காரணம் கண்டது என்ருன். (கி : 644)

**2. வயிரங்கொள்ளல்.** சீறிக் கறுவுற. (யுத் : 4411)

**கறை – 1. களங்கம்.** இது குறையென்னுக் கறை துடைக்குறும் பேதை ஓர் கொடிச்சி. (அ : 758)

**2. இரத்தக் கறை.** கறை வாள்பட. (ஆ : 885)

**3. உரல்.** கறையடிக் கழிவு செய்த கண்டகன். (கி : 379) கறை படும்படி கவ்வி. (யுத் : 1537)

**4. இரத்தம்.** கறைப்புனல். (சு : 906) (யுத் : 219)

**5. கோபம்.** கருமைக் கறை நெஞ்சினின் நஞ்சு கலந்த பாம்பு. (வை. மு) (ஆ : 695)

**6. விடம்.** கறை மிடற்றவற்கு மாமே. (யுத் : 3307)

**கறைக் கண் – குருதிக் கண்.** வெங்கறைக் கண் மொய்ம்பரை. (யுத் : 1781)

**கறைக் கதிர் வாள் – குருதிக்கறை விளங்கும் வாட்படை.** (அண்) **இரத்தக் கறையும் ஒளியும் அங்கங்கே உடைய வாள்.** (கலா) கச்சொடார்த்த கறைக் கதிர் வாளினன். (அ : 651)

**கறைகெழு வேற்கணர் – குருதிக் கறைபடிந்த வேலைப்போலச் சிவந்த வரிசேர்ந்த கண்கள்.** கறைகெழு வேற்கணரும் மைந்தருங்கவினி. (பா : 878)

**கறைத்தரு களன் – சிவபிரான். நச்சுக் கண்டமுடைய உருத்திர மூர்த்தி.** கறைத்தரு களனும் மற்றைக் கடவுளர் பிறரும். (பா : 681)

**கறைத் தோல் – இரத்தக் கறையோடு கூடிய உடல் தோல்கள்.** அரக்கர்தம் உடலுகு கறைத்தோல். (யுத் : 522)

**கறைநீர் – களங்கத்தின் தன்மை. இரத்த நீர்.** (அண்) கறைநீர் மைக்குப்பையின் எழில் கொண்டெழு வயிரத் தடமார்பு. (யுத் : 1138)

**கறைப்புனல் – இரத்த நீர்.** கறைப்புனல் பொறிகளோடு உமிழுங் கண்ணன். (சு : 906)

**கறைமிடற்றவன் – சிவபிரான்.** (யுத் : 3307)

**கறைமிடற்றிறை – சிவபிரான்.** (பா : 187)

**கறைமிடற் றிறைவன் – நீல கண்டத்தையுடைய கடவுளாகிய சிவபெருமான்.** *கங்கையின் கணவன் அக்கறை மிடற்றிறைவனே உங்கள் வெங்கதவலிக் கொருவன்.* **(கி : *182*)**

**கறையடி – 1. உரல்போன்ற அடிகளையுடையது; யானை.** *கறையடிக் கழிவு செய்த கண்டகன்.* **(கி : *379*)**

**2. ஐராவதம்.** *எழுந்தனர் கறையடிக் கிறையும்...... அத்தேவும்.* (பா : *193*) [பா : பே]

**கறையடிக்கிறை – இந்திரன்.** (பா: *193*) [பா : பே]

**கறையுள்ளம் – மாசுபடிந்த மனம்.** *கள்ளக் கறை யுள்ளத் ததிர் கழல். வெய்யவன்.* **(யுத் : *1147*)**

**கறைவாள் – கறைபடிந்த வாள்.** *கறைவாள்பட ஆவி கலங்கினள் போல்.* **(ஆ : *885*)**

**கறை வெண்டிங்கள் – களங்கத்தைக்கொண்ட வெள்ளிய சந்திரன்.** *பருமணி கண்டத்தான் தன் சென்னியிற் கறை வெண்திங்கள்* **(யுத் : *886*)**

**கன்மம் – ஊழ்வினை.** *கன்மத்தை ஞாலத்தவர் யாருளரே கடப்பார்.* **(சு : *573*)**

**கன்மலை – கல்லாகிய மலை.** *கன்மலை நிகர்க்கல.* **(ஆ : *239*)**

**கன்மனம் – கல்லைப்போன்று வலிய மனம்.** *கன்னெடு மனத்தி சொல்லும் கள்ள வாசகங்கள்.* **(ஆ : *293*)**

**கன்மாரி – கல்மழை** *கன்னெடு மாரி பெய்யக் கடையுகத் தெழுந்த மேகம்.* (பா : *414*)

**கன்றி – வருந்தி.** *காக்குநரின்மையால் அக்கழுகின மூழதுங் கன்றி.* **(கி : *1008*)**

**கன்றிய நிறம் – கருநிறம்.** *வண்டினம் கன்றிய நிறத்தது.* **(யுத் : *469*)**

**கன்று – கன்றுக்குட்டி.** *கறவையும் கன்றும் ஒப்பார்.* **(யுத் : *3541*)** **(ஆ : *1057*)**

**கன்றுடைப்பிடி – கன்றோடு கூடிய பெண்யானை.** *கன்றுடைப்பிடி நீக்கிக் களிற்றினம் வன்றொடர்ப் படுக்கும் வன வாரி.* (பா : *63*)

**கன்றுதல் – 1. வெம்புதல்.** *கன்று கண்.* **(யுத் : *1048*)**

**2. சினங்கொள்ளுதல்.** *(அண்) என் கன்றுகின்றது.* **(கி : *53*)**

**3. மனம் வருந்துதல்.** *கன்றிய கருங்கழற் சேனை காவலன்.* **(யுத் : *27*)**

**4. மனம் வெம்புதல்** *கடிது கன்றி.* **(ஆ : *33*)**

**5. கருகுதல்.** *வண்டினங் கன்றிய நிறத்தது.* **(யுத் : *469*)**

**கன்று பிரி காரா** – கன்றைப் பிரிந்த புனிற்று. (அப்பொழுதீன்ற பசு). *கன்று பிரி காராவின் துயருடைய கொடி.* (அ : 1057)

**கன்றுறக்கும் குரவை** – கன்றுகளைத் தூங்கப்பண்ணும் குரவைப் பாட்டு. *கொன்றை வேய்ங்குழற் கோவலர் முன்றிலிற் கன்றுறக்கும் குரவை.* (பா : 65)

**கன்னக் கனிதல்** – நன்கு முதிர்தல். மிகவும் கனிந்ததுபோல முதிர்தல். *'கன்னக் கனியும் இருள் தன்னையுங் காண்டுமன்றோ.* (ஆ : 696)

**கன்னகம்** – ஓர் ஆயுதம். கன்னக்கோல். (கலா) (கன் - அகழ்வது) *கப்பணம் கவன்கல் கன்னகம்.* (யுத் : 2440)

**கன்னடம்** – கன்னட மொழி. *வடகலை தென்கலை வடுகு கன்னடம் இடமுளபாடை.* (பாயி : 18)

**கன்னப்பூ** – காதிலணியும் பூ. *கோதில் கன்னப்பூக் கருல.* (பா : 1218)

**கன்னம்** – 1. காது. (பா : 1218)

2. பெருமை. புகழ் கனம் என்பது இரட்டித்தது. *வானுளோ ரவ ரொடும் மாறு கோடல் கன்னமன்று.* (யுத் : 110) [பா : பே]

**கன்னல்** – 1. சர்க்கரைப் பாகு. *கன்னலின் கருப்புச் சிலை.* (பா : 708)

2. நாழிகையை அளவிட்டுக் காட்டும் வட்டிகைக் கருவி. *கன்னலின் மணவோலைக் கடிகைகள் தெரிவாரும்.* (பா : 1275)

3. நாழிகை. *கன்னலொன்றில் ஓர் காலினின் வேலையைக் கடந்தான்.* (யுத் : 2481)

4. கரும்பு. *கன்னற் றோளான்.* (யுத் : 4297)

**கன்னல் தோளான்** – கரும்பைப் போன்று அழகிய தோளையுடையவன். இட்சுவாகு. (யுத் : 4297)

**கன்னி** – 1. கன்னிகை. மணமாகாத இளம்பெண். *கன்னி யமிழ்தத்தை எதிர்கண்ட கடல்வண்ணன்.* (பா : 1231)

2. அழியாமை. *கன்னி நன்னகர் நிழல் கதுவலாலரோ பொன்னுல காயது.* (பா : 132) *கன்னி ஆரை.* (சு : 116)

3. கன்னியா குமாரி. *கங்கையே முதலவாய கன்னியீறுன தீர்த்தம்.* (அ : 262)

4. இளமை. *கன்னி நன் மயில்களும் குயிற் கணங்களும்.* (அ: 473) *கன்னியன்னார்.* (கி : 23)

5. காவல். (உ. வி) *கன்னி ஆரை.* (சு : 116)

6. புதுமை. *கன்னி நெடு மாநகரம் அன்னதெதிர் கண்டார்.* (கி : 855)

**கன்னி அன்னம் – இள அன்னம்.** *கன்னி யன்ன பூங் கமலமு முதலிய கண்டான்.* **(**கி **: 23)**

**கன்னிதானம் - கன்னிகாதானம்.** *கன்னிதானம் கபிலையின் தானமே.* (பா *: 17)*

**கன்னி நன் மயிலன்னார் – இளம் பருவமுள்ள அழகிய மயிலை ஒத்த சாயலையுடையரான மகளிர்.** *(யுத் : 2773)*

**கன்னி நன் மனை – கன்னி மாடம்.** *கன்னி நன் மனையிற் கமழ் சேக்கையுள்.* **(**பா *: 645***)** [பா : பே]

**கன்னி நன்னகர் – 1. அழியாத நல்ல நகரம். அயோத்தி.** *கன்னி நன்னகர் நிழல்.* **(**பா *: 132***)** **மிதிலை.** (பா *: 1267***)**

**2. அழியாத நல்ல வீடு.** (கலா) **சிறந்த கன்னிமாடம்.** (அன்) **அழகிய கன்னிமாடம்.** (வை. மு) *கன்னி நன்னகரிற் கமழ் சேக்கையுள்.* **(**பா *: 645***)**

**கன்னி நீக்கருங் கங்கை–அழியாத்தன்மை நீங்காத கங்கை. அழியாத் தன்மையாவது என்றும் வற்றாது பாயும் நீர்ப்பெருக்குடைமை. (**அ*: 634***)**

**கன்னிப்போர் – முதற்போர்.** *காகுத்தன் கன்னிப்போரில். (பா : 417)*

**கன்னிம்மாடம் - கன்னிகையானவள் வாழும் மாடம். (அண்) கன்னிம்** *மாடத்தும்பரின் மாடே.* **(**பா *: 586***)**

**கன்னி மாடம் – கன்னிகையர் உறையும் மாடம்.** *அன்னமாடுந் துறைக் கருகு நின்றாளையக் கன்னி மாடத்திடைக் கண்டதும் கழறுவாய்.* **(**கி **:** *810***)**

**கன்னி மாநகர் – அழியாத பெரிய நகரம். இலங்கை.** *கன்னிமாநகர்ப் புறத்தவன் கரந்துறை காண்பான்.* (சு *: 240)*

**கன்னிமா மதில் – 1. அழிவில்லாத பெரிய மதில்.** *கன்னி மாமதில் நகர். (யுத் : 840)*

**2. உள்ளே புகமுடியாத பெருமதில்.** *கன்னி மாமதில் எறிந்த அக்குமரன். (பா : 622)*

**கன்னிமார் – இள மங்கையர்.** *சேற்றிளமரை மலர் சிறந்த வாமெனக் காற்றளம் பொலிதரு கன்னிமாரோடு.* **(**அ *: 962***)** **(**பா **:** *1294***)**

**கன்னியமிழ்தம் – அமிழ்தமான கன்னியாகிய சீதாபிராட்டி.** *கன்னி யமிழ்தத்தை எதிர்கண்ட கடல்வண்ணன். (பா : 1231)*

**கன்னியர் – இள மகளிர்.** *கன்னியர் துயின்றார்.* **(**அ*: 542***)** (பா*: 1262)*

**கன்னியருந்ததி – அருந்ததிபோன்ற இளமங்கை** *கன்னியருந்ததி காரிகை காணு. (பா : 1340)*

**கன்னியன்னம் - இள அன்னம்.** (கி : 23)

**கன்னியாரை - அழிவில்லாத மதில்.** (அண்) (வை. மு) **காவல்மிக்க மதில்.** (கலா) *கன்னியாரையின் ஒளியினிற் கண்வழுக்குறுதல்.* (சு : 116)

**கன்னியை அழிசெயல் - மணமாகாத பெண்ணைக் கற்பழித்தல்.** *கன்னியை அழிசெயக் கருதினேன்.* (அ : 902)

**கன்னெடு மாரி - பெரிய கல்மழை.** *கன்னெடு மாரி பெய்யக் கடையுகத் தெழுந்தமேகம்.* (பா : 414)

**கன அந்தகாரம் - திணிந்த இருள். மிக்க இருள்.** *அம்பும் அனலும் நுழையாக் கன அந்தகாரம்.* (ஆ : 701)

**கனக்கரியான் - திருமால். மேகம்போன்ற கரியன்.** *தாழ்வது கனக் கரியானது கைத்தலமென்னின்.* (பா : 445)

**கனக் கருவிமேகம் - செறிந்த கருமை நிறம்வாய்ந்த மேகம்.** (அண்) **நிறைந்து கனத்துள்ள கரிய மேகம்.** (யுத் : 1605)

**கனகக்கிரி - மேருமலை.** *கனகக்கிரி வெயில் சுற்றிய தொத்தான்.* (யுத் : 2509)

**கனகக் குன்றம் - பொன்மலை.** *கருவரை கனகக்குன்றம் என்னலாங் காட்சிதந்த இருவர்.* (யுத் : 1381)

**கனக கும்பம் - பொற்குடம்.** *கொங்கையை நிகர்த்தன கனக கும்பமே.* (அ : 127)

**கனகத்தாரை- பொன்போன்ற ஒளிக்கற்றை.** *கனகத்தாரைக் கோபுரம்.* (யுத் : 3598)

**கனக தீரம் - பொன்போல் விரும்பத்தக்க கரைகள்.** *திரண்மணிக் குப்பையும் கனக தீரமும்.* (யுத் : 333)

**கனக நாஞ்சில் - பொன்னாற் செய்யப்பட்ட மதிலுறுப்பு. மதில் மேலிருந்து அம்பெய்யும் புழை** *கடிபொழிற் கனக நாஞ்சில்.* (சு: 3)

**கனக நாண் - பொன் கயிறு பொன் சரடு.** *கொங்கைத் துயல்வரு கனக நாணும்.* (யுத் : 2788)

**கனக நீடிலங்கை - நீடு இலங்கை கனகம் - பெரிய இலங்கை நகரமாகிய பொன்.** *கனக நீடு இலங்கை நின்றுருகக் காண்டியால்.* (சு : 665)

**கனக நுண்தூளி - நுண்ணிய பொன்துகள். பொன்னின்றுதிர்ந்த நுட்பமான துகள்.** *கனக நுண்தூளி ஒட்டலான்.* (கி : 810) (பா : 1125)

**கனக நுண் பராகம்** – நுண்ணிய பொன் துகள். *கனக நுண் பராகம் பாடுற.* (கி : *831*)

**கனக நுண் பூழி** – நுண்ணிய பொன் துகள் *கனக நுண் பூழி ஒட்டலான்.* (கி : *830*) [*பா : பே*]

**கனக நூபுரம்** – பொன்னாலாகிய காற்சிலம்பு *கனக நூபுரங்கை வளையோடுக.* (*பா : 1174*)

**கனகம்** – 1. பொற்காசு.

2. பொன். *கனக நீடிலங்கை.* (*சு: 665*) *கனகத்தண்டு.* (*யுத்: 3071*) *கதிரவன் சிறுவனாய கனகவாள் நிறத்தினானை.* (*ஆ: 1185*)

**கனக மாரி** – பொன் மழை *தூர்த்தன கனகமாரி.* (*யுத் : 455*)

**கனக மால்வரை** – 1. பொன்மயமான மேரு மலை *திரிதலைச் சிறுவன் தன்னைக் காணிய விரைவிற் செல்லும் கனக மால்வரையும் ஒத்தான்.* (*சு : 27*)

2. பொன்மயமான பெரிய மலை. (சித்திரகூட மலை) *அந்தச் சந்தனஞ் செறிந்த கனக மால்வரை.* (*அ : 737*)

**கனக மான்** – பொன்மான். *ஒட்டிய கனகமான் உருவமாகிய சிட்டனும்.* (*யுத் : 373*)

**கனக ராசி** – பொன் குவியல். பொன் திரள். *கவிகள் தம் மனையெனக் கனக ராசியும் சவியுடைத் தூசும்.* (கி : *852*)

**கனக வான் கிரி** – பொன்மயமான பெரிய மேருமலை. *ஒத்துயர் கனக வான் கிரியின் ஓங்கிய.* (*சு : 590*)

**கனக வாள் நிறத்தினன்** – பொன்போன்ற ஒளி பொருந்திய நிறத்தை யுடையவன். சுக்கிரீவன். *கதிரவன் சிறுவனாய கனகவாணிறத்தினானை.* (*ஆ : 1195*)

**கனக வூசல்** – பொன்னூஞ்சல். *கமுகவாரி நெடுங் கனக வூசல்.* (கி : *912*)

**கனக வெற்பு** – மேரு *உடற் கனக வெற்பு.* (*யுத் : 852*)

**கனகன்** – இரணியன். *மீனுடை எயிற்றுக் கங்குற் கனகன்.* (பா: *975*) *கனகனை முருக்கிய முரட்சியம்.* (*சு : 302*) (யுத்: *164*) (யுத் : *253*)

**கனங்கனம்** - மிகுதியாக. *மும்மடி கனங்கன மிடையிடை களிக்குங் கள்வனாய்.* (*பா : 1101*)

**கனங்குழை** – 1. கனமான குழை. *கனங்குழை கேகயன் மகள்.* (*அ : 984*)

2. கனவிய குழையையுடையாள். *ஆங்கோர் கனங்குழை கள்ளி னுள்ளால் வெளிப்படுகின்ற காட்சி வெண்மதி நிழலை நோக்கி.* (*பா : 1060*) (*சு : 295*)

**கன சினம் - மிக்க சினம். மேகத்தின் சினமுமாம் உக்கிரம்.** *கன சினத் துருமிற் கடுங்கார்வரை பனசனிட்டன யாவும்.* (யுத் : 662)

**கனத்தல் - பருத்தல்.** *கனத்த கந்தமும் காயுங் கனிகளும்.* (யுத்: 4127)

**கனத்திடை உருமு - மேகத்தில் தோன்றும் இடி.** *கனத்திடை உருமின் வெருவருங் கவண்கல்.* (பா : 104)

**கனத்தின் நிறத்தான் - மேகவண்ணனாகிய இராமன்.** (யுத் : 2630)

**கனந்தலை வருகுழல் - மேகத்தின் தன்மை முக்கியமாக அமையப் பெற்ற கூந்தல்.** *கனந்தலை வருங்குழல் சரிந்து.* (ஆ : 601)

**கனம் - 1. மேகம்.** (ஆ: 601) *கனத்தின் நிறத்தான்.* (யுத் : 2630)

**2 பெருமை.** *கடலுறு மத்திதென்னக் கனவரை திரியுங்காலை.* (சு : 11)

**3. திணிவு.** *அம்பும் அனலும் நுழையாக் கன அந்தகாரம்.* (ஆ: 701) *கன மலைக்குலமும்.* (யுத் : 3639)

**4. சிறப்பு.** *கனப் படை வரிசிலைக் காளை நீர்கள் யார்.* (ஆ : 192)

**5. பருமை.** *கனத்த கந்தமும்.* (யுத் : 4127) *கனத்தினுற் கடந்த பூண் முலையகைவளை.* (யுத் : 4042)

**6. பொன்.** (உ. வி) (யுத் : 4024)

**7. நிறைவினுல் ஆய கனம்.** *கனக் கருமேகம்.* (யுத் : 1605)

**8. திண்மை. நிறையுடைமை.** *கனத்தினுற் கடந்த பூண் முலைய கைவளை.* (யுத் : 4003)

**கனமலைக்குலம் - திண்மை வாய்ந்த மலைக்கூட்டம்.** (யுத் : 3639)

**கனல் - தீ. நெருப்பு.** *கற்பின் கனலியைக் கண்ணிற் கண்டாள்.* (ஆ : 282) *கனலெழக் கலக்கக் கண்டும்.* (யுத் : 434)

**கனல் சிகை-தீச்சுவாலை**-*சிகை நிறக்கனல் பொழி தெறுகட் செக்கரான்.* (யுத்: 2283)

**கனல்தல் - 1. அழற்றுதல்.** *கனலும் கண்ணன.* (யுத் : 1784)

**2. எரிதல்.** *கனல்வ.* (பா : 615) (பா : 1015)

**3. கோபித்தல்.** *கன்ல்கின்ருரை.* (சு : 206)

**கனல் துறை - அக்கினியிடம்.** *கற்றிலம் அரசன் வேள்வி கனல் துறை புலையற் கீவான்.* (பா : 676)

**கனல் பொத்துதல் - தீயை வளர்த்தல்.** *கதுமெனக் கனல் பொத்தித் தள்ளுமின்.* (யுத் : 214)

**கனல் முழுகல் - கனலின் நடுவில் நிற்றல்.** *வெங்கனல் முழுகியும் புலன்கள் வீக்கியும்.* (சு : 401)

**கனல்முன் கைப்பிடித்தல் - அக்கினி சாட்சியாகப் பாணிக்கிரகணம் செய்தல்.** *மேவிக் கனல்முன் மிதிலைத்தலை என்பாவிக்கை பிடித்தது.* (*யுத் : 2257*)

**கனல்வ - எரிந்துபோயின.** *இழையும் மாலையும் கரிகுவ தீகுவ கனல்வ.* (*பா : 615*)

**கனல்வு - கோபம்.** *இங்கு நின்வர வென்னையெனக் கனல்வெய்த.* (*சு : 683-a*)

**கனல் வெங்கதிரவன் படை - அழன்று வீசும் வெம்மையான கதிர்களை யுடைய சூரியனது படைக்கலம். சூரியாஸ்திரம்.** (*யுத் : 3021*)

**கனல - கோபிக்க** *கங்கைவார் சடையோன் அன்ன மாமுனி கனல.* (*பா : 1015*)

**கனலரசு - அக்கினிதேவன்.** *ஏகவெங் கனலரசு இருந்த காட்டினில்.* (*பா : 353*)

**கனலரசிருத்தல் - அக்கினிதேவன் அரசாட்சி செய்தல்.** (*பா : 353*)

**கனலி - 1. அக்கினிச் சுவாலையுடையவள்.** *கற்பின் கனலி.* (*ஆ: 282*)

**2. நெருப்பு.** *கற்றை வெங்கனலி.* (*சு : 1171*) (*யுத் : 572*) (*யுத்: 2276*)

**கனலுதல் - கடுங்கோபங் கொள்ளல். உக்கிரங் கொள்ளல்.** *கனன்று சொன்னாள்.* (*சு : 445*) (*சு : 470*) [*பா : பே*] *காமத்தாற் கனலும் வெந்தீ.* (*ஆ : 663*) *கனன்றார்.* (*யுத் : 2317*) *கனற்ற.* (*அ : 160*)

**கனலுறுதல் - தீயிடையகப்படல்.** *ஊழிவெங்கனல் உற்றனள் ஒத்தும்.* (*ஆ : 309*)

**கனலெனும் புனல் - அக்கினி என்று சொல்லத்தக்க நீர்.** *பொங்கு வெங்கனலெனும் புனலிற் போயினர்.* (*யுத் : 569*)

**கனவரை - 1. பெரிய மலை. பருமையுடைய மலை** *வெயிலியங்கும் கனவரையும்.* (*கி : 766*) (*யுத் : 2466*)

**2. மகேந்திர மலை.** *கடலூறு மத்திதென்னக் கனவரை திரியுங் காலை.* (*சு : 11*)

**கனவல்லி - கால் விலங்கு.** *செய்தொடர்க் கனவல்லியும் புரோசையும் சிந்தி.* (*சு ; 1218*)

**கனவு - கனா.** *துயில்கெடக் கனவு மாய்ந்தால் ஒத்தது சூழ்ந்த மாயை.* (*யுத் : 2384*) (*யுத் : 2647*)

**கனற் கடவுள் - அக்கினிதேவன்.** *காயின் வெங்கனற் கடவுளும் இரவியுங் கரியும்.* (*கி : 726*)

**கனற்றலை நெய் சொரிதல் - நெருப்பில் நெய் சொரிதல்.** *காய் கனற்றலை நெய் சொரிந்தெனக் கதங்கனற்ற.* (*அ : 160*)

**கனற்றுறை - கனல்துறை. அக்கினியிடமாக.** (*பா : 675*)

**கனி - 1 இனிய (சுவையுள்ள) பாடல்.** *காதைகள் சொரிவன கவி நுகர் கனிகள்.* **(பா : 82)**

**2. கொவ்வைக்கனி.** *கனிவாய்.* *(அ : 343)*

**3. பழ வகைகள்.** *காலமின்றியுங் கனிந்தன கனி.* *(அ : 733)*

**கனித்த இன் களி - முதிர்ந்த இனிய மகிழ்ச்சி** *கனித்த இன் களி கள்ளினிற் காட்டுமோ.* *(யுத் : 3943)*

**கனிதல் - 1. சுவை முதிர்தல்.** *காமரங் கனிந்தென.* **(அ : 494)** *கனித்த இன் களி.* *(யுத் : 3943)* *கனிந்த இன் சொல்.* **(ஆ : 628)**

**2. சிவத்தல்.** *கள்ளூறக் கனிந்த பங்கியரக்கர்.* **(சு : 132)**

**3. உரிய பக்குவமடைதல். தழல் மிகுதல். (அண்)** *கனிந்துயர் கற்பெனும் கடவுள் தீயினுல்.* **(யுத் : 4009)**

**4. அமைதல்.** *பண் கனிந்தொழுகு பாடல்.* *(அ : 239)*

**கனிந்த இன் சொல் - இனிமை மிக்க சொல்.** *கள்ளெனக் கனிந்த இன் சொல்.* **(ஆ : 628)**

**கனிவருங் காலம் - கனி தோன்றுங்காலம்.** *கனிவருங் காலத்தைய பூக்கொய்யக் கருதலாமோ.* **(யுத் : 1370)**

**கனிவாய் விடம் - கொவ்வைக் கனிபோன்ற வாயில் உள்ள நஞ்சு. (எயிறு ஊறிய நீர்)** *கனிவாய்க் கனிவாய் விட நான் நெடுநாள் உண்டேன்.* *(அ : 343)*

**கனிவு - முதிர்ச்சி.** *கனிவு ஆய்க் கனிவாய் விடம்...... உண்டேன்.* **(அ : 343)**

**கனைகடல் - ஒலிக்கின்ற கடல்.** *கனைகடல் உலகம்.* *(யுத் : 783)* *கனைகடல் நெடுநிலம் காவல் ஆழியின்.* **(ஆ : 193)** *இராக்கதர் சேனையென்னும் கனைகடல்.* **(யுத் : 1390) (சு : 341)**

**கனைத்தல் - ஒலி யெழுப்புதல். பேசுதல்.** *கனைக்குந்தோறும் உதிரங்கள் கக்குவார்.* *(யுத் : 746)*

**கனைதல் - 1. ஒலித்தல். முழங்குதல்.** *கரை பொரு கனைகடல்.* *(கி : 951) [பா : பே] (யுத் : 3497)*

**2. மிகுதல்.** *வேதனை கனைய.* **(யுத் : 2869)** *கனைவரு கடுஞ்சினம்.* **(ஆ : 121)**

**3. நெருங்கல். செறிதல். (உ. வி)** *(யுத் : 2869)* *கனையும் மேட்டுயர் கருங்கல் ஓர் வெள்ளிடைக் கண்டார்.* *(பா : 547)* *கனையிருள் கதுவிட.* *(யுத் : 3760)*

**கனைய வேதல் - மிகவும் வேதல்.** *கனைய வெந்த தீ.* *(யுத் : 2869)*

**கனைவரு கடுஞ்சினம் - மிகுதியாக வருகின்ற கோபம். கடுங்கோபம்.** *கனைவரு கடுஞ்சினத் தரக்கர் காய.* *(ஆ : 121)*

# கா

**கா - 1. காத்தண்டு. இரு முனையிலும் சுமை கோக்கப்பட்ட கழி.** *பரித்த காவினர் பப்பரர் ஏகினர்.* (பா : *853*)

**2 சோலை.** *கள்ளொழுகுங் காவு மழுத.* (அ : *395*)

**3. காவல்.** *காத்துறு சோலை.* (சு : *197*)

**4 காப்பாயாக.** என்கிலை இது கா என் ஏவலின் இனிதென்றான். (அ : *688*)

**5. தடுப்பாய்.** *கா அடா இதுவல்லையேல்.* **(ஆ : *528*) (யுத் : *2031*)**

**6. காப்பு.** *பொலன் காமணித் தேரும்.* **(பாயி : *28*)**

**7. காத்தல்.** *காவார் கரி.* **(யுத் : *1691*)**

**8. கற்பகச் சோலை** - *கருமேக நெடுங்கடல் கா அனையான்.* (சு: *491*)

**காக்குதல் - பாதுகாத்தல்.** *தருதல் காக்குதல் தவிர்த்த லென்றிவை செயத்தக்கான்.* **(யுத் : *182*)** காக்குதி உலகம். (அ : *937*)

**காக்குநர் - 1. பாதுகாப்பவர்.** காக்குநர் இன்மை தண்ட கலக்கத்தால். (யுத் : *3317*) (கி : *1008*)

**2. காத்தற்குரிய துணையாளர்.** கணையுலாஞ் சிலையினீரைக் காக்குநர் இல்லையேலும். (ஆ : *1192*)

**காகை - காகம்** *அற்காக்கை கூகையைக் கண்டஞ்சின வாமென அகன்றார்.* **(பா : *772*)**

**காக துண்டம் - அகில். காக்கையின் மூக்குப்போன்று காணப் படுதலால் இப்பெயர் பெற்றது. (துண்டம் - மூக்கு)** காகதுண்ட *நறுங் கலவைக்கனி.* (பா : *1035*)

**காக நெடுங்களி யானை - காகங்கள் சூழப்பெற்ற மதக்களிப்புப் பொருந்திய யானை.** (யுத் : *2279*)

**காகப் பந்தர் - காகமிட்ட பந்தர். மாமிசம் மிக்க இடங்களில் காகங்கள் பந்தரிட்டாற்போலப் பறத்தல் இயல்பு.** காகப்பந்தர்ச் *செங்களம்.* (யுத் : *3548*)

**காகம் - காக்கை.** *சென்னங் காகங் குனலஞ் சிலம்புமே.* (சு : *246*)

**காக மணி - காகத்தின் கண்ணிற் கருமணி. காகாசுரன்.** *காலிற் செல்லும் காகமணிக்கும்.* **(யுத் : *2608*)**

**காக மாடு களம் - காகங்கள் பிணத்தையுண்டு ஆடுகின்ற களம். காகங்கள் விளையாடுகின்ற போர்க்களம்.** காகமாடு களத்திடைக் *காண்பனே.* (யுத் : *3164*)

**காகளம் - எக்காளம் என்னும் ஊது கொம்பு.** காகளமும் பல்லியமும் *கனைகடலின் மேன் முழங்க.* (பா : *237*)

**காகாதிகள் – காகம் முதலிய பறவைகள்.** ஆகாய மளந்து விழுந்த தனைக் காகாதிகள் நுங்குதல் காணுதியால். (யுத் : 1758)

**காகுத்தன் – இராமபிரான். ககுத்தன் மரபில் தோன்றியவன்.** காகுத்தன சரம் உந்திய சிரமே. (ஆ : 458) (ஆ : 851) (சு : 322) காகுத்தன் பகழி. (யுத்: 1240) காகுத்த வேடங்காட்டி. (யுத்: 1368)

**காசடை – அடைகாசு. அடியில் தங்கிய மணி முதலியன.** காசடை விளங்கிய காட்சித் தாயினும். (கி : 9)

**காசம் – ஆகாசம். முதற்குறை.** மேல் வானமான காசம். (யுத்: 2695)

**காசிபன் – ஒரு முனிவன். வாமனனைப் பெற்றவன்.** கால நுனித் துணர் காசிபனுக்கும் வாலதிதிக்கும் ஓர் மா மாமகவாகி. (பா : 439)

**காசின் கல் – இரத்தினக்கல்.** அவிரொளிக் காசின் கன்னிறக் கற்றை. (சு : 419)

**காசினம் – மணிவகை.** பல்லாயிர மாயிரம் காசினம் பாடிமைக்கும். (சு : 49) (யுத் : 688)

**காசினி – பூமி.** காயு மற்கடங்களாகிக் காசினி யதனின் மீது போயிட. (பா : 207)

**காசு – 1. மணிகள். இரத்தினம்.** காசுலாங் கனகப் பைம்பூண் காகுத்தன். (பா : 417)

2. **பவழமணி.** பொன்னெடுங் காசை நீட்டிக் கொடுப்பதே போன்றதம்மா. (கி : 474)

3. **மணிமாலை.** காசொடு முடியும் பூணும். (பா : 674)

4. **முத்து.** காசடை விளங்கிய காட்சித் தாயினும். (கி : 9)

5. **அழுக்கு.** காசுண்ட கூந்தலாள். (சு : 397)

6. **பொன்.** வயங்கு நுண் தூசொடு காசும். (சு : 422)

7. **மறு. குற்றம்.** காசறு பவளச் செங்காய். (பா : 573)

8. **பொற்காசு மாலைகள்.** காசலம்பு முலையவர். (பா : 12)

**காசுலாங் கனகப் பைம்பூண் – இரத்தினங் கிடந்து அசைகின்ற பொன்னாலாகிய அணிகள்.** (பா : 417)

**காசை – 1. காயா மரம்.** (மலர்) (அண்) (கலா) காசையிற் கரியவற காண மூண்டெழும் ஆசை. (அ : 960)

2. **குற்றம்.** (வை.மு) (அ : 960)

**காசையிற் கரியவன் – காயாம் பூப்போன்ற கரிய நிறமுடையவன். இராமன்.** (அண்) (கலா) **குற்றமற்ற இராமபிரான்.** (வை. மு) (அ : 960)

**காஞ்சி – மேகலே.** *துயல்வரு கனக நாணும் காஞ்சியும் துகிலும் வாங்கி.* (*யுத் : 2788*)

**காட்சி – 1. தோற்றம்.** *தெங்கிள நீரெனத் தெளிந்த காட்சிய.* (*அ : 970*)

**2. அறிவு. தன்மை.** இல்லாத...... கல்லாத கலேயும் வேதக் கடலுமே என்னுங் காட்சி சொல்லாலே தோன்றிற்றன்றே. (கி : *61*)

**3. தரிசித்தல். காணுதல்.** *தாழ்ச்சியிற் பொருள்தரும் தரும மூர்த்தியைக் காட்சியே இனிக்கடன்.* (யுத் : 325) *காட்சியும் உற்றிலம்.* (*கி : 949*)

**4. உணர்வு.** *கருமத்தாலன்றிக் காரணத்தாலுள்ள காட்சி* (*யுத் : 182*)

**5. அழகு.** *காட்சிக் கரை காணுர்.* (*பா : 588*)

**காட்சிக் கரை – அழகின் எல்லே.** (*பா : 588*)

**காட்சிக் கையுற வெய்தல் – காட்சிப் பிரமாணத்திற்கும் சந்தேகம் உண்டாதல்.** *இருவர் செய்கை காண்பரிதென்று காட்சிக் கையுற வெய்திற்றன்ருே.* (*யுத் : 2057*)

**காட்சி கொள்ளல் – காணுதல்.** *காணுமேற் காட்சி கொள்வான்.* (*யுத் : 249*)

**காட்சியே கடன் – தரிசித்தலே இப்பொழுது செய்யவேண்டிய தொழில்.** (*யுத் : 325*)

**காட்டல் – ஆதல்.** *இழையும் மாலேயும் கரிகுவ தீகுவ கனல்வ காட்டலால்.* (*பா : 615*)

**காட்டலே யென்னின் – காண்பிக்காமற் போனுல்.** (*சு : 575*)

**காட்டாதன காட்டுதல் – பிறரால் செய்துகாட்ட முடியாத அருஞ் செயல்களேச் செய்துகாட்டுதல்.** (வை. மு) **காட்டாத துன்பங்களே யெல்லாம் காட்டுதல்.** (அண்) *காட்டாதன காட்டிய தாதையைச் சென்று கண்டான்.* (*யுத் : 1955*)

**காட்டிக் காண்டிர் - எடுத்துக் காட்டுங்கள். நிரூபித்துக் காட்டுங்கள்.** *முறைமையால் நிலம் காத்தவர் உளரெனில் காட்டிக் காண்டிரால்.* (*அ : 943*)

**காட்டித் தருதல் – காட்டிக் கொடுத்தல். காணும்படி முன்னே கொணர்தல்.** *சிறிது போர் ஆற்ற வல்லான் தம்பியைக் காட்டித் தாரீர்.* (*யுத் : 2988*)

**காட்டியது – உண்டாக்கியது.** *கேடில் தவம் இன்னே காட்டியது வீடேன.* (கி : *873*)

காட்டு - 1. **வரவிடு.** *பின் எம்பாற் காட்டென உணர்த்தி வாழ்த்தி. (யுத் : 2717)*

2. **காண்பி.** *காட்டென்று எழுந்தான்.* (*ஆ : 375*) (*கி : 148*)

காட்டுதல் - 1. **தருதல். கொடுத்தல்.** *கருதின கருதின காட்டுகின்றது. (யுத் : 197) காட்டலை யென்னின்.* (*சு : 575*) *ஊழி காட்டுவென் என்றுரைத்தேனது வாழி காட்டு மென்றுண்டு.* (*சு : 1076*) *காட்டுக. (அ : 441)*

2. **காண்பித்தல்.** *ஆழி காட்டி. (சு : 1076) காட்டுமேல்.* (*யுத் : 249*) *காட்டலை. (யுத் : 4028*) *காட்டுதி.* (*கி : 65*) *காட்டலை யென்னின்.* (*சு : 575*)

3. **படைத்தல்.** *காவல் காட்டுதல் துடைத்தல் என்றித் தொழில் கடவ மூவரும்.* (*யுத் : 139*) *காட்டுவாய் உலகங் காட்டிக் காத்தவை கடையிற் செந்தீ ஊட்டுவாய். (யுத் : 603) கூற்றுங் கலந்து கால் கரமும் காட்டி.* (*யுத் : 938*) *காட்டுதி. (யுத் : 4028) காட்டவும். (யுத் : 4028)*

4. **தோற்றுவித்தல்.** *மின்னைக் காட்டுதல் போல்வந்து. (யுத்: 4028)*

5. **செய்வித்தல்.** *இறுதியுங் காட்டுதி. (யுத்: 4028) வழி காட்டும்.* (*சு : 1076*)

6. **அளித்தல்.** *ஆருயிர் காட்டினுய்க்கு ஊழி காட்டுவென் என்றுரைத்தேன். (சு : 1076) காட்டுகின்றது. (யுத் : 197)*

7. **எடுத்துக்காட்டல். தெரியச் சொல்லுதல்.** *சீலமுங் காட்டி. (யுத் : 3976)*

8. **உலகறியுமாறு செய்தல்.** *கணவன் சேவகக் கோலமுங் காட்டி என் குலமுங் காட்டி.* (*யுத் : 3976*)

9. **நிலைக்குமாறு செய்தல்.** *ஞாலமுங் காட்டிய கவிக்கு.* (*யுத்: 3976*) *என் ஆருயிர் காட்டினுய்க்கு. (சு : 1076)*

10 **உண்டு பண்ணல்.** *காலமுங் காட்டுங் கொல். (யுத் : 3976)*

11. **அறிமுகஞ் செய்தல். அறிவித்தல்.** *ஆரணங் காட்டமாட்டா அறிவினுக் கறிவும். (சு : 1121) இன்னுயிர்த் துணைவர் தம்மைக் காட்டினன். (யுத் : 4270)*

12. **பெறுதல்.** *அரும்பழி காட்டினுய்.* (*சு : 1076*)

13. **நுகர்வித்தல்.** *கருதின கருதின காட்டுகின்றது. (யுத் : 197)*

14. **அறிவுறுத்தல்.** *கண்டு காட்டுவார். (யுத் : 270)*

15. **பொருந்துதல்.** *நீலங் காட்டிய கண்டன். (யுத் : 3162)*

**16. ஐயமறத் தெளிவித்தல்.** பின்னைக் காட்டுவ தரிதென எண்ணி. (யுத் : 4042)

**காட்டும் - கொடுமின்.** அவை காட்டுமின் என்ருன். (அ : 441)

**காட்டுவல் - காட்டுகின்றேன்.** யானே காட்டுவல் எழுக என்ருன். (அ : 1030)

**காட்டுவாயாதி - காட்டுபவனுகக் கடவாய்.** எங்கோனை நீ காட்டு வாயாதி. (சு : 975)

**காடு - 1. திரள்.** தாமரைக் காடு பூத்து. (பா : 192)

**2. வானம். நெருக்கம்.** காடுகொண்ட காருலவைகள். (ஆ : 448)

**3. கூட்டம்.** தொங்கற் குழாங்களும் கொடியின் காடும். (பா: 871)

**4. தொகுதி.** ஏலுங்காட்டின் எதிர்ந்த படையெலாம். (யுத்: 3162)

**காடுறை வாழ்க்கை - காட்டில் தங்கும் வாழ்க்கை.** அரும் பெரும் கவசமாயது காடுறை வாழ்க்கை அக்கண்ணன் நண்ணலே. (அ : 983)

**காடெல்லாம் நாடாதல் - மக்கள் உடன் செல்லுதலால் காடு நாட்டைப் போலாதல்.** யாரும் உறையவே புற்றுடைய காடெல்லாம் நாடாகிப் போம் என்ருர். (அ : 404)

**காடை - ஒரு பட்சி.** இழை புரையுங் காம்பிரை ஊர்க்குருவி சிவல் காடை முதல் பிறவும் ஈன்ருள். (ஆ : 203)

**காண் - 1. அறிவாய்.** உடுப்பதுவும் உண்பதுவும் இன்றி ஒழியுங் காண். (பா : 451)

**2. அசை.** அலகில் பல் பொருளும்பற்றி முற்றிய அரிகாண் அத்தா. (யுத் : 250)

**காண்கலேன் - காணும் வலியுடையேனல்லேன்.** கரை சேரா இடர் வேலை காண்கிலேன். (கி : 393)

**காண்கிலம் - காணமாட்டோம்.**

**காண்கிலர் - காண சகிக்கமாட்டார்கள்.** கற்றவர் கற்றவர் உணர்வு காண்கிலர். (யுத் : 590)

**காண்கிலாத - காணமுடியாமல் இருப்பது.** கண்ணுளே இருந்த போதும் என்கொல் கண்கள் காண்கிலாதவே. (பா : 802)

**காண்குவர் - பார்ப்பார்கள்.** மதியினை வாங்கி ஒப்புக் காண்குவர். (பா : 933)

**காண்குறும் - 1. அடைதற்குரிய.** வீடு காண்குறுந் தேவர். (சு : 120)

**2. காணும்.** ஆரமாமுடிக் கோலமும் செவ்வியும் அழகும் யாம் காண்குறும் அளவையும் தொடர்ந்து பேரவே அருள். (யுத் : 4074)

**காண்டகு - காண்தகு. காணத்தக்க** அழகிய. காண்டகு குமரர். (பா : 458) மழவிடைப் பாகன் காண்டகுஞ் சடைக் கங்கையை நிகர்ப்பன காணுய். (அ : 749) காண்டகுந் தோகை. (சு: 2) [பா: பே] காண்டகு கொள்கை. (சு : 2)

**காண்டல் - 1. படைத்தல்.** கண்டிலாதன அயன் கண்டிலாதன கொலாம். (கி : 823)

**2. பார்த்தல்.** கண்டனன் காண்டலோடும் கருத்தின் முன் காலச் செந்தீ விண்டன கண்கள். (சு : 313) எய்தல் காண்டுங் கொல் இன்னம். (கி : 172) காண்குறேன். (கி : 959)

**காண்டி - 1. முன்னிலையசை.** எந்தை காண்டி இடரினுக்கு அங்குரம் முந்திவந்து முளைத்தன்றோ என்ருன். (அ : 789)

**2. பார்ப்பாய். காண்பாய்.** இனிக்காண்டி ஈண்டவர் துண்டம் வீழ. (பா : 466) யானே இன்று முடிக்குவென் காண்டி. (பா: 661) (அ : 190)

**காண்டும் - காண்போம்.** காதலிந்திர சித்துவை இனி யாண்டுக் காண்டும். (யுத் : 3255) (கி : 172) (பா : 477)

**காண்டொறும் காண்டொறும் - காணுந்தோறும் காணுந்தோறும்.** கார்வானம் ஒப்பான் தனைக் காண்டொறும் காண்டொறும் போய் நீராயுகு கண்ணினும் நெஞ்சழிகின்ற நீரார். (அ : 440)

**காண்பார் - பொருள்களைக் காணும் ஆற்றலுள்ள அறிவுடையவர்கள்.** (ஆ : 1182)

**காண்பு - காணுதல். காண்பது.** ஒன்றேயுங் காண்பரிய தகையுங் காண்மின் காண்மின். (யுத்: 3569) காண்பு அரிதென்று. (யுத்: 2057)

**காண்பென் - உய்ந்தேன்.** என்னுயிர் காண்பென். (ஆ : 274)

**காண்மின் காண்மின் - பாருங்கள் பாருங்கள். அடுக்கு இகழ்ச்சி பற்றியது.** காற்றிடைக் கழித்துத் திர்த்தான் கலுழனும் காண்மின் காண்மின். (யுத் : 2248) கானகமுங் கடி பொழிலும் முறியீன்ற போன் றுளிர்வ காண்மின் காண்மின். (யுத் : 3564)

**காண்வரு - காணப்படுகின்ற.**

**காணப்படு பொருள் - காணப்படும் பொருளாக மட்டுமுள்ள அறிவு இல் பொருள்.** காண்பார்க்குங் காணப்படு பொருட்டுங் கண்ணுகி. (ஆ : 1182)

**காணலாதல் - காணக் கிடைத்தல்.** மீளவும் காணலாகுமாகின் ஆவி காணலாகுமே கொலாம். (பா : 796)

**காணலாவ தோர் காலம் - பார்க்கக் கூடுவதோர் காலம்.** கனிவாய் மதி காணலாவ தோர் காலமுண்டாங் கொலோ. (பா : 706)

**காணு தொழிதல் - மேற்கொள்ளாது போதல். கண்ணுற் காணுமல் இறந்தொழிதல்.** மரவற் கலையும் மானின் தோலும் அவை நான் காணு தொழிந்தேன் என்ருல். **(அ : 361)**

**காணி – 1. தனக்கே உரிய பொருள். காணியாட்சி.** காணியாகப் பண்டுடையனு மொருதனிக் கலுழன். **(யுத் : 1182)**

**2. ஆட்சிபுரியும் இடம்.** கண்ணனும் ஆளுங் காணி. **(யுத் : 2713)**

**3. விளை நிலம்.** காணியைப் பெண்மைக் கெல்லாம். **(யுத் : 3963)**

**காணிய – காணும்பொருட்டு.** ஐயன் வில்லிறுத்த ஆற்றல் காணிய அமரர் நாட்டுத் தையலார் இழிந்து பாரின் மகளிரைத் தழுவிக் கொண்டார். (பா : 790) அருளுங் கோலங் காணிய கிடந்த வேட்கை. **(யுத் : 1604)**

**காணுதல் – 1. விழிப்புடனிருத்தல்.** செயிரறு செல்வம் உன் காவலுக் குரிய தென்ருல் அன்னது கருதிக் காண்டி. (கி : 419)

**2. அடைதல். பெறுதல்.** மறுமை கண்ட மெய்ஞ்ஞானியர். **(யுத் : 548)** அயோத்தி கண்டான். **(அ : 585)**

**3. பிரத்தியட்சமாகப் பார்த்தல்.** அச்செய்கை காண்குறேன் நுந்துவென் உயிரினை. (கி : 954) காணின். (பா : 346) காணுந் தோறும். (பா : 792) காண்மின். (பா : 792) வேள்வி காணிய வந்தார் வில்லுங் காண்பார். **(பா : 720)** கண்டனென். **(சு : 1304)** கண்டிலன். (சு : 341) (பா : 890) காண்கிலம். (அ : 942) கண்டிலம். **(அ : 941)** கண்டிலர். **(யுத் : 1542)** ஏகுமின் காண்டிர் ஆங்கே. (கி : 1004) சிறுமை கண்டவர் பெருமை கண்டலல்லது தேருர். **(யுத் : 548)** நாடி நாம் காண்டும். **(சு : 571)** காணும். (பா : 777) காணேன். (ஆ : 355) கண்டிலையோ. (கி : 404) கண்டனன். (சு : 2)

**4. செய்தல்.** விடுதல் கண்டாய். **(யுத் : 1251)**

**5. உவம வுருபு.** கற்காணும் திண்மையான். (அ : 1018)

**6. அறிந்துகொள்ளுதல். (வை. மு) பார்த்தல். (அண்)** கண்டனன் காண்டலோடும். **(சு : 313)** கற்பம் பல சென்றது காணுதியால். **(ஆ : 91)** காக்குமா காண்டியாயின். (ஆ : 895)

**7. எண்ணுதல். ஆலோசித்தல்.** பெறலரும் இன்னுயிர்க் கருவு மாண்டறக் காணுதியோ. (யுத் : 4154)

**8. கட்டி அமைத்தல். நிருமித்தல்.** மான்முகத் தொருவன் நன்னுள் மண்டபம் வயங்கக் கண்டான். **(யுத் : 4307)**

**9. உள்ளத்தாற் கருதி நோக்கல்.** கண்டாள் கருணையைத் தன் கண் கடந்த தோளானை. (யுத் : 1670)

10. **செய்வித்தல்.** *நெடுங்களி யாட்டங் கண்டான். (யுத் : 2772)*

**காணும் - உவமவுருபு** *கற்காணுந் திண்மையான். (அ : 1018)*

**காத்தல் - 1. தடுத்தல்** *இமையோர் இடுக்கண் காத்த கழல் வேந்தை. (அ : 1) வார் காத்த வன முலையார். (பா : 736) வயிரக் குன்றைக் காத்திலன். (யுத் : 1420) காக்குநர் காமின். (அ : 412) காக்குதி. (யுத் : 1453) காத்து. (யுத் : 1375)*

2. **அணிதல்.** *தார் காத்த நறுங்குஞ்சித் தனயர். (பா : 736)*

3. **நிறைதல்.** *நீர் காத்த கடல். (பா : 738)*

4. **அளித்தல்.** *பார் காத்தற் குரியார். (பா : 738)*

5. **அணிதல்.** (வை. மு) *வார் காத்த வனமுலையார். (பா : 738)*

6. **தணித்தல்.** *இன்னே உன்னைக் கண்ணுறுமாயிற் பின்னை யாரவன் சீற்றங் காப்பார். (கி : 505)*

7. **பாதுகாத்தல்.** *மயிலன்னாளைக் காத்தனை இருத்தி. (ஆ : 798) காக்கிய வந்தனை. (யுத் : 1502)*

8. **காவற்றொழில் செய்தல்.** *எத்தனை காலம் காப்பல். (சு : 189) காமின். (யுத் : 355)*

**காத்திரம் - 1. யானையின் முன்னங்கால்.** *காத்திரங்களாற் றலத் தொடு தேய்த்ததோர் களிறு. (பா : 903)*

2. **உடம்பு. (கால்)** *இறை நின்றுழி நில்லாக் காத்திரத்தார். (யுத் : 828) கரங் கிடந்தன காத்திரங் கிடந்தன. (யுத் : 1537)*

**காத்து நல்குதல் - காத்தருளுதல்.** *காத்து நல்குமின் தெய்வதங்காள் என்றூர். (அ : 530)*

**காத்துறு கடை - காவல் செய்யப்பட்டமைந்த இடம்.** *காத்துறு கடைகள்தோறும். (சு : 196) [பா :பே]*

**காத்துறு சோலை - காவல்மிக்க சோலைகள்.** *காத்துறு சோலைதோறும். (சு : 196)*

**காதக் கடுங்குறி - காத தூரத்திலே உள்ள பொருளையும் விரைந்து குறித்தறிகின்ற.** *காதக் கடுங்குறி கணக்கிறுதி கண்ணாள். (சு : 77) [பா : பே]*

**காதங்கள் (காதம்) - காததூரம்.** *காதங்கள் கோடி கடை சென்று காணுநயனங்கள் வாரி கலுழ. (யுத் : 2197)*

**காதல் - 1. கொல்லுதல். (காதுதல்)** *ஓர் கறுவு காதலால் வந்தான். (அ : 1092)*

2. **மகன்.** *இந்திரன் காதல் மேல். (சு : 357) (அ : 333)*

3. பக்தி. காதல் என்தன் உயிர்மேலும் இக்கரியோன் பாலுண் டால். (பா : 749)

4. ஆசை. ஆவல். கண்ணினுற் காதலென்னும் பொருளையே காண்கிருேம். (பா : 1150) காதல் நடுக்குறு மனத்தன். (சு : 309)

5. அன்பு. விருப்பம். அனையாள் காதல் பொங்கிட. (அ : 59) காதல் என்பதுவுமோர் கள்ளின் தோற்றமே. (யுத்: 4173) (அ: 643)

**காதல் அருத்தி – பெரு விருப்பம்.** காதல் அருத்தியும் அரசின் மேற்றே. (யுத் : 413)

**காதல் கடாவிட – அன்பு தூண்ட.** கரை செயற் கரிய காதல் கடா விடக் கடிது சென்றுர். (பா : 1203)

**காதல் கூர்தல் – அன்பு மிகுதல்.** காதல் கூரப் பேழ்கணித் திரங்கு கின்ற. (கி : 53)

**காதல் நீர் – 1. அன்பினுல் ததும்புகின்ற நீர்.** நாமறத் தூய காதல் நீர் துளங்கு கண்ணினுன். (யுத் : 2764)

**2. அன்பைத் தோற்றுவிப்பதான அழுகை நீர். (வை. மு) அன்பினை வெளிப்படுத்தும் வெள்ள நீர். (அண்)** கண்களால் உகுத்த வெள்ளக் காதல் நீர் ஓடி ஆடற் கருங்கடல் மடுத்ததன்றே. (யுத் : 3186)

**3. அன்புச்சேர்க்கையாகிய இன்ப நுகர்ச்சி.** பருகுதிர் போலும் நும் காவி நாண்மலர்க் கண்ணியர் காதல் நீர். (கி : 595)

**காதல் பிடித்துந்துதல் - ஆசை பிடித்துத்தள்ளுதல்.** அமைப்பருங் காதல் முன் பிடித்துந்த அந்தரம் சந்திராதித்தர் இமைப்பிலர் திரிவர். (பா : 95)

**காதல் முதிர்தல் - விருப்பம் முதிரப்பெறுதல்.** இழைத்த பரிசெல்லாம் காண்டலதன் மேல் நெடிய காதல் முதிர்கின்றுர். (யுத் : 691) அருங் கேகயன் மகள்மேல் காதல் முதிரக் கருத்தழிந்தானு மென்பார். (அ : 400)

**காதல் மேவு நிதி – யாரும் ஆசைப்படுதற்குரிய செல்வம்.** மேவு காதல் நிதியின் வெறுக்கையும். (அ : 825)

**காதல் வாகை கொள்ளுதல் – காதல் வெல்லுதல்.** சினத்தொடு காதல்கள் செய்த போரிடை மனத்துறை காதலே வெற்றி கொண்டதே. (பா : 1107)

**காதலமிர்து – பிரீதியாகிய அமிருதம்.** ஆண்டகையும் அன்பினெடு கதலமிர்தூற நீண்ட கையினுல் நெடிய நெஞ்சினெடு புல்லி. (யுத் : 691)

**காதலர் - புத்திரர்.** *தயரதன் காதலர்.* **(ஆ : 370)**

**காதலருத்தி - மனப்பூர்வமான விருப்பம்.** *காதலருத்தியும் அரசின் மேற்றே.* **(யுத் : 413)**

**காதலரைத் தரும் வேள்வி - புத்திர காமேஷ்டி யாகம்.** *காதலரைத் தரும் வேள்விக் குரியவெலாம் கடிதமைப்ப.* **(பா : 738)**

**காதலன் - 1 அன்புக்கு விஷயமானவன். மகன்.** *தன் காதலன் வைகும் ஆலிலையன்ன வயிற்றினை.* **(அ : 306)**

**2. பக்தன்.** *தீராக் காதலனுகுமென்று கருணையின் மலர்ந்த கண்ணன்.* **(அ : 662)**

**காதலி - மனைவி.** *காதலி யவளொடு கதமெரி மூழ்கி.* **(ஆ : 115)**

**காதலித்த உருவாகி - தான் விரும்பிய உருவமுடையவனாய் (அண்) கண்டவர்கள் ஆசைப்படத்தக்க எல்லா இலக்கணங்களும் பெற்று. (கலா) காதலித்த உருவமேயாகி இரத்தப்பெருக்கினால் ராகத்தை யடைந்து. (வை. மு)** *காதலித்த உருவாகி அறம் வளர்க்கும் கண்ணுளன் தெரியக்கண்டான்.* **(யுத் : 3869)**

**காதலித்த உருவாகி அறம் வளர்க்கும் கண்ணுளன் - தான் விரும்பிய உருவமுடையவனாகி இவ்வுலகத்தில் அறத்தை வளர்க்கும் நோக்க முடைய இராமபிரான். (அண்) கண்ணுற்றவர்கள் ஆசைகொள்ளத் தக்க எல்லா இலக்கணங்களும் பொருந்தப்பெற்று தருமத்தை வளர்க்கின்ற கருணையுடையவனான இராமபிரான். (கலா) (யுத் : 3869)**

**காதலித்தல் - விரும்புதல். ஆசைப்படுதல்.** *காதலித் தயனளித்த.* **(ஆ : 18)** *காதலித்த உருவாகி.* **(யுத்: 3869)**

**காதலிற் கலந்த சிந்தை - காதலால் கலந்த மனம்.** *காந்தர்ப்ப மென்பதுண்டாற் காதலிற் கலந்த சிந்தை மாந்தர்க்கும் மடந்தை மார்க்கும் மறைகளே வகுத்த கூட்டம்.* **(ஆ : 278)**

**காதலிற் பொங்குதல் - அன்பினால் மனமகிழ்ச்சி மிகுதல்.** *வாணிலா நகைதோன்ற மயிர்ப்புறம் பூண வானுயர் காதலிற் பொங்கினான்.* **(அ : 799)**

**காதலினேன் - பேரன்புடையவன். (இலக்குவன்)** *நெடிய காதலினேற்கு உயர் நீர்மைசெய்து.* **(யுத் : 3929)**

**காதலுறுதல் - அடைய விரும்புதல்.** *மாசில் புகழ் காதலுறுவேம்.* **(யுத் : 64)**

**காதலென்னும் பொருள் - காதலென்னும் பொருளின் வடிவம்.** *கண்ணினுற் காதலென்னும் பொருளையே காண்கின்றோம்.* **(பா: 1150)**

**காதலை உண்டல் – காம இன்பத்தை அனுபவித்தல்.** *தண்டுதலின்றி ஒன்றித்தலைத் தலைசிறந்த காதலையுண்டபின்.* (பா : *571*)

**காதலோர் – புதல்வர். காதலுக்கு இடமானவர்.** *அயலிருந்து இரங்குகின்ற காதலோரை உண்ணு நீர் உதவுமென்ருர்.* (யுத் : *1935*)

**காதலோன் – நண்பன்.** (சு : *578*)

**காதற் கொழுநர் – அன்பிற்குரிய கணவர்.** *காதற் கொழுநரோடு உட்கலாமுடையாரின் உயங்கினுர்.* (அ : *814*)

**காதற் சலதி – காமக்கடல்.** *தன்னுணர் வழிந்து காதற் சலதியினழுந்தி.* (பா : *679*)

**காதற்பிணி – ஆசையாகிய நோய்** *காதற் பிணிபறித்து.* (யுத்: *937*)

**காற் புன்கணேய் – காதலாகிய துன்பநோய்** (யுத் : *1502*)

**காதற்றிருமகன் – அன்புக்குரிய மகன்.** *நின் காதல் திருமகன் பங்கமில் குணத்தெம்பி பரதன்.* (அ : *299*)

**காதி – குசநாபன் புதல்வன். கோசிக முனிவன் தந்தை.** *கவன வேகத் துரங்கக் காதி.* (பா : *429*) (பா : *430*)

**காதி காதலன் – விசுவாமித்திர முனிவன்.** *காதி காதலன் தரு கடலினன்னது.* (கி : *5*)

**காதி செம்மல் – விசுவாமித்திர முனிவன்.** (பா : *561*)

**காதிசேய் – விசுவாமித்திர முனிவன்.** *காதிசேய் தருகடற் கடவுள் வெம்படையினுர்.* (கி : *83*)

**காது – துளை. காது என்னும் உறுப்பு.** (பா : *609*)

**காது கொற்றம் – அழித்தலால் ஆகும் வெற்றி.** *காது கொற்றம் நினக்கலாது பிறர்க்கெவ்வாறு கலக்குமோ.* (கி : *512*)

**காதுதல் - 1. அழித்தல்.** *காது கொற்றம்.* (கி : *512*) *கரடி காதுவ.* (யுத் : *1999*)

**2. கொல்லுதல்** *காதிய மானிடன்.* (யுத் : *3187*) *காது வெஞ்சினக் களியினர்.* (சு : *234*) *தீயோன் சேயே காதவுங் கண்டுநின்ற கருமமே கருணைத் தம்மா.* (யுத் : *2842*) *காதுதல் கடன்* .(யுத்: *920*)

**3. மோதுதல். தாக்குதல்.** *காது வெஞ்சினச் செருவேட்டென்னைக் காந்தினர் கலந்த போதும்.* (யுத் : *774*) *கரங்களைக் கழல்களை ஒடியக் காதின.* (யுத் : *1997*) *காதுவதோர் காதலால்.* (யுத் : *2021*)

**4. போர் செய்தல்.** *மறுக்குமாகில் காதுதல் கடன்.* (யுத் : *921*) *கரங்களைக் கழல்களை ஒடியக் காதின.* (யுத் : *1997*) *கரடி காதுவ.* (யுத் : *1999*)

5. **வெட்டுதல்.** (உ. வி) (யுத் : 2842)

**காது வெஞ்செரு-மோதிச் செய்யப்படுகின்ற கொடிய போர்.** (யுத்: 774)

**காதை – 1. செய்தி.** அன்று நான் விரித்துச் சொன்ன காதையைக் கடக்கலாமோ. (யுத் : 424)

2. **வரலாறு.** காதைகள் சொரிவன செவி நுகர் கனிகள். (பா : 82) (உ. வி) (யுத் : 424)

3. **பாடல்.** (இலக்) **சரித்திரம். சரித்திரப் பாடல்.** உலகெலாம் பெயரப் பேராக் காதை என்புகழினோடு நிலைபெற. (யுத் : 3082)

**காதொடு குழை பொருகண் – காதுடன் அதன் அணியான குண்டலங் களையும் தாக்குகின்ற கண்.** காதொடு குழை பொரு கயற்கண் நங்கை. (பா : 609)

**காதொடும் உறவு செய்யுங் கண் – காதளவு நீண்ட கண்.** காதொடு முறவு செய்யுங் கொள்ளைவாட் கண்ணினர். (பா : 937)

**காந்தம் – 1. சூரிய காந்தக்கல்.** காந்தின காந்தம். (சு : 687)

2. **சந்திர காந்தக்கல்.** ஆய்கதிர் கானகு காந்த மீக்கொண்ட காமர் நீர்த்தூநிற நறுந்துளி. (சு : 220)

**காந்த மாமணி – சிறந்த காந்தமணி. பெரிய காந்தமணி. காந்தக்கல்.** கேகயன் மகள் கொண்ட வரமெனும் அயில்வேல்......... இப்பொழு தகன்றது...... ஆகமாங் காந்த மாமணி இன்று வாங்க. (யுத் : 4038)

**காந்தர்ப்பம் – 1. எண்வகை விவாகங்களுள் ஒன்று. யாழோர் கூட்டம். ஒத்த அன்பினராகிய தலைமகனும் தலைமகளும் கொடுப் பாரும் அடுப்பாருமின்றித் தாமே கூடுங்கூட்டம்.** காந்தர்ப்ப மென்ப துண்டாற் காதலிற் கலந்த சிந்தை மாந்தர்க்கும் மடந்தை மார்க்கும் மறைகளே வகுத்த கூட்டம். (ஆ : 278)

2. **ஒரு படை.** காந்தர்ப்பம் எனும் கடுங் கொடுங் கணையினூற் கடந்தான். (யுத் : 3771)

**காந்தருப்பம் – ஒருவகைப் படை.** காந்தருப்பமெனும் கடவுள் மாப்படை. (யுத் : 3439)

**காந்தள் – காந்தள் மலர்.** காந்தள் என்றல் வன் கையாழ் மணிக்கை என்றல் மற்றொன்றை உணர்த்தலன்றி நன்கையாள் தடக்கையாமோ. (கி : 778)

**காந்தன் - கணவன். நாயகன்.** இன்னுயிர்க் காந்தன். (சு : 434)

**காந்து குண்டம் – ஓம குண்டம்.** கூந்தன் மென்மயில் குறுகின நெடுஞ் சிறை கோலிக் காந்து குண்டத்தில் வயங்கெரி எழுப்புவ காணும். (அ : 767)

**காந்துதல் – 1. ஒளிர்தல். விளங்குதல். ஒளிவிடுதல். (தீயுமிழ்தல்)** காந்து இனமணியின் சோதி கதிரொடுங் கலந்து வீச. (பா : 941) சேவகன் சேவடி யென்னக் காந்துகின்றது. (சு : 688) (யுத் : 688) காந்தின காந்தம். (சு : 687) அன்பு காந்த. (சு : 55) அன்பு காந்தி. (சு : 55) [பா :பே]

**2. வெதும்புதல். கொதித்தல்.** புந்திபோய்க் காந்துகின்றது கட்டுரையீரென்முன். (ஆ : 213)

**3. கொளுத்துதல்.** அளிக்கும் மெய்யுயிர் காந்தழல் அஞ்சினள். (ஆ : 303)

**4. சினத்தல்.** காந்திக லரக்கன். (யுத் : 1511) காந்து மாணையிற் கரன். (யுத் : 529) காந்தி. (யுத்: 4203)

**5. கருகுதல்.** இந்து காந்தத்தின் ஈர நெடுங்கலும் வெந்து காந்த வெதுப்புறு மேனியாள். (ஆ : 304)

**6. எரிதல்.** காந்தெரி மடுத்து. (யுத் : 953)

**காந்துறு கதழெயிற்றரவு – சினக்கின்ற கொடுமையான பற்களையுடைய பாம்புப்படை.** காந்துறு கதழெயிற்றரவின் கட்டொரு பூந்துணர் சேர்த்தெனப் பொலியும் வாண்முகம். (சு : 1049)

**காந்தெரி – கொழுந்துவிட்டெரியும் நெருப்பு.** காந்தெரி நெய்ம் மறந்தன. (அ : 503) காந்தெரி மடுத்து. (யுத் : 953)

**காந்தையர் – பெண் பாலார்கள்.** காந்தையருக் கணியனைய சானகியார். (யுத் : 3908)

**காந்தையருக் கணியனைய சானகியார் – பெண்பாலார்க்கெல்லாம் அணிபோல விளங்குகின்ற சீதாபிராட்டியார்.** (யுத் : 3908)

**காப்பிடுதல் – இரட்சாபந்தனஞ் செய்தல்.** (வை. மு) (கலா) **ஆலத்தி நீரில் கையைத் தோய்த்து நெற்றியில் அதுகொண்டு பொட்டு வைத்தல்.** (அண்) **விபூதிக் காப்புமாம்** (கலா) அயினி சுற்றிக் கைவளர் மயிலன்னாளை வலஞ்செய்து காப்பு மிட்டார். (பா : 1219) மந்திரத் தயினி நீரால் வலஞ்செய்து காப்புமிட்டார். (யுத் : 3966)

**காப்பின் நாண் – காப்புக்கயிறு. இரட்சா பந்தனம்.** உன் கழுத்தின் நாண் உன் மகற்குக் காப்பின் நாண் ஆகும் என்றான். (அ : 344)

**காப்பு – 1. தடுத்தல்.** காப்பரு நடுக்குறு காலன் கையினன். (ஆ: 834)

**2. நீர்க்கட்டு. நீர்த்தேக்கம்.** நெடும் படைவாள் நாஞ்சிலுழு நிணச்சேற்றில் உதிரநீர் நிறைந்த காப்பில். (யுத் : 3567)

**3. பாதுகாப்பு.** கற்பினுக் கரசியைப் பெண்மைக் காப்பினை. (யுத் : 3780)

**காப்பு நாண் – மணவினைகளிலும், முடிசூட்டிலும், விரதங்களிலும் அணியும் மங்கலக் காப்பு நாண்.** *காப்பு நாண் அணிதற்கு முன். (அ : 235) கருந்தடங் கண்ணினாற்குக் காப்பு நாண் அணியும் நன்னாள். (யுத் : 4299)*

**காப்புறு கடன் – காக்கும்படியான இன்றியமையாப் பொருள். (வை.மு) தன்னைத்தான் பாதுகாக்கும் முறைமை. (கலா)** *கவசத்தை அறுத்து வீழ்ப்பக் காப்புறு கடனின்றாகி அவசத்தை யடைந்த வீரன். (யுத் : 2123)*

**காம்பறியுந் தோள் - மூங்கிலைப் போன்ற தோள்** *காம்பறியுந் தோளாளைக் கைவிடுரேனினும் யான் மிகையோ. (ஆ : 363)*

**காம்பு – 1. மூங்கில்.** *காம்புயர் கானம். (அ : 581)*

**2. பிடி.** *காம்போடு பதாகைகள். (யுத் : 3461)*

**காம்புயர் கானம் – மூங்கில் ஓங்கிய காடு. (அ : 581)**

**காம ஊசல் – விரும்பியாடும் ஊசல்.** *காமவூசல் களி இசைக் கள்ளினால். (கி : 757)*

**காமக்குணம் – காம நோயினது தன்மை.** *பணிமொழியார்க் கன்பு பட்டார் படுங் காமக் குணந்தான் முன்னமறியாதான். (ஆ : 672)*

**காமக்குல மட மங்கையர் – காதல் வயப்பட்ட இளமை வாய்ந்த குல மகளிர்.** *தம் தம் காமக்குல மட மங்கையர் கடைக்கண் எனக் கணைகள். (யுத் : 3006)*

**காமச் சுவை – காம இன்பம்.** *சொன்னலங் கடந்த காமச் சுவையை யோர் உருவமாக்கி இன் நலந் தெரியவல்லார் எழுதியதென்ன நின்றாள். (பா : 1159)*

**காமச் செருக்கு – காமக் களிப்பு சிற்றின்ப ஆசையின் மோகம்.** *திறந்திறம்பிய காமச் செருக்கினால் மறந்து தத்தம் மதியின் மயங்கினார். (சு : 1138)*

**காமச் செவ்வி – 1. காமத்தின் (காதலின்) முதிர்ச்சி.** *காமச் செவ்வி ஓவலில் மரங்கள் தோறும் உரைத்தற வுரிஞ்சி. (கி : 478)*

**2. விரும்பத்தக்க அழகு.** *செருக்கிய காமச் செவ்வி ஓவியம் உயிர் பெற்றென்ன. (யுத் : 4240)*

**காமத்தீ – காமாக்கினி** *அன்ன மென்னடையவட் கமைந்த காமத்தீ. (பா : 624)*

**காமத்துப் பகுத்த பத்தி – காமத்தில் ஏற்படுத்திய (பகுத்துக்கூறிய) அவஸ்தையின் வரிசை மன்மதாவஸ்தை** *பாயிரமுணர்ந்த நூலோர் காமத்துப் பகுத்தபத்தி ஆயிரமல்ல போன ஐயிரண் டென்பர் பொய்யே. (யுத் : 1595)*

**காமநீர் நீத்தம்** - காமமாகிய நீர்ப்பெருக்கு. *காலவெந்தீயென முற்றிய சீற்றம் நீண்ட காமநீர் நீத்தத்தின் அவிவுறு நிலையில்.* (சு : 470)

**காம நெறி** - காம மார்க்கம். *காமநெறி வாசத்தேனின் மொழியுற்று.* (ஆ : 257) [பா :பே]

**காமநெறி வாசத்தேனின் மொழி** - காம மார்க்கத்தில் இழுக்கும் நன்மணங்கொண்ட தேன்போன்ற மொழி. (ஆ : 257) [பா : பே]

**காம நோய்** - காதல் வியாதி. *கரக்கவந்த காம நோய்.* (ஆ : 66)

**காமப்பிணி** - காமமாகிய நோய். *வேம் இருந்தின் எனக்கனலும் வெங்காம வெம்பிணிக்கு மாமருந்தே.* (ஆ : 342)

**காமப் புதுமண மது** - புதுக்கலப்பால் வந்த காமமாகிய புதிய மது. *புக்கவளோடுங் காமப் புதுமண மதுவின் தேறல் ஒக்கவுண்டிருத் தலோடும்.* (பா : 653)

**காமம்** - 1. விருப்பம். *காம ஊசல் களியிசைக் கள்ளினுல்.* (கி : 757)

2. விரும்பிய பொருள். உயிர்களால் விரும்பப்படும் நற்பேறுகள். இம்மையின்பங்கள். புருஷார்த்தம். *காமம் யாவையுந் தருவதும்.* (யுத் : 172)

3. சிற்றின்ப ஆசை. காம நோய். *காமம் பிடிப்பாய் பிழைப் பாயோ.* (யுத் : 1948)

**காமம் அருத்திய பயிர்** - காம விருப்பமாகிய ஊட்டி வளர்க்குமாறு ஏற்பட்ட பயிர். *வரம்பின்றி வளர்ந்த காமம் அருத்திய பயிர்க்கு நீர்போல் அருநறவருந்துவாரை.* (சு : 202)

**காமம் பிடித்தல்** - காமமாகிய குற்றத்தை இறுகப்பற்றுதல். *பேதை யாய்க் காமம் பிடிப்பாய் பிழைப்பாயோ* (யுத் : 1948)

**காம மாதி** - காம வெகுளி மயக்கங்கள். *காம மாதியாம் உள்ளுறை பகைஞர்.* (அ : 18)

**காம முதலாம் முக்குறும்பு** - காமம் முதலிய மூன்று பகை. காம வெகுளி மயக்கங்கள். *காம முதலா முக்குறும் பறவெறிந்த வீணை வான் முனிவனே.* (ஆ : 3)

**காமமே நுகருஞ் செல்வக் கடவுள்** - (யுத் : 2701)

**காமர்** - அழகிய. *காமர் ஒண் கௌசலை.* (பா : 269)

**காமரக் கடல்** - சோலைகள் மரக்கலங்களோடு கூடிய கடல். கா - சோலைகள் மரம் - மரக்கலம். *வண்டொடும் கள்ளொடும் கா மரக்கடல் பூக்கடல் கண்டவே.* (சு : 723)

**காமரக் களிவண்டு** - சீகாமரம் என்னும் பண்ணைப் பாடுகின்ற களி வண்டு. (சு : 723)

**காமரம் – 1. சீகாமரம் என்னும் பண்.** *முதற் குறைந்தது காமரங் கனிந்ததெனக் கனிந்த மென்மொழி.* (அ : 494) (யுத் : 3827)

**2. ஒருவகை ஆயுதம்** *கா மரந்தண்டு பிண்டி.* (சு : 817) [பா: பே]

**3. இசை.** *தாமரத்தாற் பொராத்தகை கொள் வாட்படை காமரத்தால் சிவன்கரத்து வாங்கினான்.* (யுத் : 3827)

**காமரம் பழுத்த பாடல் – காமரம் என்னும் பண்.** (கலா) (ஆ : 628) [பா : பே]

**காமர முரலும் பாடல் – காமரம் என்னும் பண்ணோடு இசைக்கும் பாடல்** *காமர முரலும் பாடல் கள்ளெனக் கனிந்த இன் சொல்.* (ஆ : 628)

**காமரு திரு – அழகிய திருமகள்.** *இன்னகைச் சனகி யென்னும் காமரு திரு.* (ஆ : 1041)

**காமவல்லி – கற்பகத்திற் படர்கொடி.** (ஆ : 263)

**காமவல்லியாங் கன்னி – காமவல்லி என்று சொல்லப்படுகின்ற பெண்.** *உலக மூன்றுங் காவலோன் பின்னை காமவல்லியாங் கன்னி என்றாள்.* (ஆ : 263)

**காமவாரி – காம உணர்ச்சியாகிய வெள்ளம்.** *மயிர்ப்புறந்தோறும் பொடித்தன காமவாரி.* (யுத் : 2786)

**காமவாளிக் கூற்று – மன்மத பாணமாகிய யமன்.** *மாலையான கனலினும் காமவாளிக் கூற்றினும் வெம்மை காட்டிக் கொதித்தது அக்குளிர் வெண்திங்கள்.* (யுத் : 711)

**காம விடம் – காமமாகிய நஞ்சு.** *வேதனைசெய் காம விடம் மேலிட மெலிந்தாய்.* (ஆ : 756)

**காம விம்மல் – விரும்பியது கிட்டாத ஏக்கம்.** (அண்) **காம மிகுதி.** (வை. மு) **காம உணர்ச்சியின் மிகுதி.** (கலா) *காம விம்மலின் வெதும்புவாரும்.* (சு : 276)

**காம விற்குடை கங்குல்மாலை – மன்மதனுடைய கரும்பு வில்லுக்குத் தோற்குமாறு செய்கின்ற இராப்பொழுது.** *காம விற்குடை கங்குன் மாலை கழிந்ததென்பது கற்பியாத் தாமொலித்தன பேரி.* (அ : 236)

**காம வெகுளி – ஆசையும் கோபமும்** *தவஞ் செய்வோர்கள் வெருவரச் சென்றடை காம வெகுளி யென.* (பா : 327)

**காம வெங்கனல் – காமமாகிய கொடிய நெருப்பு.** *உள்ளுறை காம வெங்கனலினைக் கனற்றிக் காட்டிற்றே.* (பா : 1055)

**காம வெந்நோய் – காமமாகிய கொடிய நோய்.** *இன்னற் சுமையுடைக் காம வெந்நோய் துடைத்தியேல் தொழுது வாழ்வேன்.* (யுத் : 1631)

**காம வேட்கை – காம விருப்பம்.** *கன்றிய மனத்துறு காம வேட்கையால்.* (பா : 622)

**காமவேள் - மன்மதன்.** *காமவேள் என்னும் நாமத்தண்ணல்.* (யுத் : 1593)

**காமன் – மன்மதன்.** *காமன் பூங்கணை.* (யுத் : 5) (பா : 617)

**காமன் திரு – மன்மதனது போகச்செல்வம்.** *காமன் திருவினை அல்குல்.* (யுத் : 3065)

**காமன் பூங்கணை – மன்மதனது மலரம்பு.** *பழிக்கும் காமன் பூங்கணைக் கும் பற்று நின்ருன் பொற்ருேளை.* (யுத் : 5)

**காமன் வாளி – மன்மதன் மலர்க்கணை.** *சினக் காமன் வாளியும் அழல் பிரிந்தன.* (அ : 499)

**காமாண்டவர் – காமம் மாண்டவர், மிக்கவர். (வை. மு) காத்தலில் வல்லோர். (கலா)** *காமாண்டற அயல் நின்றவர் நடுவே புக நடந்தான்.* (யுத் : 1853) [பா : பே]

**காமித்தல் – விரும்புதல். நினைத்தல்.** *தருமத்தைக் காமியாயோ.* (சு : 460)

**காமிப்பது – வேண்டியது** *காமிப்பது முடிவிப்பது படிகின்றது கண்டான்.* (யுத் : 3037)

**காமின் – 1. தடுமின்.** *காக்குநர் காமின்.* (அ : 414)

**2. பாதுகாத்துக்கொண்டிருங்கள்.** *அயர்த்திலிர் காமின்.* (யுத்: 355)

**3. காவல் செய்ம்மின்.** (அ : 1023)

**காமின்கள் – காவல் செய்ம்மின்.** *காமின்கள் நெறி என்னு.* (அ: 1023)

**காமுகர் – தூர்த்தர்.** *காமுகர்ப்படுவ மாதர் கண்களும் காமனம்பும்.* (பா : 36)

**காய் ஒளி – எரிகின்ற ஒளி** *காயொளி வயிரவாள்.* (யுத் : 1519)

**காய்கதிர் – சூரியன்.** *காய்கதிர் இயக்கு இல் மதில்.* (சு : 169) (யுத் : 1492)

**காய் கதிர்க் கடவுள் – வெதுப்புகின்ற கிரணங்களையுடைய சூரியன்.** *காய் கதிர்க் கடவுட்டேரைக் கண்ணுற்றேம்.* (கி : 999)

**காய் கதிர்ச் செல்வன் – 1. சுடுகின்ற கிரணங்களைச் செல்வமாகக் கொண்ட சூரியன்.** (சு : 514)

**2. சுக்கிரீவன்.** *காய் கதிர்ச் செல்வனைப் பிணித்தகை.* (யுத் : 1492)

**காய் கதிர்ச்செல்வன் மைந்தன் – சுக்கிரீவன்.** *காய்கதிர்ச் செல்வன் மைந்தன் கவிக்குல மவற்றுக்கெல்லாம் நாயகன் சுக்கிரீவன்.* **(சு:** *414***)**

**காய் கரி – சினத்திற் கொல்லும் தொழிலையுடைய யானை.** (யுத் : *222*)

**காய்த்தல் – சினத்தல்.** *காய்த்த அக்கணத்து.* **(யுத்:** *522***)**

**காய்த்தவர் – கைதேர்ந்தவர்.** *காய்த்தவர் அவர்களே கையுற்றார் நமக்கு.* (யுத் : *401*)

**காய்த்திய – கொதித்த.** *காய்த்திய வேலை கலந்தார்.* **(சு :** *1241***)**

**காய்தல் – 1. கோபித்தல்.** *காயுமற் கடங்களாகி.* **(பா :** *207***)**

**2. அழித்தல்.** *நின்றாரைக் காத்தி அயலோரைக் காய்தி.* **(ஆ:** *103***)** *வாளால் காய்ந்தான்.* **(ஆ :** *936***)**

**3. வருத்துதல்.** *காயும் வில்லினன்.* (அ : *645*) *காய்ந்த அன்று.* **(சு :** *189***)**

**4. தபித்தல்.** *நிலை திரிந்து காயா நின்றாய்.* **(ஆ :** *673***)**

**5. கொதித்தல்.** *வெம்பிக் காய்ந்தது.* **(யுத் :** *1117***)**

**6. கொல்லுதல்.** *வாளாற் காய்ந்தே கடந்தான் பகைவேலை.* (பா : *172*)

**7. சுடுதல்.** *நதிகாய் நெடுமானமு நாணுமுரு.* **(யுத் :** *1693***)**

**8. காய்ச்சுதல்.** *காய்ந்த பேரிரும்பின் வன்கட்டி.* **(யுத் :** *3742***)**

**9. வெகுண்டு தாக்குதல்,** *பன்முறை காய்ந்தது கடும்படை கலக்கி.* (யுத் : *1777*)

**காய்ந்தன சலாகை – பழுக்கக் காய்ச்சிய நாராசம்.** *காய்ந்தன சலாகை யன்ன உரை.* (சு : *444*)

**காய்ப்பு – 1. உக்கிரம்.** *காய்ப்பொடுற்றெ ழுவட அனலும்.* **(கி :** *244***)**

**2. காய்ச்சி அடித்தல். காய்ச்சுகை.** *காய்ப்புண்ட நெடும்படை கையுளதா.* **(யுத் :** *1686***)** *காய்ப்புண்ட செம்பு.* **(சு :** *999***)** *காய்ப்புண்ட நெடும்படை.* **(யுத் :** *1686***)**

**3. வெறுப்பு.** *காய்ப்புறுந் தொறும் கண்ணிடை காந்தியும்.* **(யுத் :** *3150***)**

**காய்ப்புண்ட – காய்ச்சி வடித்த.** **(யுத் :** *1686***)**

**காய்வு – சினங்கொண்டு கொல்லுதல்.** *வாளினுற் காய்வு தக்க தன்றால்.* (யுத் : *3849*)

**காய – வருத்த.**

**காயத் தீ – ஆகாயத்தில் அமைந்த தீ.** *மற்றைக் காயத்தீ.* **(சு:** *1171***)**

**காயம் - 1. ஆகாயம்.** காலன் நிறத்தை அஞ்சனத்திற் கலந்து குழைத்துக் காயத்தின் மேலும் நிலத்தும் மெழுகியதோ விளக்குமிருளாய் விளைந்ததுவே. (பா : 630) படர்மழை சுமந்த காயம். (யுத் : 441) [பா : பே]

**2. உடம்பு.** வாளவுணன் வாதவிதன் வன்மைக் காயமினிதுண்டு. (ஆ : 155) காயத்துயிர். (யுத் : 1742) காய மெத்தனையுள நெடுங் காயங்கள் கதுவ. (யுத் : 3778) காயத்துயிரே விடுகாலையினும். (யுத் : 1742)

**காயமானுயினுன் - மனித சரீரமுடையவன்.** ஆழியானேயலால் காய மானுயினுன் யாவனே காவலா. (கி : 89)

**காயா - காயா மரம்.** கடலோ மழையோ முழுநீலக் கல்லோ காயா நறும்போதோ. (பா : 628)

**காயாம்பூ - காயாவின் மலர்.** காவியுங்குவளையும் நெய்தலும் காயாம் பூவையும் பொருவான் அவன். (கி : 494)

**காயும் வில்லினன் - வருத்தும் விற்படையுடையவன்.** (அ : 645)

**காயெரி - சொலிக்கின்ற நெருப்பு. சுடும் நெருப்பு. பற்றி எரிகின்ற நெருப்பு. (தீ)** காயெரி வரன்முறை கடிதினினிடுவான். (ஆ : 110) காயெரி முளிபுற் கானிற் கலந்தென. (சு : 955) காயெரி கனலும் கற்கள். (கி : 55) (அ : 478) (ஆ : 289) (யுத் : 1612) காயெரித் தலை நெய்யென. (யுத் : 2076)

**காயெரிப் படலை - காயுந்தன்மையுள்ள நெருப்புத்தொகுதி.** காயெரிப் படலை சூழ்ந்த கருங்கடல். (யுத் : 599)

**கார் - 1. இருள்.** கருமேக நெடுங்கடல் காரனையான். (சு : 491) [பா : பே]

**2. செவ்வி.** கான்றுபிரி காராவின் துயருடைய கொடி. (அ: 1057)

**3 கருமை.** கார்விடம். (அ : 446)

**4. மேகம்.** காரெனக் கடிது சென்றான். (அ : 1031) காரே என தாவி கலக்குதியோ. (கி : 495)

**5. மழை.** கார்வர அலர் பயிர். (பா : 311)

**6. கார்காலம்.** காரெனும் செவ்வியோன். (கி : 486)

**7. மேகமண்டலம்.** காரும் வானமும் தொடுவன பிணக்குவை. (அண்) (யுத் : 1201)

**கார் உலவைகள் - கரிய பட்ட மரங்கள். அடர்த்தியாக உள்ள பெரிய மரக்கிளைகள். (வை. மு)** காடு கொண்ட காருலவைகள் கதழெரி கதுவ. (ஆ : 448)

**கார்க்கடல் - கருநிறமுள்ள கடல்.** கார்க்கடல் கமலம் பூத்ததெனப் பொலிவானைக் கண்டான். (யுத் : 438) (யுத் : 918)

**கார்க்கருந் தடங் கடல்கள் - மிகக் கரிய பெரிய கடல்கள்.** கார்க் கருந் தடங் கடல்களும் மழைமுகிற் கணனும். (சு : 801)

**கார்க்குன்றம் - 1. கரிய குன்றம்.** கார்க்குன்றமனையான். (யுத்: 3866)

**2. மேகந்தவழும் நெடிய குன்றம்.** கார்க்குன்ற மன்னான். (கி :267)

**கார்க்கோல மேனியான் - மேகம் போன்று அழகிய திருமேனியுடைய இராமபிரான்.** (யுத் : 1373)

**கார்கடாமென மிகக்கடுத்த கைம்மலை - மேகங்களே என்று எண்ணு மாறு மிகவும் ஒப்புமையுடைய யானைகள்.** (அ : 980)

**கார்குலாம் நிறத்தான் - மேகம்போல விளங்கும் கருநிறமுடைய இராமன்.** (அ : 661)

**கார்கொண்ட மேனியான் - கரிய நிறமுடைய இராமன்.** கார்கொண்ட மேனியானைக் கண்டிலர். (அ : 587)

**கார்த்த வீரியன் - ஆயிரங்கைகளையுடைய ஓர் அசுர வீரன்.** யானக் கார்த்த வீரியனை ஒப்பார் உளரெனக் கருதலாற்றேன். (யுத் : 1243)

**கார்தவழ் மலை - மேகந்தவழ்கின்ற மலை.** கடல்களும் நெடியகானும் கார்தவழ் மலையுங் கண்டான். (யுத் : 2543)

**கார்ப்புனல் - மழைநீர்.** கார்ப்புனல் கானயாறு. (யுத் : 1789)

**கார்ப்பெருங்கடல் - கரிய பெருங்கடல்.** (யுத் : 3211)

**கார்ப்பொரு மேனியக் கண்ணன் - நீருண்ட மேகத்தை ஒத்த திருமேனியையுடைய இராமபிரான்.** (அ : 1115)

**கார்மதக் கனவரை - மதங்கொண்ட கரிய பெரிய மலைபோன்ற யானைகள்.** கார்மதக் கனவரை கவிழ்ந்து விழ்வன. (யுத் : 1785)

**கார்மதம் - கரிய மதம்.** கார்மதக் கைம்மலை. (அ : 772, b)

**கார்மிருகம் - யானை.** கார்மிருகம் வரும் ஓர் செய்ய நதியின் கரை. (அ : 363)

**கார்முகம் - வில்.** கார்முகம் வளைய வாங்கி. (பா : 664) கார்முகத் தம்புகையால் தொடுகின்ருன் துரக்கின்ருன் என்றுணர்ந்திலர். (யுத் : 1113)

**கார்முகவுண்டை - வில்லால் எறியப்பட்ட மண் உருண்டை.** காற்செறி வேகப்பாகர் கார்முகவுண்டை பாரா. (பா : 875)

**கார்முகில் - மழை மேகம்.** கண்ணுற்ருன் வாலி நீலக்கார்முகில் கமலம் பூத்து மண்ணுற்று வருவதே போலுமாலை. (கி : 312)

**கார்மேகவண்ணன் - காளமேகம்போன்ற கரிய நிறத்தையுடைய இராமபிரான்.** *கார்மேகவண்ணன் பணி பூண்டவன்.* (சு : 57)

**கார்வரை - 1. கரியமலை; மலைபோலும் யானை.** *கார்வரை இவற்றி னுக்கிரட்டி.* (யுத் : 492)

**2. கரிய மந்தரமலை.** *கார்வரை நிறுவி.* (யுத் : 434)

**கார்வான் நெடுங்கான் - கரிய மேகந்தவழும் நீண்டகாடு.** *கார்வான் நெடுங்கான் கண்டு இவண் மீள்வன் என்றான்.* (அ : 437)

**கார்விடக் களமுடைக் கணிச்சிவானவன் - கரிய விடத்தைக் கண்டத் திற் களங்கமாகவுடைய மழுவாளியான சிவன்.** (பா : 1298)

**கார்விடம் - கரிய விடம்.** *நாகத்தின் வன்றலை வாளெயிற்றிழிந்த கார்விடம் ஏறுவதென்னவே.* (ஆ : 296) (ஆ : 700)

**கார - வெளியிட.** *கண்பனி கார நின்றாள்.* (பா : 987)

**காரகல் - கரிய அகல். கரிய சட்டி. வாணல்.** *ஏரி கருங்கடல் காரகல் கடுப்ப.* (யுத் : 561)

**காரகில் - கரிய அகிற்கட்டை.** *உலர் பெருங் கள்ளியின் தாய்பிளந் துக்க காரகில்களும்.* (பா : 349) *கார கில் ஈட்டம்.* (ஆ : 1033)

**காரணக் குறி - காரணப் பெயர்.** *இதுவுமக் காரணக் குறியுடைக் காமனாச் சிரமமே.* (பா : 343)

**காரணம் - 1. அனுமானத்தால் உணரத்தக்க காரணம்.** (யுத் : 182)

**2. மூலப்பொருள்.** *மறைதேடும் காரணத்தை.* (யுத் : 821)

**காரணி நெடுமாடம் - புயல்படிந்த உயர்ந்த மாளிகை.** *காரணி நெடு மாடம் கதிர்மணி அணிவாரும்.* (பா : 1266)

**காரம் - 1. பக்கம். மாளிகை. வீடு.** *பாகாய செஞ் சொலவர் வீசு படு காரம்.* (சு : 98) [பா : பே]

**2. கோபம்.** *பொங்காரத்தான்.* (யுத் : 3799)

**3. வெறுப்புணர்ச்சி.** (அண்) *வெங்காரத்தான் முற்று முனிந்தான்.* (யுத் : 3799)

**காரளி - கரிய வண்டுகள்.** (ஆ : 34)

**காரன்ன நெஞ்சு - மேகத்தை ஒத்த கரிய நெஞ்சு.** *நிறத்துக் காரன்ன நெஞ்சினர்.* (யுத் : 3263)

**காரா - 1. கார் ஆ. புனிற்று. அப்பொழுதீன்ற பசு.** *கன்று பிரி காராவின் துயருடைய கொடி.* (அ : 1057)

**2. செவ்விய பசு. பெரிய பசு. காராம்பசு.** (உ. வி) (அ : 1057)

**காரி எள் - கறுத்த எள்.** *காரி எட் சொரிந்தான்.* (*யுத் : 2557*)

**காரிகை - 1. அழகு.** *கண்டு நோக்கும் காரிகையாள்தனை.* (*ஆ : 374*)

**2. பெண்.** *காரிகை நின்னை எய்துங் காதலால்.* (*யுத் : 1630*)

**காரிகையார் - பெண்டிர்.** *இராமன்மேல் நோக்கிய காதல் காரிகை யார்க்கு மீனுயர்த்தவன் மருங்குதான் மீளுமோ.* (*சு : 296*)

**காரிகையாள் - பெண்.** (*பா : 1088*)

**காரியம் - செயல்.** *பின்பிறு காரியத்தின் நிலைமை கருதுவார்.* (*யுத் : 3578*)

**காரியம் நிரப்பல் - செய்யவேண்டியவற்றைச் செய்து நிரப்புதல்.** *நீ தேய்வதென் காரிய நிரப்புஞ் சிந்தையை.* (*யுத் : 473*)

**காரியமுண்மை - காரியமிருப்பதால்.** *ஈண்டோர் காரியமுண்மை நின்னைக்காணிய வந்தேன்.* (*ஆ : 267*)

**காரியல் காலன் - கருமை நிறம் பொருந்திய யமன்.** *காரியல் காலன் அன்ன கழற் கும்பகருணன்.* (*யுத் : 1332*)

**காரியற் கருணை - மேகத்தின் தன்மையான கருணை.** *காரியற் கருணை யன்ன கண்ணன் அக்கவிகை மன்னன்.* (*கி : 69*) [*பா : பே*]

**காரியன் - செயல் திறமுடையவன்.** *விண்ணுலகோடும் ஆண்ட காரியன்.* (*கி : 69*)

**காரி யானை - கருத்த யானை.** *வெங்கடந்துதைந்த காரியானை யன்ன காளை.* (*பா : 801*)

**காரிழிதல் - மேகம் இறங்குதல்.** *காரிழிந்தாலெனக் கணைகள் சிந்தினன்.* (*ஆ : 498*)

**காரிழிந்த உரும் - மேகத்திலுருந்து வீழ்ந்த இடி.** *காரிழிந்த உருமெனக் காய்ந்து.* (*யுத் : 1027*)

**காரின உள்ளம் - வருந்திய உள்ளம்.** *காரின உள்ளத்தோடும் கண் களால் தெரியக்கண்டான்.* (*யுத் : 3598*)

**காருடம் என்னும் படை - கருடாஸ்திரம்.** *எதிரெய்தான் தவ்வா வுண்மைக் காருடமென்னும் படைதன்னால்.* (*யுத் : 3808*)

**காரும் - முதிர்ந்த செவ்வியினையுடைய.** *காரும் வார்சுவைக் கதலியின் கனி.* (*கி : 294*)

**காரெனக் கடிது சென்றான் - மேகம்போல விரைந்து சென்றான்.** (*அ : 1031*)

**காரேறு - 1. பெரிய மேகம்.** *காரேறென வந்த கனத் தொழிலோன்.* (*யுத் : 1732*)

2. **யமன் ஊர்தி** (உ. வி) (யுத் : *1732*)

**காரோதியர் - மேகம்போன்ற கூந்தலையுடைய மாதர்.** அணிகொள் கார் ஓதியர் வீதிவாய் உற்றவாறுரை செய்வாம். (பா : *1147*)

**கால் - 1. கருமை. கரிய.** (அண்) காத்தகால் மள்ளர். (பா : *29*)

2. **வாய்க்கால்.** (வை. மு) (பா : *29*)

3. **கருமணி பாவை.** காலுறு கண். (பா : *604*)

4. **அடி.** (வை. மு) சேம்பு கால் பொர. (பா : *66*)

5. **காற்று.** (அண்) (பா : *66*) வண்டொடு காலையும். (யுத் : *20*)

6. **புயல்காற்று.** வீடு சேர நீர் வேலை கால்மடுத் தூடுபேரினும். (பா : *92*)

7. **தாள். முனை. வில்லின் நுனி. குதை.** இச்சிலை கால்வளை யானேல். (பா : *788*)

8. **அடிச்சுவடு.** கால்பிடித் தோடுகின்றதும். (கி : *577*)

9. **தேர்ச்சக்கரம். சக்கரம். உருளை.** நெரிந்தன நுகம் நெரிந்தன அதன் கால். (சு : *838*)

10. **தேர்.** (ஆகு) காலின் வந்த அரக்கனை. (யுத் : *2099*)

11. **தூண்.** வச்சிரத்த கால் பொருத்தியே. (பா : *116*)

12. **தங்குமிடம்.** பாம்பறியும் பாம்பின் கால் என மொழியும் பழமொழி. (ஆ : *363*)

13. **தறி. அடிப்பாகம்.** காலாழ்ந்தழுந்திக் கடல் புக்குழி. (சு : *42*) (யுத் : *707*)

14. **காம்பு.** கால் பிரிந்தெழ குடை. (பா : *827*)

15. **வரிச்சலை யடிப்பதற்குப் பற்றுக்கோடாக உள்ள மரத்துண்டு.** கழைகளான நெல்லினுல் அலக்கும் காலும் நிரப்பினுன். (யுத் : *707*)

16. **கழுந்து. தண்டு.** மாகால் வரி வெஞ்சிலை. (யுத் : *1966*)

17. **வழி.** கள்ளநீர் வாழ்க்கையேமைக் கைவிட்டுக் காலும் விட்டான். (யுத் : *1387*)

18. **ஓர் உறுப்பு.** காலிற் காலெனச் செல்வார். (யுத் : *2121*)

19. **வில்லின் தண்டு.** கொடுஞ்சிலை நாணிற் கோத்துக் கால் முகங்குழைய வாங்கி. (யுத் : *1881*)

20. **வாயுதேவன்.** வானின் நன்னெடுங்காலின் மைந்தன். (சு: *520*)

21. **கால்வாய்.** சரயுவும் பல காலினூேடியும் கண்டதில்லையே. (பா : *91*)

22. **முனை.** காலெறின சிலை நாணொலி. (யுத் : *1831*)

**23. காலதத்துவம்.** *கால் மறைந்து ஒளிப்பிலாக் கடையின். (யுத் : 1779)*

**கால்கலத்தல் – பல கிளைகளாகக் கிளைத்தல். ஊழிக் காற்றில் ஒன்று சேர்தல்.** *பாலின் வேலை மூதற்பல வேலையும் கால் கலந்தனவோ எனக் காட்டுமே. (சு : 250)*

**கால் கிளர்தல் – காற்றினாற் பொங்கி எழுதல்.** *ஆர்கலிக் கார்க் கருங்கடல் கால் கிளர்ந் தென்னவே.* **(ஆ : 392)**

**கால் குடைதல் – காற்றால் துளைக்கப்படுதல். குலுங்குதல். பெருங் காற்றுத் தாக்கி வருத்தல்.** *ஆடகக் குன்று கால் குடைய. (யுத் : 2434)*

**கால் குலைதல் – வலியழிதல். கால் தடுமாறுதல். (அண்)** *சிந்துரச் சென்னியானை கால்குலைந் தாழியோரேழும் விட்டகல.* **(யுத் : 508)**

**கால் குனித்தல் – வில்லின் ஒரு நுனியை காலின் நுனியில் மிதித்துக் கொண்டு வளைத்தல்.** *மாலும் அக்கணம் வாளியைத் தொட்டதும் கோல விற்கால் குனித்தது துங் கண்டிலர்.* **(பா : 411)**

**கால்கொள்ளல் – 1. கால் வைத்தல்.** *கண் கொள அரிது மீது கால் கொள அரிது.* **(சு : 740)** *[பா : பே]*

**2. நடத்தல்.** *பணத்தின் மேனிலம் குழியுறக் கால்கொடு பதைப்பார்.* **(ஆ : 504)**

**கால் கோட்டுதல் – வில்லை வளைத்து நாண் பூட்டுதல்.** *சேமவிற்கால் கோட்டு மளவின்.* **(ஆ : 922)**

**கால் கோத்தல் – இடமெங்கும் வளைந்துகொள்ளுதல்.** *கானவெள்ளம் கால் கோப்பத் துளங்கவில்லாத் தனிக்குன்றிற் றெருக்க மயிற்குழாம்.* **(அ : 602)**

**கால் தரு கால் – காற்றை எழுப்புகின்ற கால்கள். காற்றைப்போற் செல்ல வல்ல கால்கள்.** *மார்பில் தோளிற் காறரு காலிற் கையில்.* **(யுத் : 2985)**

**கால்தல் (காலுதல்) – 1. உமிழ்தல்.** *வாளரா விழுங்கிக் காலும் மதி.* **(யுத் : 798)**

**2. வெளிப்படுத்தல்.** *வெப்போ என வெயில் கால்வன.* (யுத்: 1843) *மாக்கடல் வாவுந் திரையெலாம் குடித்துக் கால்வன போன்றன குதிரையே.* **(யுத் : 1001)** *இருளும் வெயிலுங் கார் மின்னுங்காலு இயற்கைய வீடணன்.* **(யுத் : 3958)**

**3. விடுதல். சொரிதல்.** *பல முகிலாத் தொத்துப்படு நெடுந் தரைகள் சொரிந்தாலெனத் துரந்தான்.* **(யுத் : 3723)**

4. **காக்குதல்.** கண் மழைத்தாரை கான்ற. (யுத் : 431) கண்ணுடைச் சுழிகளுங் குருதி கால்வன. (யுத் : 1515) கனலி காலுறு வடவையை நிகர்த்தன உதிரவாயின. (யுத் : 2299) உயிரினோடு உதிரங்கான்றார். (யுத் : 2428)

5. **வீசுதல்.** வெண்டிங்கள் கால்நிறக் கதிரின் கற்றை. (யுத்: 798)

6. **சிந்துதல்.** தெய்வக் கடலவன் படையுங் கால. (யுத் : 2380)

7. **வழிதல். ஒழுகவிடுதல்.** உதிரங் கான்றன. (யுத் : 209) வேழ நறை மத அருவிகாலும். (யுத் : 1107)

**கால் தவழ்வித்தல் - காற்றினைத் தவழச்செய்தல்.** திண்கால் உக்க மென்கால் போதத்தளவே தவழ்வித்து. (அ : 334)

**கால் தளர்தல் - அடியோடு ஒழிதல். அழிந்தொழிதல்.** காமமுதலுற்ற பகை கால் தளர. (கி : 865)

**கால்தளிர் சூடுதல் - வணங்குதல்.** அப்பொன்னின் கால்தளிர் சூடினன். (யுத் : 3958)

**கால் பறிதல் - வேரற்று விழுதல்.** மாமரம் கால் பறிந்திறுவன. (ஆ : 1143) கால் பறிந்தொழுகினர். (ஆ : 505)

**கால் பிடித்தல் - 1. காற்றைப் பிடித்தல். மணம் பிடித்தல்.** பாத்த யானையின் படுமத நாறக்...... கால் பிடித்தோடி. (பா : 903)

2. **அடிச்சுவடு பின்பற்றுதல்.** கால்பிடித் தோடுகின்றது மாயினன். (கி : 577)

3. **மழைக்கால் இறங்குதல்.** கருமுடித் தெழுந்த மேகம் கால் பிடித் தெழுந்த காலம். (யுத் : 2371)

**கால்புனல் - மழைக்கால் பொழிந்த நீர்.** கானினும் மலையினும் பரந்த காற்புனல். (யுத் : 1789)

**கால் பூவளவியது - கால் பூ அளவியது. காற்று பூக்களின் நறுமணம் அளைந்தது.** இளமென் கால் பூவளவியது எய்த. (அ : 681)

**கால் பொரல் (கால் பொருதல்) - 1 காற்று வீசுதல். காற்றினால் தாக்கப்படல்.** கரும்பு கால் பொர. (பா : 339)

2. **கொடுங்காற்று வீசுதல்.** இறுதி எய்துநாள் கால் பொர மந்தர மிடையிட்டறுவதாமென. (யுத் : 1203)

**கால் மகன் - அனுமன்.** (கி : 142-b)

**கால் மடுத்தல் - 1. காற்றினால் மோதப்படுதல்.** (பா : 92)

2. **வலிய இழுத்தல்.** (வை. மு) **தரையிற் பதித்தல்.** (அண்) உறுதுணைக் கான் மடுத்தோடி. (கி : 557)

**கால் மள்ளர் – கரிய உழவர்.** (அண்) (பா: 28)

**கால் வண்ணம் – திருவடியின் திறம்.** *கைவண்ணம் அங்குக் கண்டேன் கால் வண்ணம் இங்குக் கண்டேன்.* (பா: 559)

**கால்வயப் போர்மா – கால்களிலே விசேட வலிமையுள்ள வெற்றி மிகுந்த போருக்குரிய குதிரைகள்.** (அ: 395)

**கால்வயம் – கால் வலிமை. வருந்தாது விரைந்தோடும் தன்மை.** *கால்வயத்து ஊர்பரி.* (யுத்: 492)

**கால் வருடல் – கால் பிடித்தல்.** *ஊனமில் அடைப்பை கால் வருடல்.* (ஆ: 856)

**கால்வரை – 1. யானை.** *கால்கிளர் தேரோடு கால்வரையோடு.* (யுத்: 2276)

**2. தாழ்வரை. பாதசயிலம்.** *குருதி வாரி காலுயர் வரையில் செங்கேழருவி போலொழுகக் கண்டான்.* (யுத்: 1877) (யுத்: 3265)

**கால்வலி காட்டல் – காலால் விரைந்தோடி மீளுதல்.** *வளநகர் புக்கு மற்றென் கால்வலி காட்டிப் போந்தேன் கைவலிக்கவதி யுண்டோ.* (யுத்: 882)

**கால்வானகத் தேருடை வெய்யவன் – ஒற்றைச் சக்கரத்தைக்கொண்ட ஆகாயத்திலே உலாவுகின்ற தேரையுடைய சூரியன்.** (பா: 967)

**கால்விசை – வாயுவேகம்.** *கட்டிக் கல்லொடு கால்விசையிற் போய் இட்டிட்டார் கடலின் நடு.* (யுத்: 230)

**கால் விடுதல் – 1. விரைந்து செல்லுதல்.** *கண்டதோர் திசையே விசைகொடு கால்விட்டார் படை கைவிட்டார்.* (சு: 968) (கலா) (யுத்: 1387)

**2. பிறந்த மரபின் தன்மையை விடுதல்.** *கள்ளநீர் வாழ்க்கையே மைக் கைவிட்டுக் காலும் விட்டான்.* (யுத்: 1387)

**கால்விழுதல் – கீழிறங்குதல்.** *கால்விழுந்த மழையன்ன காட்சியீர்.* (யுத்: 3388)

**கால்விழுந்த மழை – காலிறங்கின மழை. இது மிகவும் கருமையாகக் காணும் என்பர்.** (கலா) (யுத்: 3388)

**கால் வீழ்த்தல் – காலிறக்குதல். கீழே இறக்குதல்.** *கணமாமழை கால் வீழ்த்தென.* (யுத்: 3716) [பா: பே]

**கால் வீழ்தல் – கீழே இறங்குதல்.** *கனை மாரிகள் தொகை தீர்த்து அவை துரந்தான் கடைஊறு உறு கணமாமழை கால் வீழ்த்தெனக் கடியான்.* (யுத்: 3716) [பா: பே]

**கால் வைத்தல் – 1. முழுகத் தொடங்குதல்.** *கவ்வையம் பெருங்கடல் முனியும் கால் வைத்தான்.* (*அ : 454*)

**2. இறங்குதல்** (*கலா*) (*அ : 454*)

**கால எயிறு – நஞ்சுள்ள பற்கள்.** *நிமிர் கலேயே போலும் கால எயிற்ருன்.* (*கி : 892*)

**காலக் கடத்தீ – ஊழி இறுதியில் மூண்டெழும் வடவைத்தீ.** *யாவரா லும் மூட்டாத காலக் கடைத்தீயென மூண்டுநின்ருன்.* (*அ : 408*)

**காலக்கனல் – ஊழித்தீ.** *காலக்கனல் கார்விடமுண்டு கறுத்ததன்றே.* (*ஆ : 700*)

**காலக் காற்று – ஊழிக் காற்று.** *இறுதி பற்றும் அடைப்பருங் காலக் காற்ருல் ஆற்றலதாகி.* (*யுத் : 2980*)

**காலக் கூற்று – காலம் பார்த்துக் கொல்லும் யமன்.** *கடுங் காலக் கூற்றினையும் விண்ணினையும் கோளினையும் பணிகோடற் காற்றினை நீ.* (*ஆ : 328*)

**காலக் கோள் – கெடுங்காலத்தை உண்டாக்கும் தீய கோள்.** *சீறடி கைகளில் திண்டினுள் காலக்கோளனுள்.* (*அ : 140*)

**காலகேயர் – ஒருவகை அசுரர்** *அலங்கல் வாள்கொடு காலகேயரைக் கொன்றதற்பின்.* (*யுத் : 516*)

**காலங் காண்டல் – காலங் கழியக் காணுதல்.** *இருக்கை யாம் இனிக் காண்டலிற் பற்பல காலங் காண்டுமால்.* (*கி : 533*)

**காலங் கொள்ளுதல் – தக்க காலம் பார்த்தல்.** *கண்டகராவி முடிப்பான் காலங் கொண்டார்.* (*யுத் : 3792*)

**காலங் கொளுலகம் – ஊழிக் காலத்தில் அழிக்கப்படும் உலகம்.** *காலங் கொள் உலகமோட.* (*யுத் : 1380*) [*பா : பே*]

**காலச் செந்தீ – உகாந்த கால நெருப்பு** *வெம்பிக் காய்ந்தது அவ் விலங்கை வேந்தன் மனமெனும் காலச் செந்தீ.* (*யுத் : 1117*)

**கால சங்கன் – அதிகாயனின் படைவீரன்.** (*யுத் : 1800*)

**காலடி - தூணின் அடிப்பகுதி. பூமியுள் புதையுண்ட காலின் அடிப் பகுதி.** *பாடகக் காலடி பதுமத் தொப்பன.* (*பா : 123*)

**காலத்தீ – ஊழித்தீ.** *இறுதியின் யாவும் உண்பான் சீறிய காலத்தீயின் செறிசுடர்ச் சிகைகளன்னுர்.* (*சு : 938*)

**காலந் தாழ்த்தல் – காலந் தாமதித்தல்.** *காலந் தாழ்த்த வில்லினர் வந்தாரென்றும் விளம்புதிர். விளம்பலாதிர்.* (*யுத் : 724*)

**கால நேமி – 1 கால சக்கரம். காலத்தை நடத்தும் சக்காம்.** *கவ்வயில் கால நேமி கணக்கையுங் கடந்த தென்பர்.* (*யுத் : 765*)

**2. இரண்யாட்சன் மகன். தன் தந்தை இறந்தபின் திருமாலோடு போர்செய்து இறந்துபட்டான்.** மாவியல் குடவரை கால நேமிமேல் ஏவிய திகிரிபோல் இரவி ஏகினன். (அ : 774) (யுத் : 3309)

**3. கால அயம் என்னும் கருநிறங்கொண்ட திணிந்த எஃகினற் செய்யப்பட்ட ஆழிப்படை.** குந்தம் கப்பணம் கால நேமி. (சு : 940)

**காலப்பாடு – காலத்தின் நிலைமை. காலத்தின் தன்மை.** கள்ளமில் காலப்பாடும் கருமமும் கருதேனுகில். (யுத் : 3674)

**கால பாசம் – 1. ஒருவகைக் கயிறு.** தோமரம் சக்கரம் காலபாசங் கதை பொருகையினர். (ஆ : 378)

**2. யமபாசம் போன்று கயிற்றுருவமான படை.** ஒளித்துப் பின் செல்லும் காலபாசத்தை ஒத்ததன்றே. (சு : 34) (ஆ : 401)

**3. யமனது பாசக்கயிறு.** கால பாசம்போல் வால். (யுத் : 1771)

**காலம் – 1. வருடம்.** காலமோர் பதினுயிரம் அருந்தவங் குறித்தான். (பா : 524) பயிலுங்காலம் பத்தொடு நாலும். (யுத் : 2601)

**2. அவகாசம்.** வீரனைக் காண்டலே குறை பின்காலம் வேண்டுமோ. (சு : 672)

**3. வாழ்நாள்.** இற்றது காலமாக இலங்கையர் வேந்தன் ஏவ ஒற்றர் வந்து. (யுத் : 714)

**4. உகாந்த காலம்.** காலங் கொண்டுலகு மோட. (யுத் : 1380)

**5. கறுப்பு (வடசொல்). காலமாரி.** மலைத்தலைக் காலமாரி மறித் தெறி வாடை மோத. (யுத் : 2149)

**6. காலாக்கினி.** மூலமும் முற்றிட முடிவில் திக்குமக் காலமும் ஒத்தனன். (கி : 249)

**7. காலபாசம்.** காலமென உன்னு கருத்தினனாய். (யுத் : 2329)

**8. இராக்காலம்.** கால இருள் சிந்து கதிரோன். (யுத் : 846)

**9. காளம். நஞ்சு.** நிமிர் திங்கட்கலையேபோலும் கால வெயிற்றான்.

**காலம் பார்த்தல் – முடிவுகாலத்தை எதிர்நோக்கல்.** காலம் பார்த்து இறைவேலை கடவாத கடலொத்தான். (சு: 317)

**காலம் விளைதல் – பொழுது தோன்றுதல்.** அரக்கர் காலம் விளைந்தது. (யுத் : 2132)

**கால மழை – ஊழிக்கால மழை.** உருமொடு கலந்த காலமழை. (யுத் : 640)

**காலமாக் கணிக்கும் நுண்மைக் கணக்கு – பல காலமாக எண்ணு கின்ற நுட்பமாகிய எண்கள்.** (வை. மு) **காலம் என்று எண்ணு கின்ற நுட்பமான அளவு.** (அண்) காலமாக் கணிக்கும் நுண்மைக் கணக்கையுங் கடந்துநின்ற மூலமாய் முடிவிலாத மூர்த்தி. (அ : 276)

**கால மாத்திரைப் படுதல் – காலப்பிரமாண அளவிற்குக் கட்டுப்படுதல்.** *பாணியிற்றள்ளிக் காலமாத்திரைப் படாது. (யுத் : 2732)*

**காலமா மாரி – பெரிய மழைக்காலம்.** *காலமா மாரி நீங்க. (யுத் : 4208)*

**கால மாரி – 1. பருவ மழை. கார்கால மழை** *அன்னவர் கற்பின் நின்றன கால மாரியே. (பா : 90) கண்ணெனப் பொழிந்தது கால மாரியே. (கி : 463)*

**2. கறுத்த நீர்கொண்ட மேகம்.** (வை. மு) *மலைத்தலைக் கால மாரி. (யுத் : 2149)*

**3. பெரிய மாரிக்காலம்.** *காலமாமாரி நீங்க. (யுத் : 4108)*

**காலமீன் – காலத்தையுணர்த்தும் விண்மீன்கள்.** *(ஆ : 716)*

**காலமீனின் வேந்தன் – காலத்தையுணர்த்தும் விண்மீன்களுக்கு வேந்தனாகிய சந்திரன்.** *காலமீனின் வேந்தன்றெளி யன்றியும். (ஆ : 716)*

**காலமுணர்தல் – செய்தற்குரிய காலத்தை யுணர்தல்.** *கால மேல் வினை பொருள் உணருங் கற்பிலாப் பாலன் நீ. (யுத் : 79)*

**காலமும்மை – இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற முக்கால நிகழ்ச்சிகள்.** *தெரியுங்காலம் மும்மையும் உணரவல்லார். (அ : 9)*

**காலமொய்யன் – யமனைப்போன்ற வல்லமையுடையவன்.** (அண்) **காலன்போன்ற வலிமை பெற்றவன்.** (கலா) **சமயத்துக்குத்தக்கபடி உதவும் வலிமையுடையவன்.** (வை. மு) *ஆழிக்கையனே மழுவனே என்றிவர் வலி கடந்தகால மொய்யனே. (யுத் : 3192)*

**காலமோர் மூன்றும் வல்லான் – இறப்பு, எதிர்ப்பு, நிகழ்வு என்று மூன்றுகாலத்து நிகழ்ச்சிகளையும் தெரிய வல்லவனாகிய அனுமன். (சு : 583)**

**காலவரிவில் - கூற்றுவன்போன்ற கட்டமைந்த வில்.** *காலவரி விற்பகழி. (சு : 164)*

**காலவலம்புரி – யமன்போன்ற பயங்கரமான வலம்புரிச் சங்கம்.** *கால வலம்புரிகையில் வாங்கி. (யுத் : 2405)*

**காலவன் காற்று – ஊழிக்காற்று.** *(பா : 414)*

**காலவன் படை – வாயுவாஸ்திரம்.** *காலவன் படையும் தெய்வக் கடலவன் படையும். (யுத் : 2380)*

**காலவால் – காலனை ஒத்த வால்.** *கால வாலிடைப்பட்டும் வெய்ய மருப்பிடைப்பட்டும் மாண்டு. (யுத் : 1894)*

**காலவான் கடுங்கணை – யமனைப்போன்ற சிறப்புடைய கொடிய அம்புகள்.** *(யுத் : 589)*

**காலவிருள்** – **நெடுங்காலமாகச் செறிந்து நிற்கும் புறவிருள்.** (அண்) **இராக்காலத்துத் தோன்றிய இருள்.** *காலவிருள் சிந்து கதிரோன் மதலை.* (*யுத் : 846*)

**காலவெங் கருங்கடல் திரைபோலும் வலக்கை** – **ஊழிக்காலத்து உலகெலாம் பரவும் வெவ்விய கரிய அலைபோன்றதாகிய வலதுகை.** (*யுத் : 1558*)

**காலவெங்கனல்** – **ஊழித்தீப்போலும் வெம்மை மிக்க நெருப்பு. பிரளய கால அக்னிபோன்ற கொடிய நெருப்பு.** *காலவெங்கனல் கதுவிய காலையில்.* (*யுத் : 216*) (*யுத் : 734*)

**கால வெந்தீ** – **யுகாந்த காலத்துக் கொடிய தீ.** *கதிர்கொள் மூவிலைக் கால வெந்தி.* (*பா : 410*) (*கி : 268*) (*சு : 470*)

**காலவேகத் தம்பு** – **கூற்றுவன் போன்ற வேகத்துடன் கூடிய அம்பு.** *செறிகால வேகத் தம்பிற் பொன்றின வேனும்.* (*யுத் : 3548*) (*பா : பே*)

**காலவேல்** – **காலன் வடிவான வேல். யமன் போன்ற வேல்.** *கைகொள் கால வேலினுர்.* (*ஆ : 73*) *காலவேலான்.* (*பா : 328*) (*அ : 269*) (*யுத் : 1168*)

**காலவேகத் தம்பு** – **யமனுடைய தொடர்பைக் கொண்ட அம்பு. (ஓகம் – யோகம்)** *கால ஓகத் தம்பிற் பொன்றினவேனும்.* (*யுத்: 3548*)

**காலன்** – **1. யமன்.** *காலன் மேனியிற் கருகிருள்.* (*பா : 508*)

**2. யமகிங்கரருள் தலைவன். யமனுடைய தூதுவருள் ஒருவன்.** (அண்) **இவன் ஓலைவிட்டு முன்னெச்சரிக்கை செய்து உயிர் கவர் பவன்.** *நின்றிசைத் துயிர் கவர் நீலக்காலனே.* (*சு : 1113*) *கடையுக முடிவினிற் காலன் என்பதென்.* (*யுத் : 481*)

**3. அதிகாயன் – படைவீரருள் ஒருவன்** (*யுத் : 1800*)

**காலன் வாய்க்களித்தல்** – **யமன் வாயிலிருந்த வண்ணம் களித்தல்.** *காலன் வாய்க்களிக்கின்றேம் பால் நவையிலை வந்ததென் நீ.* (*யுத் : 1349*)

**காலன் வாழ்வு** – **யமன் வாழ்ச்சி பெறுதற்குக் காரணமானது. (வில்)** *கைத்துணைவில்லினைக் கால்வாழ்வினை.* (*யுத் : 1778*)

**காலன் விடக்கயிறு** – **யமனது விஷமுள்ள நஞ்சின் தன்மையான பாசப் படை.** *ஒரு காலன் விடக்கயி றெனப் பிறழும் வாள்.* (*யுத்: 3642*)

**காலன் விருது** – **யமனுடைய வீர விருது.** *காலன் விருதைச் சிந்தும் வில்.* (*யுத் : 3804*)

**காலனார் - யமன்.** காலனார் வயத் தடைந்திலன். (யுத் : 1161)

**காலனார் முகங்காண்டல் - இறத்தல்.** நீலன்...... காலனார் முகங் கண்டனன். (யுத் : 2569)

**காலனுக்களித்தல் - யமனுக்கு அளித்தல். கொல்லுதல்.** அன்ன வாலியைக் காலனுக் களிப்பதோர் ஆற்றல். (கி : 151)

**காலிற் கால்வருதாரினம் - காற்றைப்போலக் காலால் விரைந்துவரும் குதிரைப்படைத் தொகுதி.** (ஆ : 400)

**காலின் செம்மல் - அனுமன்.** (யுத் : 2670)

**காலின் மைந்தன் - அனுமன்.** நின்ற அக்காலின் மைந்தன் நெடிது வந்தடியிற் றாழ்ந்தான். (கி : 72)

**காலுடைக் கடல் - சண்டமாருதத்தினால் உடைதலைக்கொண்ட கடல்.** காலுடைக் கடலெனச் சிந்திக்கைகெட வாலுடை நெடுப்படை இரிந்து மாண்டதால். (யுத் : 1528)

**காலுடைச் சிறுவன் - காற்றின் புதல்வனான அனுமான்.** (யுத் : 2143)

**காலுண்ட சேற்று மேதி - முழங்கால் அளவும் மறைத்துள்ள சேற்றினை யுடைய எருமை.** காலுண்ட சேற்று மேதி கன்றுள்ளிக் கனைப்ப. (பா : 44)

**காலுதல் - கால்தல் பார்க்க.**

**காலுறப் பணிதல் - சிரம் காலிற்படுமாறு வணங்குதல்.** கைகயன் தனயை முந்தக் காலுறப் பணிந்து. (யுத் : 4203)

**காலுறல் - வெளியே தள்ளுதல்.** உயிர் காலுறப் பயத்தால் வேர்த் தான். (யுத் : 3047)

**காலுறு கண் - கருநிறங்கொண்ட கண். (கருமணி என்பர்)** நெடுங் காலுறு கண்வழிப் புகுந்த காதல் நோய். (பா : 604)

**காலெறிதல் - காற்று வீசுதல்.** கால் எறிய நந்தா விளக்கின் நடுங்கு கின்ற நங்கைமார். (அ : 407)

**காலேறின சிலை நாண் - குதைகளில் ஏறியுள்ள வில் நாணி.** காலேறின சிலை நாணொலி கடவேறுகள் பட வான் மேலேறின. (யுத் : 1831)

**காலை - 1. காலம்.** காலையில் நறுமலர் ஒன்றக்கட்டிய மாலை. (யுத் : 207)

**2. காலையில் உதிக்கும் சூரியன். (உதயகிரி)** காலை மாலைக் குண்டலம் அலம்புகின்ற. (கி : 377) (பா : பே)

**3. காலைப்பொழுது.** (அண்) காலையும் மாலையும் கடவுளர்க்கணி மாலையும் தூபமும் வழங்குக. (பா : 293)

**4. மத்தியானம்.** (கலா) (பா : 293)

**காலைக் கதிரோன் – இள ஞாயிறு.** காலைக் கதிரோன் நடுவுற்றதோர் வெம்மை காட்டி. (அ : 416)

**காலை மாலை – 1. சூரிய சந்திரர்.** (கி : 377)

**2. காலைப்பொழுதும் மாலைப்பொழுதும்.** (பா : 293)

**காலையின் வாய் – கால அளவில்.** காகுத்தனை எய்திய காலையின் வாய். (யுத் : 1731)

**காலை வாயளவு – விடியுமளவு.** காலை வாயளவுந் தம்பி இமைப்பிலன் காத்து நின்ருன். (அ : 665)

**காலை வேலை – கீழைக் கடல்.** காலை வேலையினுற்றது. (அ : 726)

**காலொடு போய் – காலை ஒட்டிச்சென்று. திருவடியுடன் தொடர்ந்து சென்று.** கரு ஞாயிறு போல்பவர் காலொடு போய் வருநாள் அயலே வருவாய் மனனே. (பா : 1248)

**காவதம் – காதம்.** பின்னர்க் காவதம் இரண்டு சென்ருர். (பா : 422) (யுத் : 2535)

**காவல் – 1. காத்தல்.** கோவையின் பெருவடம் காவல்செய் தடக்கையின் நடுவட் காந்துவ. (பா : 1301) காவல் காட்டுதல் துடைத்தல். (யுத் : 139) அறத்தை முற்றுங் காவற்குப் புகுந்து நின்ருர் காகுத்த வேடங்காட்டி. (யுத் : 1368) (சு : 979)

**2. கட்டுப்பாடு** இனியது புரிதல் நொய்யதாகுமென்ருரும் என் காவலின் நுழையார். (யுத் : 184)

**3. இரட்சாபந்தனம் (வை. மு) ரக்ஷை.** வரமென்ருன்ற காவல். (யுத் : 3909)

**4. காப்பவர்.** கள்வாரிலாமைப் பொருள் காவலுமில்லை. (பா: 165)

**காவல் சுற்றுளாள் – சுற்றிலும் காவல் செய்யப்பட்டுள்ளவள். (வை. மு) காவலைத் தன் சுற்றிலும் அமையப்பெற்றவள்.** (கலா) **காவல் மதிலுள் இருப்பவள்.** (அண்) கடக்கரும் அரக்கியர் காவல் சுற்றுளாள். (சு : 393)

**காவல் செய்தடக்கை – உலகங்களைக் காத்தளிக்கும் நீண்ட கரங்கள்.** (பா : 1301)

**காவல் திண்கற்பமைந்தார் – தமக்குக் காவலாகிய திண்மையான கற்பையுடைய பெண்டிர்.** (ஆ : 351)

**காவலர் – காவல் செய்பவர். பாலகர்.** முரட்டிசைக் காவலர் எண்மர். (யுத் : 2706)

**காவலன் – அரசன்.** *காவல மண்ணியன் மனிதரும் குரங்கும் மற்றவும் உண்ணிய அமைந்தன. (யுத் : 46)*

**காவலாளர் - பாதுகாப்பவர்.** *காவலாளர் விழுக்கலை கண்ணிலா ஏவலாளர். (யுத் : 675)*

**காவலாளன் – அரசன். காத்தல் தொழிலையுடைய இராவணன்.** *உலக மூன்றுங் காக்கின்ற காவலாளன். (யுத் : 1220)*

**காவலினுழையர் – காத்தல் தொழிலை மேற்கொண்ட பணியாளர்.** *காவலினுழையர் தம்மைக் கொணருதிர் கடிதின் என்றான். (ஆ: 724)*

**காவலோன் – அரசன். உலக மூன்றுங்காவலோன் பின்னை. (ஆ: 263)**

**காவற்பறை – குருவி முதலியவற்றை ஓட்டுதற்காக அடிக்கும் பறை.** *புனங் காவற் பறை யெடுத்து ஒரு கடுவன் நின்றடிப்பது பாராய். (அ : 758)*

**காவற்பாடு – காவல் செய்யுந்திறம்.** *இலங்கை வெய்யோர் சோர் விலாக்காவற் பாடும் பெருமையும் அரணும்.* **(சு : 1338)**

**காவற்றிண் கற்பு – காவலாகிய திண்மையான கற்பு.** *காவல் திண் கற்பமைந்தார் தம் பெருமை தாங்கமுளார்.* **(ஆ : 351)**

**காவன் மன்னவன் – உலக மாக்களைக் காக்கும் காவலன். (தசரதன்)** *காவன் மன்னவன் கான்முளை கண்டிலன். (அ : 825)*

**காவன்மாத் தேவர் – காவல் மாத் தேவர்.** *சோலையைப் பாதுகாத்தலை மேற்கொண்ட சிறந்த தேவர். (சு : 979)*

**காவன் மாமுடி – காவல் செய்தற்கு அறிகுறியாகச் சிறந்த மாமுடி.** *காவல் மாமுடி சூடு பேரெழில் காணலாம் எனும் ஆசையால். (அ : 247)*

**காவா நிலம் – காக்கப்படாத பன்னசாலை. (ஆ : 967)**

**காவார் கரி – காத்தலைப் பொருந்திய கரி. காவார் கரி தேர்பரி காவலின்.** *(யுத் : 1691)*

**காவாளன் – காவலன்.** *சேனை காவாளன். (யுத் : 751)*

**காவி – குவளை. நீல மலர்.** *காவியும் ஒளிதரு கமலமு மெனவே ஓவிய எழிலுடை ஒருவனை.* **(பா : 304)**

**காவியங்கண்ணி – நீல மலர்போன்ற அழகிய விழியுடைய சீதை.** *காவியங்கண்ணி தன்பாற் கண்ணிய காதல்.* **(சு : 308)**

**காவியல் குடவரை – கா இயல் குடவரை. சோலைகள் பொருந்திய அத்தகிரி.** *காவியல் குடவரைக் கால நேமி மேல் ஏவிய திகிரிபோல் இரவி ஏகினன்.* **(அ : 774)**

**காவிரி – காவேரி நதி.** *கருங்கடல் புகப் பெருகு காவிரி.* (யுத் : *697*) (ஆ : *163*)

**காவிரி நாடு – காவேரி நதி பாயப்பெற்ற நாடு.** *காவிரி நாடன்ன கழனி நாடொரீஇ.* (அ : *993*)

**காவி விழி – நீல மலர்போன்ற கண்கள்.** *காவி விழி யார்கள்.* (கி: *857*)

**காவினர் – காத்தண்டினைத் தாங்கினர். இரு முனையிலுங் சுமை கோக்கப்பட்ட கழி சுமக்கும் காவடியை யுடையவர்.** (கலா) *அல் திரள் பரித்த காவினர் பப்பரர் ஏகினர்.* (பா : *853*)

**காவு மழுத – மலர்ச்சோலைகளும் அழுதன.** *கள்ளொழுகுங் காவு மழுத.* (அ : *395*)

**காவேரி – காவிரி நதி.** *நருமதை காவேரி.* (யுத் : *4089*)

**காழ் – 1. வயிரம்.** *இருண்ட காழகில்.* (கி : *233*)

**2. வடம்.** *நவமணிக் காழும்.* (யுத் : *4344*)

**காழம் – சல்லடம். (காழகம்) நீல ஆடை. அரையிலிருந்து தொடை வரை மறைக்கும்படி கறுப்புத் துணியால் தைத்து அணியப்படும் சல்லடம்.** *காழமிட்ட குறங்கினன்.* (அ : *648*)

**காழமிட்ட குறங்கினன் – சல்லடமிட்ட துடையினையுடையவன்.** (அ : *648*)

**காள நிறம் – நஞ்சின் நிறம்.** *காள நிறத்தோ டொப்பவர் மாய.* (கி : *1010*)

**காளம் – 1. எக்காளம்.** *காளத்தோடு மங்கல பேரி செய்த பேரொலி.* (பா : *893*) (யுத் : *4309*)

**2. கருமை.** **காளமாமேகம்.** (யுத்: *784*) *காளவாருறை.* (யுத்: *798*)

**3. கருவிடம்.** (கலா) *கண்ணுதல் கண்டத்தின் காளமாமென.* (கி : *446*) [பா : பே]

**காளம் ஆர்த்தல் – காளமென்னும் ஊதுகருவி ஆரவாரித்தல்.** *புரை மணிக் காள மார்ப்பப் பல்லியந் துவைப்ப.* (யுத் : *4309*)

**காள மேகம் – நீருண்ட கரிய மேகம்.** *நீருண்ட கமஞ்சூற் காள மேகமும் நாகமுந் தெரிகில காணாய்.* (அ : *738*) (யுத் : *2070*)

**காளவுறை – கருநிறமுடைய உறை.** *ஓர் நாகர் பாவை காள வார் உறையின் வாங்குங் கண்ணடி.* (யுத் : *798*)

**காளி – 1. மகிஷாசுர மர்த்தனஞ் செய்வதற்காக பார்வதிதேவி கொண்டதோர் அவதார விசேடம். கருநிறமுடையது என்று பொருள்.** *காளியே யனைய காலன்.* (யுத் : *2053*)

2. **காற்று. (தெலுங்கு – காலி)** *நள்ளிருளடைந்த காளி போன்ற னன் இராவணன். (யுத் : 3509)*

**காளிந்தி – யமுனை.** *சிறு மான்கன்று நின்றுகள் கரையுடைக் காளிந்தி. (அ : 723)*

**காளிமை – கருமை.** *தங்குதிண் கரிய காளிமை தழைந்து தவழ. (ஆ : 14) காளிமைப் பிழம்பு. (யுத் : 2169)*

**காளிமைப் பிழம்பு – கருமையின் தொகுதி.** *(யுத் : 2169)*

**காளை – எருது. இடபம் போன்றவன்.** *கைவரை எனத்தகைய காளை. (பா : 388)*

**காளை நீர்கள் – காளைப்பருவமுடைய நீவிர்.** *காளைநீர்கள் யார் மனப்பட எனக்குரை வழங்குவீர் என்ருள். (ஆ : 192)*

**காளையீர்கள் – காளைபோன்ற நீங்கள்.** *கனப்படை வரிசிலைக் காளையீர்கள் யார். (ஆ : 192) [பா : பே]*

**காளை வீரர் – காளைப்பருவமுள்ள வீரர்.** *காத்தனர் திரிகின்ற காளை வீரர். (பா : 460) (ஆ : 623)*

**காற் கடல் – கால் கடல். கருநிறமுள்ள கடல்.** *காற் கடல் போற் கருணைக்கடல். (பா : 1343)*

**காற்றளம் – பாத தளம். பாதம்.** *சேற்றிள மரைமலர் சிறந்த வாமெனக் காற்றளம் பொலிதரு கன்னிமா ரொடும். (அ : 962)*

**காற்றியக்கு – காற்ருனது மேலும் கீழும் இயங்குதல்.** *காற்றியக் கற்றது கலங்கிற் றண்டமே. (யுத் : 3746)*

**காற்றிற் கடிய கலினப்புரவி – காற்றைவிட வேகமாகச் செல்லும் கலினம் பூட்டிய குதிரை.** *காற்றிற் கடிய கலினப்புரவி நிருதர் களத்து உக்கார். (சு : 853)*

**காற்றின் நாயகன் – வாயுதேவன்.** *(யுத் : 3624)*

**காற்றின் படை – வாயு வாஸ்திரம்.** *இலக்குவன் வெங்காற்றின் படை கொண்டு கடந்தனனுல். (யுத் : 2351)*

**காற்றினம் – காற்றின் கூட்டம்.** *காற்றினம் ஆர்த்தகைமுறை ஆர்த்தன. (ஆ : 399)*

**காற்றினுக் கரசன் – வாயு.** *(யுத் : 911) (யுத் : 1881)*

**காற்றினேன் – வாயுதேவன்.** *காற்றினேன் தன்னை வாளாமுனிதலிற் கண்டதில்லை. (ஆ : 727)*

**காற்றுக் கிறைவன் – வாயுதேவன்.** *(சு: 55)*

**காற்றுடைச் செல்வன் – வாயுதேவன்.** *காற்றுடைச் செல்வன் தானும் மழையுடைக் கடவுள் தானும்.* (யுத் : *2379*)

**காற்றுறு சாம்பல் – காற்றினுல் வீசப்பட்ட சாம்பல் போலும்** *தந்திரங் காற்றுறு சாம்பல்.* (யுத் : *5313*)

**காறளரல் – கால் தளர்தல்; நிலை குலைதல்.** *படைவேலை காறளர வீசினுன் நிருதர் கூசினுர்.* (யுத் : *2022*)

**காருக்குதல் – கால் தாக்குதல்; காற்று வீசுதல்.** *காருக்க நிமிர்ந்து புகைந்து கனன்று பொங்கும் ஆருக்கனல்.* (அ : *448*)

**காறிரண்டனைய கால –காற்று திரண்டாற்போன்ற கால்களையுடையன.** *காறிரண்டனைய கால கடுநடை கலினப் பாய்மா.* (அ : *1045*)

**காறுதல் - வருந்துதல். வைரங் கொள்ளுதல்.** *காறின உள்ளம் நோவக் கண்களாற் றெரியக் கண்டான்.* (யுத் : *3598*)

**காறும் – அளவும்.** *இற்றவன் அன்று தொட்டின்று காறும்.* (ஆ: *237*) (கி : *96*) *மேனின்றுகீழ் காறும்.* (அ : *413*)

**காறேய் மேனிக் கண்டகர் – காற்றின் தன்மைகொண்ட (விரைந்து செல்லவல்ல) மேனியையுடைய பகைஞர்.** (யுத் : *3563*)

**கான் – 1. காடு.** *கானினும் வரையினும் கடி தடத்தினும்.* (பா: *200*) *கானுயர் வரைநிகர் கார்த்த வீரியன்.*

**2. செறிவு. அடர்த்தி. தொகுதி.** *கானுடைக் கதிர்களென்னும் ஆயிரங்கரங்க ளோச்சி.* (பா : *975*)

**3. மணம்.** *கானுயர்த்த தார் இராமன்.* (சு : *296*)

**கான் நரி – கானில்வாழும் நரி.** *கரியுண்ட களத்திடையுற்றன கான்நரி உண்டி உகப்பன நட்பினவால்.* (யுத் : *2928*)

**கான்புறஞ் சேறலின் அருமை காண்டல் – காட்டிற் புகுதலால் விளையுந் துன்பத்தை நோக்கிக் கான்புகாது ஒழிகை.** *கான்புறஞ் சேறலின் அருமை காண்டலால்...... மன்னர் தொல்குலம் யான் பிறந்தறத்தி னின் றிழுக்கிற் றென்பரோ.* (அ : *561*)

**கான்புறம் – காட்டில்.** *கான்புறஞ் சேறலின் அருமை காண்டலால்.* (அ : *561*)

**கான்முகங் குழைய வாங்குதல்–விற் காலின் முகம் குழைய வளைத்தல்.** *கொடுஞ்சிலை நாணிற் கோத்துக் கான்முகங் குழைய வாங்கி.* (யுத் : *1881*)

**கான் முதல் – பாதங்களில்.** *கான் முதற் றொடர்ந்த நூபுரஞ் சிலம்ப.* (சு : *409*)

**கான் முளை - புத்திரன்.** விழிக்குங்கண் வேறில்லா வெங்கான் என் கான் முளையை......... ஏகச் சூழ்வாய். (அ : *344*) (யுத் : *1472*) (யுத் : *2204*)

**கான் முறை - ஒழுங்கு.**

**கான்ற - கக்கிய.** கான்ற இன்னுயிர்க் காலனும் கவர்ந்து மெய்ம் மறந்தான். (ஆ : *521*)

**கான்றலை - காட்டின் இடத்தை. காட்டை.** கான்தலை நண்ணிய கானை. (அ : *997*)

**கான்றன - சொரிந்தன.** சளசளவென மழைத்தாரை கான்றன. (பா : *225*)

**கான்று - வெளிச் சொரிந்து.** உதிரத்தின் வாரி கண்ணிக் கடலென்று நுகர்ந்து அது கான்று மீள. (ஆ : *924*)

**கான அனல் - காட்டுத்தீ.** அரக்கர் உருமைச்சுடு கான அனல். (ஆ : *162*)

**கானகக் கரி - காட்டில் அரச யானையைப் காணப்பெருத யானை.** (யுத் : *3748*)

**கானகந் தொடர்ந்த தீ - காட்டில் தொடர்ந்த தீ.** கானகந் தொடர்ந்த தீயிற் சுடுவன பலவுங் கண்டான். (யுத் : *2539*)

**கானகம் - காடு.** (யுத் : *2539*) கானக மயில்கள். (சு : *199*) கானகக் கரியெனக் கலங்கினர். (யுத் : *3749*)

**கானக மயில் - காட்டு மயில்.** (சு : *199*)

**கானத்தணங்கு - வனதேவதை.** (கலா) கானத்தணங்கினு மினியாய். (அ : *704*)

**கானம் - 1. காடு.** கானவாழ்க்கைக் கவிக்குலம். (யுத் : *687*) கானுள நிலமகளைக் கைவிட்டுப் போவானைக் காத்துப் பின்பு போனானும் ஒரு தம்பி. (யுத் : *4144*) [பா : பே] மல்லிகைக் கானம். (யுத்: *462*)

**2. தொகுதி.** கொடியின் நெடுங்கானம். (அ : *822*) தோட் கானஞ் சுற்ற. (யுத்: *1589*) வாளி கடைச் செறி கானம் நுழைந்து. (யுத் : *3465*)

**3. ராகம். பாட்டு.** (வை. மு) **இசைப் பாட்டுக்குரிய இயல்பு.** (அண்) தொளையுறு புழைவேய் தூங்கிசைக் கானம். (சு : *417*)

**கானம் படர்தல் – கானஞ் செல்லுதல்.** *துன்னு கானம் படரத் துணிவதோ.* (அ : *315*)

**கான மாமரம் – காட்டிலுள்ள பெருமரங்கள்.** (யுத் : *2493*)

**கான மாயிரங் கவந்தம் – காடுபோற் செறிந்த ஆயிரங் கவந்தங்கள்.** (யுத் : *3485*)

**கானயாறு – காட்டாறு. காட்டுவழியே செல்லுகின்ற ஆறு.** *கானயாறு படர்ந்த கருங்கடல்.* (யுத் : *687*) *வழைதுறு கானயாறு.* (கி : *477*) (ஆ : *1035*) (யுத் : *1789*)

**கானல் – 1. கடற்கரைச் சோலை.** *கானலும் கழிகளும் மணலும்.* (யுத் ; *332*)

**2. பரல் நிரம்பிய நிலம்.** *மலைதழுவு கானல் நீணெறி தொலைய.* (கி : *43*) [பா : பே]

**கான வெள்ளம் – காட்டியாற்றின் பெருக்கு.** *கான வெள்ளம் கால் கோப்பத் துளங்கலில்லாத் தனிக்குன்று.* (அ : *602*)

**கானற்றேர் – கானல் தேர். பாலை நிலத்திலிருந்த வெப்பத்தால் மண்ணிலிருந்து வெளிப்படும் ஒளியும் காற்றும் சிறு புழுதியும் சேர்ந்தசைய நீர் ஓடுவதுபோன்ற தோற்றமுண்டாகும்; இத்தோற்றத் திற்கு கானல் நீர், பேய்த்தேர் என்று பெயர்.** *ஏய்ந்த அக் கனலிடை எழுந்த கானற்றேர்.* (பா : *355*)

**கானிமிர்ந் துண்ணுதல் – காலை நிமிர்த்தபடி உண்ணுதல்.** *கரக்கரி கானிமிர்ந் துண்டன.* (அ : *1081*)

**கானிமிர் வெஞ்சிலை – கால் நிமிர் வெஞ்சிலை, கால்கள் ஓங்கிய கொடியவில்.** *கானிமிர் வெஞ்சிலை கையினிறுத்தான்.* (சு : *922*)

**கானிரை – கால் நிரை. கால் வரிசைகள்.** *வாசியின் கானிரை யறுத்து.* (யுத் : *1781*)

**கானுடைக் கதிர் – அடர்த்தியான கதிர்கள்.** *வெய்ய கானுடைக் கதிர்களென்னும் ஆயிரங் கரங்களோச்சி.* (பா : *975*)

**கானுயர்த்த தார் – மணத்தை மிகச்செய்த மாலை.** *கானுயர்த்த தார் இராமன்.* (சு : *296*)

**கானுறை பகல் – காட்டில் தங்கும் நாள்.** *படருற உளனும்பி கானுறை பகலெல்லாம்.* (அ : *687*)



**கிங்கரர் — ஏவலாளர், பணியாளர்.** பாந்தனைக் கிங்கரர் ஒரு புடை கிளர்ந்து பற்றினர். (சு : 1050) (யுத் : 2257)

**கிச்சு — நெருப்பு. [க்ருசாநு]** கிச்சுறுகிரிபட. (யுத்: 2297) (சு: 1045)

**கிஞ்சுகங்கிடந்த வாயாள் — முருக்கம் பூப்போலும் சிவந்த வாயை யுடையவள்.** (பா : 1059)

**கிஞ்சுகம் — முள் முருக்கம்பூ.** கிஞ்சுக வேலி. (ஆ: 1074) (யுத்: 2297) (பா : 1059) கிஞ்சுகத்தகிரி ஒத்தனர் கிட்ட. (யுத் : 818)

**கிஞ்சுகர் — முருக்க மலரையுடையவர்.** வல்லாயக் கிஞ்சுகர். (யுத்: 818)

**கிஞ்சுக வேலி — முருக்க மலர்களாலாகிய வேலி.** (ஆ : 1074)

**கிட்கிந்தை — கிட்கிந்தா நகரம்.** கிட்கிந்தை இதுவேல் ஐய கேட்டியால். (யுத் : 4096)

**கிட்ட இடுதல் - நெருங்கக் கோத்தல்.** கிட்ட விட்டிடை செறிந்தன. (ஆ : 6)

**கிட்டுதல் — நெருங்குதல்.** கிட்டினர் கீழ்த்தூக்கினர். (யுத் : 2526)

**கிடக்க — அலட்சியத்தைக் காட்டுஞ் சொல்.** நங்கை இவளென்றால் இச்சிலை கிடக்க மலை ஏழையும் இருஞே. (பா : 1237)

**கிடக்கிடு — கிடக்க.** இச்சேனை கிடக்கிடு. (அ : 1012)

**கிடக்கை — இடங்கள்.** பெரும்புனல் மருதஞ் சூழ்ந்த கிடக்கை பின் கிடக்கச் சென்றார். (கி : 921) (கி : 929)

**கிடங்கு — அகழி.** பாழி நன்னெடுங் கிடங்கு. (சு : 242)

**கிடத்தல் — 1. இருக்கப் பெறுதல். பொருந்தியிருத்தல்,** நெடுங்கனி கிழங்கு காய் கிடந்த. (அ : 719) (பா : 1059)

2. **வீழ்ந்து கிடத்தல்.** மன்னவன் கிடந்த பார்மிசை வீழ்ந்தனள். (அ : 325) (யுத் : 1289)

3. **தங்குதல்.** மூன்று நூல் கிடந்ததோர் முனியும் போயினன். (அ : 1202)

4. **அடையப்பெறல்.** நிலைகிடந்த நெடுமதிட் கோபுரம். (யுத்: 1289)

5. **படுத்தல்.** மலை கிடந்ததுபோல வணங்கினன். (யுத் : 1289)

6. **பயிலல்.** கொலைகிடந்த வேல் கும்பகருணன். (யுத் : 1289)

7. **சூழ்ந்திருத்தல்.** அலைகிடந்த இலங்கை. (யுத் : 1289)

8. **செய்தல்.** கொலை கிடந்த வேல். (யுத் : 1289)

**கிடத்துதல் – விழுந்து கிடக்கும்படி செய்தல்.** *கை தலத்திடைக் கிடத்துவென்.* **(யுத் : 1453)**

**கிடாய் – ஆட்டுக்கிடாய்.** *சினக்கிடாய் கடாய் வந்து.* **(யுத் : 495)**

**கிடுகு – பலகையாற் செய்த ஒருவகைப் போர்க்கருவி. கேடயம். மாற்ருர் எறியும் ஆயுதங்களைத் தடுத்து விலக்குதற்குரிய கருவியாகிய வட்டப்பலகை.** *செயிர று கிடுகும்பற்றி.* **(யுத்: 274) (சு: 424)**

**கிடை – 1. நெட்டி.** *கிடை புரை இதழாரும்.* **(பா : 1281)**

**2. சடை.** *சேதாம்பற் கயலே கிடந்த செங் கிடையே.* **(கி : 30)**

**3. படுத்திருக்கை.** *கேளில் வெங்கிளர் கிடை உயிர்ப்பு.* **(சு : 222)** *[பா : பே]*

**4. ஒப்பு.** *(கலா) மள்ளர் கட்ட காவியங்கட் கிடை கழனி.* **(பா : 542)**

**கிடைக்க – அகப்படும்படி.** *(யுத் : 467)*

**கிடைத்தல் – 1. பொருந்துதல்.** *அண்டத்தைக் கீழ்மடுத் தெடுப்பினும் கிடைத்த செய்யுமால்.* **(கி : 227) (கி : 211)**

**2. அமைதல். இயைதல்.** *(அண்) (வை. மு) அன்னவட் கடிமையிற் கிடைத்து.* **(பா : 506)**

**3. கிடைக்கப்பெறுதல்.** *(கலா)* **(பா : 506)**

**4. கிட்டுதல். சமீபித்தல். வருதல்.** *ஆற்றுதியாயிற் கிடைத்தி அல்லையேல் ஒளித்தியால்.* **(யுத்: 1215)** *கிடைத்தார் பலர்.* **(ஆ: 465)** *அகம்பனைக் கிடைத்தான்.* **(யுத் : 2514)**

**5. எதிர்த்தல்.** *(வை. மு) கரத்தொடு கரதலங் கிடைப்பப் பூட்டி.* **(யுத் : 112)**

**6. கைக்கு எட்டுதல்.** *கிடைக்க வந்தான்.* **(யுத் : 467)**

**7. அடைதல். தோன்றுதல்.** *ஊழி நாள் உவரி ஓசை கிடைத்திட முழங்கி.* **(யுத் : 2409)** *சீதையைக் கிடைத்தும்.* **(யுத் : 531)**

**8. ஒன்றுபடல்.** *(கலா)* **(யுத் : 112)**

**9. சிக்குதல்.** *கிளர்ந்தாரையும் கிடைத்தாரையும்.* **(யுத் : 2508)**

**10. தாழாது இசைத்தல்.** *கிளர்ந்த சீற்றமும் காதலும் எதிரெதிர் கிடைப்ப.* **(சு : 467)**

**11. அகப்படுதல்.** *கிடைக்க வந்தானென.* **(யுத் : 467)**

**கிண்கிணி – சதங்கை.** *மேகலை கிண்கிணி வாயின்ருேறும் மறையும்.* **(சு : 108)**

**கிண்டுதல் - குடைதல். கிளைத்தல்.** *முற்றுறு முகைகிண்டி முரல்கில சிறு தும்பி.* **(அ : 701)**

**கிந்துதல் - பெருவிரலைக்கொண்டு நடத்தல். நொண்டுதல்.** *கேடகத் தடக்கைகள் கவ்விக் கிந்தின;* **(அ : 1098)**

**கிம்புரி - 1. சுரு என்ற பெருமீன் அங்காந்தவாயின் வடிவத்திற் செய்த ஆபரணம். இது மகரவாய் எனவும் குரங்குசெறி எனவும் வழங்கப்படும்.** *ஏசறு கிம்புரி எயிறு வெண்ணிலா வீசலின்.* **(பா : 1310)**

**2. யானைக்கொம்பில் இடும் பூண்.** *உம்பருக் கரசன் மால் கரியி னோடை யெயிறுண் கிம்புரி.* **(ஆ : 13)**

**கிம்புரி வலயம் - கேயூரம். மகரமீன் வடிவாகச் செய்யப்பட்ட தோள்வளை.** *தோடொறுந் தொடர்ந்த மகரிகை வயிரக் கிம்புரி வலயமாச் சுடர்கள்.* **(சு : 412)**

**கியாதி - பிருகுவின் மனைவி.** **(பா : 401)**

**கிராதர் - வேடர்.** *கேட்டனன் கிராதர் வேந்தன்.* **(அ : 1026)**

**கிராதர் கோன் - குகன்.** *பெருந்தடந் தானையோடும் கிராதர் கோன் பெயர்ந்து வந்தான்.* **(யுத் : 4232)**

**கிராதர் வேந்தன் - குகன். (அ : 1096)**

**கிரி - 1. மலை.** *மஞ்சு சுற்றிய வயங்கு கிரி.* **(ஆ : 7)**

**2. (இலக்) பெருங்கற்கள்.** (வை. மு) **பெருமலையிலுள்ள சிறு குன்றுகள்.** (அண்) *இடிபடத் தகர்ந்து சாய் கிரி.* **(கி : 460)**

**கிரிக்குலம் - மலையின் கூட்டங்கள். (யுத் : 565)**

**கிரியை - செயல். நுண்செயல்.** *அருநடக் கிரியை.* **(சு : 121)**

**கிரீவம் - கழுத்து.** *தெசந்தொகு அக்கிரீவனைக் கடிந்து.* **(யுத் : 4071)**

**கில் - ஆற்றலையுணர்த்தும் இடைநிலை.** *இடையிற் படுகிற் கிலம்.* **(யுத் : 1749)**

**கிலிஞ்சன் - விராதன் தந்தை.** *அக்கிலிஞ்சன் மைந்தன் ஆயினேன்.* **(ஆ : 68)**

**கிலுக்கம் - ஒரு நீர்ப்பறவை. (சு : 246)**

**கிழக்கூடு - கிழக்கில்.** *மேக்கூடு கிழக்கூடு மிக்கிரண்டு திக்கூடு போக்கூடு தவிர்த்து.* **(யுத் : 1580)**

**கிழக்கெழு வழக்கு - கிழக்கே உதித்து மேற்கே அத்தமிக்கின்ற முறைமை.** *மாகம் கிழக்கெழு வழக்கு நீங்கி வடக்கெழுந் திலங்கை செல்லும் பரிதிவானவன்.* **(சு : 29)**

**கிழங்கு – கிழங்கு வகைகள்.** *கறிகிழங்கென...... வெந்து.* (யுத்: 563)

**கிழமை – 1. உரிமை. தெரிதற்குரிய தகுதி.** (அண்) **தன்மை.** (கலா) *கேவலத்திவர் நிலைமை தேர்வதெக் கிழமை கொடு.* (கி : 48)

**2. முறைமை,** *ஈதொரு கிழமைத்தாமோ.* (யுத் : 3592)

**கிழவோன் – உரிமையுடையோன்.** *இக்கடலிடைக் கிழவோன்.* (அ : 51)

**கிழி – 1. பிளவு.** *இரண்டு கிழித்துணையாய்ப் பிளந்தான்.* (யுத்: 2330)

**2. துணி.** *கிழியொடு நெய்தீற்றி.* (யுத் : 216) *கிழிபடக் கடல் கீண்டது.* (யுத் : 735)

**கிழி சோரி – கிழிந்து பெருகுகின்ற இரத்தம்.** *உடலிற் கிழி சோரியை வாரித் துடைத்தார்.* (யுத் : 1914)

**கிழித்தல்: – பெயர்த்தெடுத்தல்.** *அனுமன் ஆண்டோர் நெடுங்கிரி கிழித்துக்கொண்டான்.* (யுத் : 2900)

**கிழிதல் – 1. உதிர்தல்.** *நெற்கிழிய.* (கி : 517)

**2. பிளத்தல்.** *மண்டலங் கிழிந்த வாயில்.* (சு: 750) *ககன முட்டை கிழிந்தது.* (யுத் : 260)

**3. பிளந்து துன்புறல்.** *கிழிகிலே நெஞ்சம்.* (யுத் : 1600)

**4. மனமுடைதல்.** *கெட்டனம் என வானரத் தலைவருங் கிழிந்தார்.* (யுத் : 3770)

**கிழியச் சிந்துதல் – சிதறடித்தல்.** *கேடகப் புறத்தினல் கிழியச் சிந்தினன்.* (யுத் : 1528)

**கிள்ளுதல் – 1. தோண்டுதல்.** *கிள்ள எழுகின்ற புனல்.* (பா : 920)

**2. கிள்ளுதல்.** *வள்ளுகிர் நுதியால் வாங்கித் தலைகளைக் கிள்ளும்.* (யுத் : 271)

**கிள்ளை – கிளி.** *வீட்டுங்காலத்து அலறிய மெய்க்குரல் கேட்டும் காண்டற் கிருத்தி கொல் கிள்ளை நீ.* (சு : 440)

**கிள்ளைக் கிளவி – கிளிமொழியாள்.** *நிலாக்கற்றை கிள்ளைக் கிளவிக் கென்னுங் கொல்.* (பா : 635)

**கிள்ளைப் பிள்ளை – கிளிப்பிள்ளை.** *பயில்கின்ற கொம்பிற் கிள்ளைப் பிள்ளை ஒளிப்பக் குழைவாளும்.* (பா : 1002)

**கிள – சொல்.** *கிள்ளையொடு பூவைகள் வளர்த்தல் கிள என்னும் பிள்ளையுரையின் திறம்.* (சு : 551)

**கிளக்குருதவன் – எடுத்துச் சொல்லமுடியாதவன்.** *கிளவியார் பொருள்களாற் கிளக்குருதவன்.* (யுத் : 192)

20

**கிளத்தல் – சொல்லுதல்.** *கிளத்திய பொருள்.* (*யுத் : 530*) *கிளக் குருதவன்.* (*யுத் : 192*) *கிளந்த வாறெலாம்.* (*கி : 194*) *கிளத்தி.* (*யுத் : 4148*) *கிளத்துவீர்.* (*சு : 810*)

**கிளப்பு - சொல்லுதல்.** *கிளப்பருங் கொடுமைய அரக்கி.* (*பா : 384*)

**கிளர் - ஒளி.** *கிளர்படாதாகி.* (*கி: 76*) *கிளரியல் உருவு.* (*யுத்: 3873*)

**கிளர்ச்சி - 1, மிகுதி.** *அச்சத்தின் கிளர்ச்சியன்றே.* (*ஆ : 896*)

**2. நீர்வளம் குடிவளம் முதலிய சிறப்புக்கள்.** *கிளர் ஞாலம்.* (*அ : 408*)

**3. எழுச்சி.** *இன்னதோர் கிளவியென்று அறிவருங் கிளர்ச்சித் தாதலால்.* (*கி : 7*)

**கிளர் சுடர் கெட்டவான் – விளங்கும் சந்திரனை நீங்கிய ஆகாயம்.** *கிளர் சுடர் கெட்டவானென ஈட்டிருள் விழுங்கிய மார்பினன்.* (*சு : 1069*)

**கிளர்த்தல் – வளர்த்தல்.** *கிள்ளையொடு பூவைகள் கிளர்த்தல் கிள.* (*சு : 522*)

**கிளர்தல் – 1. மேம்பட்டு விளங்கல். விளக்கமுறல். விரிந்து நிற்றல்.** *கேகயம் தோகைகள் கிளர நாடகம் நவின்ற.* (*அ : 732*) *இன்னமும் கிளர வல்லான்.* (*யுத் : 3708*) *நலங்கிளர் தேவர்.* (*யுத் : 914*)

**2. மிகுதல்.** *பூக்கிளர் நாணலிற் புல்லு வேய்ந்து.* (*அ : 781*) *கிளர்வித்தீர்.* (*கி : 638*) *கணங்கிளர் தரு சுண்ணம்.* (*அ : 704*)

**3. தூண்டுதல்.** *எரிகின்ற சிச்சிறுருக்கிட்டுய்த்தன னென்னக் கிளரா முன்.* (*ஆ : 736*)

**4. பூரித்தல்.** *கிட்டிய தமரெனக் கிளருந் தோளினுன்.* (*அ: 1001*)

**5. ஓங்குதல்.** *ஒன்றும் கிளர் ஓதையினுல் உணர்வார்.* (*ஆ : 94*)

**6. உயர்தல்.** *வானவர் கிளருமாறும்.* (*ஆ : 871*)

**7. மகிழ்ச்சி பெறல்.** *திருவுறக் கிளர்ந்தார் போன்றும்.* (*கி : 649*) *வானவர் கிளருமாறும்.* (*ஆ : 871*)

**8. பொங்கி எழுதல்.** *கிரியன்ன தோற்றத்தர் கிளர்ந்தார்.* (*யுத் : 524*)

**கிளர்ந்துடற்றுதல் – உக்கிரமாக வீசுதல்.** *கடல்களும் வற்ற எற்றிக் கால் கிளர்ந்துடற்றுங் காலே.* (*யுத் : 3685*)

**கிளர்ந்தெழுதல் - வீறுபெற்றெழுதல்.** *கிளர்ந்தெழு முயிரனுகி மீட்டு மண்ணதனில் வீழ்ந்தான்.* (*அ : 1026*)

**கிளர் நீர் – மிக்க நீர். கடல்.** *கிளர் நீர் உடுத்த பாரக முடையவன்.* (*அ : 173*)

**கிளர்ப்பது – வெளியெடுத்து வருவது.** *படைக்கலங்கள் கிளர்ப்ப தொன்றும்.* **(யுத் : 2682)**

**கிளர் படாதாகி – ஒளி அழியாததாய்.** *கிளர்படாதாகி என்றுங் கோட்படாப்பதமே ஐய குரக்குருக் கொண்டது.* **(கி : 76)**

**கிளர்வான் – விளங்குகின்ற (விளக்கம் உரிய) விண்ணுலகம்.** *கிளர் வான் இன்றே அடைய மாட்டேனுகிலன்ரு வன்கண் என்கண் மைந்தா.* **(அ : 359)**

**கிளரியல் உருவு – ஓங்கிய இயல்பினையுடைய வடிவம்.** **(யுத் : 3873)**

**கிளவி – 1. பேச்சு. ஒலி.** *இன்னதோர் கிளவியென் றறிவரும் கிளர்ச்சித் தாதலால்.* **(கி : 7) (கி : 10)**

**2. சொல்.** *உபநிடதங்கள் ஓதுறு கிளவியார் பொருள்களாற் கிளக்குருதவன்.* **(யுத் : 192)** *கிளவிக் கிளி.* **(அ: 622) (யுத்: 1586)**

**கிளவிக்கிளி – (இனிய) சொல்லையுடைய கிளி (சீதாபிராட்டி).** *கிளவிக் கிளி விழிபோல்.* **(அ : 622)**

**கிளி – கிள்ளை.** *கிளிமொழிச் சீதை.* **(யுத் : 531)**

**கிளிப்படா மொழியவள் – கிளியிடம் அமையாத இனிய மொழியுடைய சீதை.** *கிளிப்படா மொழியவள் விழியின் கேள் என.* **(கி : 10)**

**கிளுகிளுத்தல் – குதுகலிப்புக் கொள்ளுதல். மகிழ்ச்சியுறுதல்.** *கெண்டைத் தடங்கண்ணுள் உள்ளே கிளுகிளுத்தாள்.* **(யுத் : 1668)**

**கிளை – 1. இனம்.** *வீணையின் கிளை ஒலி.* **(பா : 153)**

**2. சுற்றம். உறவு.** *தன் கிளைக் கிறுதி காட்டுவாள்.* **(ஆ : 235) (யுத் : 24)** *கிளை சுற்றினன்.* **(அ : 648)**

**3. ஏழிசை. சுரங்கள்.** *பயிர் கிளை வேயின் கீதம்.* **(பா : 788)** *கிளையுறு பாடல்.* **(சு : 417)**

**4. கைக்கிளை என்னும் இசை.** *கெண்டையும் முள கிளைபயில் வண்டொடுங் கிடந்த.* **(அ : 55)**

**5. மூங்கில்.** *தொளை கட்டிய கிளை.* **(அ : 622)** *கிளைத்துளை மழலைவண்டு கின்னரம் நிகர்த்த.* **(கி : 475)**

**6. குழல். வேய்ங்குழல்.** *கிளையினும் நரம்பினும் நிரம்பும் கேழன.* **(அ : 474)**

**7. வீணை நரம்பு.** *கிளைகட்டிய கருவி.* **(அ : 622)**

**8. புதல்வன்.** *வானோர் கேள்விச் செல்வம் துய்க்கவோர் கிளை தந்தாள்.* **(அ : 599)**

**9. ஒளி.** *கிளைகொள் மேகலை சிந்தினள்.* **(அ : 183)**

10. **மரக்கிளை.** *கிளையின் நின்ற இருவர்.* (யுத் : 2114)

11. **கூட்டம்.** *கிளையன்னம்.* (கி : 930)

**கிளைகட்டிய கருவி - யாழ்.** *கிளை 7 பார்க்க.* (அ : 622)

**கிளைகொள்ளுதல் - மேன்மேலோங்குதல்.** *கிளை கொளாதிகல்.* (யுத் : 1448)

**கிளை கொளாது - மேம்பாட்டை அடையாது.** *அரக்கன் வெஞ் செருத்தொழின் மலையக் கிளை கொளாதிகல்.* (யுத் : 1448)

**கிளைச் சுற்றத்தார் - உறவுமுறையானவர்.** *தன் கிளைச் சுற்றத்தாரும் எந்திரப் பொறியில் நிற்ப.* (யுத் : 1223)

**கிளைஞர் - உறவினர்.** *தாயரும் கிளைஞரும்.* (அ : 478) (சு : 644)

**கிளைத்தல் - 1. செழித்தல்.** *கிளவி தேனினும் அமிழ்தினும் கிளைத்த வெள்வளைத் தோள்.* (கி : 493)

2. **பொங்கி எழுதல்.** *இருவர் கிளைத்தலும்.* (யுத் : 2114)

3. **மேன்மேல் வளர்தல்.** *கிளையமை புவன மூன்றும்.* (யுத் : 1234)

**கிளைதரு சுற்றம் - தொகுதியாகவுள்ள சுற்றம்.** (யுத் : 1251)

**கிளைதரு புவனம் - மேன்மேல் வளருந்தன்மைகொண்ட உலகம்.** (யுத் : 1234)

**கிளை தழுவுதல் - பந்துக்கள் சூழ்ந்திருத்தல்.** *சனகனும் தன்கிளை தழுவ ஏறினான்.* (பா : 1287)

**கிளையோன் - உறவினன்.** *வில்லாளன் இளங்கிளையோன்.* (யுத்: 1724)

**கிற்பர் - வல்லமையுடையவர்.** (யுத்: 4135)

**கிற்பு - வலிமை.** *தீர்க்க கிற்பார்.* (யுத் : 1389) *ஏவர் கிற்பவர் எதிர்நிற்க.* (யுத் : 4135)

**கிற்றல் - 1. சம்மதித்தல்.** *எம்பி எனகிற்கில்.* (யுத் : 59)

2. **வல்லமையுடைமை.** *காக்கவுங் கிற்றிலன்.* (யுத் : 2432)

**கிற்றிரோ - வல்லீரோ.** *எதிரே நிற்க கிற்றிரோ.* (யுத் : 2975)

**கிற்றும் - ஆற்றலுடையோம்.** *கூற கிற்றும் கேட்டிரால்.* (யுத்: 3244)

**கின்னரம் - 1. கின்னர தேவகணம்.** *கின்னரம் பயில் கீதங்கள் என்னலாம் கின்னரம்.* (பா : 956)

2. **யாழ் வகையுள் ஒன்று.** *என்னலாம் கின்னரம்.* (பா : 956)

3. **வீணை.** *மழலைவண்டு கின்னர நிகர்த்த.* (கி : 475)

4. **இசையறிவதோர் புள்ளினம்.** *கின்னரம் குரண்டங் கிலுங்கம் சிரல்.* (சு : 246)

**கின்னரம் பயிலல் – ஒருவகை யாழை வாசித்தல்.** *கின்னரம் பயில் கின்றனர் ஏழையர்.* (*பா : 956*)

**கின்னர மிதுனம் – 1. இசைவல்ல குதிரைமுகமும் மனித உடலுமுள்ள தேவ சாதி. எப்போதும் ஆணும் பெண்ணும் பிரியாமையால் மிதுனமாகவே வழங்கப்பெறுவது.** *நைவள அமுதப்பாடல் முறை முறை நணுகப்போனர் கின்னர மிதுன மொப்பார்.* (*பா : 876*)

**2. ஆணும் பெண்ணுமாய் இரட்டையாய் நிற்கும் தேவ ஜாதியார்.** *கின்னர மிதுனம்பாட.* (*சு : 214*)

**3. ஆண் பெண்களாகிய கின்னரப் பறவைகளின் இரட்டை.** (*கலா*) (*சு : 214*)

**கின்னரர் – 1. பதினெண் கணத்துள் ஒரு பிரிவினர்.** *அமுத ஏழிசை பாடினர் கின்னரர்.* (*பா : 288*) (*பா : 716*)

**2. குதிரை முகமும் மனித உடலுமுடையராய் கின்னரம் என்னும் வாத்தியத்தை வைத்துக்கொண்டு இசைபாடித் திரியும் ஒரு தேவ ஜாதியார்.** (*வை. மு*) (*பா : 288*)



**கீட்டிசை – கிழக்கு திசை.** *கீட்டிசை வாயில்.* (*யுத்: 482*) (*யுத்: 2089*) *அலரி கீட்டிசைப் பொன்றிணி நெடுவரை பொலிவுருத முன்.* (*கி : 704*)

**கீட்படல் – கீழ்மைப்படல்.** *கீட்படா நின்ற நீக்கி.* (*கி : 76*)

**கீடம் – புழு.** *அஞ்சிறை அறுபதம் அடைந்த கீடத்தைத் தஞ்செனத் தன்வயமாக்குந் தன்மைபோல்.* (*ஆ : 492*) *கோளில் கீடம்.* (*யுத் : 3985*)

**கீண்டல் – 1. கிழித்தல்.** *கிழிபடக் கடல் கீண்டது.* (*யுத் : 735*) *கீண்டிலன் வாய்.* (*அ : 863*)

**2. பிளத்தல்.** *கவிக்குலத் தலைவ ராக்கையைக் கீண்டன.* (*யுத் : 2292*) *கீண்டது வேலை நன்னீர்.* (*சு : 21*)

**3. சிதைவுண்ணல்.** *கேழிலாள் நிறை இறை கீண்டதாமெனின்.* (*சு : 400*) *கீண்டு வெடித்தன.* (*சு : 313*)

**4. சிதறுண்ணல்.** *நீண்ட கன்மதிலும் கொற்ற வாயிலும் நிரைத்த குன்றுங் கீண்டன.* (*கி : 647*)

**5. ஒழிதல்.** *நம் கிளர் பெருந்துயரமுங் கீண்டதா மென்றுன்.* (*ஆ : 1146*)

**6. அடியோடு பெயர்த்தல்.** *நிலம் வன்கையாற் கீண்டு கொண் டெழுந்து ஏகினன்.* (*சு : 626*)

**கீதம் – பாடல்.** *வயிரியர் மதுரகீதம் மங்கையர் அமுத கீதம்.* (பா : 789)

**கீர்த்தி – புகழ்.** *தேவுண்ட கீர்த்தி அண்ணல்.* (யுத் : 2374)

**கீழ் – பூமியின் கீழ்ப்பாகம்.** *கீழவோ என்பர்.* (யுத் : 3735)

**கீழ்காறும் – கீழ்வரையில்.** *மேல்நின்று கீழ்காறும் விரிந்தன.* (அ: 413)

**கீழ்த்தலம் ஏழு – ஏழென்று சொல்லப்படுகின்ற பாதாள லோகம்.** *ஏழெனப்படும் கீழுள தலம்.* (யுத் : 3289)

**கீழ்நிலை யானை – ஐராவதம்.** *கீழ்நிலை மாலின் வெஞ்சின யானை.* (சு : 1190)

**கீழ்பால் – கீழ்த்திசை.** *கீழ்பால் தொல்லைக்கிரியின் தலை தோன்றிய ஞாயிறு.* (கி : 265)

**கீழ்பால் தொல்லைக்கிரி – கீழ்த்திசையில் பழமைவாய்ந்த உதயமலை.** (கி : 265)

**கீழ்பாலடுத்த பாதாளம் – கீழ்ப்புறத்திலிருக்கும் பாதாள உலகம்.** (யுத் : 1226)

**கீழ்பாற் பருவரை – உதயகிரி.** *பரிதி வானவனும் கீழ்பாற் பருவரை பறிருமுன்னம்.* (அ : 584)

**கீழ்பாற்றிசை – கிழக்குத்திசை.** *கீழ்பாற்றிசையின் மிசைவைத்த வெள்ளிக் கும்பம்.* (பா : 635)

**கீழ்மடுத் தெடுப்பினும் – கீழே செலுத்திப் பேர்த்தெடுப்பதாயினும்.** *அயன்செய் அண்டத்தைக் கீழ்மடுத் தெடுப்பினும் கிடைத்த செய்யுமால்.* (கி : 227)

**கீழ்மை – தாழ்மை.** *வசையும் கீழ்மையும் மீக்கொள.* (யுத் : 111)

**கீழ்மைத்து – 1. இழிவானது.** *கேளொக்கினன்றி ஒன்று கிளத்தினுற் கீழ்மைத் தாமால்.* (கி : 798)

**2. இகழ்ந்து ஐயுறுதற்குரியது.** *கேட்டயலிருந்த மாலி ஈதொரு கீழ்மைத்தாமோ ஓட்டுறு தூதர் பொய்யே உரைப்பரோ ... என்றான்.* (யுத் : 3592)

**கீழ்மையான் – இழிதகையனுன இராவணன்.** *நிலம் வன்கையாற் கீண்டு கொண்டேகினன் கீழ்மையான்.* (சு : 626)

**கீழ்மையோர் – கீழ்மக்கள்.** *கீழ்மையோர் சொற்கொடு கெடுதல் நேர்தியோ.* (யுத் : 317)

**கீழ்விழுதல் – கீழிறங்குதல்.** *மேக்கு நால்வகை மேகமும் கீழ்விழத் தூக்கினுலன்ன தோயத்ததாய்.* (சு : 244)

**கீழ்விளி ஓதம் – கடல். கீழிடமாக ஒலிக்கும் கடல்.** *கீழ்விளி ஓத மென் சிலம்பொடும் உதிரச் செக்கரும்.* (பா : 626)

**கீழமேலாதல் – கீழ்மேலாக மாறுதல்.** *அண்டமுங் கீழ மேலாவாகியது.* (*யுத் : 3482*)

**கீழர் – கீழுலகம்.** *மேலுங் கீழரும்.* (*யுத் : 3739*)

**கீழவர் – கீழ்மையோர்.** *கீட்டிசை வாயிலின் வைகுங் கீழவர் ஈட்டமும் எண்ணிரு கோடி என்பரால்.* (*யுத் : 481*)

**கீழுதல் – கிழித்தல்.**

**கீழுலகமென்றிசைக்கும் ஏழு – கீழுலகம் என்று சொல்லப்படுகின்ற ஏழு பாதலங்கள். அவை அதலம், விதலம், சுதலம், தராதலம், ரஸாதலம், மகாதலம், பாதாளம் என்பன.** *கீழுலகம் என்றிசைக்கும் ஏழும் புக்குருவி.* (*கி : 173*)

**கீழுளதலம் – பாதாளம். கீழுள்ள உலகம்.** *ஏழெனப்படும் கீழுள தலத்தின்.* (*யுத் : 3289*)

**கீழுற – கீழ்ப்புறமாக. வெகுதூரம்.** *இருநிலம் கீழுற விரிய நின்ற மராமரம்.* (*யுத் : 1021*)

**கீழைநாள் – விடியற்காலம்.** *தொன்மனை கீண்டதால் வானவேறெறியக் கீழைநாள்.* (*சு : 371*)

**கீழைவாயில் – கிழக்கு வாயில்.** (*யுத் : 1018*)

**கீள்தல் (கீளுதல்) – 1. கீறுதல்.** *வன்ளுகிர் ஊன்றிக் கீளா.* (*யுத் : 1401*)

**2. கிழித்தல்.** *கீண்டிலன் வாய்.* (*அ : 863*) *கீண்டிலது அனந்தன் உச்சி.* (*சு : 1312*)

**3. பிளத்தல்.** *அவனி கீண்டுக.* (*ஆ : 473*)

**கீற்று – கீறுதல். பிளவுபடுதல். கீறப்பட்ட பொருள்.** *தம்பிதன் விற்புயல் அண்டகோளம் கீற்றுற்று உடையப்படு நாணுரு மேறு கேட்டான்.* (*அ : 417*)

**கீற்றுற்று – கீற்றுக்கீற்றுகி.** (*அ : 417*)

**கீறி – அழித்து.** *தேரையுங் கீறி.* (*கி : 987*)

**கீறிய – 1. வெட்டப்பட்ட.** *கண் கீறிய கனலான்.* (*பா : 1357*)

**2. கடந்த.** *எண்கீறிய உயிர்.* (*பா : 1357*)

**கீறுதல் – 1. பிளத்தல்.** *அண்டங்கீறி.* (*யுத் : 725*) *மண்மகள் வயிறு கீற.* (*யுத் : 1091*) *பல்லாயிரம் இருள் கீறிய பகலோன்.* (*ஆ : 456*)

**2. கிழித்தல்.** *புண்கீறிய குருதிப்புனல்; கண்கீறிய கனலான்.* (*பா : 1357*)

**3. அடங்காமை.** *எண் கீறிய உயிர்.* (*பா : 1357*)

**4. அழித்தல்.** *தேரையுங் கீறி.* (*கி : 987*)



**குகன் – வேடர் தலைவன்.** *கங்கை நாவாய்க்கிறை குகன்.* (அ : 656)

**குகனார் – குகன்.** *நாட்டிலே குகனார் செய்த நன்மையை நயக்க மாட்டேன்.* (யுத் : 739)

**குகை – குஹா. குகைபோல ஆழ்ந்து தோன்றுகின்ற வாயின் உள்ளிடம்.** *குகைப்பொழி புதுக்குருதியைக் கைக்கொடு குடித்தான்.* (யுத் : 851)

**குகைத் தேன் – மலைக்குகைத் தேன்.** *குறைவில் குங்குமமுங் குகைத் தேன்களும்.* (யுத் : 671)

**குங்குமச் சுவடு – குங்குமக் குழம்பின் அடையாளம். குங்குமம் உதிர்தலால் உண்டான சுவடு.** *ஓவில் குங்குமச் சுவடுற.* (பா: 543) (பா : 831)

**குங்குமக் குழம்பு – குங்குமச்சேறு.** *கொள்ளை வாட் கண்ணினார் தம் குங்குமச் சேறு தங்கும் தெள்ளிய பளிங்குப் பாறை.* (பா : 937)

**குங்குமங் கோட்டுதல் – குங்குமக் குழம்பு கொண்டு கொங்கையில் தொய்யில் எழுதுதல்.** *அகில் கலவை சார்கில குங்குமங் கோட்டில.* (அ : 970)

**குங்குமப் பொதி – குங்குமக் குழம்பு.** *குங்குமப் பொதியிற் கலந்த முத்தென வேழ முத்திமைப்பன காணாய்.* (அ : 742)

**குங்குமம் – குங்குமம்.** *தாதுகு நறுமென் சாந்தம் குங்குமம் குலிகம் தண்டேன்.* (சு : 10)

**குச்சரி – ஒரு பண்.** *குச்சரித் திறத்தினோசை களங்கொள.* (சு : 284)

**குச்சரித் திறன் – குச்சரி என்ற பண்.** (சு : 284)

**குச்சி – சிகரம். மேல் முகடு.** *வெய்யோன் உதயங் குச்சிச் சென்றான் ஒத்துள னாகுங்குறி காணீர்.* (யுத் : 3562) *பெயர்ந்த தூளி பொன்னுடைச் சிமையத் துச்சிக் குச்சியும் புதையப்போனான்.* (யுத்: 2360)

**குசத்துவன் – சனகன் தம்பி. இராமன் தம்பியர் மூவரும் இவன் மகள் மூவரையும் வேட்டனர்.** *கொய்ந்நிறை தாரவன் குசத்துவப்பேர் நெய்ந்நிறை வேலவன்.* (பா : 1346)

**குசநாபன் – குசன் மகன். மகோததி நகரைத் தலைநகராகக் கொண்டவன்.** (பா : 425)

**குசன் – 1. செவ்வாய் என்னும் கிரகம்.** *விசைகொடு விசாகத்தை நெருக்கி ஏறினன் குசன்.* (யுத் : 3748)

**2. ஓர் அரசன். பிரமனால் தோற்றுவிக்கப்பட்டவன்.** (பா : 424)

**3. மேலே கூறிய அரசனின் மூத்த மகன்.** (பா : 425)

**குசும்பை** - செந்துருக்க மலர். *குசும்பையின் நறுமலர்.* (யுத் : 1765)

**குசை** - 1. கடிவாளம். *குசைப் பரியோய்.* (அ : 204)

2. தருப்பை. *அடுத்துடல் விசிக்கும் வெங்குசைய பாசம்.* (சு: 165)

3. ஒரு தீவு. *குசையின் தீவினிலுறைபவர்.* (யுத் : 3216)

**குசையின் தீவு** - குசைத்தீவு. (யுத் : 3216)

**குஞ்சரக் கன்னம்** - யானையின் காதுபோன்ற தோற்றமுடையதோர் அம்பு. கஜகர்ணம் என்று வழங்கும். *குஞ்சரக் கன்னங்கோடி இலக்குவன் சிலையிற் கோத்தான்.* (யுத் : 2065)

**குஞ்சரம்** - யானை. புதரில் மகிழ்வது என யானைக்குக் காரணக்குறி. *குஞ்சரமனைய வீரன்.* (ஆ: 290) *குஞ்சரத்தன கொழுநர்.* (சு. 1209) (யுத் : 1121) (யுத் : 2816)

**குஞ்சி** - குடுமி. ஆடவர் தலைமயிர். *குழன்றெழும் குஞ்சியார்.* (யுத் : 2758) *இருண்ட குஞ்சி.* (கி : 488) (அ : 655)

**குஞ்சித அடி** - மடங்கிய அடி. வளைந்த அடி. *குஞ்சித அடிகள் மண்டலத்திற் கூட்டுற.* (யுத் : 4172)

**குஞ்சிதம்** - வளைவு. (யுத் : 4172)

**குஞ்சு** - பறவைகளின் குஞ்சு. (யுத் : 265)

**குஞ்சையிட்டிலா முட்டை** - குஞ்சு பொரிக்காத நிலையிலுள்ள முட்டைகள் *குயிற்றிய அண்டம் குஞ்சையிட்டிலா முட்டை முட்டப் பயிற்றிய பருவமொத்த காலத்துள்.* (யுத் : 265)

**குட்டம்** - 1. குளம். *குழுவுமீன் வளர் குட்டமெனக் கொளா.* (கி: 940)

2. ஆழ்ந்து பரந்த இடம். *கடற் குட்டம்.* (யுத் : 553)

**குட்டன்** - குட்டி. *நாயின் வெங்கட் சிறு குட்டனையூட்ட விரும்பினுளால்.* (அ : 410)

**குட்டிமம்** - 1. செய்குன்று. *குன்றுகள் அல்லன மணிசெய் குட்டிமம்.* (பா : 131)

2. திண்ணை. *மணிகொள் குட்டிமம் மட்டித்து.* (சு : 714)

3. கல். *அக்கோயிற் குட்டிம வன்தலத் திருந்தனன்.* (கி : 673)

**குடக்கு** - மேற்கு. *குடக்கதோ குணக்கதேயோ கோணத்தின் பாலதேயோ.* (யுத் : 1216)

**குடகடல்** - மேல்கடல். *வெய்யோன் குடகடற் குளிப்பதானுன்.* (சு : 137)

**குடகம்** - மேற்குத்திசை. *மாலுறு குடகவான்.* (யுத் : 710)

**குடகவான் - மேற்றிசை வானம்.** மாலுறு குடகவான். **(யுத்: 710)**

**குடங்கை - உள்ளங்கை.** கொழுந்து விட்டெரி வெகுளியன் குடங்கையிற் கொள்ளா. (பா : 534) (கி : 728) குடங்கையில் வாரிதியணைத்துக் கொண்டவன். **(யுத் : 4200)**

**குடதிசை - மேற்குத் திசை. (குடக்கு திசை)** குடதிசைச் செக்கரிற் சேந்த கூந்தலாள். (ஆ : 584) **(கி: 753)**

**குடபால் - மேற்குத் திசை.** போதுஞ் சென்றது குடபால். (அ : 708) **(ஆ : 693)**

**குடம் - குடம்.** குடப்பெருஞ் செவிக்குன்றம். **(யுத்: 3780) (யுத்: 214)**

**குடர் - 1. குடல்.** (அண்) **(அ : 1012) (யுத் : 1539)**

**2. வயிறு.** (உ. வி) குடர் குறைபட. **(அ : 1012)**

**குடர் பிதுங்குதல் - குடல் வெளிப்படுதல்.** பகழி பாய்தலிற் பிதுங்கினர் குடர். **(யுத் : 2957)**

**குடல் குறைதல் - குடல்களைப் பறித்தெடுத்தல்.** குடல் குறைத்துக் குருதி குடித்து. **(யுத் : 3953)**

**குடல் சொரிதல் - குடலை வெளியே சொரிதல்.** சொரிந்தார் குடல். **(யுத் : 3370)**

**குடவரை - மேலைமலை. அதகிரி.** காவியல் குடவரைக் கால நேமி மேல் ஏவிய திகிரி. **(அ : 774)**

**குடன் - குடம்.** வெண்ணறைக் குடன் நிரைத்து அவை ஊட்டி. **(யுத் : 1291)**

**குடித்து - குடித்தது என்பதன் விகாரம்.** கைக்கொடு மோதினுன் குடித்துமிழ்ந்தெனக் கக்கக் குருதியே. **(யுத் : 1038)**

**குடிபுகுதல் - உள்ளே செல்லுதல்.** சாலையிற் பொன்னிறத் திருவொடும் குடிபுக்கானரோ. **(அ : 784)**

**குடிபோதல் - நீங்கப்பெறுதல். கெடுதல்.** தாமரைப் பூவெலாம் குடி போனதும் போன்றதே. (பா : 1044) நனி வருந்தி நலங்குடி போயிட. **(பா : 1176)**

**குடிமை - குடியடிமை. குடிக்கு அடிமை. பரம்பரையாகச் செய்யும் அடிமை.** தேவரும் அவுணரும் குடிமை செய்திட. **(ஆ : 843)** குடிமை மூன்றுலகுஞ் செயும் கொற்றம். **(சு : 443)**

**குடியாகப் பெறுதல் - நிலையாகப் பெறுதல்.** நீதியும் குலமுதல் தருமமும் என்றிவை குடியாகப் பெற்ற நுங்களால். **(யுத் : 1546)**

**குடியேற்றல் - குடியேறும்படி செய்தல்.** பொன்னெடு நாட்டை யெல்லாம் புதுக் குடியேற்றிற்றன்றே. (யுத் : 3121)

**குடில் - விடுதி. சிறு வீடு.** தாமரை துறந்து குடிபுக் காலெனக் குடில் புக்கார் கொடியன்ன மடவார். (பா : 909)

**குடிவாழ்க்கை - இருப்பும் வாழ்க்கை வரலாறும்.** (கலா) **குடியிருப்பு.** (வை. மு) **நின்ற நிலே.** (அண்) நன்றே நம்பி குடிவாழ்க்கை. (யுத் : 1)

**குடும்பம் - பிறந்த குடும்பம்.** குடும்பந் தாங்கும் குடிப்பிறந்தார். (யுத் : 672)

**குடுமி - உச்சி. சிகரம்.** ஆங்கொரு குடுமிக் குன்றை அருக்கனில் அணேந்த ஐயன். (சு : 1247)

**குடுமித்தலே - உச்சியிடம்.** கதிர் மீச்செலாக் கொடிமதிற் குடுமித்தலேக் கொள் கொன்ருன். (யுத் : 965)

**குடுவை - குடுக்கை. சுரைக் குடுவை.** குடுவைத் தன்மைய தாயது குன்றம். (யுத் : 231)

**குடை - மழை வெயிலுக்குப் பிடிக்கும் குடை.** குடையினன் நிமிர் கோலன். (அ : 710)

**குடைத்தொழில் - அரசு.** கொற்றக் குடைத்தொழில் உம்பி கொள்ளக் கொடுத்துழி. (யுத் : 954)

**குடைதல் - 1. கூசுதல்.** கண்குடை இனமணி. (பா : 1284)

2. **எழுப்புதல்.** பண் குடை வண்டினம் பாட. (பா : 1284)

3. **நீராடுதல். முழுகுதல்.** உண்ணவுங் குடையவும் உரித் தன்ருயதே. (அ : 944) (பா : 74)

4 **துளேத்தல்.** குடைந்துல கணேத்தையும் நாடுங் கொட்பினர். (சு : 512) (பா : 546)

5. **அராவுதல்.** அரங்குடைந்தன அயில். (யுத் : 1440)

6. **அரித்தல்.** (உ. வி) குடைந்துலகணேத்தையும். (சு : 512)

7. **ஜலக்கிரீடை செய்தல்.** குளிக்கும் பேய் குடையுந்தோறும். (உ. வி) (சு : 659)

8. **அழித்தல்.** நெடுங்கொடி வெற்றித் தரங் குடைந்தன. (யுத் : 1440)

**குடைந்து நீராடுதல் - நீரில் துளேந்து விளேயாடுதல்.** குடைந்து நீராடும் மாதர் குழாம். (பா : 1025)

**குடைபவர் - நீராடுபவர்.** எறிபுனல் மறுகக் குடைபவர். (பா : 74)

**குண்டம் - ஓமகுண்டம்.** *காந்து குண்டத்தில் அடங்கெரி எழுப்புவ காணுய்.* (அ : 767)

**குண்டலக் கோல மைந்தர் - குண்டலமணிந்த அழகிய ஆடவர்.** *குண்டலக் கோலமைந்தர் நீர்க் கொள்ளே.* (பா : 43)

**குண்டலம் - காதணி.** *குண்டல முகத்தியர்.* (சு : 1048)

**குண்டல மீன்குலம் - குண்டலங்களாகிய நட்சத்திரக் குழாம்.** *குண்டல மீன் குலந்தழுவிக் கோண்மதி மண்டலம் வீழ்ந்தனபோன்ற.* (யுத் : 1784)

**குண்டல முகத்தியர் - குண்டலம் என்ற காதணியினுல் விளங்கும் முகத்தையுடைய அரக்கியர்.** (சு : 1048)

**குண்டிகை - கமண்டலம். ஜலபாத்திரம்.** *குடையினன் நிமிர்கோலன் குண்டிகையினன்.* (அ : 710)

**குண்டிகைக் கலசம் - கமண்டலமாகிய நீர்ப்பாத்திரம். குண்டிகை யாகிய பாத்திரம்.** *கமலத்தண்ணல் குண்டிகைக் கலசம்.* (யுத்: 3628)

**குண்டு - ஆழம்.** *வேலைப்பள்ளக் குண்டகழி.* (யுத் : 2608)

**குண்டை - எருது.** *எற்றுண்டு அளற்று நீங்கா விழுசிறு குண்டை யென்ன.* (யுத் : 1621)

**குண்டையின் பாகன் - எருதை ஏறிச்செலுத்தும் சிவன்.** *பண்டுல குய்த்தவனேடும் பண்ணமை குண்டையின் பாகனும் பிறரும் கூடினுர்.* (யுத் : 3433)

**குண்டையூர்தி - இடபாரூடரான சிவபெருமான்.** *புட்டிருப்பாகனும் குண்டையூர்தி குலிசியும்.* (பா : 697)

**குணக்கடலாடுதல் - குணமாகிய கடலிலே மூழ்கித் திளேத்தல்.** *முற்குணத்தவரே முதலோர் அவர் நற்குணக் கடலாடுதல் நன்றரோ.* (பா : 2)

**குணக்கு - கிழக்கு.** *குடக்கதோ குணக்கதேயோ கோணத்தின் பாலதேயோ.* (யுத் : 1246)

**குணக்குன்று - உதயகிரி.** *வெய்யவன் கோபமுற்றி மிகச் சிவந்தனன் குணக்குன்றிலே.* (அ : 246) *நேமிச் சுடர்க் குணக்குன்று தோன் றளவும்.* (யுத் : 4163)

**குணகடல் - கீழ்கடல்.** *குன்றினே வலஞ்செய் தேரோன் குணகடல் தோன்றுமுன்னர்.* (யுத் : 4224)

**குணங்களால் உயர்ந்தான் - விபீடணன்.** (யுத் : 1386)

**குணதிசை - கிழக்கு திசை.** *குணதிசை உதயஞ் செய்வான்.* (யுத் : 4083)

**குணபால் அண்ணல் - இந்திரன்.** அராவு பொன் மௌலிக் கேய்ந்த சிகாமணி குணபால் அண்ணல் விராவுற எடுத்தாலென்ன வெய்யவன் உதயஞ் செய்தான். (யுத் : 4225)

**குணம் - தகுதி. உரிய இயல்பு.** உன்கிளையோரை யெல்லாம் கொன்றுய் கொடியாய் இதுவும் குணமோ. (ஆ : 1109)

**குணம் மூன்று - சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் முக் குணங்கள்.** திசை நாலும் ஒருங்கு குணமூன்றும். (யுத் : 3654)

**குணமிலி - நற்குணம் சிறிதுமில்லாதவன். (இராவணன்)** அரக்கர் கோ எனு நின்ற குணமிலி இவனெனக் கொண்டான். (சு : 225)

**குணாலம் - ஒரு நீர்ப்பறவை.** (சு : 246)

**குணிக்கல் - குணித்தல். கணக்கிடல்.** வாட்கைக் குழுவையும் குணிக்கலாற்றேம். (சு : 985)

**குணித்தல் - 1. யோசித்தல்.** கோதில் குணத்து அருந்தவனைக் கொணரும் வகையாவதெனக் குணிக்கும் வேலை. (பா : 217)

**2. ஆராய்தல்.** வள்ளல் திருமூக்கிற் குவமை பின்னும் குணிப்பாமோ. (சு : 543)

**3. ஒப்புக்கூறல்.** குன்றொடு குணிக்குங் கொற்றக் குவவுத்தோள். (சு : 36)

**4. எண்ணுதல்.** குணிப்பருங் கொடும் பகழிகள். (யுத் : 562) நுனித்தறங் குணித்த மேலோர். (யுத் : 4095)

**5. கூறுதல்.** துணைவரைப் பார்த்திவை குணித்தான். (யுத் : 4068)

**6. அளவிட்டுக் கூறுதல். பெருக்குதல்** (வை. மு) நுனித்தறங் குணித்த மேலோர். (அ : 8) [பா : பே]

**குணிப்பிலாமை - அளவுபடாமை.** சூல வெஞ்சேனையின் குணிப் பிலாமையும். (சு : 1065)

**குணிப்பு - 1. கணக்கெடுத்தல்.** குணிப்பருங் கொடும் பகழிகள். (யுத் : 362)

**2. ஆராய்தல்.** உவமை பின்னும் குணிப்பு ஆமோ. (சு : 543)

**குணில் - குறுந்தடி.** முந்தூறு குணிலோடு இயைவுறு குறட்டில் சில்லரிப் பாண்டிலின் முறையின். (சு : 419) வான் குணில் வலத் தேந்தி. (யுத் : 1565)

**குத்தல் - உகுத்தல்.** முதற்குறை. குத்தான் அழி குழம்பாம்வகை வழுவாச் சரக் குழுவால். (யுத் : 3369)

**குத்து - குத்துதல் தொழில்.** குத்தொழிந்து. (யுத் : 1890)

**குத்துக்கோல் - முனையிற் கூரிய இரும்புள்ள கோல். பாரிக்கோல் என்றுங் கூறுவர்.** குத்துக்கொடு நெடுங்கோல் படுகளிறுமெனக் கொதித்தான். (யுத் : 3723)

**குத்துண்டு - குத்தப்பட்டு.** (யுத் : 2877)

**குத்துதல் - குத்துதல். பொருந்தும்படி தாக்குதல்.** குத்துதி குத்த. (யுத் : 1128) குத்து. (யுத் : 1130) வெண்கோடு ஆரக்குத்தியழுத்தியநாகம். (யுத் : 227) குத்தித் தனிகுத்தென மார்பு கொடுத்தான். (யுத் : 1921)

**குதலை - எழுத்தும் பொருளும் நிரம்பாத இளஞ்சொல்.** கோகிலந் துயர்ந்தமென் குதலை. (சு : 416)

**குதலை தள்ளுதல் - மழலைச் சொற்கள் தடுமாறுதல்.** மென்குதலை தள்ள உயிர்தந்தாய் உத்தம எனு இனிய வாசகம் உரைத்தாள். (சு : 559)

**குதறுதல் - சிதறுதல்.** கண்கள் குதறின பறவை. (சு : 732)

**குதி - குதிப்பு. குதித்தல்.** குதியாற் பலகொன்றுன் அறன் நின்றுன். (யுத் : 1835)

**குதிகொள்ளல் - குதித்தல்.** குன்றிடைக் குதியுங் கொண்டான். (சு : 1248)

**குதித்தல் - 1. துள்ளிப் பாய்தல்.** வெருவி மீதிற் குதித்து. (ஆ: 801)

**2. மகிழ்தல்.** குதித்து விண்டு நீங்கினர் உடலுக்கு பொடியின் மேவினளே. (பா : 535)

**3. விரைந்து பெருகுதல்.** (உ. வி) (பா : 535)

**4. இறங்குதல்.** (உ. வி) (பா : 535)

**5. தாவிச் செல்லுதல்,** வெங்கட் குதிரை குதிப்பன. (யுத் : 3700)

**குதை - 1. அடிப்பாகம். வில், அம்பு இவற்றின் அடிப்பாகம்.** குதை வரிச் சிலை நுதற் கொவ்வை வாய்ச்சியர். (பா : 141)

**2. வில் நாண்.** குதை வரிச் சிலை வாட்டானைக் கோமகன் அம்பரீடன். (பா : 683)

**குதைத்தல் - குதையினின்றும் வெளிவருதல்.** குதைக்கின்றன நிமிர் வெஞ்சிலை. (யுத் : 3713)

**குதைவரிச்சிலை - குதையுள்ளதும் கட்டமைந்ததுமான வில்.** (பா: 683) குதைவரிச்சிலை நுதற் கொவ்வை வாய்ச்சியர். (பா : 141)

**குந்தம் - 1. எறிபடை. குத்துக் கோலுமாம்.** தூவகலில் குந்தமற மைந்தர்கள். (அ : 543)

**2. எறிகோல்.** கொல்லும் வேல் குந்தம் கற்றுயர் கொற்றவர். (அ : 805)

3. **கைவேல். குலிசம்.** சுரிகை குந்தம். (சு : *164*)

4. **எறி ஈட்டி. சிறிய ஈட்டி. எறிகோல்.** குந்தமும் குலிசமும் கோலும் பாலமும். (ஆ : *402*)

**குந்தள பாரம் – மயிர்த்தொகுதி. கூந்தற்சுமை. கூந்தல்.** குந்தள பாரஞ் சோர. (பா : *870*)

**குந்தளம் – சுழற்சி.** தோன்மயிர்க் குந்தளம் சிலிர்ப்ப. (யுத் : *2687*) [*பா : பே*]

**குந்திய நடை – முன்னங்கால்களால் உந்திச்செல்லும் நடை.** குடையர் குண்டிகை தூக்கினர் குந்திய நடையர். (பா : *858*)

**குந்தி வருதல் – நொண்டியடித்தபடி வருதல்.** அடியொன்று கடி தோட்டிக் குந்தி வந்தனன். (யுத் : *1567*)

**குந்துதல் – 1. ஒற்றையடியால் தாவி நடத்தல். நொண்டுதல்.** அடியொன்று கடி தோட்டிக் குந்தி வந்தனன். (யுத் : *1567*) (*பா : 858*)

2. **ஊன்றுதல். நன்கு பதிதல்.** (வை. மு) **வளைதல்.** (அண்) குந்துவன் னெடுஞ்சிலை முதற் படைகளும். (யுத் : *2448*)

**குப்புறல் (குப்புறுதல்) – 1. குதித்தல்.** தடவரைகொண்டு சிறியவ னெதிர் குப்புறு. (யுத் : *1025*)

2. **தாண்டுதல். கடந்து செல்லுதல். கடத்தல்.** குப்புறற் கருமையால் அக்குலவரைக் குடுமிச் சாரல் வைகி. (பா : *932*) குப்புறற்கரிய மாக்குன்று. (ஆ : *245*) குப்புறக் கருதுவான். (யுத் : *331*)

3. **கவிழ்ந்துகொள்ளுதல். முழுகுவித்தல்.** கூவலின் உயிர்த்த சின்னீர் உலகினைக் குப்புற்றென்ன. (ஆ : *724*)

4. **கீழே இறங்குதல்.** கொம்பினைக் கண்டிலர் குப்புற்றேகினார். (கி : *836*)

5 **பாய்ந்து கடத்தல்.** குறுமுனி குடித்தவேலை குப்புறுங் கொள் கைத்தாதல் வெறுவிது. (சு : *15*)

6. **தலைகீழாதல். தலைகீழாகக் குதித்தல்.** ஒரு காலே குப்புறின் அண்டத்தப்புறமேயுங் குதி கொள்வீர். (கி : *1018*)

7. **கடத்தல்.** (வை. மு) குப்புறற்கரிய மாக்குன்று. (ஆ : *245*)

**குப்பை – குவியல்.** இசைக் குப்பை. (பா : *163*)

**குபேரன் – நிதியின் கிழவன்.** குபேரன் வாழ் வடதிசை. (கி : *753*) (யுத் : *517*)

**கும்பக்குன்று — யானை.** கோட்டிருந் திசைநிலைக் கும்பக் குன்றையும். *(யுத் : 48)*

**கும்பக் கொடியோன் — கும்பன் என்ற கொடியவன்.** கும்பக் கொடி யோனு நிகும்பனும். *(யுத் : 1692)*

**கும்பகருணப் பெயரினன் — கும்பகருணன் என்னும் பெயருடைய அரக்கன்.** கும்பகருணப் பெயரினன் இவை குறித்தான். **(யுத் : 59)**

**கும்பகருணனர் — கும்பகருணன்.** அக் கும்பகருணனர் பாருடு வெங்களத்துப்பட்டார் எனப்பதையா. **(யுத் : 1673)**

**கும்பகன்னன் — கும்பகருணன்.** கும்பகன்னன் என்றுளன் பண்டு தேவரைக் குமைத்தான். *(யுத் : 509) (யுத் : 3299)*

**கும்ப நிகும்பர் — கும்பகருணன் புதல்வர்.** கும்ப நிகும்பரோடும் விண் தானடைந்தான் அதிகாயனும். *(யுத் : 1956)*

**கும்பம் — 1. குடம்.** கும்பமுற்ற உயர் நெற்றி. **(ஆ : 13)**

**2. இரண்டு குடம் கவிழ்த்தாற்போன்று யானைத்தலையிற் காணப் படும் உறுப்பு.** கும்பத்திண் கரியைக் கோண்மாக் கொன்றென. *(யுத் : 255)*

**கும்பமுற்ற உயர் நெற்றி — குடம்போன்ற உயர்ந்த நெற்றி.** **(ஆ : 13)**

**கும்பன் — 1. வானரப் படைத்தலைவன்.** கும்பனுங் குல சங்கனும் முதலினர். *(கி : 725)*

**2. அரக்கர் படைத் தலைவன்.** கும்பனென்றுளன் ஊழி வெங்கதிரி னுங் கொடியான். *(யுத் : 496)*

**3. கும்பகருணன் புதல்வருள் ஒருவன்.** கும்பக் கொடியோனும் நிகும்பனும். *(யுத் : 1692)*

**கும்பானு — அரக்கத் தலைவன்.** கும்பானு நெடுஞ்சரந் தூரக்க வானரச்சேனை துணிந்ததே. *(யுத் : 1024)*

**கும்பி — நரகம்.** கும்பி வயிற்றினிடை. *(அ : 878)*

**கும்பிகை — ஓர் இசைக் கருவி.** *(யுத் : 2397)*

**கும்பிட்டுய் தொழில் — கும்பிட்டுக்கொண்டு உயிர்வாழ்ந்திருக்குந் தொழில்.** மானுடர் இருவரை வணங்கி மற்றுமக் கூனுடைக் குரங்கையும் கும்பிட்டுய் தொழில். *(யுத் : 1310)*

**கும்பிடா — கும்பிட்டு.** *(அ : 529)*

**கும்பிடுதல் — கைகூப்பி வணங்குதல். அடிபணிதல்.** தாயரைக் கும்பிடா. *(அ : 529)* கொற்றவனைக் கழல் கும்பிடலோடும். *(பா : 1337)*

**கும்பி வயிறு — நரகமாகிய வயிறு. நரகம்போன்ற வயிறு.** *(அ : 878)*

**குமட்டல் – குமட்டுதல். தெவிட்டல்.** *பொழிந்த மாநிலம் புற்றாக் குமட்டிய புனிற்ரு.* **(கி : 490)**

**குமண்டை – ஒருவகை மகிழ்ச்சிக் கூத்து.** *பாதகர் பரவையென்னுங் குழியினைக் கருதிச்செய்த குமண்டைக் குறித்து நீங்க வழியினைத் தருதி.* (யுத் : 616)

**குமதி – ஓர் அரக்கி இந்திரனுற் கொல்லப்பட்டவள்.** *தானவள் குமதிப் பெயராள்தனை ஊன் ஒழித்தனன் வச்சிரத் தும்பர்கோன்.* (பா : 402)

**குமரர் – மக்கள்.** *குமரர் நீர் இவண் அடைந்துதவு கொள்கை எளிதோ.* (ஆ : 4)

**குமரன் – 1. சுப்பிரமணியக் கடவுள்.** *கலைத்தொழிற் குமரன் கொல்லத் தொல்லைநாட் செருவில் தீர்ந்தான்.* **(யுத் : 2515)**

**2. மகன். மகன் போன்றவன்.** *குமர மற்றுன்னைக் கொண்டே.* (யுத் : 1350)

**குமிழ் – 1. குமிழி · குவிந்த.** *குமிழ் முலைச் சீதை.* **(அ : 252)**

**2. குமிழ மலர்.** *தொள்ளைக் குமிழும்.* **(கி : 795)** *குமிழி ஏர் மூக்கு.* (கி : 641)

**குமிழ்தல் – 1**. புடைத்தல். (வை. மு) **குவிதல்.** (அண்) **குமிழியைப் போன்றிருத்தல்.** (கலா) *குமிழ் முலைச் சீதை.* **(அ : 252)**

**2. குமிழி கொள்ளுதல்** *பொடியால் எங்கும் குமிழ்த்தன வியோம கூடம்.* (யுத் : 3328)

**குமிழி நீர் – குமிழ்விட்டுப் பெருகுகின்ற கண்ணீர். குமிழ்த்தலை யுடைய கண்ணீர். குமிழியிடுங் கண்ணீர்.** *குமிழி நீரோடும் சோரிக் கனலொடும் கொழிக்கும் கண்ணன்.* **(யுத் : 3603)**

**குமிழியூட்டுதல் – 1. ஆழ அமுக்கி மேலே குமிழி எழும்படி செய்தல்.** *வேலை நீரிடைக் குமிழியூட்டும்.* **(யுத் : 267)**

**2. (நீரில்) மூழ்கச் செய்தல்.** *வாரி நீரிடைக் குமிழியூட்டும்.* **(யுத் : 1397)**

**குமிறுதல் – முழங்குதல்.** *கூற்றமஞ்சக் குமிறுங் குரலினன்.* **(அ: 652)**

**குமுதக் கண்ணன் – குமுதாக்கன்.** *சயந்தரு குமுதக் கண்ணன்.* **(யுத் : 4328)**

**குமுதச் செவ்வாய் – குமுத மலர்போன்ற சிவந்த வாய்.** *வேறோர் மருந்திலை மையல் நோய்க்குச் சுந்தரக் குமுதச் செவ்வா யமுதலால்.* **(யுத் : 1597)**

**குமுதப்பூ – குமுதக் கொடியின் பூ** *பைங் குமுதப் பூவும்.* **(கி : 792)**

**குமுதப்போது - செவ்வல்லி மலர்.** (கலா) பைங் குமுதப் போதும். (கி : 792) [பா : பே]

**குமுதம் - செவ்வாம்பல்.** நவ்வி நோக்கியர் இதழ் நிகர் குமுதத்தின் நறுந்தேன் வவ்வி மாந்தரிற் களிமயக்குறுவன மகரம். (கி : 17) சீரிய நங்கைமார் வாயடங்கின என்ன வந்து குவிந்த வண் குமுதங் களே. (அ : 238)

**குமுதாக்கன் - குமுதம்போன்ற கண்களையுடையவன். ஒரு வானரத் தலைவன்.** வயக்குமுதன் நீலன் இடபன் குமுதாக்கன். (சு : 605) (யுத் : 834)

**குமுறல் - முழங்கல்.** கொற்ற மண்கணை குமுற மன்னனை மற்றொர் பொன்னின் மா மானம் ஏற்றினார். (அ : 916)

**குமுறி விம்முதல் - கதறியழுதல்.** கோளுறு மடங்கலிற் குமுறி விம்முவான். (அ : 889)

**குமுறுதல் - 1. பிளிறுதல்.** குன்று துன்றின எனக்குமுறு கோபமதமா. (ஆ : 11)

**2. கிளர்ந்தொலித்தல்.** குழீயின குமுறின கொள்கை கொண்ட வால். (யுத் : 2751)

**3. சுரத்தல்.** கொம்மை வெம்முலைக் குமுறு பாலுக விம்மிநின்றழுது வீங்கினாள். (அ : 911)

**குமை - பிசைதல்.** குதியாற் பல குமையாற் பல கொன்றான். (யுத் : 1835)

**குமைத்தல் - 1. குத்தியழித்தல். அழித்தல்.** உலகையும் சலம்வரிற் குமைக்கும். (கி : 709) குமைத்தொழில் புரிந்த வீரன். (யுத்: 2415)

**2. காலால் மிதித்து உழக்கல்.** அமைத்தரு கனலென அழன்றெற் பற்றியே குமைத்துயிர் பதைப்ப நீ கூறுபோய் என்றான். (சு : 1286) (யுத் : 1835)

**3. அடித்தல்.** பண்டு தேவரைக் குமைத்தான். (யுத் : 510)

**குமைத்தொழில் - அழிக்குந்தொழில். குமைத்தொழில் புரிந்த வீரர் தனுத்தொழில்.** (யுத் : 2415)

**குமைப்பது - உருத்தெரியாமற் சிதைப்பது.** சமைப்பது கொலையலால் தக்கது யாவதோ குமைப்பது நலம். (யுத் : 347)

**குமையுற - 1. நெருக்கமுற.** குமையுறத் திரண்டொரு சடையாகிய குழலாள். (சு : 339)

**2. குவிய.** (உ. வி) (சு : 339)

**குயம் – 1. தனம்.** *நயனமும் குயமும் புக்குப் பாவியாக் கொடுத்த வெம்மை.* **(ஆ : 648)**

**2. மார்பு.** *உம்பரையுங் கொம்மைக்குய வட்டணை கொண்டிலனே.* **(யுத் : 1685)**

**3. வான். (அண்) (யுத் : 1685)**

**குயமகன் திகிரி – குயவனுடைய சக்கரம்.** *சலம் வருங் குயமகன் திகிரித் தன்மைபோல்.* **(யுத் : 3730)**

**குயவட்டணை – குயவன் திரிகை. (உ. வி) (யுத் : 1685)**

**குயவட்டணை கொள்ளுதல் – மார்பில் தாளம் போடுதல்.** *மும்மை உம்பரையும் குயவட்டணை கொண்டிலனே.* **(யுத் : 1685)**

**குயவர் திரிகை – குயவனின் சக்கரம்.** *விடுகுயவர் திரிகையென உலகு முழுது முறைதிரிய.* **(யுத் : 3422)**

**குயவன் – வேட்கோவன்.** *நிலந்திரிந்த வன்றேட் குயவன் திரிமட் கலத்தாழி யென்ன.* **(கி : 274)**

**குயில் – ஒரு பறவை.** *குயில் தலத்திடை யுற்றதோர் கொள்கையான்.* **(ஆ : 814)** *குயில் தலத்துக்க தென்ன.* **(யுத் : 2423) (பா : 990)**

**குயில்மொழி – குயிலை ஒத்த குரல்.** *மணிநகைத் திணிவேய் மென்றேட் குயில்மொழி.* **(கி : 641)**

**குயிலுதல் – 1. பதித்தல்.** *குயின்றன குலமணி.* **(அ : 540)**

**2. நெருங்குதல்.** *குயிலுறுத்தி.* **(பா : 694)**

**3. அமைதல்.** *கண்டினிற் குயின்ற வீணை.* **(யுத் : 2400)**

**குயிலுறுத்தல் - 1. நிலைநாட்டல். பொருத்தமாகச் செய்துவைத்தல். (அண்) நன்கு பதித்தல். (கலா)** *திரக்குயிலுறுத் தமையவைத்த கொள்கொம்பு.* **(கி : 784)**

**2. நெருங்கச் செய்தல்.** *பூதலம் குயிலுறுத்திக் கொழும்புகை விம்மவே.* **(பா : 604)**

**குயிற்றுதல் – 1. பதித்தல்.** *மணி செற்றுபு குயிற்றி அவிர் பைம்பொன் அணிந்த தவிசிட்டு.* **(பா : 320)** *வெயிற்சுடர் இரட்டி குயிற்றிய தாமென.* **(ஆ : 1150)**

**2. செய்தல். அமைத்தல்.** *கூறிய நெறிமுறை குயிற்றி.* **(அ: 782)** *சேது குயிற்றுதிர்.* **(யுத் : 619)**

**3. படைத்தல். உண்டாக்குதல்.** *குயிற்றிய அண்டம்.* **(யுத் : 265)** *எல்லைக் குயிற்றி.* **(யுத் : 2198)**

**குயிலொடர் குதலை - குயில் கூவுதலையொத்த மழலைச்சொல்.** *குயில் தொடர் குதலையோர் கொவ்வைச் செவ்விவாய் மயில் தொடர் இயலியாய் மருவல் நன்றெனு.* (ஆ : 253)

**குரக்கினத்திறைவன் - சுக்கிரீவன்.** (யுத் : 922)

**குரக்கினத்தரசு - குரங்குக் கூட்டங்களுக்குத் தலைவன். வாலி.** (கி : 316) **சுக்கிரீவன்.** (யுத் : 4226)

**குரக்கினத்தவர் - குரங்கினத்திற்குரிய சுக்கிரீவனுதியோர்.** (யுத்: 321)

**குரக்கினம் - குரங்குக் கூட்டம்.** *குரக்கினத்தவர்.* (யுத் : 321)

**குரக்குச் சீயம் - வானவர்களுள் சிங்கம் போன்றவன். அனுமன்.** *அக்குரக்குச் சீயம்.* (கி : 78) *குன்றொடு குணிக்கும் கொற்றக் குவவுத்தோட் குரக்குச் சீயம்.* (சு : 36)

**குரக்கின் முதல் நாயகனை ஆளுடைய கோள் உழுவை - இராமன்.** (யுத் : 3411)

**குரக்குப் பல் பிணம் - குரங்கின் மிக்க பிணம்.** *குரக்குப் பல் பிணம் பொற்குவை நிகர்த்தன.* (யுத் : 1082)

**குரக்கு வெள்ளம் - குரங்குச் சேனையாயகிய வெள்ளம்.** (யுத் : 1398)

**குரகதத் தேர்வாலான் - குதிரை பூட்டிய தேரைச்செலுத்துவதில் வல்லவனுன சுமந்திரன்.** (அ : 1040)

**குரகதம் - குதிரை.** *அக் குரகதத் தேர் வலானும் வரிசையின் வழாமை நோக்கி.* (அ : 1040)

**குரங்கின் மாலை - குரங்குகளின் வரிசைகள்.** (யுத் : 2979)

**குரங்கினது அடி - குரங்கினது அடிச்சுவடு.** *ஆங்கோர் குரங்கின தடியுமின்றிப் போக்கினுன்.* (யுத் : 1423)

**குரங்கு - அனுமன்.** *குரங்கின்மேற் சேறிபோலாம்.* (சு : 931) (சு : 981)

**குரங்குதல் - தாழ்வுபடுத்தல்.** *குரங்கினுற் குரங்கா ஆற்றல் எம்பியோ தேய்ந்தான்.* (சு : 984) [பா : பே]

**குரங்கெனப் பெயர்கொடு திரியுங் கூற்றம் - குரங்கென்று பெயரிட்டுக் கொண்டு திரிகின்ற யமன்கள்.** (யுத் : 1997)

**குரண்டம் - 1. கொக்கு. நீர்ப்பறவை. கொக்கின் இனம்.** *குரண்ட மாடு நீர் அளகை.* (யுத் : 517) (கி : 20)

**2. நீர்காக்கை.** *கின்னரம் குரண்டம் கிலுக்கம்.* (சு : 246)

**குரண்ட மாடு நீர் அளகை - குரண்டமென்னும் பறவை முழுகுகின்ற நீரையுடைய அளகாபுரி.** (யுத் : 517)

**குரப்பு – குரம்பு.** *குரப்பணை நிரப்பும் மள்ளர்.* (பா : 574)

**குரபதம் – குளம்பு. குளப்படி.** *குரபதம் உரத்தைக் கூட்டி.*(ஆ : 801)

**குரம் – குதிரைக்கொம்பு.** *அச்சேற்றை நீறு செய்தன புரவியின் குரம்.* (சு : 871) (பா : 149)

**குரம்பு – 1. எல்லை.** *குரம்பறு பிணம்படக் கொன்று.* (சு : 380)

**2. அணை. செய்கரை. அணைக்கட்டு. வாய்த்தலை.** *நெடுங் குரம்பென நின்ற குருதி நீத்தமே.* (யுத் : 1084)

**3. வரப்பு.** *குரப்பணை நிரப்பு மள்ளர்.* (பா : 574)

**4. நீர்த்தேக்கம்.** *ஓடின நெடும் குரம்பு என நிறை நிருதர் குருதி நீத்தமே.* (யுத் : 1083)

**குரம்பை – குடிசை.** *தேமரன் அடுக்கு இதணிடைச் செறி குரம்பை.* (சு : 524)

**குரல் – 1. கதிர்.** *ஐவனக் குரல்.* (அ : 770)

**2. ஓசை. ஒலி.** *இறைவனிட்டான் மெய்க்குரற் சாபம்.* (சு: 560) *அடிகுரல் முரசு.* (பா : 255)

**3. கண்டத்தின் குரல்.** *என் குரலால் எடுத்தழைத்த துண்டது கேட்டயர் வெய்துமாலை.* (ஆ : 810) *குரல் நீத்த.* (யுத் : 1544)

**குரல் கொளை இசையா – குரல் பாட்டின் இராகமாக அமைய.** *சிற்றியற் குறுங்கால் ஓரிக் குரல் கொளை இசையாப் பல்பேய் சுற்றியல் பாணிகொட்டக் களிநடம் பயிலக் கண்டான்.* (யுத்: 3601)

**குரல் நீத்த – குரல் அடங்கியன.** (யுத் : 1541)

**குரவம் – குராவரும்பு.** *குரவங் குவி கோங்கலர் கொம்பினொடும்.* (ஆ : 74)

**குரவர் – குல முன்னோர்.** *மாமுனி வெகுளியால் மடிந்த எங்குரவர்.* (பா : 522)

**குரவு – குராமரம். குராமலர்.** *பூவலர் குரவொடு புடைதவழ் பிடவினும்.* (அ : 696)

**குரவை – 1. மகளிர் கைகோத்தாடும் ஒருவகைக் கூத்து.** *கள்ளிசை அரக்கர் மாதர் களித்திடுங் குரவை காண்பார்.* (சு : 133)

**2. மகளிர் விழாக்காலங்களில் நாவாற் குழறி இடும் ஒருவகை மகிழ்ச்சி ஒலி.** *கோவலர் முன்றிலிற் கன்றுறக்கும் குரவை.* (பா : 65)

**குரன் – குளம்பு** *ஒண் பொறற்குரன் நெரிந்தனவும்.* (சு : 1010)

**குரா - குராமரம்.** குரா வரும்பு. (கி : 502)

**குராவருங் குழல் - குரவ மலர் மணம் வருங் கூந்தல். குரவ மலர் மாலை அணிந்த கூந்தல்.** குராவருங் குழலி இக்குறித்த நாளினே. (சு : 680)

**குரிசில் - உபகாரி ஆடவன். புருடர்களிற் சிறந்தோன்.** குரிசில் சிந்தையை மனக்கொண்ட கொற்ற வெண் குடையான். (அ : 71) வரிசிலைக் குரிசில் மைந்தன். (கி : 60)

**குரிசில் வீரன் - வீரனாகிய குரிசில். இராமபிரான்.** மேகத்தின் கொழுந்தென நின்ற அக்குரிசில் வீரனை. (ஆ : 126)

**குரீஇ - குருவி. ஆண் குருவி.** குரீஇக் குழாம். (யுத் : 1401)

**குரீஇயினம் - குருவியினம். குருவிகள்.** பொன்னி மால்வரைக் குரீஇயினம் மொய்ப்பனபோல. (யுத் : 2564) இன் துணைக் குரீஇயினம் பெடையொடுந் துயில்வ கூட்டினுள். (கி : 530)

**குரு - 1. நிறம்.** குரு மணி நெடுமோலி. (சு : 302)

2. **ஒளி.** குரு நிறத் தொருதனிக் கொண்டல். (சு : 392) குரு மணி மகுடகோடி. (சு : 781)

3. **பிரகஸ்பதி. வேதகுரு.** மந்திர இறையவர் குருவின் மாண் மொழி. (ஆ : 1009)

4. **சிறப்பு.** (உ. வி) (சு : 392)

5. **பெருமை. பருமை.** (உ. வி) குரு மணி மகுடகோடி. (சு : 781)

**குருக்கள் - 1. பெரியோர்.** குருக்களை இகழ்தலினன்று. (அ : 855)

2. **குருநாட்டவர்.** சோன கேசர் துருக்கர் குருக்களே. (பா : 1155)

3. **ஆசாரியர்.** அந்தக் குருக்களென் முனிவர் தாமென். (யுத் : 2860)

**குருகினம் - நாரைகள்.** குருகினம் பரப்ப. (கி : 485)

**குருகு - நாரை. கொக்கு.** பெருவலி வயக்குருகு இரண்டும் பேர்கில, (யுத் : 337) (கி : 485)

**குருகைநாதன் - திருக்குருகூரில் அவதரித்த நம்மாழ்வார்.** குருகை நாதன் குரைகழல் காப்பதே. (பாயி : 30)

**குருசில் - உபகாரி. ஆடவன். (இராமபிரான்)** முற்றிய குருசிலை. (யுத் : 343) குருசில் சிந்தையை மனக்கொண்ட கொற்ற வெண் குடையான். (அ : 71)

**குருடர் - கண்ணில்லாதவர்.** கோல்பிடித் தெழுகுறு குருடர் கூட்டம் போல். (யுத் : 1776)

**குருதி - 1. இரத்தம்.** குருதி வாளெனச் செவ்வரி பரந்த கட்குயிலே. (அ: 733) குகைப்பொழி புதுக்குருதி. (யுத் : 851)

**2. செந்நிறம். (ஆகு)** குருதிக் கொண்மூ. (யுத் : 3115)

**குருதிக் கொண்மூ - செவ்வானம்.** இருண்ட மேகக் குழாத்திடை குருதிக் கொண்மூ உறைந்துள தென்ன நின்றான். (யுத் : 3115)

**குருதி கொப்பளித்தல் - இரத்தத்தை வெளிச்சிந்துதல்.** குருதி கொப்புளிக்கும் வேலான். (யுத் : 4280)

**குருதி தேக்குதல் - இரத்தத்தை நிறையக் குடித்தல்.** நின் செம்பொத்த குருதி தேக்கி. (யுத் : 255)

**குருதி நீத்தம் - இரத்தவெள்ளம்.** பரந்தது குருதி வெள்ளமே (யுத் : 1083)

**குருதி நீர் - உதிரம்.** முருக்கின் கானகமாமெனக் குருதி நீர் முடுக. (யுத் : 2567)

**குருதி நீர்க் குமிழி - இரத்த நீர்க் குமிழிகள்.** குருதி நீர்க் குமிழிக் கண்ணன். (யுத் : 3187)

**குருதிப் புணரி - இரத்தக்கடல்.** பொங்கு குருதிப் புணரியுள். (ஆ : 537)

**குருதிப் புனல் - இரத்தவெள்ளம்.** பொங்கு வெங்குருதிப் புனற் செக்கர். (யுத் : 991)

**குருதிப்பெளவம் - இரத்தக்கடல்.** (யுத் : 1106)

**குருதியம் பரவை - இரத்தவெள்ளம்.** உடலுள் நாட்டிய குருதியம் பரவையினும்பர்க் கடலுள் நாட்டிய வரையெனத் தாதையைக் கண்டாள். (ஆ : 991)

**குருதியின் கண்ணன் - சோணிதாட்சன். இரத்தாட்சன்.** குருதியின் கண்ணன் வண்ணக் கொடி நெடுந்தேரன். (யுத் : 2385) (யுத் : 2393)

**குருதியின் செக்கர் - இரத்தத்தினாற் செவ்வானம்.** சுற்றிய குருதியின் செக்கர் சூழ்ந்தெழ. (யுத் : 1506)

**குருதியோதம் - இரத்தவெள்ளம்.** ஓடுங்கலில் நிணக்குருதி ஓதம். (ஆ : 536)

**குருதிவாரி - இரத்தப்பெருக்கு.** வாளி வாய்தோறும் வந்து பொடித்தன குருதிவாரி. (யுத் : 2070)

**குருதிவாள் - இரத்தந் தோய்ந்த வாள்.** குருதி வாளெனச் செவ்வரி பரந்த கட்குயிலே. (அ : 739)

**குருதி வெள்ளம் — இரத்தப்பெருக்கு.** குருதி வெள்ளத் தெறிகடல். (யுத் : 2171)

**குருந்தம் — குரந்தமரம்.** குருந்தொடு மருத முந்தி. (பா : 26)

**குருபன்னி — குருவின் மனைவி.** குருபன்னியை நோக்கினேன். (அ : 902)

**குரும்பை — செவ்விளநீர். தெங்கின் குரும்பை.** குரும்பை மாதர். (யுத் : 2774)

**குருமணி — நல்ல இரத்தினம். நல்ல நிறமுள்ள மாணிக்கமணி. ஒளிவிடும் நீல இரத்தினம்.** குருமணி நெடுமோலி. (சு : 302) குருமணித் திருமேனி. (யுத் : 216) (யுத் : 2591) குருமணிச் சிவிகை. (பா : 881) குருமணிப் பூண். (அ : 830)

**குருமணிச் சிவிகை — நிறம் பொருந்திய இரத்தினங்கள் இழைக்கப் பட்ட பல்லக்கு.** (பா : 881)

**குருமணி நெடுமோலி — நல்ல நிறத்தையுடைய இரத்தினங்கள் பதிக்கப் பெற்ற நீண்ட கிரீடங்கள்.** (சு : 302)

**குருமணிப் பூண் — நல்ல நிறமுள்ள இரத்தினங்கள் பதித்த அணிகலன் கள்.** (அ : 830)

**குருவிக்குலம் — குருவிக்கூட்டம்.** (யுத் : 2996)

**குருவிக் குழாம் — குருவிக்கூட்டம்.** தகைசால் மணி மேட்டு இமைப் பன மின்மினியாமெனக் கூட்டின் உய்க்கும் குருவிக் குழாமரோ. (பா : 58)

**குருவிந்தக்கல் — மாணிக்கக்கல்.** குரிஇயினத்தெறி குருவிந்தக் கற்கள் வானிடை மீனென விழுவன காணாய். (அ : 753)

**குருவிந்தம் — குருவிந்தரத்தினம்.** சாலம் குருவிந்தம். (ஆ : 665)

**குருளை — குட்டி. இளமைப் பெயர். யானை முதலியவற்றின் கன்று.** குன்றுறை வயமாவின் குருளையும். (அ : 699) சிங்கக் குருளை. (அ : 410)

**குருளை மான் - மான் குட்டி.** கூனுகிர் மடங்கலேற்றைக் குருளை மான் கொல்லும் என்றான். (ஆ : 869)

**குரை — 1. ஒலி.** குரை கடல். (யுத்: 3218) குரை கழல். (யுத்: 1443)

**2. அசைநிலை.** தன் குரைமலர்த் தடக்கையால். (கி : 540)

**குரை கடல் — ஒலிக்கின்ற கடல்.** (யுத் : 3218) (யுத் : 1567)

**குரை கழல் — ஒலிக்கின்ற வீரக் கழல்.** (யுத் : 1443)

**குரை செய்தல் – ஒலித்தல்.** குரைசெய் வண்டின் குழாம் இரிய. (பா : 638)

**குரைத்தல் – 1. பூரித்தல்.** குரைத்த மேனியொடுள்ளங் குளிர்ந்தவால். (அ : 1019)

**2. ஒலித்தல்.** கூன் சூல் முதிர் இப்பி குரைக்க. (சு : 48) குரைக்கும் வேலை. (யுத் : 3708)

**குரோதவசை – காசிபன் மனைவியருள் ஒருத்தி. கழுதை, மரை, ஒட்டை முதலியவற்றைப் பெற்றாள்.** மானமுடைக் குரோதவசை கழுதை மரை ஒட்டை பிற வயிறுவாய்த்தாள். (ஆ : 202)

**குலக்கயம் – எட்டுத்திசை யானைகள். கூட்டமாகிய குளங்கள். கூட்டமாகிய யானை.** (பழையவுரை) சிலைக்கடுங்கணை...... வாயெரிந் தோடிக் குலக்கயங்களிற் குளித்தன குடித்தன குருதி. (யுத் : 1428)

**குலக்கற் பினுக்கணி – நற்குலத்திற் பிறந்த கற்பினுக்கு அணிகலம் போன்றவளாகிய சீதாபிராட்டி.** (யுத் : 3969)

**குலக்கிரி – குல பருவதங்கள். கைலாசம், இமயம், மந்தரம், விந்தியம், நிடதம், ஏமகூடம், நீலம் என்பன.** ஆடின குலக்கிரி. (ஆ : 605)

**குலக்கிழவன் – குலத்துக்குரிபவன். விபீடணன்.** நம்பி குலக்கிழவன் கூறு நலமோராய். (யுத் : 1949)

**குலக்கிளை – குலத்திலே தோன்றிய பந்துக்கள்.** நாறுதன் குலக்கிளை யெலா நரகத்து நடுவான். (யுத் : 841)

**குலக்குரவர் – மூதாதையர்.** நங்குலக் குரவர்கள் நவையின் நீங்கினர். (அ : 17)

**குலக்குலமாக – கூட்டங்கூட்டமாக.** குரங்கு வெள்ளங் குலக்குலமாக மாளும். (யுத் : 2972)

**குலங்கடிந்தான் – குலத்தை தலைமுறையாக அழித்தவன். பரசுராமன்.** நும் குலங்கடிந்தான் வலி கொண்ட கொண்டலை. (அ : 484)

**குலங்கள் முற்றுதல் – குலங்கள் அழிந்தொழிதல்.** மூவெழுமுறைமை எங்குலங்கள் முற்றுறப் பூவெழு மழுவினாற் பொருது போக்கிய சேவகன். (அ : 77)

**குலச்சிறுமை – குலத்திற்கு இகழ்ச்சி.** குலச்சிறுமை செய்தாய். (யுத் : 65)

**குலச் சீயம் – சிறந்த சிங்கம்.** முழைக் குலச் சீயம் வெம்போர் வேட்டது முனிந்த தென்ன. (யுத் : 2182)

**குலஞ்சுரந்தெழு கொடுமையான் – குலத்தில் ஊற்றெடுத்துப் பெருகும் கொடுமைகட்கெல்லாம் நிலைக்களமானவன். இந்திரசித்து.** (யுத் : 2558)

**குலஞ்செய்த பாவம் – குலத்தவர் செய்த தீவினை** *குலஞ்செய்த பாவத்தாலே கொடும்பழி தேடிக்கொண்டோம்.* (யுத் : 3077)

**குலத்தியர் – மனைவியர்.** *கொய்தலைப் பூசற்பட்டோர் குலத்தியர்.* (யுத் : 3599)

**குலத்தியல்பு – குலத்தின் பெருமைத்தன்மை.** *குலத்தியல்பு அழிந்ததேனும்.* (யுத் : 1350)

**குலத்துக் கொவ்வாப் பங்கம் – குலத்துக்குத் தகாத அபகீர்த்தி.** *குலத்துக் கொவ்வாப் பங்கம் வந்துற்றதன்றிப் பழியும் வந்துற்றதென்றான்.* (யுத் : 1233)

**குலத்துமானம் – குலாபிமானம், குலப்பற்று** *குலத்துமானம் தீர்ந்திலன் சிறிதும் என்றான்.* (யுத் : 1388)

**குலத்தொடு நிலத்தனுதல் – சுற்றத்தோடு நிலத்தில் உயிர்துறந்து விழுந்தவனுதல்.** (யுத் : 2877)

**குலத்தோடற முடித்தல் – குலத்தோடு அழியும்படி இறுதிசெய்தல்.** *நெடியாய் உனதடியேன் குலத்தோடற முடியேல்.* (பா : 1371)

**குலத்தோடற வீட்டுதல் – குலத்தோடு அறுமாறு கொல்லுதல்.** *நாங்குறை நேரவிடும் பாக்கியமுடையவர்களைக் குலத்தோடற வீட்டி.* (யுத் : 3034)

**குலநன்மை – குலத்தின் நன்மை.** *சாயடங்க நலங்கலந்து தன்குல நன்மையும் போயடங்க.* (அ : 238)

**குலப்படி – பரம்பரையாய் வரும் இராச்சியம்.** *குலப்படியுளாளோ கடற்படையுளாளோ முளரியாள்.* (பா : 1121)

**குலப்பழி – குலத்துக்குப்பழி.** *கொம்பிழை மானின் பின்போய்க் குலப்பழி கூட்டிக்கொண்டீர்.* (ஆ : 1022)

**குலப்புலன் – ஐம்புலக்கூட்டம்.** *வெங்குலப் புலன்கெட வீடு நண்ணினர்.* (அ : 17)

**குலப்பூண் – சிறந்த ஆபரணம்.** *இப்பொழுதகன்றது உன் குலப்பூண் மன்றலாக மாங்காந்த மாமணி இன்று வாங்க.* (யுத் : 4038)

**குலம் – 1. பிறந்த குலம்.** *பெறுதற்கரிய குலஞ் சுரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம்.* (பா : 69)

**2. சிறப்பு.** *குல மாட நகர்புகுவேம்.* (ஆ : 630) *குல மாமழை.* (பா : 1251) *குழைக் குல முகத்தியர்.* (அ : 495)

3. **கூட்டம்.** *நிருதக் குல முடித்து வினைமுற்றி.* (சு : 614) *உழைக்குலம்.* (அ : 495) *முழைக்குலச் சீயம்.* (யுத் : 2282) *குலத் தோள்.* (சு : 304)

4. **வகை.** *இழைக்குலம் சிதறிட.* (அ : 495)

5. **குடிப்பிறப்பு.** *குலச் சீதை.* (ஆ : 39) *குல மடந்தையர்.* (யுத் : 678)

6. **வீடு. இருப்பு.** *பொறிக்குல மலர்ப்பொழில்.* (உ. வி) (சு : 691)

7. **உயர்ச்சி.** *குலமணி மணிக்கெலாம் விண்டுவின் தடமார்பினின் மணியொத்த திருவென வியப்புற்றான்.* (சு : 291) *முழைக் குலச் சீயம்.* (யுத் : 2282)

8. **தொகுதி.** *கருக்குல மேகம்.* (யுத் : 3212)

9. **நன்மை.** (அண்) *மலைக்குல மயில்.* (கி : 251) *குல மருப்பு உகுத்த முத்தம்.* (யுத் : 1770)

10. **அழகு** *அருங்குலக் கலமே என்னும்.* (யுத் : 2838)

**குலம் வேரொடு மடங்கக் கோறல் – குலம் முழுவதையும் வேரோடு அழித்தல்.** *நுங்கள் குலம் வேரொடு மடங்கக் கோறும் என முந்தையொரு சூளுறவு கொண்டார்.* (ஆ : 614)

**குல மடந்தையர் -குல ஸ்திரீகள்.** *வலமரங்களை விட்டில மாசிலாக் குல மடந்தையராமென.* (யுத் : 678)

**குலமணி – 1. உயர்ந்த மணி.** *குலமணி மணிக்கெல்லாம்.* (சு : 291) *குலமணித் தோள்.* (பா : 325)

2. **உயர்ந்த இரத்தினம்.** (உ. வி) (பா : 870)

3. **கூட்டமாகிய இரத்தினம்.** *குலமணிக் கலன்கள் சிந்த.* (பா: 87()

**குலமணிக் கொடும்பூண் – உயர்ந்த மணிகள் பதிப்பிக்கப்பெற்று வளைவுடையனவாகிய அணிகலன்கள்.** (யுத் : 280)

**குலமணித் தோள் – சிறந்த அழகிய தோள்.** *குன்றளிக்கும் குலமணித் தோட் சம்பரன்.* (பா : 325)

**குலமணி முடி – சிறந்த மணிகளழுத்துச் செய்யப்பட்ட கிரீடம்.** *குலங்களோடுந் தங்குலமணி முடியொடுங் குறைய.* (யுத் : 516)

**குல மயில் – நல்ல (சிறந்த) மயில்.** *மலைக்குல மயில்.* (கி : 251) *குலம் குலாவும் எனவுமாம்.* (உ. வி)

**குல மரபு – சிறந்த மரபு.** *நங்குல மரபினின் மணிமுடி வேந்தர்.* (அ: 63)

**குல மருமான் – குலத்துத் தோன்றியவன்.** *படையங்கது படராவகை பகலோன் குல மருமான் இடையங்கது தடுக்கும்படி செந்தியுக வெய்தான்.* (யுத் : 3029)

**குலமலர்க் குப்பை – சிறந்த மலர்க் குவியல்.** *கூனி போனபின் குல மலர்க் குப்பை நின்றிழிந்தாள்.* (அ : 182)

**குலமறல் – குலத்தோடு நாசமாதல்.** *பொய்யுரைத் துலகினிற் சினவினுர் குலமறப் பொருத தன்வேல்.* (யுத் : 96)

**குலமால்வரை – 1. அஷ்ட குலாசலம்.** *தானுக்கது குலமால்வரை.* (யுத் : 3009)

2. **சிறந்த மலையாகிய மேரு.** (உ.வி) (யுத் : 3009)

**குலமுதற்றருமம் – குலத்திற்கு முதன்மையான தருமங்கள். குலத்திற்கு முதல்வன் கொண்ட நல்லறம்.** *கொற்ற நீதியுங் குலமுதற் றருமமும் என்றிவை குடியாகப் பெற்ற நுங்களால்.* (யுத் : 1546)

**குலமுதற் றொன்மை – குலத்தினது முதன்மையாகிய பழமை.** (வை.மு) **முதன்மையும் பழமையும் வாய்ந்த குடிப்பிறப்பு.** (அண்) *குலமுதல் தொன்மையும் கலையின் குப்பையும்...... எய்தினுர்.* (அ : 6)

**குலமைந்தன் – குலத்துத் தோன்றிய மகன்.** *வீர நின் குல மைந்தனை வேதியர் முதலோர் யாவரும் யாஞ்செய்த நல்லறப் பயனென இருப்பார்.* (அ : 39)

**குலவரை – 1. மேரு.** *குலவரையை வலம் வருவான் இரவி.* (ஆ: 563)

2. **அஷ்டகுல பர்வதம்.** *குலவரை நேமிக்குன்றம் என்ற வானுயர்ந்த கோட்டின் தலைகளும்.* (கி : 380) (யுத் : 765)

3. **சிறந்த மலை.** *குமுதனிட்ட குலவரை.* (யுத் : 661)

**குலவரைக் குலம் – குலமலைகளின் வருக்கம்.** (யுத் : 2008)

**குலவரைக் குவடு – குல பர்வதங்களின் சிகரம்.** *குலவரைக் குவடு மேய்க்கும் என்றுரைத்தனைய மௌலித் தலை பத்தும் இறுத்த வீர.* (யுத் : 4116)

**குலவு – விளங்குகின்ற.** *அயோத்தி வேந்தன் புகழெனக் குலவு தோளான்.* (சு : 139) *குலவு நான் முறைத்தண்டு.* (பா : 252)

**குல வேந்தன் – சிறந்த வேந்தன்.** *கொடியாள் இன்னன கூறக் குல வேந்தன்...... மண்ணிடை வீழ்ந்தான்.* (அ : 220)

**குலா – 1. கொண்டாட்டம்.** *பெருங்குலா உறுநகர்க்கே ஏகு நாள்.* (ஆ : 365)

2. **மகிழ்ச்சி.** (உ. வி) (ஆ : 365)

**குலாம் – 1. விளங்குகின்ற.** எட்குலாமலர் ஏசிய நாசியர். (அ : 814) ஏர் குலாம் முகத்தினுள். (கி : 615) உழை குலாம் நயனத்தார். (பா : 1221)

**2. ஒத்த. போன்ற.** மழைகுலாம் ஓதி நல்லார். (பா : 1221) பொன் குலாம் மேனி மைந்தன். (யுத் : 2135)

**3. அணிந்த** வார் குலாம் முலை. (பா : 846)

**4. களிக்கின்ற** இழை குலாம் நயனத்தார். (பா : 1221)

**5. விரும்புகின்ற.** பார் குலாம் செல்வ. (அ : 661)

**6. வீசுதல்.** மின் குலாம் கழற்கால் வீரன். (யுத் : 2135)

**குலால் மகன் – குலாலனாகிய மகன். குயவன்.** குலான் மகன் முடுக்கிவிட்ட மட்கலத் திகிரிபோல. (பா : 576)

**குலால் மகன் திகிரி – குயவனது சக்கரம்** (யுத் : 3730)

**குலாலன் – குயவன்.**

**குலாவுதல் – 1. விளங்குதல்.** கார்குலாம் நிறத்தான். (அ : 661) பொற் குலாவு சுபாரிசன். (யுத் : 1042)

**2. விரும்புதல்.** பார்குலாம் செல்வ. (அ : 661)

**3. ஒத்தல்.** இலை குலாவு அயில். (பா : 1119)

**4. மகிழ்தல். மகிழ்ந்து வாழுதல்.** செவ்விகண்டு குலாவுகின்றார் சிலர். (சு : 272) கொடியான் வருமென்று குலாவுவதோ. (சு : 497)

**5. ஒன்றுதல்.** மற்குலாவு வயப்புயம். (யுத் : 1042)

**குலிகச் செப்பு – சிவப்பான செப்பு. சாதிலிங்கச் செப்பு.** (அண்) அவள் திரண்ட கொங்கை செம்பொன் செய் குலிகச் செப்பு. (ஆ : 627)

**குலிகம் – இங்குலிகம். சாதிலிங்கம்.** செம்மயிரின் நெற்றிப் பொருங் குலிகம் அப்பியன. (பா : 922) (சு : 10)

**குலிகமிட் டெழுதிய செப்பு – இங்குலிகத்தால் கோலம் வரையப்பெற்ற செப்பு.** (அ : 762)

**குலிசக் கையினான் – வச்சிரப் படையை ஏந்திய இந்திரன்.** குலிசக் கையினான் படைத்தனன் பழி. (ஆ : 1010)

**குலிசத்தண்ணல் – வச்சிராயுதத்தையுடைய தலைவனான இந்திரன்.** செறிசுடர்க் குலிசத்தண்ணல். (பா : 551)

**குலிசத்தவன் – இந்திரன்.** தெறு குலிசத்தவன். (ஆ : 356)

**குலிசம் – 1. வச்சிரப்படை.** கொட்புறு புரவித் தெய்வக் கூர்துதிக் குலிசத்தாற்கும். (சு : 25)

2. ஒருவகைப் படை. குந்தமும் குலிசமும் கோலும் பாலமும். (ஆ: 402)

**குலிசவேல் - குலிசமாகிய படை. வச்சிராயுதம்.** இந்திரன் குலிச வேலும். (யுத்: 1241)

**குலிசன் - ஓர் அரக்க வீரன்.** காலனும் குலிசனும் காலசங்கனும் மாலியும் மருத்தனுமருவும் ஐவரும். (யுத்: 1800)

**குலிசி - இந்திரன்.** நேமியோ குலிசியோ நெடுங்கணிச்சியோ. (சு: 1112)

**குலிந்தம் - ஒரு நாடு.** கொங்கணமும் குலிந்தமும் சென்றுறுதிர் மாதோ. (கி: 766) (கி: 921)

**குலுக்கம் உற்றது - குலுங்கியது.** (யுத்: 3747)

**குலுக்குதல் - குலுங்கும்படி செய்தல்.** அண்டத்தை நிறையப் பெய்து குலுக்கிய தனையதான. (யுத்: 3480) (சு: 304)

**குலுங்குதல் - 1. அசைதல்.** மணிமகுட கோடி முடித்தலை குலுங்கும் வண்ணம். (சு: 751) விலங்கல்கள் குலுங்க. (ஆ: 8)

2. **கலகலத்தல்.** ஆடகக்குன்று கால்குடைய மேலுயர்ந்திடை குலுங்குகின்றனைய கொள்கையான். (யுத்: 2034)

3. **நடுங்குதல். அச்சத்தால் நடுங்குதல்.** கொற்ற வெங்கணை உலக்க எய்தவை குளிப்ப நின்றுடல் குலுங்கினுர். (யுத்: 2039) அல்லும் நன்பகலும் குலுங்கும் வன்றுயர் நீங்குமால் வெள்ளியங் குன்றம். (சு: 864) குலுங்கல் செல்லா. (ஆ: 1016)

**குலுங்குகின்ற - குலுங்குகின்றது என்பதன் தொகுத்தல் விகாரம்.** (யுத்: 2034)

**குலை - 1. அணை.** குலை கொளக்குறி நோக்கிய கொள்கையான். (யுத்: 665)

2. **ஈரற்குலை.** (கலா) குலையுறக் குளித்த வாளி. (யுத்: 1236)

3. **தொகுதி. கூட்டம்.** கம்மியர் கூட மொப்பக் குலையுறு பொறிகள் சிந்தி. (யுத்: 1416) (உ. வி) (யுத்: 1236)

4. **கொத்து.** தாழையில் பன்னுவான் குலைப் பதடியாயினேன். (அ: 926)

**குலை குலைதல் - நடு நடுங்குதல்.** நின்றுளார் குலை குலைந்து கொடிநகர் நோக்கினுர். (யுத்: 1017) அந்தகன் குலை குலைந்தஞ்சச் செயிர்த்து நோக்கினன். (கி: 291)

**குலைத்தல் - அசைத்தல்.** முனிவர் கண்டவர் கை குலைக்கின்றதும் கண்ணின் நோக்கினுன். (யுத்: 2950)

**குலைதல் – 1. வருந்துதல் நடுங்குதல்.** *உம்மைக் குலையப்பொரும்.* (யுத் : 1685) *உம்பர் மண் குலைகின்றது. என் குலைகின்றது.* (யுத் : 2828) *கொற்ற வெங்கொடு மறலியும் சிரதலங் குலைந்தான்.* (கி : 297) *சிரதலங் குலைந்தார்.* (யுத் : 1188) *சிரங்களும் கரமு மெல்லாங் குலைந்தனர் கண்ட தேவர்.* (யுத் : 1913) *குலைகின்ற எல்லையதன் வாய்.* (யுத் : 2195) *குலைந்தது.* (யுத்: 2561) *குலைந்தோர்.* (யுத் : 3218) *உள்ளம் குலைந்திடேல்.* (கி : 289) *வானவர் கைத் தலங் குலைந்தார்.* (யுத் : 1156)

2. **நிலை கெடுதல். நிலை தளர்தல்.** *மலைகுலைந்தென வச்சிர முட்டி தன்நிலை குலைந்து விழுதலின்.* (யுத் : 1017) *தாளெலாம் குலைய ஓடி.* (யுத் : 2542) (ஆ : 1084)

3. **கூசுதல்.** *கண் குலைகின்றது.* (யுத் : 2828)

4. **நிலை தடுமாறல். மனஞ்சுழலுதல்.** *கொள் கொம்பொடியக் கொடி வீழ்ந்ததுபோற் குலைந்தாள்.* (ஆ : 942)

**குலையுறு பொறி – தொகுதியாகப் பொருந்திய தீப்பொறிகள்.** (யுத் : 1416)

**குலைவாயின – நிலை குலைந்தன** *பயமுற்றெரு குலைவாயின.* (யுத்: 1824)

**குலைவு – நடுக்கம்.** *வரிக்கலாகாக் கூற்றம் வந்துற்ற காலத்து உயிரெனக் குலைவு கொண்டாள்.* (ஆ : 878) (யுத் : 3284)

**குலைவுறல் – 1. நடுக்கங் கொள்ளாதே** *குலைவுறல் அன்னம்.* (ஆ: 880)

2. **நடுங்குதல்.** *கூசி ஆவி குலைவுறுவானையும்.* (சு : 428)

**குவட்டணைந்த செக்கர் – சிகரத்திலே பொருந்திய செவ்வானம்.** *தலைக்குவட்டணைந்த செக்கர் சரிந்தன குழல்கள் தாங்கி.* (யுத்: 1943)

**குவட்டிற் றூங்குங் கள் – உச்சியிலே தொங்குகின்ற தேன்கூட்டிலுள்ள தேன்.** *துள்ளின குதித்த வானத் துயர்வரைக் குவட்டிற் றூங்குங் கள்ளினை நிறைய மாந்திக் கவியெனக் களித்த மீன்கள்.* (யுத் : 643)

**குவடு – 1. திரட்சி. அடிமரம்.** *வடக்கொழுங் குவடு.* (பா : 898)

2. **மலை.** *கற்குவடு.* (யுத் : 785)

3. **சிகரம்.** *அநேகங் குவடுடைத் தனியோர் குன்றென நின்றான்.* (யுத் : 805)

**குவலயம் – 1. உலகம்.** *கொற்றவர் முனிவர் மற்றும் குவலயத் துள்ளார்.* (அ : 266) (யுத் : 3251)

2. **குவளை.** *கோடல்கள் பெருமை கூரக் குவலயஞ் சிறுமை கூர.* (கி : 459)

**குவவு - 1. திரண்ட.** **திரட்சி.** நின் பெருங் குவவுத் தோள்வலிக்கு இற்றனன். **(கி : 252)**

**2. குவிந்த.** குன்றென உயரிய குவவுத் தோளினன். **(பா : 821)**

**குவவுதல் - திரளுதல்.** குவவுத் தோளார். **(யுத் : 2149)**

**குவளை - கருங்குவளை.** குவளை கண்விழித்து நோக்க. **(பா : 35)** பானலுங் குவளையும். **(யுத் : 332)**

**குவளைக் கண்ணி - குவளை மலர்போன்ற கண்களையுடையவள்.** குவளைக் கண்ணியங் கிராக்கதக் கன்னி. **(யுத் : 3219)**

**குவளைக் கண்ணியர் - குவளை மலர்போன்ற கண்களையுடைய வராகி.** குவளைக் கண்ணியர் வானவர் மடந்தையர் கோட்டித்துவளப் பாரிடைக் கிடந்தனர். **(யுத் : 2574)**

**குவளைக்கானம் - குவளை மலர்த் தொகுதி.** எல்லியங் குவளைக் கானத்து இடையிடை மலர்ந்து நின்ற அல்லியம் கமலம். **(ஆ : 230)**

**குவளைக் கோட்டகம் - கருங்குவளை மலர் நிறைந்த நீர் நிலை.** படை நெடுங் கண்ணுற் குவளைக் கோட்டகங் கடுத்தது. **(சு : 128)**

**குவளை நோக்கி - கருங்குளை மலர்போன்ற கண்களையுடைய சீதாபிராட்டி.** குவளை நோக்கி தன் துப்புறச் சிவந்த வாய் நினைந்து சோர்குவான். **(யுத் : 331)**

**குவளை பூத்த முளரி - நீல மலர்க(ளாகிய விழிக)ளைத் தன்னிடத்தே மலரப்பெற்ற தாமரை.** மொய்வளர் குவளை பூத்த முளரியின் முளைத்த. **(பா : 1217)**

**குவளை மலர்ந்த தாமரை - குவளைகள் மலர்ந்த தாமரைப் பூப்போலும் முகம்.** குலச்சனகி குவளை மலர்ந்த தாமரைக்குத் தோற்றுய். **(ஆ : 674)**

**குவளை வாட் கண் - குவளை மலர்போன்ற கருமணியைப் பொருந்திய ஒளியுள்ள கண்.** மாப்பிறழ் நோக்கினுர்தம் மணிநெடுங் குவளை வாட் கண் சேப்புற. **(யுத் : 2787)** **(பா : 1020)**

**குவால் - கூட்டம்.** குவாலறம் நிறுத்தற்கேற்ற காலத்தின் கூட்ட மொத்தார். **(கி : 99)**

**குவித்தல் - நிறைத்தல்.** குவித்தன. **(யுத் : 1471)**

**குவிதல் - ஒன்றுசேர்தல்.** குவை குலைய கடல் குவிய அலைப்பாள். **(ஆ : 1084)**

**குவியல் - தொகுதி.** குலமணிப் பூண்களின் குவியல். **(ஆ : 988)**

**குவை – 1. முகடு.** முலைக் குவையில் வைத்தனள். (சு : 555)

**2. கூட்டம். குவியல்.** மிடையுடற் குவைகள்வாய் நாடினர். (சு : 984) (யுத் : 574)

**3. மலை முதலியவற்றின் மேட்டுப் பாகங்கள்.** குவை குலையக்கடல் குவிய அலைப்பாள். (ஆ : 1084)

**4. குவிந்த தன்மை குவியல்.** துணை முலைக்குவை. (சு : 288) (சு : 555)

**5. மேடு. திட்டு** அவையனைத்தும் அறுத்து அகன் வேலையிற் குவையனைத்து மெனக் குவித்தான். (யுத் : 3857)

**குழந்தை – பிள்ளை. மகவு.** குழந்தையை உயிர்த்த மலடி. (சு : 554)

**குழந்தை வெண்மதி – வெள்ளைப் பிறைச் சந்திரன்.** குழந்தை வெண்மதிக் குடுமியன். (சு : 304)

**குழம்பு – குழம்பான பொருள்.** அக்கனை வரிசிலை மலையொடும் வாங்கித் தேய்த்த அக்குழம்பு உலர்ந்தில இலங்கையின் தெருவில். (யுத்: 522) தயங்கு வெங்குழம்பிடைத் தலைத்தலை மாருடி. (யுத் : 1590)

**குழம்பு படுதல் – குழம்பாக ஆதல்.** மூளையுந் தசையும் என்புங் குருதியும் நிணமு மூரிவாளொடுங் குழம்பு பட்டார் வாளெயிற் றரக்கர். (யுத் : 1592)

**குழல் – 1. உள்ளே துளையுள்ள பொருள்.** நெய் குழல். (பா : 309) குழலின் படி சுழல. (அ : 620)

**2. புல்லாங்குழல். வேய்ங்குழல்.** குழலின்படி சுழலும். (அ : 620) [பா : பே]

**3. இசைப்பாட்டு.** குழல்வண்டு தமிழ்ப் பாட்டிசைக்குந் தாமரையே. (கி : 29)

**4. கூந்தல்.** நிறம் பூத்த மஞ்சு பூத்த மலர் பூத்த குழலாள். (கி : 32)

**குழல்தல் – சுரிதல்.** வினைசெயக் குழன்ற அல்ல. (கி : 800)

**குழல் புரை மழை – கூந்தலை ஒத்த மேகம்.** கோள் புரை இருள் வாசக் குழல் புரை மழை காணாய். (அ : 706)

**குழல் வண்டு – கூந்தலில் உள்ள வண்டு.** மடந்தைமார் குழல் வண்டு பொம்மென விம்மவே. (அ : 241)

**குழலிசை – புல்லாங்குழலின் இசை.** குழலிசை மடந்தையர் குதலைக் கோதையர். (பா : 135)

**குழலின் பாடல் – புல்லாங்குழல் முதலிய குழல்களின் பாடல்.** கூறு பாடலும் குழலின் பாடலும். (பா : 87)

**குழவி – 1. அரைக்கும் கற்குழவி.** *தூநீர்க் குழவி முறைசுற்றி.* (*யுத் : 10*)

**2. குழந்தை.** *குழவி ஞாயிறு.* (*சு : 302*)

**குழவி ஞாயிறு – இளஞ்சூரியன்.** *குழவி ஞாயிறு குன்றிவர்ந்தனையன நெடு மோலி.* (*சு : 302*)

**குழவித் திங்கள் – பிறைமதி. பிறைமதிபோன்ற நெற்றி.** *பனித்தது குழவித் திங்களே.* (*பா : 1069*)

**குழற் கற்றை – குழற்றெருகுதி. மயிர்த்தொகுதி.** *மங்கைவார் குழற் கற்றை மழைக்குலம்.* (*அ : 640*) *செங்குழற் கற்றை சோரத் தெரிவையர் ஆற்ற.* (*யுத் : 2117*)

**குழற் கோவலர் – குழலையுடைய ஆயர்கள்.** *கொன்றையங் குழற் கோவலர் முல்லையுங் குறுகி.* (*அ : 723*)

**குழற் சும்மை – கூந்தலின் தொகுதி.** *வண்டு பாடிலாத் துரிசடை புரிகுழற் சும்மை சுற்றிய ஒரு சடை யுடையவள்.* (*யுத் : 1674*)

**குழற் பாரம் – கூந்தலின் தொகுதி.** *கருங்குழற் பாரம்.* (*பா : 1164*)

**குழற் புதுக் குதலையர் – குழலிசைபோல் இனிய புதுமையாகிய மழலைச் சொற்களையுடைய மகளிர்.** *கொழுங்குழற் புதுக் குதலையர் நூபுரக் குரலின் வழங்கும் மேகலைக் கிண்கிணி வயின்தொறும் மறையும்.* (*சு : 108*)

**குழற்றுதல் – பேச்சுத் தெளிவின்றித் தடுமாறுதல்.** *குரவையில் குழற்றுவாரும்.* (*சு : 283*) [*பா : பே*]

**குழறுதல் – பேச்சுத் தெளிவின்றித் தடுமாறுதல்.** (அண்) (கலா) **ஆரவாரித்தல்.** (வை. மு) *குரவையில் குழறுவாரும்.* (*சு : 283*)

**குழன்ற – சுரிந்த. சுருண்ட.** *வினை செயக் குழன்ற அல்ல விதிசெய விளைந்த.* (*கி : 800*) *குழன்ற பூங்குஞ்சியான்.* (*யுத் : 2758*)

**குழன்று – திரண்டு.** (வை. மு) **குழல்போலச் சுருண்டு.** (அண்) **நீண்டு.** *குழன்று நெய்த்திருண்டு.* (*சு : 546*)

**குழாங் குழாங் கொடு – கூட்டங் கூட்டமாகச் சேர்ந்து.** *கூடினர் அழுதனர் குழாம் குழாங் கொடே.* (*அ : 504*)

**குழாங் கொள்ளல் – கூட்டமாகக் கூடுதல்.** *குரீஇக் குழாத்திற் குழாங்கொடு குதித்து.* (*யுத் : 1401*) *யானைக் குலங்களும் தேரும் மாவும் குழாங் கொளக் குழீஇய வன்றே.* (*யுத் : 2396*)

**குழாம் – 1. கூட்டம்.** *அம்மழை குழைவுற முழங்கிடும் குழாங்கொள் பேரியே.* (*பா : 829*)

**2 திரட்சி** ஓடுங்கலில் பொற்குழாத் துறையுள் எய்தி. **(பா : 233)**

**3. திரள்.** வீரர் தங் குழாத்தினோடும் புக்கு. **(கி : 670)**

**குழி – பள்ளம்.** குழியெலாங் கழுநீராகி. **(பா : 976)** திடர் பட்டது பரவைக்குழி. **(யுத் : 3002)**

**குழித்தல் – குழிபடச் செய்தல்.** குழித்தனள் நிலத்தை அக்கொடிய கூனியே. **(அ : 150)**

**குழிதல் – ஆழ்ந்திருத்தல்.** குழி கண்ணுள். **(ஆ : 1080)**

**குழிப்பு – தொளைத்தல்.** ஈசன் வேலும் குழிப்பரிதாய மார்பு. **(யுத் : 2226)**

**குழீஇ – திரண்டு. ஒன்று கூடி.** கொடிக் குழீஇயின கொழுந்தெடுத் தெழுந்து. **(யுத் : 2492)**

**குழு – 1. திரள்.** இன்னே கொல்வென் இக்குழுவை என்னு. **(ஆ : 428)** குழுக்களாச் சென்று. **(யுத் : 2030)**

**2. சாமர்த்தியம்.** (கலா) முற்றிய குழுவினதுலகு. **(சு : 596)** [பா : பே]

**குழுக்கொளல் – கூட்டமாகக் கூடுதல்.** குழுக்கொண்டு கண்டார். **(யுத் : 1472)**

**குழுமல் (குழுமுதல்) – திரளுதல். கூடுதல்.** தேரும் வீரரும் குழுமி எங்கும். **(பா : 867)** அமிழ்துணக் குழுமுகின்ற அமரர். **(அ : 252)**

**2. குவிந்தெரிதல்.** எரி குழும மூட்டினன். **(பா : 1329)**

**3. நிறைதல். (திரளுதல்)** குங்கும மலைக் குளிர் பனிக் குழுமி யென்ன. **(பா : 547)**

**குழுமி – ஒன்றுகூடி.** குழுமிக் கொலைவாட் கண் அரக்கியர். **(யுத் : 1953)**

**குழுமின – திரண்டன.** கால்வரு தாரினம் குழுமின. **(ஆ : 400)**

**குழுவிலது – சாமர்த்திய முடையதன்று. (சு : 596)** [பா : பே]

**குழுவினது – திரண்டதாய்விடும்.** முழுவதுமிவ் வுருக் காண முற்றிய குழுவினதுலகு. **(சு : 596)**

**குழுவினர் – கூட்டமானவர்.** ஆள் இருங்குழுவினர் ஆரவாரமும். **(அ : 1090)**

**குழுவுதல் – தொகுதல். பொருந்துதல்.** குழுவு நுண்டொளை வேயினும். **(அ : 764)**

**குழை – 1. தளிர்.** குழைதொறும் கனகம் தூங்கும் கற்பகம். **(கி: 477)**

**2. இலை.** தெள்ளி தேங்குழை யாவையுந் தின்கில. **(பா : 852)**

**3. பெருந்தளிர்.** குழையும் கொம்பும் கொடியும். **(அ : 718)**

**4. குண்டலம்.** செம்பொன் செய் சுருளும் தெய்வக் குழைகளும் சேர்ந்து மின்ன. **(பா : 979)**

**5. காது.** குழை சென்றிறங்கி மறந்தரு செங்கணுய். **(சு : 432)**

**6. சேறு.**

**குழைக்கின்ற கவரி – இரட்டுகின்ற கவரி.** குழைக்கின்ற கவரி யின்றிக் கொற்றவெண் குடையுமின்றி. **(அ : 297)**

**குழைக்கின்ற குழைவு – வருந்துகின்ற வருத்தம்.** மகளிர் மாழ்கிக் குயிறலத் துக்கவென்னக் குழைக்கின்ற குழைவை நோக்கும். **(யுத் : 2423)**

**குழைத்தல் – 1. இரட்டுதல்.** குழைக்கின்ற கவரி. **(அ : 297)**

**2. இளகச் செய்தல்.** இடை வாணுதலால் இடைபோல் இடையே குழைவாய் எனதாவி குழைக்குதியோ. **(கி : 498)**

**3. வருத்துதல்.** ஆவி குழைக்குதியோ. **(கி : 498)** குழைக்கின்ற குழைவு. **(யுத் : 2423)**

**4. தளிர்த்தல்.** குழைத்த பூங்கொம்பனுள். **(பா : 1079)**

**குழைதல் – 1. மனமுருகுதல்.** உலகெலாம் ஒறுப்பான் கொண் டிறந்தமை அறிகிலராமெனக் குழையா. **(சு : 341)** குழைந்து வாழ்த்தி. **(அ : 298)**

**2. நெகிழ்தல்.** கலங் குழை தர. **(பா : 608)**

**3. மெலிவடைதல். தளர்தல்.** இது வாய்கொடு விளம்பிற் குழையும். **(சு : 122)**

**4. குன்றுதல். (உ.வி) (சு : 122)**

**5. தோற்றல். வருந்துதல். வாடுதல்.** குழலும் வீணையும் யாழு மென்றினையன குழைய. **(சு : 101)**

**6. ஒடுங்குதல்.** குழையுறு நெஞ்சன். **(யுத் : 895)**

**7. உள்ள நெகிழ்தல்.**

**குழைந்த நுண்ணிடை – தளருமியல்புள்ள மெல்லிய இடை.** குழைந்த நுண்ணிடைக் குவியிள வனமுலைக் கொம்பே. **(அ : 745)**

**குழைபடுதல் – குண்டலமாதல்.** பக்கமின்னு மணிமேரு சிகரம் குழைபட. **(ஆ : 9)** குழைபடு முகத்தியர். **(கி : 11)**

**குழைபடு முகத்தியர் – குண்டலம் பொருந்திய முகத்தையுடையவர்.** (கி : 11)

**குழைபுகு கமலம் – குண்டலங்கள் வரையிற் செல்லுகின்ற தாமரை மலர்போன்ற கண்கள்.** (வை. மு) **குண்டலம் சேர்ந்த தாமரை மலர்போலும் முகம்.** (அண்) *குழைபுகு கமலம் கோட்டினர் நோக்கும்.* (சு : 417)

**குழைபொரு கண் – குழை யென்னுங் காதணியை மோதுகின்ற கண்.** *குழைபொரு கண்ணினுள் குறித்தது ஓர்ந்திலம்.* (கி : 197)

**குழைபொரு கயற்கண் – குண்டலங்களைத் தாக்கும் காயல்மீன்போற் பிறழும் கண்.** *காதொடுங் குழைபொரு கயற்கண் நங்கை.* (பா: 609)

**குழைய நோக்குதல் – மனங்கனிந்து பார்த்தல்.** *அவர் முகங் குழைய நோக்கி.* (யுத் : 2118)

**குழையிடறும் வேற்கண் – குழைகளில் தாக்குவதுபோன்று தொடர்கின்ற வேல்போன்ற கண்.** *இருகுழை தொடரும் வேற்கண் இள முலை இழை நலார்.* (யுத் : 4223)

**குழையும் வாண்முகக் கொம்பனார் – துவண்டு நடக்கின்ற பூங்கொம்பு போன்ற மன்னன் தேவிமார்.** (அ : 928)

**குழையுரு மிளிருங் கெண்டை – குழையென்னுங் காதணியோடு பொருந்தி விளங்குகின்ற கெண்டை மீன்கள்போன்ற கண்கள்.** (பா : 1156)

**குழையுறு மெய்யன் – ஒடுங்கின உடலையுடையவன்.** *குழையுறு மெய்யன் வரன்முறை கூறலுற்றான்.* (யுத் : 895)

**குழைவு – 1. மன உருக்கம்.** *குழைவுடை உழையை வல்லை பற்றினை தருதியாயின்.* (ஆ : 791)

**2. தளர்ச்சி. வருத்தம்.** *நூறுகோல் கவசங் கீறி நுழைதலுங் குழைவு தோன்ற.* (யுத் : 1871)

**3. நைந்து இரங்குதல்.** *மகளிர் மாழ்கிக்குயில் தலத்துக்க தென்னக் குழைகின்ற குழைவை நோக்கும்.* (யுத் : 2423)

**குழைவுறல் – 1. அஞ்சிக் கலங்குதல்.** *கடல்கள் அஞ்சிக் குழைவுற.* (யுத் : 2225)

**2. தளர்தல். தளர்ச்சியடைதல்.** *அம்மழை குறைவுற முழங்கிடும் குழாங்கொள் பேரியே.* (பா : 829)

**குளகு – இலையுணவு.** *ஆனை நுகரக் குளகும் ஆன.* (சு : 701)

**குளங்கோடல் – குழிபறித்தல்.** (அண்) **நெற்றியைக் கொள்ளுதல். தலையைக் கொள்ளுதல். போர்க்களத்தை இரத்தவெள்ளமாக்குதல்.** (வை. மு) நிருதரோடும் களங் கோடற்குரிய செருக் கண்ணியக்கால் ஒரு மூவேங்கலந்த காலைக் குளங்கோடும் என்றிதுவும் உறுகோளே. (ஆ : 364)

**குளப்பு – கால் குளம்பு.** வளை குளப்பின் மணிநிற வாசியே. (சு: 1205)

**குளம் – தடாகம்.** மெல்லியலார் குடைய வண்டினம் கடிமலர் குடைவன குளங்கள். (பா : 546)

**குளன் – குளங்கள்.** குளனமர் கமலவேவிக் கோசலம். (யுத் : 4347)

**குளிகன் – திசைநாகம்.** சங்கபால குளிகாதி வாலெயிறு தந்த தீவிடம். (யுத் : 2014)

**குளித்த – முழுகிய.** தட மார்பிடைக் குளித்த அம்பு காட்டுதிரோ. (ஆ : 513)

**குளித்தல் – 1. புதைத்தல். பதிதல்.** குத்துவர் கைத்தலங் குளிப்ப. (கி : 284) (யுத் : 847)

**2. முழுகுதல்.** வெங்கணை...... குளிப்ப. (யுத் : 2039) (ஆ : 513) குளித்தன குடித்தன குருதி. (யுத் : 1428)

**3. அழுந்துதல்.** தீயிடைக் குளித்த இலங்கை மாநகர் மாளிகை நிகர்த்தன இரவும். (யுத் : 2450)

**குளிப்பு – முழுகுதல்.** இடைகுளிப் பருந்துயர்க் கடற்கோடு கண்டவன். (பா : 1390)

**குளிர் – குளிர்ச்சி.** மன்றற் குளிர்வாசம் வயங் கனல்வாய். (பா: 1251)

**குளிர்கயக் கோளி – குளிர்ச்சியைத் தருகின்ற பெரிய ஆலமரம்.** (பா : 959)

**குளிர்ப்பு – குளிர்ச்சி.** கொண்டல் கொண்டநீர் குளிர்ப்பில என்றவை குறுகான். (யுத் : 134) (பா : 1163)

**குளிறல் – முழங்குதல்.** கோளமை கணமுகில் குளிறல் ஒவின. (கி : 549) [பா : பே]

**குளிறுதல் – 1. கர்ச்சித்தல். முழங்குதல்.** குளிறு தேர் கடி தோட்டினன். (ஆ : 522)

**2. ஒலித்தல்.** வெங்குளிறு சோரி. (யுத் : 1007)

**குளிறு வான் – ஒலிக்குத் தன்மையுள்ள ஆகாயம்.** குளிறு வான்மதிக் குழவி. (அ : 736) [பா : பே]

**குளுகுளு கொதித்தல் – குளுகுளுவென்று கொதித்தல்.** பார்ப்பான் குண்டிகை இருந்த நீரும் குளுகுளு கொதித்தவன்றே. (யுத் : 595)

**குற்ற பாகு - வெட்டப்பட்ட பாக்கு.** (வை. மு) **பறிக்கப்பட்ட பாக்கு.** (கலா) குற்ற பாகு கொழிப்பவர். (பா : 60)

**குற்றம் - 1. துன்பம்.** குற்றம் யாவையும் கோளோடு நீங்குக. (யுத் : 756)

**2. மெய், வாய், மனம் என்ற மூன்றானும் வரும் களவு, பொய், காமம் முதலிய குற்றங்கள்.** கூற்றமில்லை ஓர் குற்றம் இலாமையால். (பா : 70)

**3. வீண்.** இருவருக்கும் வெம்போர் எய்திய இடையேயானோர் சான்றெனநிற்றல் குற்றம். (யுத் : 3675)

**4. தவறு.** நின்னையக் கருணையில்லோன் கொல்லுதல் செய்தானுகிற் கொடுமையாற் குற்றம் பேணி. (யுத் : 875)

**குற்றம் கூடும் - பிழை மிகும்.** நீ நின் உயிர்விடிற் குற்றம் கூடும். (சு : 472)

**குற்றம் பேணுதல் - செய்த பிழையைப் பாராட்டுதல். குற்றத்தை மனதிற் கொள்ளல்.** கொடுமையாற் குற்றம் பேணி பல்பெரும் பகழிமாரி வேரொடும் பறியதூறி வெல்லினும் தோற்றேன் யானே. (யுத் : 875)

**குற்றம் வீந்த குணம் - குற்றம் சிறிதுமில்லாத குணம்.** குற்றம் வீந்த குணத்தினெங் கோமகன். (ஆ : 816)

**குற்றமில் கேள்வியர் - குற்றமில்லாத கேள்வியை யுடையவர்.** குற்றமில் கேள்வியர் அன்பு கூர்ந்தவர். (யுத் : 391)

**குற்று - கீழ்ப்படுத்தி.** மின்குற்றொளிரும் வெயில் திக்கொடமைந்த வேலோய். (அ : 425)

**குற்றுதல் - குற்றிச் செருகுதல். உள்ளே ஊடுருவிப் பாயும்படி குற்றுதல்.** எற்றின குற்றின படை யாவும். (யுத் : 213)

**குற்றேவல் - சிறு தொண்டுகள். சிறு தொழில்கள்.** செய்ம்முறை குற்றேவல் செய்குதும். (அ : 671)

**குறங்கு - தொடை, துடை.** மங்கையர் குறங்கென வகுத்த வாழைகள். (அ : 127) குறங்கைத் தட்டும். (யுத் : 2175)

**குறங்கைத் தட்டுதல் - கால்களைத் தடவுதல்.** (யுத் : 2175)

**குறடு - ஒரு வாத்தியம். தோற்கருவி.** தழங்கு பேரியும் குறட்டொடு பாண்டிலும். (பா : 489) (யுத் : 2397)

**குற மங்கையர் - குறத்தியர்.** கல்லியங்குங் கருங் குற மங்கையர். (பா : 958)

**குறவர் - மலைவாசிகள்.** தேனுகு மடையை மாற்றிச் செந்தினைக் குறவர் முந்தி வானரோறு பாய்ச்சி ஐவனம் வளர்ப்பர் மாதோ. (பா : 931)

**குறள் - சித்திரக் குள்ளர்.** கூனொடு குறளும் சிந்தும். (பா : 880)

**குறளர் - சித்திரக் குள்ளர்.** கூனர் குறளர். (யுத் : 732)

**குறளனார் - வாமனமூர்த்தி.** அளந்துகொண்ட குறளனார். (யுத் : 2696)

**குறி - 1. பெயர்.** குறி நரம்பெறிவுற் றெழுவு தண்டமிழ் யாழினும் இனிய சொற்கிளியே. (அ : 764)

**2. சூடு முதலியவற்றின் அடையாளம். ஏவுவோன் குறிப்பு.** குறி கொளும் போத்து. (பா : 52)

**3. உவமை.** கோளொக்கு மென்னினல்லாற் குறியொக்கு மென்ன லாமே. (கி : 798)

**4. அடையாளம். தொய்யிற் குறி. தானியங்களுக்கு இடப்படுங் குறி.** குறியழிந்தன குங்குமத் தோள்களே. (பா : 71) குறியும் அறிகின்றிலர். (யுத் : 1942)

**5. இயல். நிலை.** ஏழை மூரல் முறுவற் குறிகாட்டி. (யுத் : 8)

**6. சபை. கூட்டம்.** குன்று சுற்றிய மத கரிக்குல மன்ன குறியார். (யுத் : 2489)

**7. குறிப்பு. கால எல்லை.** (வை. மு) பண்டு வருங்குறி பகர்ந்து. (பா : 715)

**8. பழக்கம்.** நிருதர் நிற்பதோர் குறி நனியுளதென உலகங் கொள்ளுமோ. (யுத் : 379)

**9. குறிக்கப்படுவது.** மற்றெக் குறியினுள்ளனவும் எதிர்ந்திலர் திரிந்தார். (கி : 856)

**10. உடல் தோற்றக் குறிகள். சின்னங்கள்.** சலக்குறி யிலரென அருகு சார்ந்தனர் புலக்குறி அறநெறி பொருந்த நோக்கினர். (யுத் : 349)

**11. நிலை.** குன்று சுற்றிய மதகரிக்குல மன்ன குறியார். (யுத்: 2480)

**12. தழும்பு.** புண்ணினொடு குறிகள் புள்ளியென. (யுத் : 3426)

**13. இலக்கு.**

**14. கருத்து.** குறி ஒப்பக் கூறிற்றுமோ. (கி : 798)

**குறி உய்த்தல் - 1. வீடு திரும்புதற்குரிய குழலோசை அடையாளம் தெரிவித்தல்.** கோலக்கொண்ட மன்மத ஆயன் குறியுய்ப்ப. (பா : 1008)

2. **கூடுதற்குரிய இடத்திற் செலுத்துதல்.** (பா : 1008)

3. **அறக்கொள்கை.** (அவ்) **பழக்கம்.** (வை. மு) **நற்குறி.** (கலா) நிருதர் நிற்பதோர் குறி நனியுளதென உலகங் கொள்ளுமோ. (யுத் : 379)

**குறிக்கும் கொம்பினன் – ஊதும் கொம்பினையுடையவன்.** கொட்டிய துடியினன் குறிக்கும் கொம்பினன். (அ : 1001)

**குறிக்கொள் - ஊன்றிக்கேள்.** குறிக்கொள் நீ அலம் பொற்றுரவனே அரசென்றலும். (கி : 330)

**குறிக்கொள்ளுதல் – 1. கவனித்துக்கொள்ளுதல் பாதுகாத்தல்.** மற்றுள சுற்றந்தமைக் குறிக்கொளும் என்று கூறி. (யுத் : 2118) கொல்லுமால் அவன் இவனைக் குறிக்கோடி கோடாதாய். (யுத்: 1576)

2. **கருத்திற் கொள்ளுதல்.** குறிக்கோடி கோடாதாய். (யுத்: 1576) வெறி கொள் பூங்குழலினளைக் குறிக்கொடு காத்தி. (ஆ : 428) முற்றுங் கொல்ல மனத்துக் குறிக்கொண்டான். (ஆ : 743)

3. **ஊன்றிக் கேட்டல்.** குறிக்கொள் நீ. (கி : 330)

**குறிக்கோள் – அறிவு. கிரகிக்குந் தன்மை.** குறிக் கோளில்லா இளங்கோ. (ஆ : 364)

**குறி காட்டல் – 1. இயல்பைக் காட்டுதல்.** முத்தே மூரன்முறுவற் குறிகாட்டி உயிரை அழிப்பாயோ. (யுத் : 8)

2. **குறிப்பைக் காட்டிவிடல்.** எழிற்குறி காட்டி. (யுத் : 15)

**குறிகொள் கோழி – தலைவன் குறிப்பையே தம் குறிப்பாகக் கொள்ளும் கோழிகள்.** குறிகொள் கோழி சிவல் குறும்பூழ். (அ : 806)

**குறி கொள்ளுதல் – ஒரு பொருளாக மதித்தல்.** குறி கொளா மத வேழக் குழுவனுர். (ஆ : 394)

**குறிகொளும் போத்து – சூடு முதலிய அடையாளங்களைக்கொண்ட கடா.** வானிட்ட போர்கள் குறிகொளும் போத்திற் கொல்வார். (பா : 52)

**குறி கோளுறல் – மனத்தில் எண்ணங்கொள்ளுதல்.** அரக்கர் நேர் கொலை கோடலின் மன்குறி கோளுறுமேல். (யுத் : 3464)

**குறிஞ்சி – 1. பண்வகையுள் ஒன்று.** கொடிச்சியர் எடுத்த இன் குறிஞ்சி கனிந்த பாடல் கேட்டு. (அ : 760)

2. **குறிஞ்சி நிலம்.** நெய்தல் வேலி குறிஞ்சி நிகர்த்ததால். (யுத் : 646)

**குறிஞ்சிக் கனிந்த பாடல் – குறிஞ்சிப் பண் அமைந்து கனிந்த பாடல்.** (அ : 760)

**குறித்தல் - 1. ஊதுதல்.** குறிக்கும் கொம்பினன். (அ : 1001)

**2. நோக்குதல்.** படைஞரைக் குறித்துச் சொன்னான். (ஆ : 434)

**3. கருதுதல். எண்ணுதல்.** குறித்த வாற்றால் வேற்றருங் கருங்கட் சீதை மெய்யருள் புனையே னென்றால். (ஆ : 727)

**4. ஓசையை எழுப்புதல்.** (வை. மு) குறி நரம்பெறிவுற்று. (உ. வி) (அ : 764) [பா : பே]

**5. கூறுதல்.** குறித்தது அச்சமோ. (யுத் : 113) குறித்தான். (யுத் : 59)

**குறித்துச் சொல்லல் – வரையறுத்துக் கூறுதல்.** உன்னைக் கொல்கிலன் குறித்துச் சொன்ன சொல்லளவு. (சு : 471)

**குறிப்பது – சொல்லுவது.** குறிப்பதென் காமத்தின் திறத்தையுங் கடந்தது சிற்றத்தின் தகைமை. (சு : 466)

**குறிப்பறிந்தொழுகல் - உள்ளக்குறிப்பை அறிந்து அதன்படி ஒழுகல்.** வானுயர் தோற்றத்து அன்னான் குறிப்பறிந்தொழுகல் மாதோ கோதிலர் ஆதல். (கி : 434)

**குறிப்பின் வழி நிற்றல் – மனக்கருத்தின்படி நடத்தல்.** வெறுப்பன ிளைத்தலுறும் இத்தொழிலை விட்டு என் குறிப்பின்வழி நிற்றி உயிர் கொண்டுழலின் என்றான். (ஆ : 760)

**குறிப்பு – 1. உள்ளக்குறிப்பு. மனக்கருத்து, எண்ணம்.** குறிப் பெலாம் கண்டுணர்ந்து பெயர்கின்றேன். (அ : 1023) குறிப்பினி யுணர்குவ துளதன்றால். (யுத்: 210) என் வந்த குறிப்பு. (யுத்: 1723)

**2. அடையாளம்.** குறிப்பறிந் துணர்தல் தேற்றார். (பா : 979)

**குறியகை – சிறியகை.** நெடியவன் குறியகை நீரில் நீட்டினான். (பா : 452)

**குறியவன் – அகத்தியன்.** குறியவன் புனலெலாம் வயிற்றிற் கொண்ட நாள். (அ : 978)

**குறியழிதல் – 1. அடையாளக் குறியழிதல்.**

**2. தொய்யிற் குறியழிதல்.** குறியழிந்தன குங்குமத் தோள்களே. (பா : 71)

**குறியன் – குறியவன்.** நெடியன் குறியன் எனும் நீர்மையினான். (யுத் : 2342)

**குறியாய் – மனமொழி மெய்களிற் குறித்தற்கரியாய். எவர்க்கும் வரையறுத்து அறியமுடியாதவனே. குறித்து அறிய ஒண்ணாதவனே.** குறியாய் குணமேதுமிலாய். (யுத் : 234)

**குறுகக் காணுதல் – நெருங்கக் காணுதல்.** கூற்றையுங் கட்பொறி குறுகக் காண்பரேல். (யுத் : 482)

**குறுகின கவசர் – நெருங்கிவந்த படைத்தலைவர்.** குறுகின கவசரு மின்போல் குரை கழலுரகரும். (சு : 766)

**குறுகுதல் – 1. அடைதல். வந்துசேர்தல்.** கூனி சூழ்ச்சியால் அரசிழந்து உயர்வனங் குறுகி. (யுத் : 121) குறுகுதும். (அ : 675) குறுகுதிர். (அ : 833) நின்னைக் காணக் குறுகினன். (அ : 656) குறுகா முன்னம். (ஆ : 1013)

**2. ஒடுக்குதல்.** இனிக்குறுகுவாய் என்றாள். (சு : 596)

**3. நெருங்குதல்.** கூற்றையுங் கட்பொறி குறுகக் காண்பரேல். (யுத் : 482) கூற்றினார் குறுக வந்தார். (யுத் : 2965)

**4. சிறுகுதல்** (அண்) கூற்றையுங் கட்பொறி குறுகக் காண்பரேல். (யுத் : 482)

**குறுகுதிர் – வாருங்கள்.** கூயள் அன்னை குறுகுதிர் ஈண்டு. (அ : 833)

**குறுங்கண் மலை – சிறிய கண்களையுடைய யானை.** திரள் பொற்கைக் குறுங்கண் மலைபோற் குமரர். (ஆ : 3)

**குறுங்கால் – குறிய கால்கள்.** சிற்றியல் குறுங்கால் ஓரி. (யுத்: 3601)

**குறுந்தறி – குறிய தூண்கள்.** நெடுங்கழை குறுந்தறி நிறுவி. (அ: 780)

**குறுந்திவலை – சிறிய நீர்த்துளிகள்.** கடலின் நெடுந் திரைவாய்த் தென்றல் தூற்றும் குறுந்திவலை. (யுத் : 5)

**குறுந்துகள் – சிறிய துகள்.** கூம்பன் மாமரமெரிந்துகக் குறுந்துகள் நெருக்கச் சாம்பராயின தடவரை. (யுத் : 1155)

**குறுந்துணி – குறிய துண்டுகள்.** கெடுங்கழை குறுந்துணி நிறுவி. (அ : 780) [பா : பே]

**குறுநகை – புன்சிரிப்பு.** மத்தக மணிக்குறுநகைச் சனகன் மான்மேல். (கி : 527)

**குறுநரி – குள்ளநரி.** குடலும் ஈரலும் கண்ணுமோர் குறுநரி கொள்ள. (யுத் : 2314)

**குறும்பர் – குறுநில மன்னர்.** அரசனெதுங்கத் தலையெடுத்த குறும்பர் போன்றதரக் காம்பல். (பா : 638) [பா : பே]

**குறும்பு – 1. குறுநில மன்னர்.** குறும்புபோன்ற தரக்காம்பல். (பா : 638)

**2. பகை. சிறுபகை.** சினக்குறும்பெறிந்து எழுகாமத் தியவித்து. (அ : 841) இருகுறும்பென்ன நின்ற இசையினார். (பா : 755) [பா : பே]

3. **அரண்.** இரு குறும்பெறிந்து நின்ற இசையினர். (சு : 755)

4. **போர்.** பொருகுறும் பேன்று வென்று. (சு : 755)

5. **குறும்பர்கள்.** குறும்புடை இலங்கை. (யுத் : 725)

6. **குற்றம்.** முக்குறும்பற வெறிந்த வினைவான் முனிவன். (ஆ : 3)

7. **சிற்றூர். ஊர்.** (உ. வி) குறும்புடை இலங்கைக் குன்றம். (யுத் : 725)

**குறும்புடை இலங்கை – குறும்பர்களையுடைய இலங்கை.** (வை. மு) **சிற்றூர்களையுடைய இலங்கை** (கலா) (யுத் : 725)

**குறும்பூழ் – காடை.** நாழி சிவல் குறும்பூழ். (அ : 806)

**குறுமுறுவல் – புன்சிரிப்பு.** மூரன்மென் குறுமுறுவலொத் தரும்பின முல்லை. (கி : 479)

**குறுமுனி – அகத்திய முனிவன்.** குறுமுனிப் பெயரிஞன் நிறை தவர்க் கிறை. (யுத் : 99) குறுமுனி குடித்தவேலை. (சு : 15)

**குறுமுனிப் பெயரிஞன் நிறை தவர்க்கிறை – குறுமுனி என்னும் பெயரினையுடைய நிறைந்த தவத்தினர்க்கு இறைவனான அகத்தியன்** (யுத் : 99)

**குறுமை – சிறிதாயிருக்குந்தன்மை. சிறுமைத் தோற்றம்.** (அண்) **சிறுமை.** குறுமை கண்டவர் கொழுங்கனலென்னினுங் கூசார். (யுத் : 548) குறுங் குரங்கு. (சு : 755) குறும்பனித் திவலை. (யுத் : 325)

**குறுமை கண்டவர் – குறியவராகக் காணப்பட்டவர்.** (யுத் : 548)

**குறை – 1. காரியம் செய்யவேண்டிய செயல். வேண்டத்தக்க பொருள்.** (வை. மு) இமையவர் எங்கள் குறை முடிந்ததென் றுார்த்திட. (அ : 52)

2. **துண்டம்.** இருட்குறை. (சு : 153)

3. **ஆற்றிடைக் குறை.** குறையெலாஞ் சோலையாகி. (பா : 976)

4. **குறைத்துண்ட மாக்கல்** கொன்று குறைத்துக் குடாரரத் தின்மின் என்று தெழித்தார். (சு : 482)

5. **குற்றம்.** வஞ்சகர் வழியோடும் குறையவென்று இடர்களை வென் என்றனை குறை முடிந்தது. (கி : 511)

**குறை ஆக்கை – கவந்தம்.** ஆடின அறுகுறை அரக்கர் ஆக்கையே. (யுத் : 2941) [பா : பே]

**குறை கறித்திரள் – நறுக்கப்பட்ட கறிக்குவியல்.** இரும்பு போழ் குறை கறித்திரள். (பா : 68)

**குறை கொள்ளல் – விண்ணப்பஞ் செய்தல். வேண்டுதல்.** குலத் தோடற முடியேல் இதுகுறை கொண்டனன் என்ருன். (பா : 1371)

**குறைத்தசை – தசைக்குறை. மாமிசத்துண்டம்.** கொழுங்குறைத் தசையென ஈர்த்துக்கொண்டது விழுங்குறு பேயென. (கி : 456)

**குறைத்தல் – 1. அறுத்தல்.** கொன்று குறைத்துக் குடராரத் தின்மின். (சு : 482)

**2. அழித்தல்.** அக்குரைகடல் வறள்படக் குறைத்தான். (ஆ : 520)

**குறைத்தலே – கவந்தம். தலேயற்ற உடற்பொறைகள்.** குறைத்தலே மிறைத்துக் கூத்து நின்ருடின. (பா : 472) (யுத் : 1791)

**குறைத்தழித்தல் – அறுத்து அழித்தல்.** குழைக்காதுங் கொடிமூக்குங் குறைத்தழித்தால் அங்கணரசே ஒருவர்க் கழியாதோ அழகு. (ஆ : 343)

**குறைதல் – 1. மெலிதல்.** கணவன் குறையக் குறைவாள். (அ : 348)

**2. வருந்துதல்.** கோனே எய்தினுர் குறையுஞ் சிந்தையார். (அ : 1158)

**3. உடல்வன்மை குறைதல்.** குறைந்தன கருங்குயில். (கி : 514)

**4. சிறுமைப் படுதல்.** கோமானுலகுக் கொருநீ குறைகின்ற தென்னே. (ஆ : 712)

**5. ஒடுங்குதல்.** முனிவீரன் கொற்றப் போர்ச்சிலேத் தொழிற்குக் குறையுண்டாம் எனக் குறைந்தான். (சு : 318)

**6. அழிதல்.** உன்னுல் அன்னுர் குறைவது சரதம்கோவே என்றனர். (சு : 460)

**7. பின்வாங்குதல்.** யாவரே எங்கோன் என்பதறிந்து பின்னேத் திறம்புவார் குறையினல்லால். (சு : 473)

**8. இறத்தல்.** ஐம்பொறி குறைமக குறையினும் கொடுப்பராமுயிர். (அ : 488)

**9. அடங்குதல்.** குரல் குறைந்தபோல் குறைந்தன குயில்கள். (கி : 489) . குறைந்தான். (சு : 318)

**10. தோல்வியுறல்** கொச்சைத் துன்மதி எத்தனே போரிடைக் குறைந்தான். (யுத் : 124)

**குறை நேர்தல் – வேண்டுதல்.** வானேர் குறைநேர அரக்கியாகித் தோன்ரு நின்ருள். (சு : 66)

**குறைபடுத்தல் – அழித்தல்.** அம்பின் வனமென்னும் கோளின் வனவன் குழுவினிற் குறைபடுத்தான். (ஆ : 533)

**குறைமக குறையினும் - (ஐம்பொறிகளில்) குறைபாடுடைய ஒரு மகன் இறந்தாலும்.** (அ : 488)

**குறை முடித்தல் - குறையைப் போக்குதல்.** *முற்றுவர் உறு குறை முடிப்பர்.* (யுத் : 380)

**குறை முடிதல் - 1. குறை தீர்தல்.** *இமையவர் எங்கள் குறை முடிந்த தென்றுரைத்திட.* (அ : 52)

**2. குற்றஞ் செய்தல்.** *குறை முடிந்தது விதியினுல்.* (கி : 511)

**குறை முற்றுதல் - குறையை ஒழித்தல்.** *இமையோர்க் குற்ற குறை முற்ற.* (யுத் : 11)

**குறையிரந்து நிற்றல் - குறைகூறி இரந்து நிற்றல்.** *நின் தளிக்கும் தனிக்குடையின் நிழலொதுங்கிக் குறையிரந்து நிற்பநோக்கி.* (பா : 325)

**குறையுயிர் - குற்றுயிர்.** *குறையுயிர் சிதற.* (சு : 776)

**குறையெலாம் சோலையாகி - ஆற்றிடைக் குறையாவும் சோலையாகி.** *குறையெலாம் சோலையாகிக் குழியெலாம் கழுநீராகித் துறையெலாம் கமலமான சோணையாறடைந்ததன்றே.* (பா : 976)

**குறைவது - வலியழிவது.** *உன்னுல் அன்னுர் குறைவது சரதம்.* (சு : 462)

**குறைவறுதல் - நிரம்பியிருத்தல்.** *வன்பழியாலே குறைவற்றேனல் லேனேயானே.* (அ : 876)

**குறைவு - குறைபாடு.** *வெந்த ஊன் குறைவில் நற்சகடம்.* (யுத்: 1324) *குறைவிலாக் குணங்கள்.* (யுத் : 2798)

**குன்றக்கல் - மலையாகிய கல்.** *வயிரக் குன்றக் கல்லொக்கும் நெஞ்சில் தங்காது.* (பா : 413)

**குன்றம் - மலை.** *மன்றல் நாறு குன்றமே.* (கி : 237)

**குன்றரிந்தவன் - மலைகளின் சிறகுகளை அறுத்த இந்திரன்.** (யுத் : 4085)

**குன்றன்ன கொள்கையான் - மலைபோன்று சலியாத கொள்கை யுடையவன். கும்பகருணன்.** (யுத் : 1258)

**குன்றி - குன்றிமணி.** *குன்றி வெங்கட் குதிரை.* (யுத் : 3700; *முத்தினம் குன்றியிற்றுேன்ற.* (யுத் : 2305)

**குன்றிணைத்தனைய உயர் குவவுத் தோளினுன் - இரண்டு குன்றுகளை இணைத்து வைத்தாற்போன்று உயர்ந்து திரண்ட தோள்களையுடைய இராமன்.** (யுத் : 4251)

**குன்றிவர்ந்த குழவி ஞாயிறு** – உதயகிரியின்மேல் ஏறினாற்போன்ற இளஞாயிறு. *குழவி ஞாயிறு குன்றிவர்ந்தனையன குருமணி நெடுமோலி.* (சு : 302)

**குன்றி வெங்கட் குதிரை** – குன்றி மணிபோன்று சிவந்த செவ்விய கண்களையுடைய குதிரைகள். (யுத் : 3700)

**குன்றின் தூறு** – மலைத்தூறு. மலைப்புதர்கள். *குன்றின் தூற்றினின் எழுப்பியாண்டுத் தொகுத்தென.* ((சு : 816)

**குன்றின்வீழ் குரீஇக் குழாம்** – மலையின்மேல் வீழ்கின்ற குருவிக் கூட்டங்கள். *குன்றின்வீழ் குரீஇக் குழாத்திற் குழாங்கொளக் குறித்துக் கூடி.* (யுத் : 1401)

**குன்றின்வீழ் தடித்து** – மலைகளின்மீது விழுகின்ற இடி. *முதுகில் தைத்த வாளிகள் இன்றுள குன்றின்வீழ் தடித்தின்.* (யுத் : 128)

**குன்றினை வலஞ்செய் தேரான்** – மேரு மலையைப் பிரதக்ஷிணஞ் செய்கின்ற தேரையுடைய சூரியன். *கங்கை சேர்ந்தான் குன்றினை வலஞ்செய் தேரான் குடகடல் தோன்றுமுன்னர்.* (யுத் : 4224)

**குன்று** – 1. மலை. *குன்றுபோல நின்றிரு கைகூப்பினான்.* (கி : 114)

2. மேருமலை. *குன்றுசூழ்வான் மகன்.* (யுத் : 452) (யுத் : 4224)

3. சிறுமலை. *குன்றின் எம்மருங்கினிட்ட அணிகலம்.* (சு : 523)

**குன்று குன்றிறக் குலவு தோள்** – மலையும் உவமையாகாமற் பின்வாங்குமாறு விளங்குகின்ற தோள். (அ : 922–a)

**குன்று சூழ்வான்** – மேருமலையைச் சுற்றிவருகின்ற சூரியன். (யுத்: 452)

**குன்று சூழ்வான் மகன்** – சூரியன் மகன். சுக்கிரீவன். (யுத் : 452)

**குன்றுதல்** – 1. இல்லையாதல். *ஆசடை குன்ற.* (யுத் : 790)

2. தவறுதல். *இது குன்றுமேல் பொன்றும் நீயும் உலகமும் பொய்யிலாய்.* (யுத் : 4163)

3. குறைதல். கெடுதல். (உ. வி) (யுத் : 4163)

**குன்றுபோற் குணத்தான்** – மலைபோல் நற்குண முடையவன். விசுவாமித்திர முனிவன். *அருந்தவ முனிவரோடிருந்த குன்றுபோற் குணத்தான்.* (பா : 476)

**குன்றும் பழி** – இழிந்த பழி *என்னுரையும் குன்றும் பழிபூணமல் காவாய்.* (அ : 336)

**குன்றுறழ் வரிசிலை** – மலையை ஒத்த அந்தக் கட்டமைந்த வில். *அக்குன்றுறழ் வரிசிலை கொணர்மின் ஈண்டென.* (பா : 751)

**குன்றுறழ் நெடும்படை - மலையை ஒத்த பெரிய சேனை.** வானரக் குன்றுறழ் நெடும்படை. (கி : 704)

**குனித்தல் - 1. கூத்தாடுதல்.** நாம மின்றெனக் குனித்தனர். (பா: 499) குனிப்ப ஒத்தன. (யுத் : 1784.)

**2. வளைதல். வளைத்தல்.** குனித்த கோலப்புருவங்கள். (யுத்: 3943) (உ. வி) (ஆ : 547) குனிசிலை. (பா : 427)

**3. அஞ்சுதல்.** கூற்றினும் குனிக்க. (ஆ : 547)

**குனித்தாடுதல் - குதித்தாடுதல்.** (வை. மு) அரமங்கையர் குனித் தாடினர். (யுத் : 3039)

**குனிதல் - வளைதல்.** குனியும் வார்சிலைக் குரிசிலே. (யுத் : 4110) சுரமங்கையர் குனிந்தாடினர். (யுத் : 3039) [பா : பே]

**குனிப்படா நின்ற வில் - வளைந்த வில்.** குனிப்படா நின்ற வில்லால் ஒல்லையில் நூறிக் கொன்றான். (யுத் : 3684)

**குனிவரு நுதலி - வளைந்த நெற்றியையுடையவள்.** துனிவரு நலத் தொடு சோர்கின்றாளொரு குனிவரு நுதலிக்கு. (பா : 1096)

## கூ

**கூ - 1. பூமி.** வான் புகழினர் இன்று காறும் கூக்காத்தனர். (அ: 943)

**2. கூவுதல்.** குயில்கள் கூ ஒடுங்கின. (கி : 40) வெய்ய கூற்றைக் கூக்கொண்டு குத்துண்டு அன்னான் குலத்தொடு நிலத்தனுதல் போயக் கண்டு. (யுத் : 2877)

**கூக்கொள்ளுதல் - கூவிக்கொள்ளல்.** வெய்ய கூற்றைக் கூக்கொண்டு. (யுத் : 2877)

**கூகை - கோட்டான்.** தழைபுரையுஞ் சிறைக் கூகை. (ஆ : 203) அற்காக்கை கூகையைக் கண்டஞ்சினவாம் என அகன்றார். (பா : 772)

**கூசிக்கூசி - மேன்மேலும் கூச்சமுற்று.** ஆசைப்பாடும் நாணும் அடர்த்திடக் கூசிக்கூசி. (சு : 431)

**கூசுதல் - 1. பின்வாங்குதல்.** குருதிவாய் நின்றொழுகவும் கூசலார். (யுத் : 1039)

**2. நாணுதல்.** குளிக்கு நீருங் கொதித்தெழக் கூசுமால். (சு : 303)

**3. மிக அஞ்சுதல். அஞ்சிப் பின்வாங்குதல். பயப்படுதல்.** கூசுவது மானுடரை. (யுத் : 64) (சு : 511) கூசி ஆவி குலைவுறு வானையும். (சு : 428) கூசலார். (ஆ : 370) கூற்றும் கூச. (யுத் : 1398) (யுத் : 1594) கூசின. (யுத் : 1521)

4. **பணிவுதோன்ற நடத்தல்.** குறுமை கண்டவர் கொழுங் கன லென்னினுங் கூசார். (யுத் : 548)

5. **தயங்குதல்.** கொண்டு நின்றானைக் கொல்லக் கூசினேன். (யுத் : 2846)

**கூட்டம் – 1. புணர்ச்சி. மணம்.** காந்தர்ப்பம் என்பதுண்டாற் காதலிற் கலந்த சிந்தை மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும் மறைகளே வகுத்த கூட்டம். (ஆ : 178)

2. **கூட்டுறவு** குவாலறம் நிறுத்தற்கேற்ற காலத்தின் கூட்ட மொத்தார். (கி : 99)

3. **ஒருங்கு கூடுதல்.** கூட்டமுற்றிருந்த வீரர். (கி : 100)

**கூட்டர் – தொடர்புடையவர்.** உன் கூட்டராம் அரக்கர் தம்மைக் கொன்று. (ஆ : 896)

**கூட்டறுதல் – ஒருசேர அழிதல்.** கொற்றமும் வீரமும் வலியுங் கூட்டற. (யுத் : 31)

**கூட்டிக்கொள்ளல் – சேர்த்துக்கொள்ளல்.** கூடுமேற் கூட்டிக்கொண்டு நின்றது புரிதும். (யுத் : 1345)

**கூட்டு - 1. தொடர்ச்சி** புரவிக் கூட்டற. (ஆ : 484)

2. **இசைவு (அண்) நட்பு. (கு)** குன்றோங்கு தோளார் குணம் கூட்டிசைக் குப்பையென்ன. (பா : 163)

3. **துணை.** கூட்டொரு வரையும் வேண்டாக் கொற்றவ. (கி : 318)

4. **ஒப்பு.** கொழுந்துவிட் டமுன்றெரி மடங்கல் கூட்டற. (யுத் : 1677)

5. **முட்டு.** குன்று கூட்டற மிதித்தனர். (யுத் : 3818)

**கூட்டுதல் – 1. திரட்டல்.** கூட்டினூர் படை பாகத்தின் மேற்படக் கொன்றாய். (யுத் : 531)

2. **சேர்த்தல்.** கூட்டினன் உயிரை விண்ணோர் குழாத்திடை. (யுத் : 2531)

**கூட்டுரு – கூடு உரு. பொருந்திய உருவம்.** தந்தையார் கூட்டுருக் கண்டன்ன தன்மை கூடினன். (யுத் : 4254)

**கூடம் – 1. சம்மட்டி.** வெந்த வல்லிரும்பிடை நெடுங்கூடங்கள் வீழ்ப்ப. (கி : 282) கூடங்கள். (யுத் : 1270) கம்மியர் கூடம். (யுத் : 1416) இரும்பு கூடம் உற நீறுபட்டது நிகர்த்தால். (யுத் : 2032)

2. **சிகரம்.** தாம கூடத் திரை தீர்த்த சங்கமும். (கி : 828)

3. **கொட்டாரம். யானைகட்டுமிடம்.** சிந்துரக் களிறு கூடம் புக்கெனக் கோயில் சேர்ந்தான். (யுத் : 1223)

4. **சரக்கூடம்.** சரங்களோடு கோமுனி இருக்கையோர் கூட மாக்கினன். (பா : 467)

5. **மணப்பந்தர்.** (கலா) **மண்டபம்.** (அண்) பொன்மலை ஒத்தது அப்பொருவில் கூடமே. (பா : 1288)

6. **மாளிகை.** பளிக்கு வேதிகைப் பவழத்தின் கூடத்து. (சு : 231)

7. **மறைவு.** நாம கூடப் பெருந்திசை. (கி : 828)

8. **தொகுதி.** ஏமகூடச் சுடர்மணி. (கி : 828)

**கூடல் – 1. புணர்ச்சி. கூடுதல்.** ஊடல் கண்டவர் கூடல் கண்டிலர் நையும் மைந்தர்கள் உய்யவே. (அ : 242)

2. **கூடற் சுழி.** (பா : 1079)

**கூடல் இழைத்தல் – கூடற் சுழி இடுதல்.** ஒருத்தி கூடலை இழைத் தனள். (பா : 1079)

**கூடாதார் – பகைவர்.** கூடாதாரில் திரிகின்ற நீயும் ஆகம் குளிர்ந் தாயோ. (கி : 27)

**கூடிய நறை – மிகுதேன்.** கூடிய நறை வாயில் கொண்டன. (அ : 702)

**கூடு – 1. உடல்.** பாடலால் ஊடு வந்துகூட இக்கூடு வந்து கூடினேன். (ஆ : 65)

2. **உறை.** கூடுறை நீக்கிய குருதி வாட்களும். (கி : 453)

3. **கூண்டு.** கொங்கு கூற்றினுக் காவதோர் கூடுபோல்வ. (யுத் : 1969) சிலம்பிதன் வாயில் கூர்நூல் இயையக்கூடு இயற்றி. (யுத் : 2618)

**கூடுகின்றிலர் – கூடாமல்.** கூடுகின்றிலர் கொடிச்சியர் தம் மனங் கொதிப்ப ஊடுகின்றனர். (அ : 748)

**கூடுதல் – 1. வந்து சேர்தல்.** பிற்கூடிய சேனை. (சு : 583) கூடுமேல் கூட்டிக்கொண்டு. (யுத் : 1345) குற்றம் கூடும். (சு : 472) கூற்றம் கூடும். (சு : 472) [பா : பே]

2. **புணர்தல்.** உயிர் உருகும் நோய் கெடக் கூடுகேனே. (பா : 1077)

3. **மிகுதல்.** குற்றம் கூடும். (உ. வி) (சு : 472)

4. **நிகழ்தல்.** முற்கூடின கூறினன். (சு : 579)

5. **ஒத்தல்.** விற் கூடு நுதல் திரு. (சு : 583)

6. **பொருந்துதல்.** *தந்தையார் கூட்டுருக் கண்டன்ன தன்மை கூடினுன்.* (யுத் : 4254)

7. **பெரிதாதல்.** *கடலும் மண்ணும் உட்படக் கூடி.* (சு : 25)

8. **குழுமுதல்.** *மாக்கூடு படர்வேலே.* (யுத் : 1580)

9. **அடைதல்.** *தந்தையார் கூட்டுருக் கண்டன்ன தன்மை கூடினுன்.* (யுத் : 4254)

**கூடும் – பொருத்தமானது.** *குரங்கென்ருற் கூடுமன்றே.* (யுத்: 2981)

**கூடுறை நீக்கிய வாள் – உறையினின்றும் உருவிய வாட் படை.** *கூடுறை நீக்கிய குருதி வாட்களும்.* (கி : 452)

**கூத்தன் – கூத்தாடி.** *குலவரை கூத்தனில் திமிதமிட்டு.* (யுத் : 661)

**கூதாளம் – ஒரு செடி. கார்காலத்து மலர்வது.** *கோடியர் தாளங் கொட்டல் மலர்ந்த கூதாளம் ஒத்த.* (கி : 476)

**கூதாளி – ஒருவகைப் பூ.** *சிங்கலில் சிறு கூதாளி.* (கி : 783)

**கூதிர் – 1. சரத்ருது. ஐப்பசி கார்த்திகை மாதங்கள்.** *இதனை நீக்கிக் கூதிராம் பருவந்தன்னைக் கொணருதிர் விரைவின் என்ருன்.* (ஆ : 660)

2. **குளிர்ச்சி.** *கூதிர் கால் நெடு மழை.* (யுத் : 1514)

**கூதிர்க்கால் – வாடைக்காற்று.** *கூதிர் வெங்கால்.* (கி : 451)

**கூதிர் வாடை – குளிர்ந்த காற்று.** *கூதிர் வாடை வெங்கூற்றினை நோக்கினன்.* (ஆ : 1052)

**கூந்தல் – 1. புற மயிர்.** *தாதுராகத்திற் சார்ந்த கூந்தலம் பிடிக ளெல்லாம்.* (பா : 941)

2. **தோகை.** *கூந்தல் மென்மயில் குறுகின.* (அ : 767)

3. **பெண் மயிர்.** *ஏறு மங்கையர் நறுங் கூந்தலின் சுறு நாறு கின்றது.* (யுத் : 25)

**கூந்தலம் பிடிகள் – புற மயிருள்ள பெண் யானைகள்.** (பா : 941)

**கூந்தல் தெய்வ மகளிர் – கூந்தலையுடைய தெய்வ மகளிர்.** *கூந்த றெய்வ மகளிர் கொண்டாடினுர்.* (அ : 1077)

**கூந்தற் பாரம் – தலைமயிர்த் தொகுதி.** (பா : 1205)

**கூந்தற் பார வலயம் – தலைமயிர்த் தொகுதி வட்டம்.** (வை. மு) **கனத்த வட்டமான கூந்தல்.** (அண்) *கூந்தற் பார வலயத்து மழையிற் ருேன்றும் விண்ணிற மதியின் மென்பூஞ் சிகழிகைக் கோதை வேய்ந்தார்.* (பா : 1205)

**கூந்தன் மென் மயில் – மெல்லிய தோகையையுடைய மயில்கள்.** *கூந்தன் மென் மயில் குறுகின.* (அ : 767)

**கூம்பர் – செங்குத்து.** *கூம்பர் மாமரம் எரிந்துக.* (யுத் : 1155) **கூம்பல் என்பதன் போலி.**

**கூம்பலுற்று – குவித்து.** (யுத் : 3207)

**கூம்பு – 1. பாய்மரம்.** *பனிமாக் குன்றம் கூருகிர்க் குவவுத் தோளான் கூம்பென.* (சு : 9)

**2. செங்குத்து.**

**கூம்புதல் (கூம்பல்) – குவித்தல்.** *மன்னர் செங்கைப் பங்கயக் குமுாங்கள் கூம்ப.* (பா : 891) *கூம்பலொடுஞ்சேர் கைக்கமலத்தன்.* (கி : 1028) *கூம்பலுற் றுயர்ந்த கையன்.* (யுத் : 3207)

**கூய் - கூவி** (அண்) **பேராரவரஞ்செய்து.** (வை. மு) *கூய்க் கொழும் புனல் குஞ்சியிற் கூந்தலில் மீச் சொரிந்தனர்.* (சு : 1187)

**கூய்க்கொண்டு – கூவிக்கொண்டு.** *வெய்ய கூற்றைக் கூய்க்கொண்டு.* (யுத் : 2877)

**கூய்த்தருகை – அழைத்துக்கொண்டு வருதல்.** *மாண்ட சோதிட வாய்மைப் புலவரை ஈண்டுக் கூய்த்தரு கென்ன வந்தெய்தினர்.* (யுத் : 4131)

**கூய்த்தருந்தொறும் தரும்தொறும் – கூப்பிடக் கூப்பிட. தொறும் என்பது அடுத்தடுத்து ஆங்காங்கு எனப் பொருள்படும் ஓர் இடைச் சொல்.** *கூய்த்தருந்தொறும் தருந்தோறும் தானைவெங்குழுவின் நீத்தன்வந்து இயங்கிடு மிடமின்றி நெருங்க.* (சு : 874)

**கூய – கூவிய. ஓலமிட்ட.** *கோடு பற்றிய கொற்றவற் கூயது.* (கி : 346)

**கூயள் – அழைத்தாள்.** *கூயள் அன்னை குறுகுதிர் ஈண்டு.* (அ : 833)

**கூயினன் – கூவினன்.** *கூயினன் உந்தை என்றார்.* (யுத் : 2344)

**கூயுரைத்தல் – உரத்த குரலுடன் சொல்லுதல்.** (உ. வி) **சிலம்பெதிர் கூவுதல்.** *கூயுரைப்பக் குலமால்வரை யேனும்.* (யுத் : 819)

**கூர் – மிகுதி.** *சிலர் பதைத்து அளகவல்லியில் கொழுந் தெரியுற்றெனத் துயரங் கூர்கின்றார்.* (அ : 467)

**கூர்க்குதல் – 1. மிகுதல்.** *குரங்கின துகிரும் பல்லும் கூர்க்கின்ற கூர்க்கிலா அரக்கர் தம் படைகள்.* (யுத் : 3480)

**2. கூர்மை பெறுதல்.** *கூர்க்கில அரக்கர் தம் படைகள்.* (யுத்: 3506)

**கூர்ங்கணை – கூரிய அம்புகள்.** *குறுமுனி எனக் கடல் குடித்த கூர்ங்கணை.* (யுத் : 579)

**கூர்ங்கள் – உறைப்பான கள்.** கூர்ங்கள் உண்டு அலமந்த கண்ணுர். (சு : 283)

**கூர்த்த – கூர்மையான.** கூர்த்த என் வேல்தலை மானுடர் வெரிநிற் காண்பெனுல். (யுத் : 1681)

**கூர்த்த நல்லறம் – மிக்க நல்ல தருமகுணம்.** கூர்த்த நல்லறத்தை நோக்கிக் குறித்ததோ. (யுத் : 448)

**கூர்த்தன பகழி – கூர்மை பெற்றனவாகிய பகழி.** இராமன் தம்பி அவை யெலாந் துணிந்து சிந்திக் கூர்த்தன பகழி கோத்தான். (யுத் : 1689)

**கூர்தரல் – மிக்கிருத்தல்.** நலம் பொறை கூர்தரு மயிலை. (ஆ : 1139)

**கூர்தல் – மிகுதல். அதிகப்படல். கொள்ளல். மிகக்காட்டல்.** கூர்த்த நல்லறம். (யுத் : 448) நின்று அலவங் கூர்தியோ. (கி : 210) வேட்கை கூர் பூநிறை சோலை. (யுத் : 332)

**கூர் நறவு – புளிங்காடி. புளிப்பேறிய மது.** உண்ணுத கூர் நறவுண்ட தசும்பு எண்ணுயிரம். (யுத் : 1715)

**கூர்மம் – ஆமை.** கூர்மத்தின் வெரிநின் வைத்து வானவரமுதங் கொண்ட நீர்மத்து. (யுத் : 1891)

**கூர – மிக** கேதங்கள் கூர அயர்கின்ற வள்ளல். (யுத் : 2197) அருத்தி கூர அணுகினுன், (அ : 1063)

**கூராழி – கூர்மையான திகிரிப்படை.** கூராழி யங்கையுடையாய். (யுத் : 2213)

**கூரிய – நுணுக்கமான.** சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞர். (பா : 93)

**கூரெரிச்சாம் – மிக்க தீயில் விழுந்து இறப்பேன்.** கூரெரிச்சாம் இது சரதம். (அ : 1198)

**கூரை செய்தல் – மேற்கூரை அமைத்தல்.** தேக்கடை படலையிற் கூரை செய்து. (அ : 781) [பா : பே]

**கூலங்கொள் குரங்கு – வால்படைத்த குரங்கு.** கூலங்கொள் குரங்கை யெல்லாங் கொல்லுதி. (யுத் : 910)

**கூலம் – 1. கடைவீதி.** வளநகர்க் கூலமே போலு மாண்பது. (கி : 7)

**2. கூட்டம்.** தையலார் கூந்தலும் வறுமைய மலரின் கூலமே. (பா : 506)

**3. குரங்கு.** கூல வெஞ் சேனையின் குனிப்பிலாமையும். (சு : 1065)

**4. தரை.** குயின்றன குலமணி நதியின் கூலத்தில். (அ : 504)

**5. வரம்பு. அளவு. எல்லை.** கூலமில் சராசரம். (யுத் : 3401)

27

6. **நீர்க்கரை.** கூல மாமரத் திருஞ்சிறை புலர்த்துவ குரண்டம். (கி : 20)

7. **கடற்கரை.** கூலத்தாருலக மெல்லாம் குளிர்ப்பொடு வெதுப்பு நீங்க. (ஆ : 663)

8. **வால். லாங்கூலம் என்பதன் விகாரம்.** கூல வான் குரங்கு. (யுத் : 92)

9. **ஒழுக்க வரம்பு.** கூலம் நீங்கிய இராக்கதப் பூசுரர். (யுத் : 2556)

**கூலம் இட்டிய ஆர்கலி – கரை சிறிதாகிய கடல். அதாவது கரை இல்லாததாகிய கடல்.** (அன்) **கரை நெருங்கப்பெற்ற சமுத்திரம்.** கூலமிட்டிய ஆர்கலி கோத்தலால். (யுத் : 657)

**கூல வான் சேனை – கூட்டமான சிறந்த (குரங்குச்) சேனை.** (வை. மு) **வாலையுடைய பெரிய குரங்குச்சேனை.** (அன்) வானரத் தலைவரோடு கூல வெஞ்சேனை சூழ வடைந்தனன் எங்கள் கோமான். (யுத் : 4208)

**கூவ – கூப்பிட.** கூவ முன்னம் இளையோன் குறுகி. (அ: 655) [பா: பே]

**கூவம் – கிணறு.** கூவத்தின் சிறுபுனலைக் கடலயிர்த்த தொவ்வாதோ. (யுத் : 409)

**கூவல் – 1. கிணறு.** கூவலின் உயிர்த்த சின்னீர். (ஆ : 724) கூவலிற் புக்கு வேலை கோட்படும் என்று கொள்ளேல். (யுத் : 2651)

2. **அழைத்துக் கூறப்படும் குற்றேவல்.** தேவரும் அவுணரும் தேவிமாரொடும் கூவல் செய் தொழிலினர். (ஆ : 843)

**கூவல் செய் தொழிலினர் – அழைத்துக் கூவப்படும் குற்றேவல் செய்யும் வேலைக்காரர்.** தேவரும் அவுணரும் தேவிமாரொடும் கூவல் செய் தொழிலினர் குடிமை செய்திட. (ஆ : 843)

**கூவா முன்னம் – அழைக்குமுன்.** கூவா முன்னம் இளையோன் குறுகி. (அ : 655)

**கூவிடை – கூப்பிடு தூரம்.** கூவிடைப் பொழிற் கப்புறம் போனபின். (அ : 722) [பா : பே]

**கூவிரம் – தேரில் ஆசனத்துக் கெதிராக நடப்பெறுவதும், வீரர் பற்றிக் கொள்வதற்கு உதவுவதுமான தாமரைமொட்டு வடிவமான உறுப்பு.** கொடிஞ்சி. கூவிரஞ் செறி பொற்கொடித் தேரொடும். (யுத் : 3843)

**கூவிளை – வில்வம்.** கரந்தை மத்த மோடெருக் கலர் கூவிளை கடுக்கை நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்து. (பா : 529)

**கூவுதல் – 1. அழைத்தல்.** கூவுகின்றிலை. (சு : 268) கூயினன் நும் முன். (யுத் : 1288) கூயள் அன்னை. (அ : 833) கூவி இன்றென்னை. (யுத் : 950) கூவுதிர். (ஆ : 691) கூவுக. (ஆ : 708) கூவும் எல்லை. (அ : 705)

2. **கர்ச்சித்தல். முழக்கஞ் செய்தல்.** *அவர்தந் தலை போயறக் கூவினன்.* (யுத் : *959*)

**கூழ் - 1. நுகர்தற்குரிய உணவு முதலிய பொருள்கள்.** *கூழுடன் உண்டுழி ஒரு நிலை நிற்பர்.* (யுத் : *376*)

2. பயிர். *அலர்ந்த பைங்கூழ் அகன் குளக் கோன.* (அ : *818*)

**கூழ் உடனுண்ணுதல் - உணவுகளை (நட்பினால்) உடனுண்ணுதல்.** (யுத் : *376*)

**கூழை - 1. கூந்தல்.** *வாவி விரி கூழை இள நவ்வியர்.* (சு : *541*) *கூழை புறத்து விரிந்ததொர் கொட்பால்.* (ஆ : *1082*)

2. படையின் பின்னணி. *கூழையின் நெற்றி நின்றானை.* (யுத்: *1080*)

3. குட்டை

**கூழையின் நெற்றி - முன்னணிப் படையின் முன்பக்கம்.** (யுத் : *1080*)

**கூளி - 1. குறும்பூதம்.** *மெய்சிவந்த சாதகரொடு சிறுகட் கூளியும்.* (அ : *1100*)

2. பூதம். *கூளிகள் பூண்டன.* (ஆ : *398*) (உ. வி) (யுத் : *1969*)

3. **கொலைத் தொழிலையுடையவர்.** *வன்கட் கூளிக் கொடுங் கூற்றினுக் காவதோர் கூடுபோல்வ.* (யுத் : *1969*)

4. **பேய். காளியின் ஏவன் மகளிர்.** *கூளிகட்கு நல்லுடன் பிறந்தார்.* (யுத் : *3228*)

**கூற்றங் காட்டல் - யமனைத் தோற்றுவித்தல். மரணம் வர இடங் கொடுத்தல்.** *தாதைக்கும் சடாயுவான தாதைக்கும் தமியளாய சீதைக்கும் கூற்றங் காட்டி.* (யுத் : *2823*)

**கூற்றம் - 1. யமன்** *தேவியாகக் கொண்டேனல்லேன் வேறோர் கூற்றந் தேடிக் கொண்டேன்.* (அ : *343*)

2. யம பயம். (அண்) **அகால மரணம்.** (வை. மு) *கூற்றமில்லை ஓர் குற்றமிலாமையால்.* (பா : *70*)

**கூற்றமுண்ணக் கொடுத்தல் - யமன் உண்ணும்படி கொடுத்தல். கொன்று விடுதல்.** *கூற்றமுண்ணக் கொடுப்பனென் றெண்ணினாய்.* (கி : *334*)

**கூற்றமும் கட்புலம் புதைத்தல் - யமனும் அஞ்சிக் கண்மூடிக் கொள்ளுதல்.** *கூற்றமும் கட்புலம் புதைப்பக் கோத்தெழு தோற்றமும்.* (யுத் : *1986*)

**கூற்றன்ன பேரினம் - காலனை ஒத்த பெரிய காலாளின் தொகுதி.** (ஆ : *400*)

**கூற்றனைய கண் – எமனைப் போன்ற கண்கள்.** *கூற்றனைய கண் சிவப்ப.* (அ : 391)

**கூற்றின் தூது – யமனது தூதர்போற் கொல்லும் இயல்பின.** *மாற் றருங் கூற்றின் தூது போல்வன சுடுகணை.* (யுத் : 3608)

**கூற்றின் வாய் மடுத்தல் – யமன் வாயில் உட்புகச் செய்தல். கொல்லுதல்.** *மடங்கல் ஐயிருநூற்றையுங் கூற்றின் வாய் மடுத்தான்.* (யுத் : 2465)

**கூற்றினர் – யமன்.** (கி : 503) (ஆ : 199)

**கூற்றினர் தம் கரு – யமன் வயிற்றிலுள்ள கரு.** *கூற்றினர் தம் கருவுயிர் கொண்டதே.* (யுத் : 1058) [பா : பே]

**கூற்றினுற்றலான் – கூற்றுவனுடைய ஆற்றல் வாய்ந்தவன்.** *குகனெனும் பெயரிய கூற்றினுற்றலான்.* (ஆ : 999)

**கூற்றினை விருந்தூட்டல் – யமனை விருந்திட்டு உண்பித்தல்.** *வீட்டி வாளவுணரை விருந்து கூற்றினை ஊட்டி.* (ஆ : 182)

**கூற்றினை வெல்லல் – யமனை வெல்லுதல். இழந்த உடலை மீண்டும் அடைதல்.** *ஏற்றமும் பெருவலி யமகொடெய்தினர் கூற்றினை வென்று தம் முருவுங் கூடினர்.* (யுத் : 2756)

**கூற்று – 1. யமன்.** *உயிரிரக்கும் கொடுங் கூற்றின் உளையச் சொன்னான்.* (பா : 237) *பாசவெங் கூற்றும் கட்புலன் பரப்ப அஞ்சும்.* (கி : 1005)

**2. யமனுடைய தூதன்.** (அண்) *கூற்றையும் கட் பொறிகுறுகக் காண்பரேல்.* (யுத் : 482)

**கூற்றுங் கையெடுத்தாடல் – அச்சத்தினால் யமனும் கை தூக்கி ஆடுதல்.** *படுகளப் பரப்பிடைக் கூற்றும் கையெடுத்தாடிட இராவணன் கொதித்தான்.* (யுத் : 1206)

**கூற்றும் விழி புதைத்தல் – யமனும் அச்சத்தால் தன் கண்களை மூடிக் கொள்ளுதல்.** *வெஞ்சினக் கூற்றுந் தன் விழி புதைத்ததே.* (அ: 861)

**கூற்றுவன் – யமன்.** *வச்சிரத் தெயிற்றவனுளன் கூற்றுவன் மாற்றான்.* (யுத் : 501) *தம்முன் வானுள் கொள்ளக் கொடுங் கூற்றுவனைக் கொணர்ந்தான்.* (கி : 269)

**கூற்றுறழ் சொல் – கூற்றுவனிலும் கடியனவும் கொடியனவும் ஆன சொல்.** *வெய்ய என் கூற்றுறழ் சொல்லினாற் கொலை செய்வேன் கொலோ.* (அ : 554)

**கூற்றுறழ் பகுவாய் – யமனது பிளவுபட்ட வாய்.** *மலைமுழை திறந்த தென்னக் கூற்றுறழ் பகுவாய் விள்ள நகைத்து.* (யுத் : 1419)

**கூற்றுறழ் வரிசிலை - யமனை ஒத்த கட்டமைந்த வில்.** கூற்றுடை வரிசிலைக் குரிசில் கூறுவான். (அ : 849)

**கூற்றுறழ் வேல் - யமனை ஒத்த வேற்படை.** கூற்றுறழ் வேலினுய். (பா : 405)

**கூற்றுறுதல் - பல பகுதியாதல்.** குறித் தெறிந்தன எய்தன கூற்றுற. (யுத் : 3391)

**கூற்றுறு நரகு - எமனுக்கு உரிமையுள்ள நரகம்.** ஆற்றினன் உழற்று மோர் ஆதன் எய்துமக் கூற்றுறு நரகின் ஓர் கூறு கொள்க யான். (அ : 906)

**கூற்றைக் கூய்க் கொள்ளல் - யமனைக் கூவிக்கொண்டு உயிர் துறத்தல்.** வெய்ய கூற்றைக் கூய்க் கொண்டனன்னுன் குலத்தொடு நிலத்தனுதல். (யுத் : 2877)

**கூற்றையும் ஆடல் கொள்ளல் - யமனையும் வலியடக்குதல்.** கும்பிட்டு வாழ்கிலேன் யான் கூற்றையும் ஆடல் கொண்டேன். (யுத் : 1378)

**கூறக் கிற்றும் - எடுத்துச் செல்லும் ஆற்றலுடையோம். (சொல்லுவோம்)** கூறக் கிற்றும் கேட்டிரால். (யுத் : 3244)

**கூறல் (கூறுதல்) - 1. கூறும் சொற்கள்.** ஊடற் கூறல் மாந்தினர். (சு : 125)

**2. கூறுதல். சொல்லுதல்.** கூறலை சென்றெனு. (சு : 268)

**கூறிக் காட்டு கேன் - சொல்லி உணர்த்தக் கடவேன்.** யாருக்காக என் கோதறு தவத்தினைக் கூறிக் காட்டுகேன். (யுத் : 3997)

**கூறிடல் - துண்டமாக்குதல்.** இவ்வுரை வாயிற் கூறிடின் நின்னுடல் கூறிடும். (ஆ : 1091)

**கூறிடுதல் - 1. சொல்லுதல்.** என்று கூறிட. (பா : 505)

**2. கூறுசெய்தல்.** நின்னுடல் கூறிடும். (ஆ : 1091)

**கூறிற்றுண்டோ - சொன்னதுண்டோ. விதித்துள்ளதோ.** மனுநெறி கூறிற்றுண்டோ. (கி : 316)

**கூறின கூறின சொற்கள் - பலவாகக் கூறிய வீரமொழிகள்.** கூறின கூறின சொற்கள் கோத்தலால். (சு : 982)

**கூறு - 1. பகுதி.** கூருமுன்னம் கூறுபடுக்கும் கொலை வாளின் ஏருமென்னும் வன் துயர். (அ : 230)

**2. திறம். (வை. மு) கூறியதனால். (அண்)** மாதவன் ஆணையிற் போனவர் கூற்றினுற்றது கூறலுற்ருமரோ. (அ : 792)

3. **துண்டு.** ஆயிரங் கூறு செய்தான். (யுத் : 1096)

4. **சொல்லு.** பரத கூறு எனு. (அ : 1161)

**கூறு கூறுக்குதல் - 1. சின்னபின்னஞ் செய்தல்.** அது காலத்தங் கவனுடை அனீக மெல்லாம் கூறு கூறுக்கி அம்பாற் கோடியின் மேலுங் கொன்ருன். (யுத் : 1871)

2. **துண்டு துண்டாக்குதல்.** அரக்கரை ஒருவன் வாட்கணை கூறு கூறுக்கிய குவையும். (யுத் : 2945)

**கூறு கூறுகள் செய்தல் – பல துண்டுகளாகச் செய்தல்.** குடரினைக் கூறு கூறுகள் செய்யுமின். (சு : 1043)

**கூறு கூறு படுதல் – பலபல வகையாகப் பிரித்து நிலை குலைதல். வீற்று வீற்ருக நிலை கெடுதல்.** கூறு கூறுபட்டு இலங்கையும் விலங்கலும் பறவையும் குலைந்தோட. (யுத் : 1561)

**கூறு கொள்ளல் - ஒரு பகுதியைக் கொள்ளுதல்.** கூற்றுரு நரகின் ஓர் கூறு கொள்கயான். (அ : 906)

**கூறு செய்தல் – 1. பிரித்தல். பிளத்தல். (இலக்) தோண்டுதல்.** நூறு யோசனை அகலமும் ஆழமும் நுடங்கக் கூறு செய்தனர் என்பரால். (பா : 551)

2. **துண்டித்தல்.** அவர் சிலை ஏழொடேழையும் அம்பினுற் கூறு செய்து. (ஆ : 474)

**கூறுந்தரம் – எடுத்துக்கூறும் தரத்தது.** இது கூறுந் தரமன்ருல். (யுத் : 1131)

**கூறுபடுதல் – 1. துணிபடுதல்.** எதிர்ந்துளோ ரெலாம் கூறுபட்டதும். (யுத் : 1524)

2. **சிறுசிறு பகுதியாதல்.** ஒரு நூறு கூறுபட்டு. (யுத் : 3345)

**கூறு பாடல் – மிடற்றுப் பாடல். வாய்ப்பாட்டு.** கூறு பாடலும் குழலின் பாடலும் வேறுவேறு நின்றிசைக்கும் விதிவாய். (பா : 87)

**கூறை – ஆடை. புத்தாடை.** பூ நிறக் கோலவான் கழி நெடுங் கூறை சுற்றினுன். (யுத் : 589) (யுத் : 4291)

**கூன் – 1. வளைவு. கூனுடைக் குரங்கு.** கூற்றுடை நாயனங்கள் சிவப்பக் கூன் நுதல் ஏற்றி. (பா: 1067) கூனே று சிலை. (யுத்: 3474) கூனுகிர் மடங்கல் ஏறு. (ஆ : 869)

2. **பெரும் பாத்திரம். சட்டி.** (கலா) குருதி சாறெனப் பாய்வது குரைகடற் கூவில். (சு : 790)

3. **கூனல்.** அவன் மலர்க் கைகள் தீண்டக் கூனிமிர்ந்தழகு வாய்த்தார். (பா : 429)

4. **வளைந்த உடம்பு.** கூன் சூன் முதிர் இப்பி. (சு : 48)

5. **கூனி; கைகேசியின் தோழி.** கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை இழைப்ப. (அ : 1)

6. **வளைந்த பிறை.** வெண்மதிக் கூன். (கி : 236)

**கூனர் – முதுகு வளைந்தவர்.** கூனொடு குறளும். (பா: 884) (யுத்: 732)

**கூனல் – உடல் வளைந்திருத்தல்.** கூனல் மாக் குரங்கு. (கி : 705)

**கூனல் நந்து – முதுகு வளைந்த நத்தைகள்.** ஒளித்தன மண்ணிடைக் கூனல் நந்தெலாம். (கி : 563)

**கூனல் மாக் குரங்கு – வளைந்த உடம்பினையுடைய பெரிய குரங்கு.** கூனல் மாக் குரங் கையிரண்டாயிர கோடித்தானை. (கி : 705)

**கூனல் வால் – வளைந்த வால்.** நெடுகு கூனல் வால் நீட்டின உருகுறு நெஞ்சக் கடுவன். (அ : 766)

**கூனல் வான் கோடு – வளைவும் அழகுமுள்ள வெண் கொம்புகள்.** நல் வேழம் கூனல் வான் கோடு நீட்டிக் குத்திட. (பா : 931)

**கூனற்றாமரை – வாடி வளைந்த தாமரை. தலை கவிழ்ந்த தாமரை.** வதனமெல்லாம் கூனற்றாமரையிற் றோன்ற. (யுத் : 892)

**கூனி – மந்தரை.** தோன்றிய கூனியும் துடிக்கு நெஞ்சினள். (அ : 137)

**கூனீ – கூனி.** கைகேசியுங் கொடிய கூனியுமல்லாற் கொடியார் பிறருளரோ. (அ : 336)

**கூனுகிர் மடங்கல் ஏறு – வளைந்த நகங்களையுடைய சிங்க ஏறு.** (ஆ : 869)

**கூனுடைக் குரங்கு – கூனலைக் கொண்டுள்ள குரங்கு.** கூனுடைக் குரங்கையும் கும்பிட்டுய் தொழில். (யுத் : 1310)

**கூனுதல் ஏற்றி – புருவங்கள் நெற்றியில் வளைவுபடும்படி ஏற்றி.** (பா : 1067)

**கூனேறு சிலை – வளைவுடன் கூடிய சிலை.** கூனேறு சிலையுந்தானும் குதிக்கின்ற கடுப்பின் கொட்பால். (யுத் : 3474)

**கூனை – கருப்பஞ்சாறு காய்ச்சுதற்குரிய வாயகன்ற தொருகலம். வாயகன்ற பானை. (கலா)** ஒழுகு சாற்றகன் கூனையின். (கி : 940)

**கூனை அங்கியின் குண்டம் – வளைந்த அக்கினிக் குண்டம். ஔபாசனச் சட்டி.** கூனை அங்கியின் குண்ட மொத்தது கடற்குட்டம். (யுத்: 552)

# கெ

**கெட்ட தூதர் – தீமையையுடைய ஒற்றர். கொடியவராகிய தூதர்.** கெட்ட தூதர் கிளத்தினவாறு. (யுத் : 3158)

**கெட்டாய் - ஒழுக்கங் கெட்டவனே.** கெட்டாய் நின் கிளையோடு வாழ்வை யெலாம் சுட்டாய். (ஆ : 906)

**கெட்டேன் – 1. கழிவிரக்கம் பற்றிய குறிப்பு.** சீலமார்க் குண்டு கெட்டேன் தேவரினடங்குவானே. (அ : 276)

**2. இரக்கக் குறிப்பு.** செய்யும் அருளிது வாயிற் கெட்டேன் பிழைப்பரோ அரக்கராயோர். (யுத் : 433) கெட்டேன். (சு : 653) [பா : பே]

**3. அதிட்டங் கெட்டவனானேன்.** வீரம் போய் உரங்குறைந்து வரங்குறைந்து விழ்ந்தானே வேறே கெட்டேன். (யுத் : 3907)

**கெடக்குறி – உற்பாதம்.** கெடக்குறியாகி மாகங் கிழக்கெழு வழக்கு நீங்கி வடக்கெழுந் திலங்கை செல்லும் பரிதி வானவன். (சு : 29)

**கெடுத்தல் – கெடுத்திடல். கேடு விளைத்தல்.** என்னைக் கெடுத்தனை விடலை. (யுத் : 2178) கெடுத்தனை நின்பெருங் கிளையும். (யுத்: 1301) எந்தை இப்பெயர் உரைத்து எனைக் கெடுத்திடல் என்றான். (யுத்: 156)

**கெடுத்தொழிதல் – கெடுத்துவிடுதல்.** கெடுத்தொழிந்தனை உன்னையும் என்னையும் கெடுவாய். (யுத் : 154) (அ : 173)

**கெடுதல் – 1. அழிதல்.** கெட்டே நீ உயிர் கேதத்தால் விட்டாய் என்றிடின். (சு : 653)

**2. நிலைகெட்டு ஓடுதல்.** கெட்டனை என்பது கேளலை என்னா ஓட்டினர் ஆவி முடிக்க உவந்தார். (யுத் : 2273)

**3. தோற்றல்.** கெடாத வானவரை யெல்லாம். (யுத் : 1220) கெட்டனர் என்பது கேளலை. (யுத் : 2671)

**கெடுவாய் – ஓர் இகழ்ச்சி மொழி.** கெடுத் தொழிந்தனை என்னையும் உன்னையும் கெடுவாய். (யுத் : 154)

**கெடுவேன் – அழிவேன்.** கெடுவேன் உன்னைப் பிரியின் வினையேன். (அ : 36)

**கெண்டை – 1. கெண்டை மீன்.** தரங்கங் கெண்டை வராலாமை. (கி : 26) கெண்டைத் தடங்கண்ணாள். (யுத் : 1668)

**2. கெண்டை மீன் போன்ற கண்.** குமையுரு மிளிரும் கெண்டை கொண்டலின் ஆவி சிந்த. (பா : 1156)

**கெண்டைத் தடங் கண்ணுள் - கெண்டை மீன் போன்ற வடிவு கொண்ட பெரிய கண்களையுடையவள். சீதாபிராட்டி.** (யுத் : *1669*)

**கெந்த மாதனன் - ஒரு வானர வீரன்.** *சசேடணன் வினதன் கெந்த மாதனன்.* (யுத் : *2571*)

**கெழீஇய நட்பு - பொருந்திய நட்பு.** *அவரொடுங் கெழீஇய நட்பை வேட்கிற்பா யாகின்.* (யுத் : *1382*)

**கெழு - 1. திரண்ட.** *புடை கெழு விழாவொடு பொலிக எங்கணும்.* (பா : *292*)

**2. பொருந்திய. விளங்குகின்ற.** (பா : *292*) *குலங் கெழு காவலர்.* (யுத் : *32*)

**கெழுதல் - பொருந்தல்.** *உரு கெழு சீற்றம் பொங்கிப் பணம் விரித் துயர்ந்த தொத்தான்.* (ஆ : *877*)

**கெழுந்தகை - பொருந்தி விளங்குகின்ற குணம்.** *கெழுந்தகைக் கொரு வன்மை கிடைக்குமோ.* (ஆ : *1063*)

**கெழுமி - 1. நெருங்கி.** *சயில கோபனும் கிளையும் அந்தரமிசைக் கெழுமி ஆர்த்தெழ.* (பா : *286*)

**2. ஒத்து** *முழவொடு கெழுமி.* (சு : *417*)

**கெழுமுதல் - 1. மிகல் விளங்குதல்.** *சுடர்கள் நாடொறுந் தொடரும் கலிகெழு விசும்பில்.* (சு : *412*) *மந்திரங் கெழுமு நூன் மரபுணர்ந் துதவுவான்.* (கி : *93*)

**2. ஒத்தல்.** *கெழுமி.* (சு : *417*)

**3. பொருந்துதல்.** *உரு கெழு சீற்றம்.* (ஆ : *877*)

**கெழுவு - நிறைந்த. நிறைவு.** *கெழுவு கங்கைநீர் நாட்டிடை ஒரு முறை நண்ணினேன்.* (ஆ : *850*)

**கெழுவுதல் - கலத்தல். பொருந்தி நிற்றல்.** *பின்னைப்பொடி யொடுங் கெழீஇய அன்றே.* (கி : *647*) (யுத் : *1382*)

# கே

**கேயத்தரசன் பயந்த விடம் - கேகய நாட்டு மன்னன் பெற்ற நஞ்சு போன்ற கைகேசி.** *கேகயத்தரசன் பயந்த விடத்தை இன்னதோர் கேடுசூழ் மாகயத்தியை.* (அ : *223*)

**கேகய நாட்டிறை மடந்தை - கேகயத்தரசன் மகள் கைகேசி.** (அ: *325*)

**கேகய நாடு - கேகயன் நாடு.** *நளிர்புனற் கேகய நாடு நண்ணினுன்.* (பா : *1397*)

**கேகய நெடுங்குலம் — நீண்ட மயிலின் கூட்டம்.** (அ : 543)

**கேகயம் — 1. மயில்.** கேகய நெடுங்குல மெனச்சிலர் கிடந்தார். (அ : 545)

**2. கேகய நாடு.** (பா : 1397)

**கேகயர் கோமகன் — கேகய நாட்டு அரசன்.** கேகயர் கோமகன் சொல்லொடும். (அ : 800

**கேகயர் கோன் — கேகய ராசன்.** போனுரவரும் கேகயர் கோன் பொன் மாநகரம் புக எய்தி. (அ : 608)

**கேகயர் கோன் கொம்பு — கைகேசி.** கொண்டாள் வரமிரண்டு கேகயர் கோன் கொம்பு. (அ : 388)

**கேகயன் அன்னம் — கைகேசி.** (அ : 176)

**கேகயன் தனயை — கைகேசி.** (அ : 185)

**கேகயன் நங்கை — கைகேசி.** எங்கோமகற்கினிக் கேகயன் நங்கையே கடைமுறை நல்லள் போலுமால். (அ : 555)

**கேகயன் மகள் — கைகேசி.** (யுத் : 4038)

**கேகயன் மடந்தை — கைகேசி.** முந்தெழ அழிந்தது கேகயன் மடந்தை ஆசை. (அ : 958)

**கேகயன் மாமகள் — கேகய ராசன் பெருமகளான கைகேசி.** கேகயன் மாமகள் கேழ்கிளர் பாதம் தாயினும் அன்பொடு தாழ்ந்து வணங்கா. (பா : 1339)

**கேசரி — வானரப் படைத்தலைவன். அனுமன் தந்தை.** எழுதிய கீர்த்தி நம்பனைத் தந்த கேசரி கடலென நடந்தான. (கி : 708) (யுத் : 834)

**கேசவன் — திருமால்.** மற்றைக் கேசவன் என்றிந்தத் தன்மையோர் தன்மை கேளாய். (யுத் : 1602)

**கேட்கல் — கேட்டல்.** எல்லா வார்த்தையும் கேட்கல் ஆகும். (யுத் : 2543)

**கேட்கும் — கேட்டு அடங்கும்.** கடிக்கும் வல்லரவும் கேட்கும் மந்திரம். (சு : 465)

**கேட்டல் — 1. ஏற்றுக்கொள்ளுதல்.** என் சொல் தலைக்கொளத் தக்கதென்று கேட்கிற்பாயாகில். (யுத் : 1382) நாட்டார் நன்னூலுங் கேட்டார் இவ்வுரை கேட்பாரோ. (சு : 651)

**2. காது கொடுத்துக் கேட்டல்.** கேட்கிலன் முனிய. (யுத் : 169)

**3. கேள்வி ஞானத்தாலாகிய அறிவுடைமை.** நன்னூலுங் கேட்டார். (சு : 651)

**4. கேள்விப்படுதல்.** கேட்டிலே போலும். (சு : 451) கேளலே. (யுத் : 2271) கேட்டிலேன். (யுத் : 1665)

**கேட்டார் – நூலறிவு பெற்றவர்.** நன்னூலுங் கேட்டார். (சு : 651)

**கேட்டிலேனல்லேன் – கேளாதவனல்லேன்.** நாட்டிலே குகனுர் செய்த நன்மையை நயக்க மாட்டேன் கேட்டிலேனல்லேன். (யுத் : 879)

**கேட்புருத முன் – கேட்டதற்கு முன்னம்.** முனிவரக் வாசகங் கேட்புருத முன். (யுத் : 3971)

**கேட கங்கணம் – வேட்டைத் தொழிலுக்குரிய கங்கணம்.** கேட கங்கண அங்கையொடுங்கிளர் கேடகங்கள் துணிந்து கிடந்தன. (யுத் : 3380)

**கேடகத் தடக்கை – இடக்கை.** கேடகத் தடக்கையாலே கிளரொலி வாளும் பற்றி. (பா : 868)

**கேடகப் புறம் – கேடகத்தின் பின்புறம்.** கேடகப் புறத்தினுற் கிழியச் சிந்தினுன். (யுத் : 1528)

**கேடகம் – வாள்வீச்சைத் தடுக்கும் ஒரு பலகை; தோலுமாம். பரிசை.** கேடகம் வாங்கினன் வாளோடும். (யுத் : 1556) (யுத் : 3350)

**கேடக முகம் – கேடகத்தின் முன்பக்கம்.** விசின கேடக முகத்து வீங்குகால். (யுத் : 1521)

**கேடம் – வேட்டை.** (இலக்) **கொலைத்தொழில்.** கேட கங்கணம். (யுத் : 3380)

**கேடில் வாம்பரி – கெடுதலில்லாத தாவுகின்ற குதிரைகள்.** கேடில் வாம்பரிக் கணக்கையுங் கடந்தன கிளர்ந்த. (யுத் : 2490)

**கேடினர் – கெடுங்கால முடையவர்கள்.** கேடினர் தோட்ட நுங்கிற் றேலையுறு மூக்கினே. (ஆ : 375)

**கேடு – 1. கேடு பயக்கும் வினே.** இறப்பெனும் மெய்ம்மையை இம்மை யாவர்க்கும் மறப்பெனு மதனின் மேற் கேடு மற்றுண்டோ. (அ : 21)

**2. தீங்குதரும்படியான நிலைமை.** உண்டாகிய கேடுடையார் (ஆ : 776)

**கேண்ம் – கேளும். கேளுங்கள். கேண்மின் என்பதன் விகாரம்.** ஒன்று நீர் கேண்ம் என உரைத்தல் மேயினுன். (பா : 199)

**கேண்மை – 1. நட்பு.** பொருந்திய கேண்மை யுகந்தவர். (அ : 1010) பின்னும் நிற்குமோ கேண்மை. (கி : 622)

2. **கேள்வித் தன்மை.** (கலா) **நட்புடைமை.** (அண்) கேண்மைச் சதானந்தன் என்றுரை வாய்ந்த மாதவன். (பா : 650)

3. **உரிமை.** (வை. மு) **நட்பு.** (அண்) ஆள் முதற்கமைந்த கேண்மை அன்பனை நோக்கி. (அ : 668)

4. **முறைமை.** கிரிகள் கேண்மையிற் றொடர்ந்தன. (ஆ : 177)

**கேண்மை தீர்வினை - நட்புக் கெடுதற்குரிய செயல்.** வேண்டலர் அறிவரேல் நும் கேண்மை தீர் வினையிற்றாமால். (கி : 631)

**கேண்மையர் - உறவினர்.** பொருவில் கேண்மையர். (யுத் : 318)

**கேண்மை யுகந்தவர் - இசைந்த நட்பை விரும்பிய இராமன்.** பொருந்திய கேண்மை யுகந்தவர் தம்மொடு போகாதே இருந்தது நன்று. (அ : 1010)

**கேண்மோ - கேள். மோ - முன்னிலையசை.** வன்றிண் சிலையாய் கேண்மோ. (அ : 380)

**கேணி - நீர்நிலை.** கேணியில் வளைமுரல் கேகயம். (பா : 1395)

**கேணீ - கேள்நீ.** அதன் மேனிலை கேணீ என உரைப்பான். (பா: 1373)

**கேதங்கள் கூர அயர்தல் - துன்பங்கள் அதிகப்படச் சோர்தல்.** கேதங்கள் கூர அயர்கின்ற வள்ளல். (யுத் : 2197)

**கேதம் - 1. களைப்பு.** கிடந்தனர் நடந்தது புணர்ச்சி தரு கேதம். (சு : 255)

2. **துக்கம். துன்பம்.** கெட்டே நீ உயிர் கேதத்தால் விட்டா யென்றிடின். (சு : 653)

**கேவலம் - 1. தனிமை.** கேவல மலராய். (யுத் : 4286)

2. **எளிமை.** கேவலத்திவர் நிலைமை தேர்வது எக்கிழமை கொடு. (கி : 48)

**கேழ் - 1. ஒளி.** கேழலாம் முழு நிலாவிற் கிளரொளி இருளைக் கீற. (சு : 31)

2. **நிறம்.** நலங்கிளர் செங்கேழ் பாணி. (பா : 777)

3. **சுவைச் சிறப்பு.** கிளையினும் நரம்பினும் நிரம்பும் கேழன. (அ : 474)

4. **ஒப்பு.** ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியில் அம்மா. (அ : 1027) கேழில் ஞாலம். (யுத் : 1002) கேழிலாள். (சு : 400) கேழில தோள். (யுத் : 276)

**கேழ்கிளர் - மிக்கு விளங்கும்** கேழ்கிளர் மதுகையர். (பா : 312) கேழ்கிளர் காண்டகு தடக்கை. (அ : 881)

**கேழல் - பன்றி.** மண்தொத்த நிமிர் ஆண் கேழலாயினும். (சு : 934) [பா : பே]

**கேழில் ஞாலம் - ஒப்பில்லாத ஞாலம்.** கேழில் ஞாலம் கிளத்திய தொன்முறை. (யுத் : 1002)

**கேழிலாள் - ஒப்பில்லாதவள். சீதாபிராட்டி.** கேழிலாள் நிறை இறை கீண்டதாமெனின். (சு : 400)

**கேள் - 1. கேழ் என்பதன் போலி. நிறம்.** (யுத் : 3821) [பா : பே]

**2. கணவன்.** (அண்) முனிந்தருளல் கேள் ஆய் வீட்டியிடும். (சு : 608)

**3. சுற்றம். உறவு. உறவினர்.** நன்னுதலவள் நின்கேள். (அ : 685)

**4. இனம்.** வண்டின் கேளொடு கிடந்த நீலச் செங்கிடையுங் கொண்டு. (பா : 577)

**5. ஒப்பு.** ஆயிரமிராமர் நின் கேள் ஆவரோ தெரியில் அம்மா. (அ : 1027) [பா : பே] (கி : 10)

**6. ஒற்றுமை.** தாளுயர் தாமரைத் தடங்கள் தம்மொடும் கேளுயர் நாட்டத்துக் கிரியின் தோற்றத்தான். (ஆ : 240)

**7. நட்பு.** கேள் கொள் மெய்ம்மையான். (யுத் : 530)

**8. காதினுற் கேட்பாய்.** கெட்டனர் என்பது கேளலை என்னு ஒட்டினர். (யுத் : 2271)

**கேள் கொள் மேலையான் - நண்பனுகக்கொண்ட மேன்மையுடைய வனுகிய விபீடணன்.** (யுத் : 530)

**கேள்வர் - கணவர்.** உயிர் கேள்வர் பொன்ரு முன்னம் பொன்றினர் என்னும் புகழல்லால். (அ : 222)

**கேள்வன் - கணவன்.** ஒன்றினை உமையாள் கேள்வன் உவந்தனன். (பா : 1375)

**கேள்வி - 1. நூல். நூற்பொருள்.** நுணங்கு கேள்வி ஆயப் புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னுன். (பா : 171)

**2. வேதம். (சுருதி)** செவி வயின் அமிர்த கேள்வி தெவிட்டினுர். (பா : 886)

**3. காது. கேள்விச் செல்வம்.** வானோர் கேள்விச் செல்வம் துய்க்க வயிற்ருேர் கிளை தந்தாள். (அ : 599)

**கேள்விச் சுடர் - நூற் கேள்வியாகிய ஒளி. பொருள்.** திங்கில் கேள்விச் சுடர் புக்கு வழங்கலின்றி. (ஆ : 698)

**கேள்விச் செல்வம் - பரம் பொருள்.** (வை. மு) **செவிச் செல்வம். (அண்) இராமாயணம்.** (கலா) வானோர் கேள்விச் செல்வம் துய்க்க வயிற்ருேர் கிளை தந்தாள். (அ : 599)

**கேள்விச் செல்வன் – நூற் கேள்வியாகிய செல்வத்தையுடையவன். (வாலி)** (கி : 355)

**கேள்வி சாலறிஞர் – நூற் கேள்வி மிக்க அறிஞர்.** அயர்வில் கேள்வி சால் அறிஞர் வேலை முன். (கி : 110)

**கேள்வி தெவிட்டினூர் – வேதங்களை மிகுதியாகக் கேட்டவர்கள்.** செவிவயின் அமிர்த கேள்வி தெவிட்டினூர். (பா : 886)

**கேள்வி நூல் மறைவலாளன் – கேள்விக்கே உரிய நூலாகிய வேதம் பயின்று வல்ல அந்தணன்.** தருமமன்றுல் கேள்வி நூன் மறை வலாளா என்றனன். (கி : 73)

**கேள்வி மாந்துதல் – நற் கேள்விகளைக் காது குளிரக் கேட்டல்.** மருந்தினுமினிய கேள்வி செவியுற மாந்துவாரும். (பா : 46)

**கேள்வியின் துறை – கேட்டறியவேண்டிய நூற்பொருள்களின் வழிகள்.** ஒருங்கு கேள்வியின் துறையறி துணைவரோடிருந்த சூழலின். (யுத் : 340)

**கேள்வி விருத்தர் - கேள்வி ஞானமுடைய வயது முதிர்ந்தவர்.** வீரர் வேத்திரத்தர் கேள்வி விருத்தர் கஞ்சுகத்து மெய்யர். (பா : 880) [பா : பே]

**கேளலை – கேட்கமாட்டாய்** கெட்டனர் என்பது கேளலை. (யுத்: 2271)

**கேளா – கேட்டு.** அண்ணலுமது கேளா. (அ: 675) (அ: 685) (அ: 267)

**கேளார் – பகைவர்.** கேளார் விட்டியிடுமேல். (சு : 608) [பா : பே]

**கேளான் - பகைவன். (இராவணன்)** கேளான் வீட்டியிடு மேல் அவனை வேறல் வினையன்று. (சு : 608) [பா : பே]

**கேளிர் – உறவினர்.** கேளிரின் விரும்பித் தெள்ளு புனலாறு சிறிதே யுதவுகின்ற வள்ளலையும் ஒத்த. (பா : 926)

## கை

**கை - 1. சிறுமை.** யாங்களுற்ற கையறு துயரம் நின்னுற் கடப்பது கருதி வந்தோம். (கி : 100)

**2. கரம். கிரணம்.** கை அம் சாசரமுடைய அக் கடவுளைக் கண்டும். (கி : 723)

**3. கைப் படை. இரு பக்கங்களிலும் அமைந்தது.** கைகளே கைகளாக கடைக்குழை திருவலாக. (சு : 832)

**4. கைத்தல்.** கையுறு கவரயில். (அ: 1000)

**5. துதிக்கை.** நெடுங்கை வேழம். (உ. வி) (அ : 1041)

6. **ஒழுக்கம். சீலம்.** அவ்வூர்ச் சாதுகை மாந்தரெல்லாம் தயரதன் தன்னை ஒத்தார். (அ : 251)

7. **ஒழுங்கு. வரிசை.** நெடியகை எடுத்து நீட்டி நீந்தின நெடுங்கை வேழம். (அ : 104)

8. **கை மரம்.** விரவு கைத்தலத்தில் உய்த்த மேதகத்தின் மீதரோ. (பா : 117)

9. **பக்கம்.** கை கலந்தெரி கருங்கடல். (யுத் : 561) நும்முடைய கைக் கடைந்தான். (யுத் : 1575)

10. **உள்ளங்கை.** கைஞ்ஞிறை நிமிர் கண்ணாய். (அ : 695)

11. **இருபக்கத்துப் படை.** தூசியும் இரண்டு கையும் நெற்றியும் சுருண்டு நீர்மேற் பாசியின் ஒதுங்க. (யுத் : 1887)

12. **சேனை.** கண்டு கைகளோடு அணிவகுத்து. (யுத் : 3498)

13. **அணி.** கைதொறும் தோய்ந்தது கவியின் தானையே. (யுத் : 1777)

14. **ஆற்றல்.** கைகெட வாலுடை நெடும்படை இரிந்து மாய்ந்த தால். (யுத் : 1523)

15. **இடம்.** கையகல் இஞ்சி. (யுத் : 2817)

16. **செயல்.** கைவளர் நெடும்படை கூட்டினாலன்றி. (கி : 223)

17. **படையணி.** ஏகினன் இளவலோடும் இராவணன் ஏற்ற கைம்மேல். (யுத் : 3490)

18. **போர்க்களம்.** (கலா) ஏகினன் இளவலோடும் இராவணன் ஏற்ற கைம்மேல். (யுத் : 3490)

19. **இரு கரங்கள்.** கைம்மருங்கு தொடர்ந்துன்னைக் காவாயென்று அப்புறம் போய்க் காக்குமென்றான். (யுத் : 2684)

**கை எறிதல் – கைதட்டல்.** நஞ்சின் வெய்யவன் கை யெறிந்துரு மென நக்கான். (யுத் : 129)

**கைக் கடுப்பு – கைவிசை.** என்ன கைக்கடுப்போ என்பர் சிலர். (யுத் : 3767)

**கைக் கடுமை – கைவிசை.** நாயகன் கைக் கடுமை நடத்துவான். (யுத் : 3829) கைக் கடுமையும் நன்று. (யுத் : 1165)

**கைக் கடைந்தான் - கையில் தஞ்சமாக வந்தடைந்தவன்.** (யுத்: 1574)

**கைக் கணை – கையிலுள்ள அம்புகள்.** (யுத் : 2102)

**கைக் கதழ்வு – கை விரைவு** காத்தோர் மரம் வீசு கைக்கதழ்வு. (யுத்: 2345)

**கைக் கரி – துதிக்கையையுடைய யானை.** அக் கைக்கரியின் குரலே யன்றிதென வெருவா. (அ : 371)

**கைக் கார் முகம் – கை வில்.** (ஆ : 920) (யுத் : 3010)

**கைக் குரல் வரிவில் – கையிற் பிடித்த ஒலியோடுகூடிய கட்டமைந்த வில்.** கைக்குரல் வரிவில்லானும் இளையவன் வரவு கண்டான். (சு : 564)

**கைக் குன்றம் – கையையுடைய மலைபோன்ற யானை.** கைக் குன்றப் பெருங்கரைய. (யுத் : 3566)

**கை கடக்க விடுதல் – கை கழுவ விடுதல்.** முன்னமே கை கடக்க விட்டிருந்து கட்டுரைப்ப தென்கொலோ. (பா : 803)

**கைகயர் கோமகள் – கைகேசி.** (அ : 888)

**கைகயன் – கேகய நாட்டு மன்னன்.** கைகயன் தனயை. (யுத் : 4263)

**கையன் கோவில் – கைகேசியின் அரண்மனை.** கைகயன் கோயில் நண்ணி. (அ : 264)

**கைகயன் தனயை – கைகேசி.** (யுத் : 4263)

**கை கலத்தல் – 1. எல்லாப் பக்கங்களும் ஒன்று சேர்தல்.** அருங்கனல் மண்டக் கை கலந்தெரி கருங்கடல். (யுத் : 561)

**2. ஒழுங்காகத் திரளுதல். உடன் கலத்தல்.** மொய்ப்பெருஞ் சேனையும் சூரி ஞாலமும் கை கலந்தயலொரு கடலிற் சுற்றிட. (அ : 990)

**கை கவித்தல் - 1. அருள் செய்தல்.** அகங்கை கவித்து நீகிட சில் பகல் என்பது கருதா. (சு : 227)

**2. கை கவித்து அடக்கல். போதும் என்ற குறிப்பு.** காவலன் கண்ணெதிர் அவனைக் கை கவித்து. (யுத் : 50)

**கைகள் – பக்கங்கள்.** கைகள் நீர் படர்ந்து கால் தொடர. (அ : 533)

**கைகள் தலை புகுதல் – கைகள் தாமே தலைமீது குவிதல்.** கொற்றவனு மாதவனுமல்லார் கைகள் தலை புக்கன. (பா : 1238)

**கைகளைத் தலையினேந்துதல் – கைகளை உயர்த்திக் கும்பிடுதல்.** உலைவில் செல்வத்தனே உண்டெனத் தலையினேந்தினன் தாழ்தடக் கைகளே. (அ : 795)

**கை குலைத்தல் – கை நடுங்குதல். கை விதிர்த்தல்.** கதத்தொடுங் குலைக்குங் கையான். (யுத்: 1859) கைகுலைக்கின்றதும். (யுத்: 2950)

**கை குழவி மறத்தல் – கை குழந்தைகளை எடுத்தலை மறத்தல்.** சிவந்த வாச்சியர் கை மறந்தன பசுங்குழவி. (அ : 503)

**கை கூடவற்றே - கைகூட வல்லதோ.** வருவது வருநாளன்றி வந்து கை கூடவற்றே. (ஆ : 639)

**கை கூப்பல் - கைகூப்பி வணங்கல்.** எவ்வுலகுங் கை கூப்ப. (யுத் : 304) இரு கைகூப்பி. (கி : 392)

**கை கெடல் (கை கெடுதல்) - செயலறுதல்.** காலுடைக் கடலெனச் சிந்திக் கைகெட வாலுடை நெடும்படை இரிந்து மாய்ந்ததால். (யுத் : 1528)

**கைகேசி - கேகயவரசன் மகள்.** ஐயா கைகேசியை நேர் ஆகேனே நான் என்றான். (அ : 360)

**கைகையார் - கைகேசி.** வஞ்சனை இயற்றிய மாயக்கைகையார் துஞ்சுவர் இனி எனத் தோளைக் கொட்டுமால். (யுத் : 4171)

**கைகொட்டிச் சிரித்தல் - கை தட்டி இகழ்தல்.** செங்கையும் கொட்டி உன்னைச் சிரிப்பரால் சிறியன் என்னு. (யுத் : 3200)

**கை கொள் சேனை - அணிவகுத்த சேனை.** வருவதோர் அளவும் கை கொள் சேனையைக் காவெனப் போர்க்களங் கடந்தான். (யுத் : 2482)

**கை கோப்ப - கலக்க. ஒன்றுபட.** (அண்) **கூட்டிக்கொள்ள.** (கலா) **ஆசையினாற் கவர்ந்துகொள்ள.** (வை. மு) கண்டவர் மனங்கள் கை கோப்ப. (பா : 840)

**கைச்சிலை - 1. கை வில்.** (யுத் : 2899)

**2. கையில் வில்.** (யுத் : 3977)

**கைஞ்ஞிறை நிமிர் கண் - உள்ளங்கையளவிலும் மிகப்பெரிய கண்.** கைஞ்ஞிறை நிமிர் கண்ணாய் கருதின இனமென்றே விரிசாயல் கண்டு. (அ : 695)

**கைடவன் - திருமாலைப் பகைத்து அழிந்த ஓர் அசுரன்.** வேதக் கொழுஞ் சுடரை நாடி நெடுமேனான் ஓதத்தினாடு வரு கைடவன். (சு : 77)

**கைத் தண்டு - கையிலுள்ள பிரம தண்டம்.** முனியும் தன் கைத் தண்டினை எதிர்க என்றான். (பா : 664)

**கைத்தல் - 1. கசப்பினைத் தருதல்.** கருத்து வேறுற்றபின் அமிழ்துங் கைக்குமால். (கி: 676) கைத்த சொல்லால் உயிரிழந்தும். (அ: 603) கைத்தனள் உள்ளம். (யுத் : 1611)

**2. வெறுத்தல்.** காப்போரைக் கைத்தென். (ஆ : 352) கைத் தோடுஞ் சிறை. (சு : 647) கைத்த சிந்தையன். (ஆ : 971)

**3. உகைத்தல். ஏறிச் செலுத்துதல். (முதற் குறை)** கைத்த எற்றினும் கடவிய புள்ளினும். (யுத் : 128)

4. **கோபித்தல்.** கைத்து அவர் பொருக பூசல் புகல வொண்ணுததே. (யுத் : 1039)

5. **கொல்லுதல். செலுத்தல்.** (அண்) கைத்தும் கடுநஞ்சின் எனப்பகர்வான். (யுத் : 244)

6. **எதிர்த்தழித்தல்.** காப்போரைக்கைத்தே. (ஆ : 352) [பா : பே]

**கைத்தலங் குவித்தல் – கைகூப்பிவணங்கல்.** பாராய் கண்டு கண்டெனைக் கைத்தலங் குவிக்கின்ற காட்சி. (யுத் : 4040)

**கைத்தலங் தேயக்குத்தல் – கை வருந்தும்படி குத்துதல்.** சென்று மேலெழுந்து பற்றிக் கைத்தலங் தேயக் குத்தி. (யுத் : 1401)

**கைத்தல நிரை – கைத்தல வரிசை.** நின் கைத்தல நிரையால் குன்றே புரைதோளாய் மிடல் கொடு குத்துதி. (யுத் : 1128)

**கைத்தலம் – 1. கைகள்.** குத்துவர் கைத்தலங் குளிப்ப. (கி : 284)

2. **யானையின் துதிக்கையின் முன்பாகம்.** கைத்தலமும் காத்திரமும் கருங் கழுத்தும் நெடும் புயமும் உரமும் கண்டித்து. (யுத் : 3569)

**கைத்தலம் குலேதல் – கைந் நடுக்கமடைதல்.** வானவர் கைத்தலங் குலேந்தார். (யுத் : 1156) (யுத் : 1861)

**கைத்தலம் பிசைதல் – கைகளைப் பிசைதல். சினம் மேற்கொண்டார் மெய்ப்பாடு.** பெருங் கைத்தலம் பிசையா. (யுத் : 1892)

**கைத்தலம் பிணைத்தல் – இரு கைகளையும் சேர்த்துத் தட்டுதல்.** பிழை யாதிது பிழையா தெனப் பெருங்கைத்தலம் பிணையா. (யுத் : 1852)

**கைதலைக் கொள்ளல் – தலைமேற் கை குவித்து வணக்குதல்.** துணைவ நீ எமைக் கண்டிலேனெனப் புகலெனக் கைதலைக் கொள்வார். (ஆ : 507)

**கைத்தலை நெல்லி – கரதலாமலகம். உள்ளங்கை நெல்லிக்கனி.** என்னுள்ளம் கைத்தலை நெல்லியொப்பக் காட்டினேன். (யுத் : 2164)

**கைத்தலையில் – கையில்.** இடந்தனன் வலங்கொள் ஒரு கைத்தலையில் வைத்து. (சு : 611)

**கைத்தார் – பகைவர்.** கைத்தார் கடுகளிறுங் கனதேருங் களத்தழுந்த. (யுத் : 3369)

**கைத்தானக் களிறு – துதிக்கையும் மதநீருமுடைய களிறு.** கைத்தானக் களிற்றரசர். (பா : 769)

**கைத்து – 1. வெறுத்து.** (அ : 352)

2. **கோபித்து** (யுத் : 1039)

3. **எதிர்த்தழித்து** (ஆ : 352) [பா : பே]

4 **செல்வம்**. *தம் கைத்துள போழ்தே இட்டிசை கொண்டறனெய்த முயன்றோர்.* (பா : 450)

5. **கையது. கையதான.** *கைத்தோர் பசையில்லை என்னவிட்ட.* (பா : 948)

**கைத்துணை – துணைகை. இரண்டு கைகள்.** *கைத்துணை பிசைந்து.* (யுத் : 2038) (யுத் : 847)

**கைத்துணைத் தலம் – இரு கைத்தலங்கள்.** (யுத் : 2878)

**கைத்துணை வில் – துணையாய்க் கையிலுள்ள வில்.** *ஏற்றினன் கைத்துணை வில்லினை.* (யுத் : 1778)

**கைத் துன்று நெல்லியங் கனி – கையின்கண் பொருந்திய நெல்லிக் கனி.** *கைத் துன்று நெல்லியங் கனியிற் காண்டியால்.* (யுத் : 188)

**கைத் தொழில் – கைத்தொண்டு. சிறு தொண்டு.** *கைத் தொழில் செய்வனென்று கழலடி வணங்குங் காலை.* (கி : 437)

**கைத் தொன்று நெல்லியங் கனி – கையகத்ததாய்ப் பொருந்திய நெல்லிப்பழம்.** (யுத் : 188) [பா : பே]

**கைத்தோடும் சிறை – கைத்து ஓடும் சிறை. கண்டோர் வெறுத்து விலகி ஓடும்படியான சிறை.** (சு : 647)

**கை தடு மாறல் – கை நடுங்குதல்.** *எய்த வன் பகழி யெல்லாம் பறித் திவன் என்மேல் எய்யும் கைதடு மாறுது.* (யுத் : 3104)

**கைதரல் – 1. கை கொடுத்து உதவல். உதவுதல்.** *அந்திதன் கைதர மந்த முந்த நடந்தது வாடையே.* (அ : 1079) (அ : 946)

2. **உற்றுழி உதவல். துணை செய்தல்.** *தருமம் கைதர.* (அ : 15) *நல்லறிவு கைதர.* (ஆ : 124)

**கைதலை – கைத்தலை என்பது எதுகை நோக்கி கைதலை என நின்றது** *கைதலைப் பூசல் பொங்க.* (சு : 927)

**கை தலைக் கொள்ளல் – தலைமேற் கைகுவித்து வணங்குதல்.** *நீ எமைக் கண்டிலேன் எனப் புகலெனக் கை தலைக் கொள்வார்.* (ஆ : 507)

**கை தலை மேலுற – (துதிக்) கை தலைமேற் பொருந்த. துன்பத்தின் விளைவு.** *களிறெலாம் படக் கை தலை மேலுறப் பிளிறி ஓடும் பிடியன்ன பெற்றியாள்.* (ஆ : 388)

**கை தலை மேலுறல் – கையைத் தலைமேற் பொருந்தும்படி வைத்தல். துன்பத்தின் அறிகுறி.** *களிறெலாம் படக் கை தலை மேலுறப் பிளிறியோடும் பிடியன்ன பெற்றியாள்.* (ஆ : 388)

**கை தலையிற் பெய்திரங்கல் – கைகளைத் தலைமேல் வைத்து அழுதல்.** *மறையோர் மற்றுஞ் சுந்தரியர் எனைப் பலரும் கை தலையிற் பெய் திரங்கித் தொடர்ந்து செல்ல.* (யுத் : 4147)

**கைதவம் – வஞ்சனை.** *கைகயர் கோமகள் இழைத்த கைதவம்.* (அ : 888) *கைதவ நிசிசர.* (கி : 972)

**கைதவன் – வஞ்சகன். வஞ்சகனாக நடிப்பவன்.** *கள்ளந் திரிவாரவர் கைதவன் நீ.* (யுத் : 235)

**கை துடைத்தல் – கைவிடுதல். துறத்தல்.** *செய் துடைச் செல்வமோ யாதுந் தீர்ந்தெமைக் கை துடைத் தேகவும் கடவையோ.* (அ : 452)

**கைதை – தாழை மரம்.** *கருந்தகைய தண் சினைய கைதை மடல்.* (கி : 521)

**கை தொடல் – 1. மணவினை முறைப்படி கைப்பிடித்தல். பாணிக் கிரகணம்.** *மணவினை முடித்தென் கையை மந்திர மரபிற் றொட்ட கணவன்.* (யுத் : 1624)

**2. கையினாற் பரிசித்தல்.** *நீசன் கை தொடுவதன் முன்.* (சு : 468)

**கை தொடர் கணை – கையினின்று தொடர்ச்சியாக விடப்படும் அம்புகள்.** *கை தொடர் கணையினோடும் கார்முகம் வளைய வாங்கி.* (பா : 664)

**கை தொழல் – நின்றபடியே தலைசாய்த்துக் கை கூப்புதல்.** *அறிவனை வணங்கித் தம் மரசைக் கை தொழுது.* (அ : 12)

**கைந்நாகம் – யானை.** *கீழ்த்திசைக் காவல் செய்யும் கைந்நாகம்.* (சு: 40)

**கைந்நிலை நெல்லியங் கனி – கையின் கண் உள்ள நெல்லிக்கனி.** *யான் புகன்ற யாவும் உன் கைந்நிலை நெல்லியங் கனியிற் காண்டியால்.* (சு : 677) (அம் – சாரியை)

**கைந் நெரித்தல் – துன்பத்தினால் கையைக் கையால் நெரித்தல்.** *கையைக் கையின் நெரிக்கும்.* (அ : 306)

**கை நெல்லிக் கனியாக்கல் – உள்ளங்கை நெல்லிக் கனிபோல் எளிதில் தன்வசமாக்குதல்.** *கயற்கடல் சூழ் உலகெல்லாம் கை நெல்லிக் கனியாக்கி.* (பா : 730)

**கைப் படை – கையிற் பிடித்தபடியே பயன்படுத்தப்படும் சிறு படைக் கலம்.** *கைப் படை வரிசிலை முதலிய வழங்கி.* (பா: 160) (பா: 662)

**கைப் பணி – சிறிய ஏவற்றொழில். கைத்தொழிலின் திறம்.** (கலா) *காண்டியான் இவ்வழிக் கொணருங் கைப் பணி.* (கி: 208) [பா : பே]

**கைப் பணை – கைச் சக்கரம்.** *வீரக் கைப் பணை முழங்க மேனாள் அமரிடைக் கிடைத்த காலன்.* (யுத் : 3880)

**கைப் பிணி – கைப் பிடிப்பு.** *பேதுறு குரங்கையான் பிணித்த கைப் பிணி.* **(யுத் : 1503)**

**கைப் புகல் – சேர்தல். புகல் புகுதல்.** *இவன் கைப் புகற் பாலனே கழியற் பாலனே.* **(யுத் ; 364)** *கைப் புகுந்துறு சரணருளிக் காத்து மேல்.* **(யுத் : 382)**

**கைப் பொருள் – கையிலுள்ள பொருள்.** *கைப் பொருள் கண்டுழி ஒரு நிலை நிற்பர்.* **(யுத் : 376)**

**கைப் போதகம் – துதிக்கையையுடைய யானை.** *கைப் போதகம் நிகர் காவலர்.* **(பா : 1350) (யுத் : 1122)**

**கை பரத்தல் – எங்கும் பரவுதல். பக்கங்களிற் பரவுதல்** *கை பரந்துலகு பொங்கிப் பெய்ய வென்றெழுந்த மாரி.* **(சு : 760)** *கை பரந் தெழு சோலை.* **(சு : 877) (யுத் : 572)**

**கை பிசைதல் – 1. கோபத்தின் அறிகுறி.** (வை. மு) **வீரர் போருக்கு எழும்போது உண்டாகும் மெய்ப்பாடு.** *கறங்கு போன்றுளான் பிசையுங் கையினன்.* **(கி : 895)**

**2. திகைப்பவர் மெய்பாடு. ஒன்றுஞ் செய்யமாட்டாத நிலையில் நிகழ்வது.** (வை. மு) *பற்றிப் பிசையுறுங் கையை மீசை சுறுக் கொள உயிர்க்கும்.* **(யுத் : 1940)**

**கை பிடித்தல் – கை பிடித்து மணத்தல். பாணிக்கிரகணம் (யுத்: 2637)**

**கைபுகல் – வந்து சேர்தல். குழுவிற் புகுதல் அடைக்கலம் புகுதல்.** *(அண்) அடைவே தேறிக் கைபுகற் கமைவதானுன் கடிதினிற் கொணர்வல் என்னு.* **(யுத் : 427)**

**கை போதல் – கடந்து செல்லுதல்.** *வெள்ளக் கலிப்பறை கலங்கக் கை போய்.* *(பா : 29)*

**கைம் மதிள் – கைகளாகிய மதிள்.** *கைம் மதிட்குள் ஆயினர்.* **(ஆ : 1145)**

**கைம் மருங்கு – இரு கைகளின் பக்கங்களிலும்.** *கைம் மருங்கு தொடர்ந்துன்னைக் காவாய் என்று.* **(யுத் : 2684)**

**கைம் மருங் குண்டாம் – கையில் வந்து தாமே சேரும்.** *காரியத்தின் பொருளை நோக்கிக் கைம் மருங் குண்டாம் நின்னைக் காயாவாம்.* **(யுத் : 2684)** *[பா : பே]*

**கைம் மலர்கள் – கைகளாகிய தாமரைகள்.** *கைம் மலர்கள் கூம்ப.* **(பா : 895)**

**கைம்மலை – யானை.** *கார்கள் தாம் எனமிகக் கடுத்த கைம்மலை.* **(அ : 980)**

**கைம் மறித்தல் – 1. மறிப்பதுபோன்று கையை அலைசத்தல். உடன் பாடின்மையைக் குறிப்பது.** நன்னகரதனை நோக்கி நளினக் கை மறித்து. (சு : 93)

**2. வியப்புக் குறிப்பு.** வியந்து நோக்கி மாநிலக் கிழத்தி கைகள் மறித்தன போன்ற மன்னோ. (கி : 470)

3 **தடைசெய்தல்.** (கலா) என்று கைம் மறித்து இடை நின்று காலத்தை இழப்பதன்று. (சு : 238)

**4. கையை மடக்கி வைத்தல். கையசைத்தல்.** (அண்) நன்று நின் திண்மையும் நலனும் என்று கைம்மறித் திராவணன் ஒருவன் நீ என்றான். (யுத் : 1166)

**கைம் மா – துதிக்கையையுடைய விலங்கு; யானை.** செங்கண் வெங் கைம் மாத் தான் படிகின்றது. (கி : 2) [பா : பே]

**கைம்மாறு – பிரதியுதவி. மாற்றுதவி.** எந்தை இனி இதற்குக் கைம்மாறு யாதென்றான். (யுத் : 296) தயரதற் கென்ன கைம்மாறு டையம் யாம் தக்க தென்பார். (அ : 274) கைம்மாறாக. (கி : 630)

**கைம் மிகல் – 1. அளவு கடத்தல். அதிகமாதல்.** போரொன்று ஒல்லொலி கைம் மிகப் போயினர். (அ : 528) களிப்புக் கைம் மிக. (யுத் : 82)

2 **பரவுதல்.** மொய்புனல் கைம் மிகக் கூலமிட்டிய ஆர்கலி கோத்தலால். (யுத் : 657)

**3. மேன்மேல் மிகல்.** துற்ற வெம்மை கைம் மிகச் சுறுக் கொளச் சுவைத்ததால். (யுத் : 3349)

**4. தூண்டுதல்.** ஆழி அனந்தனையும் விதி கைம் மிக முட்டிய வெம்மையினான். (யுத் : 1743)

**5. பெருகுதல். மேற்பட்டு நிற்றல்.** வாழ்வு கைம் மிக ஊழி காண்குறு நினதுயிரை யோர்கிலாய். (யுத் : 317)

**6. உருத்தெழல்.** (உ. வி) விதி கைம் மிக முட்டிய வெம்மை யினான். (யுத் : 1743)

**7. மிகுதல். கை - உபசர்க்கம்.** வளர்ந்தது பிறந்த கோபம் கைம் மிகக் கனன்ற தல்லால் தளர்ந்திலர் கானை வீரர். (யுத் : 2066)

**கைம் முறை யளித்தல் – கைகளால் முறைப்படி யளித்தல்.** அந்த ணாளர்க்கும் கைம் முறை யளித்தனன் கனகமாரியே. (பா : 275)

**கை மா – யானை.** செங்கண் வெங் கைமா. (கி : 2)

**கையகலிஞ்சி – இடமகன்ற மதில்.** (யுத் : 2817)

**கையலுதல் – இடம் அகலுதல்.** கையகலிஞ்சிக் காவல் கலங்க. (யுத் : 2817)

**கையஞ்சாயுதமுடைய அக்கடவுள் – கையின் கண் பஞ்சாயுதங்களை யுடைய திருமாலின் அம்சமாகிய இராமபிரான்.** (கி : 723)

**கையடை – அடைக்கலம்.** உன் கையடை யாகுமென்றவ் விராமற்குக் காட்டுங்காலே. (கி : 387) நிற்கிவள் கையடை என்ற வச் சனகன் கட்டுரை. (கி : 535) (அ : 87)

**கையபயங் காட்டினன் – கையில் அபய முத்திரையைக் காட்டினன்.** (யுத் : 292)

**கையபயம் – வலத்திருக்கரத்தின் அபய முத்திரை. உள்ளங்கை வெளித் தோன்றும்படி கையை மலர்த்தி ஐந்து விரல்களையும் உயர்த்தி வைக்கும் நிலை.** கஞ்சமலர்ப் பழிக்குங் கையபயங் காட்டினன். (யுத் : 292)

**கையறவு – 1. செயலறுதல்.** உயிர்ப்பு நீளக் கையற வுறுகின்றாராற் காணலாங் கரையிற்றன்றே. (ஆ : 1040) (ஆ : 331)

**2. துன்பம்.** கரனேயோ யான்பட்ட கையறவு காணாயோ. (ஆ : 331)

3. **செயலற்ற நிலை. மூர்ச்சையுமாம்.** உயிர்ப்பு நீளக் கையறவு றுகின்றால். (ஆ : 1040)

**கையறு கவலை – செயலறுதற்குக் காரணமான மனவருத்தம்.** கையறு கவலை சுற்ற. (யுத் : 1228) காவல விடுதி இன்று இக் கையறு கவலை நொய்தின். (யுத் : 1256) (யுத் : 4268)

**கையறு துயரம் – பெரிய துயரம். செயலறுதற்குக் காரணமாகிய பெரிய துயரம்.** யர்ங்களுற்ற கையறு துயரம் நின்னாற் கடப்பது கருதி வந்தோம். (கி : 102)

**கையன் – வஞ்சகன். கீழ்மகன்.** நிற்கபய மென்றானுயிரைத் தன் னுயிரி னேம்பாக் கையனும் ஒருவன் செய்த உதவியிற் கருத்தி லோனும். (யுத் : 423)

**கையனலி – கையிலுள்ள நெருப்பு.** அண்டமுங் கடந்தானங்கை அனலியுங் குளிர்ந்தது. (சு : 1172)

**கையனேன் – அற்பனாகிய யான்.** கையனேனுனைக் காட்டிக்கொடுத்த நான் உய்வனே என்றுரைக்கு மங்கோர் சிரம். (யுத் : 3160)

**கையார் கணை – கையிலுள்ள அம்பு.** ஓதையின்மேல் கையார் கணை சென்றதலால் கண்ணில் தெரியக் காணேன். (அ : 376)

**கையார் சிலை – கையிற் பொருந்திய சிலை.** கையார் சிலையுங் கணையும். (அ : 369) [பா : பே]

**கையார் வரை - துதிக்கையையுடைய மலைபோன்ற யானை.** கையார் வரை மேல்முரசேற்றி. (யுத் : 2624)

**கையால் நிலந்தடவுதல் - கண்ணிருண்டு வழியறியாது கையினால் நிலத்தைத் தடவுதல்.** கையால் நிலந்தடவிக் கண்ணீர் மெழுகுவார். (அ : 401)

**கையார் புனலால் நனைதல் - தாரை வார்த்துக்கொடுத்த தண்ணீரால் ஈரமாக்குதல்.** முகந்து தானக் கையால் நனையாதன கையுமில்லை. (பா : 170)

**கையார் வரை - யானை.** கையார் வரைமேல் முரசேற்றி. (யுத்: 2624)

**கையிலகலுதல் - கைவிட்டுப் போதல்.** நலங்கையி லகன்றது கொல் நம்மின் என. (ஆ : 603)

**கையின் வந்தேறெனல் - கைகொடுத்து வந்து ஏறுக என்று கூறுதல். கையினால் சைகை செய்து ஏறு எனக் குறிப்பிடுதல்.** கையின் வந்தேறெனக் கடிதின் வந்தேறினான். (பா : 1130)

**கையுடை மலை - யானை.** கையுடை மலை யொன்றேறிக் காற்றெனக் கடாவி. (யுத் : 1901)

**கையுற்றார் - வசமாயினார். நம் பக்கம் சேர்ந்தார்.** காய்ந்தவர் அவர்களே கையுற்றார். (யுத் : 401)

**கையுறல் - 1. தோன்றுதல். பொருந்தியிருத்தல்.** கையொடு கையுற அணியுங் காட்டினார். (சு : 887)

**2. வசமாதல்.** அவர்களே கையுற்றார். (யுத் : 401)

**கையுறு நெல்லியங்கனி - உள்ளங்கையிற் பொருந்திய நெல்லிக்கனி.** கையுறு நெல்லியங் கனியிற் காண்டியால். (சு: 514) (அம் - சாரியை)

**கையுறை - காணிக்கை. கையில் உறுவது. சிறியார் பெரியாரைக் காணும்பொழுது கையிற் கொண்டுசெல்லும் பொருள்.** எம்மனோராற் கையுறை கோடற் கொத்த காட்சியையல்லை. (யுத் : 2219)

**கையுறை கோடற் கொத்த காட்சியையல்லை - காணிக்கைப் பொருளைப் பெற்றுக் கொள்ளுதற்குத் தக்க தோற்றமுடையவனல்லாதவனாய் இருக்கின்றாய். (பெருந் தன்மையுடையவனாய் இருக்கின்றாய்). (வை. மு)** (யுத் : 2219)

**கையெடுத்தல் - கையை உயரத் தூக்குதல்.** கவி வெள்ளம் யாவையும் விழுந்து போனவெனும் விம்மலாற் கையெடுத்தன குரங்கினோடு முறைகண்டு தேவர்கள் கலங்கினார். (யுத் : 2020)

**கையெடுத்தாடல் - அச்சத்தின் அறிகுறி.** கூற்றும் கையெடுத்தாட இராவணன் கோஇத்தான். (யுத் : 1206)

**கையெறிதல் - கை தட்டல், கை கொட்டல்** *நஞ்சின் வெய்யவன் கையெறிந் துருமென நக்கான்.* (யுத் : 129) *வன் திண்கை யெறிந்து நக்கான்.* (ஆ : 894) *என்னக் கையெறிந் திடியுரு மேறென நக்கு.* (யுத் : 3243)

**கையெறிந்து நகுதல் - கை கொட்டிச் சிரித்தல்.** (யுத் : 129) (யுத் : 3243) (ஆ : 894)

**கையெனும் காலன் - கை என்கின்ற யமன்.** *வீடிஞர் காற்றின் மாமகன் கையெனும் காலனுல்.* (யுத் : 1043)

**கையைக் கையின் நெரித்தல் - ஒரு கையை மற்ருெரு கையால் நெரித்தல்.** (அ : 306)

**கையைப் பிசைதல் - அவலக் குறிப்பு.** *பற்றிப் பிசையுறுங் கையை மீசை சுறுக்கொள உயிர்க்கும்.* (யுத் : 1940)

**கையை முறைமையில் தீண்ட நோற்ற - கையை மறையிற் கூறப்படும் முறைமையில் பொருந்தும்படி நோன்பு செய்துள்ளன.** *சானகி தளிர்க்கை என்னும் முளரிகள் இராமன் செங்கை முறைமையிற் றீண்ட நோற்ற.* (பா : 1210)

**கையொடு கை தெற்ரு - துதிக்கையோடு துதிக்கை பொருந்தப் பிணைத்து.** *கடங்கலுழ் தடங் களிறு கைகொடு கைதெற்ரு.* (பா : 391)

**கையொடு கையைப் புடைத்தல் - கையோடு கையைத் தட்டுதல்.** *கையொடு கையைப் புடைக்கும்.* (அ : 208)

**கையொத்தல் - அணிவகுத்தல்.** *கையொத்து ஊக்கிய படைகள்.* (யுத் : 1108)

**கையோய்விலர் - கை ஓயாமல். கை ஓய்வு இல்லாதவராய்.** *கையோய்விலர் மலை மாரியின் நிருதக் கடல் கடப்பார்.* (யுத் : 3053)

**கை வகுத்தல் - கையாற் பெய்தல்.** *கடல் தூர்ப்பதோர் கல்லின் மாரியைக் கை வகுத்தாள்.* (பா : 412)

**கை வண்ணம் - கைகளின் திறம்.** *கை வண்ணம் அங்குக் கண்டேன் கால் வண்ணம் இங்குக் கண்டேன்.* (பா : 559)

**கை வயிறு தகர்த்தல் - கைகளால் வயிற்றிலடித்தல்.** *இராவணன் தங்கை தன் கை வயிறு தகர்த்தனள்.* (ஆ : 557)

**கைவரை - யானை.** *கைவரை எனத்தகைய கானை.* (பா : 388)

**கை வலி - தோள் வலிமை.** *என் கால்வலி காட்டிப் போந்தேன் கைவலிக்கவதியுண்டோ.* (யுத் : 882)

**கைவழி நயனஞ் செல்ல - கைகளின் வழியே கண்களின் நோக்கம் செல்ல.** *கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமுஞ் செல்ல ஐய நுண்ணிடையார் ஆடும் நாடக அரங்கு.* (பா : 572)

**கைவளர் நெடும் படை - செயல் மிகுதியினையுடைய பெரிய படை.** *கைவளர் நெடும் படை கூட்டினுலன்றி நேடரிது அடும்படை அரக்கர் தம்மிருக்கை.* (கி : 223)

**கைவளர் மயிலன்னாள் - இல்வாழ்க்கை வளர்தற்குக் காரணமான மயில்போன்ற சாயலையுடையவள்; சீதாபிராட்டி.** *ஆய் நிற அயினி சுற்றிக் கைவளர் மயிலனாளை வலஞ்செய்து காப்புமிட்டார்.* (பா : 1219)

**கைவளை - கைக்கண் வளையல்களையுடையவள். (சீதாபிராட்டி)** *கனத்தினுற் கடந்த பூண் முலைய கைவளை.* (யுத் : 4004)

**கைவளை திருத்துபு - கைவளையைத் திருத்தும்போதே.** *கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள்.* (பா : 1238)

**கைவாக்கிற் கூடப் புதைத்தல் - வாயிற் கை சேரும்படி மூடுதல். கையினுல் வாயை மூடுதல்.** *தலை தாழ்ந்து வணங்கிக் கை வாக்கிற் கூடப் புதைத்து ஒரு மாற்றம் நீ தூக்கிக்கொள்ளத் தகும் எனச் சொல்லினுன்.* (யுத் : 4161)

**கை விசைத்தல் - கைகள் விரைவுபடல். கை வேகங்கொள்ளல்.** *கைவிசைத் தெறிந்த தோமரம்.* (யுத் : 2292) *கங்க பத்திரமோர் கோடி கைவிசைத் தரக்கன் எய்தான்.* (யுத் : 2061)

**கைவிட்டுக் காலும் விட்டான் - கைவிட்டு மரபின் தன்மையையும் விட்டவன்; விபீடணன்.** *கள்ள நீர் வாழ்க்கையேமைக் கைவிட்டுக் காலும் விட்டான்.* (யுத் : 1387)

**கை விடுதல் - 1. கை விட்டுச் செல்லுதல்.** *எமைக் கைவிடிற் பினை யார் களை கண்ணுளார்.* (ஆ : 210) *கைவிடீர் எனினும்.* (ஆ : 363)

**2. பெருக்குதல்.** (வை. மு) *கண்ணின் நீர்க்கடல் கைவிட நேர்கிலன்.* (அ : 520)

**கை வித்தகம் - கையின் சாமர்த்தியம்.** *கை வித்தக மதனுற் சில கணைவித்தினன்.* (யுத் : 3052)

**கை விதிர்த்தல் - 1. கை நடுங்குதல்.**

**2. கையசைதல்.** *கவர்ந்தான் உயிர் காலனும் கை விதிர்த்தான்.* (ஆ : 936)

**கை விதிர்ப்புறல் - கை நடுங்கப்பெறுதல்.** *வள்ளலும் மலர்க்கரம் விதிர்ப்புற்றுன்.* (யுத் : 1571)

**கை விளக்கு – சிறு விளக்கு.** (யுத் : 2541) காலை வந்திறுத்த காலைக் கைவிளக் கெடுப்பதென்ன. (யுத் : 890) வானம் கைவிளக் கெடுத்த தென்ன வந்தது கடவுட்டிங்கள். (அ : 579)

**கை வேல் – கையிலுள்ள வேலாயுதம்.** வன் கை வேல் வெம்புண் நுழைகிற்க உழைக்கும் ஆனைபோல்வான். (அ : 200)

**கை வைப்பு – கையை வைத்தல்.** இவன் இச்சிலை கை வைப்பளவே இறல் காணுதியால். (யுத் : 1756)

# கொ

**கொங்கணம் - கொங்கண தேசம்.** அனந்தன் என்பான் உவணபதிக் கொளித்துறையும் கொங்கணமும். (கி : 766)

**கொங்கணம் ஏழு – ஏழு பிரிவான கொங்கண நாடு.** கொங்கணம் ஏழும் நீங்கி. (கி : 922)

**கொங்கை – முலை.** (ஆ : 308) கொங்கையர். (சு : 267)

**கொங்கை இணைக்குவை - இரண்டு தனங்களின் முகடு.** (சு : 1309)

**கொங்கைக் குயில் – கொங்கையையுடைய குயில்போன்றவளாகிய சீதாபிராட்டி.** கொங்கைக் குயிலைத் துயர் நீக்க இமையோர்க் குற்ற குறை முடிப்பான். (யுத் : 11)

**கொச்சை – 1. இழிவு.** பயம் மனத்துண்டென வாழும் கொச்சை மாக்களை கோல்வளை மகளிருங் கூடார். (ஆ : 509)

**2. இழிவான தன்மை.** பச்சை மேனி புலர்ந்து பழிபடூஉம் கொச்சை யாண்மையும் சீர்மையிற் கூடுமோ. (சு : 1141)

**3. அற்பம். இகழத்தக்க.** கொச்சை மானுடர். (யுத் : 113)

**4. கோழை.** கொச்சைத் துன்மதி. (யுத் : 124)

**கொச்சைத் துன்மதி – வலி நிரம்பாத துர்ப்புத்தியை யுடையவன். (விஷ்ணு)** கொச்சைத் துன்மதி எத்தனை போரிடைக் குறைந்தான். (யுத் : 124)

**கொச்சை மானுடர் – அற்ப மனிதர்.** (யுத் : 113)

**கொஞ்சுதல் – இனிதாய் ஒலித்தல்.** மழலையம் சதங்கை கொஞ்ச. (யுத் : 2833) [பா: பே]

**கொட்டம் - கோட்டம். (கோஷ்டம்; குஷ்டம்) மலைபடு பொருள்.** கொடிச்சிய ரிடித்த சுண்ணம் குங்குமம் கொட்டம் ஏலம். (பா :24)

**கொட்டி – ஓர் இசைக் கருவி.** (யுத் : 2397)

**கொட்டில் – சாலைகள்.** குரகதத் தடந் தேரினம் அவை பயில் கொட்டில். (சு : 109) [பா : பே]

**கொட்டுதல் – 1 நிரம்பச் சொரிதல்.** கொட்டின சாந்தெனக் குளிர்ந்த தென்கெனே. (கி : 201)

**2. பூசுதல். அப்புதல்.** குங்குமஞ் சாந்தங் கொட்டிப் பொங்கு வெம் முலைகள், (கி : 616) (உ. வி) (கி : 201)

**3. வாச்சியம் முழக்குதல். கையால் தட்டுதல்.** கோநகர் அணி கெனக் கொட்டும் பேரி. (அ : 122)

**4. தட்டுதல்.** கொட்டினர் கிட்டினர். (யுத் : 2526) கைகையார் துஞ்சுவரினி யெனத் தோளைக் கொட்டினர். (யுத் : 4172)

**கொட்பு – 1. சுழற்சி. கழலுதல். மண்டலம். விளைவு.** கொட்புறு கலினப் பாய் மா. (பா : 576)

**2. சூழ்தல்.** வெவ்விய விதியின் கொட் பால். (சு : 570)

**3. கொள்கை. கோட்பாடு.** தேவர் கொடுத்த நல் வரமும் கொட்பும். (சு : 1118) மரபில் கொட்பு. (கி : 659)

**4. பெருமை.** இமிழ் கனிப் பிறக்கமும் பிறவும் இன்னன கமழ் வுறத் தோன்றிய கணக்கில் கொட்பது. (கி : 854)

**5. தன்மை.** குன்றினின் றுலாய கொட்பது. (யுத் : 469) (கி : 911)

**6. வலிமை.** குன்றின மென்ன நடந்தனர் கொட்பால். (யுத் : 2274)

**7. சிறப்பு.** (உ. வி.) (சு : 1118)

**கொட்புறு கலினப் பாய் மா – சுழன்ற செலவுடைய கடிவாளம் பூண்டு பாய்ந்து செல்வன வாகிய குதிரை.** (பா : 576)

**கொடி – 1. நீட்சி.** பொரு புனற் கொடி. (பா : 528)

**2. தேரின் உச்சியிற் கட்டப்படுவது.** நெடுஞ்சுவர்க் கொடியும் யாவும். (அ : 1044)

**3. ஒழுங்கு.** முகிலொடு நெடுங்கொடிச் சூலம் மின்னுவ. (பா: 128) கொடி நெடுமரம். (சு : 787)

**4. துவசம்.** விரி முகிற் குலமெனக் கொடிவிராயின. (பா : 127)

**5. படர்கொடி.** பல்வகைப் புருவக்கொடி பம்பிட. (கி : 610)

**6. காகம்.** (உ.வி) கொடியொடுங் கொடி சுற்ற. (யுத் : 999) சந்த மொன்று கொடித்திரள். (சு : 683-d)

**கொடிக் கொழுந்து – கொடிகளின் நுனிப் பாகங்கள்.** கொடிக் குழீஇயின கொழுந் தெடுத்து மேற்கொள்ள. (யுத் : 2492)

**கொடிச்சி – குறிஞ்சி நிலப் பெண்.** *கறை துடைக்குறு பேதை ஓர் கொடிச்சியைக் காணாய்.* **(அ : 758)**

**கொடிச்சிமார் – குறிஞ்சி நில மகளிர்.** *கொடிச்சிமார்க்குக் கணித் தொழிலே புரியும் வேங்கை.* **(பா : 930)**

**கொடிச்சியர் – குறிஞ்சி நில மகளிர். குற மகளிர்.** *கொடிச்சியர் இடித்த சுண்ணம்.* (பா : 24) *கறை துடைக்குறும் பேதையோர் கொடிச்சியைக் காணாய்.* **(அ : 758) (கி : 491)**

**கொடிச்சூலம் – கொடிகளின் நுனியிற் கட்டப்பட்ட சூலம். (அண்)** *ஒழுங்காக அமைக்கப்பட்ட சூலங்கள்.* **(கலா) (பா : 128)**

**கொடிஞ்சி – தேரின்மேல் கைக்கு உதவியாகத் தாமரை வடிவில் அமைந்த உறுப்பு.** *நெரிந்தன கொடிஞ்சிகள்.* **(சு : 838)**

**கொடிஞ்சு – 1. தேரின் மேல் முகடு.** *கொடிஞ்சொடு தட்டும் அச்சும்.* **(அ : 1044)**

**2. தேர்த்தட்டின் மேற்கட்டி.** *கொடியொடு கொடிஞ்சறப் புரவி கூட்டற.* **(ஆ : 484)**

**கொடித்தனி மகரங் கொண்டான் – ஒப்பற்ற மீனக் கொடியையுடைய மன்மதன்.** *கொடித்தனி மகரங் கொண்டான் குனிசிலைச் சரத்தால் நொந்தேன்.* **(பா : 427)**

**கொடித்திரள் – காக்கையினது கூட்டம்.** *சந்தம் ஒன்று கொடித்திரள் தங்கள் தமக்கே வந்தொர் நன்மணி நிற்கென வைத்ததும் வைப்பாய்.* **(சு : 683-d)**

**கொடி நகர் – வெற்றிக்கொடி பறக்கும் நகரம். இலங்கை.** *கெட்டது கொடி நகர்.* **(யுத் : 24)**

**கொடிப் படை – கொடிகளையுடைய சேனை. வெற்றிக்கொடியை உயர எடுத்த சேனை.** *ஆடு கொடிப் படை சாடி.* **(அ : 1014) (யுத் : 69) (யுத் : 3409)**

**கொடிப்பவளம் – கொடியாய்ப் படர்ந்துள்ள பவளம்.** *கொலை மேற் கொண்டு ஆருயிர் குடிக்குங் கூற்றங்கொல்லோ கொடிப்பவளம்.* **(யுத் : 7)**

**கொடிப்பூ – காட்டுக் கொடியின் மலர்.** *கொடிப்பூ மிலைந்து செல்கென விடுத்தனன்.* **(கி : 289)**

**கொடி மதில் – கொடி நாட்டிய மதில்.** *கொடி மதிற் குடுமித்தலைக் கொள்கென்றான்.* **(யுத் : 965)**

**கொடி மூக்கு – கொடிபோன்ற மூக்கு.** *விடுகாதும் கொடிமூக்கும் ஈர நினைந்து.* **(ஆ : 344)**

**கொடிய வெங்கோபம் - மிகக் கொடிய கோபம்.** *கொடிய வெங் கோபத்தாற் கொதித்த கோளரி.* (அ : 862)

**கொடியாடை - கொடிச் சீலை.** *அம்பரங்கள் தொடும் கொடியாடையும்.* (யுத் : 3378)

**கொடியாய் - 1. மாறுபாடுடையவனே. முரண்பட்டவனே.** *கொடி யாய் உன் மாயை அறியேன்.* (யுத் : 2209)

**2. கொடுந்தன்மையுடையை.** *இரவே கொடியாய்.* (பா : 1247)

**கொடியிடைத் தாள வெண்கோவை - கொடிகளின் இடையிடையே தொங்கவிடப்பட்டுள்ளனவாகிய வெண்முத்து வடங்கள்.** (பா: 129)

**கொடியீர் - கொடுமை மிக்கவர்களே.** *கொடியீர் உரையாடிலிரோ.* (சு : 493)

**கொடியேன் - கொடும் பாவத்தைப் புரிந்த நான்.** *நீங்கா இடர்க் கொடியேன் தந்த பாவை.* (யுத் : 9)

**கொடியோன் - துருவாச முனிவன்.** *குன்றி நீ துயர் உறுகென உரைத் தனன் கொடியோன்.* (பா : 494) [பா : பே]

**கொடிவள்ளை - வள்ளைக்கொடி.** (அண்) **கொடியும் வள்ளையும்.** (உ வி) **வள்ளைக் கொடியின் இலை.** (வை. மு) *விரைமென் கமலம் கொடி வள்ளை.* (கி : 26)

**கொடிறு - கதுப்பு.** (வை. மு) **குறடு.** (அண்) *கொடிறு தாங்கிய வாய்க்குழு நாரைவாழ் தடறு.* (கி : 938)

**கொடிறு தாங்கிய - பற்றுக் குறட்டின் தன்மையைக் கொண்ட.** (கி : 938)

**கொடு - 1. கொடுத்தல்.** *கொடுப்பவர் முன்பு கொடேல் என நின்று தடுப்பவர்.* (பா : 449)

**2. கொண்டு.** *அலந்தலைக் கொடு நெடுந் துயரிடைக் குளித்தல்.* (யுத் : 3636) *கண் கொடு பிறத்தல்.* (அ : 482) *நஞ்சினை உடன் கொடு வாழ்தல்.* (யுத் : 319)

**கொடுங் குரம் - வளைவான குளம்பு.** *கால் வயக் கொடுங் குரம் துணிந்தன புரவி.* (யுத் : 1084)

**கொடுங் குழை - வளைந்த குழைகள்.** (யுத் : 3783)

**கொடுஞ் சரம் - கொடிய அம்புகள்.** (யுத் : 3743)

**கொடுத்தல் - தருதல். திரும்பக் கொடுத்தல்.** *கொடுத்தலை.* (யுத் : 1301) *கொடுக்கிய.* (யுத் : 1548) *கொடுக்கிலிர் நும்முயிர்.* (யுத் : 1679)

**கொடுத்தி** — கொடுப்பாயாக. *கோமற்கினிய தெய்வப் படைக்கலங் கொடுத்தி.* (பா : 418)

**கொடுந் தீ** — கொடுமை வாய்ந்த தீ. (யுத் : 209)

**கொடுந் தொழில்** — கொடிய தொழில். *கொடுந் தொழில் குறித்து நம்மேல் விலங்கு வாரென்னின்.* (யுத் : 2866)

**கொடு நாலொடிரண்டு குலப்பகை** — கொடிய ஆருகிய கூட்டமாகிய பகை. அவை காமம், வெகுளி, கடும் பற்றுள்ளம், மானம், உவகை, மதம் எனபன. (சு : 51)

**கொடுப்பவர்** — ஈவோர். *கொடுப்பவர் முன்பு கொடேல் என நின்று தடுப்பவர்.* (பா : 449)

**கொடுப்பார்** — கொடுப்பவர். ஈவோர். *கொள்வாரில்லாமைக் கொடுப் பார்களும் இல்லை மா தோ.* (பா : 165)

**கொடு போதல்** — கொண்டு செல்லுதல். *என் ஆருயிர்த் தோழமை தந்தான்மேற் போவது சேனையும் ஆருயிருங் கொடு போயன்றோ.* (அ : 1009)

**கொடும் படை** — வளைந்த அரிவாள். *கொடும்படை வயிரக் கோட்டால்.* (யுத் : 1898)

**கொடும்பழி** — கொடிய பழி. *கொடும் பழி கூட்டிக்கொண்டேன்.* (யுத் : 2843) (அ : 238)

**கொடும் பாவி** — கொடிய பாவியாகிய சூர்ப்பணகை. *பல்லாலே இதழ துக்கும் கொடும் பாவி நெடும்பாரப் பழி தீர்ந்தாளே.* (யுத் : 3892)

**கொடும் புணர்ப்பு** - கொடிய சூழ்ச்சி. *மாண்டனன் எந்தை என் தம்முன் மாதவம் பூண்டனன் நின் கொடும் புணர்ப்பினால்.* (அ : 863)

**கொடும் புறம்** — வளைந்த புறம். (யுத் : 3879)

**கொடும் பூண்** — கொடிய ஆபரணங்கள். *குலமணிக் கொடும் பூண் மின்ன.* (யுத் : 280)

**கொடு மனம்** - வளைந்த மனம். *துன்னருங் கொடு மனக் கூனி தோன்றினாள்.* (அ : 136)

**கொடு முடி** — விளங்கிய சிகரங்கள். *மேக்குயர் கொடுமுடி யிழந்த மேருநேர் ஆக்கை.* (ஆ : 1158)

**கொடுமுனைத் தண்டு** — கூரிய முனையுள்ள தண்டாயுதம். *ஆண்டோர் கொடுமுனைத் தண்டு கொண்டான்.* (யுத் : 2525)

**கொடுமை** — வளைவு. *கொடு மதில்.* (யுத் : 965) *குலமணிக் கொடும் பூண்.* (யுத் : 280)

**கொடுமை கூறல்** – 1. கொடிய சொற் கூறுதல். *விலங்கினம் கொடுமை கூறி.* (சு : 1266)

2. கொடுமையான குற்றஞ்சார்த்திக் கூறுதல். *கோணினன் நெடுங் கொடுமை கூறினன்.* (கி : 141)

**கொடு வெவ்வரா** – மிகக் கொடிய பாம்பு. (யுத் : 2018)

**கொடேல்** – கொடுக்காதே. *கொடேல் என நின்று தடுப்பவர்.* (பா : 440)

**கொடை** – கொடுத்தல். ஈகை. *நின்ற கொடைக் கை என் அன்பன்.* (அ : 1013)

**கொடைக் கை** – கொடைத் தொழிலையுடைய கை. (அ : 1013)

**கொடைத் தொழில்** – தானம். (யுத் : 3088)

**கொடை மருவினோர்** – ஈகைத் தன்மையில் பொருந்தியுள்ளவர்கள். *மள்கலில் பெருங் கொடை மருவினோர்.* (கி : 547)

**கொண்கர்** – கணவர். *ஆவியின் இனிய கொண்கர்ப்பிரிந்து அறிவிழந்த விஞ்சைப் பாவையர்.* (பா : 946)

**கொண்கன்** – கணவன். *சீதை கொண்கன்.* (அ : 252)

**கொண்டல்** – 1. மேகம். நீர்கொண்ட மேகம். *கொண்டல் நிறக்குறள் என்பது கொள்ளேல்.* (பா : 444)

2. மேகமண்டலம். *வன் கொண்டல் விட்டு மதி முட்டுவன மாடம்.* (சு : 96)

3. மேகம் போன்றவன்; இராமபிரான், (யுத் : 654) (யுத் : 2367)

**கொண்டல் நிறத்தினன்** – நீர்கொண்ட மேகம்போன்ற கரு நிறத்தினை யுடைய இராமபிரான். (ஆ : 546)

**கொண்டலின் குழவி** – கரிய மேகத்தின் கொழுந்து. (வை .மு) (அண்) இளம்பிறை. (கலா) *கொண்டலின் குழவி ஆம்பல் குனிசிலை.* (கி : 801)

**கொண்டார்** – கொண்ட கணவர். *கொண்டாரே கொண்டாடும் உருப் பெற்றுற் கொள்ளீரோ.* (ஆ : 355)

**கொண்டிறத்தல்** – கொண்டு செல்லல். கடத்தல். *மானிடன் கொண்டிறந்தனன்.* (யுத் : 3178) *உலகெலாம் ஒறுப்பான் கொண் டிறந்தமை அறிகிலராமெனக் குழையா.* (சு : 341)

**கொண்டு** – அசை. *என்று கொண்டினைய கூறி.* (அ : 296)

**கொண்மின்** – உறுதியாக மனத்துக்கொள்ளுங்கள். *கொன்றிடு வீரலிர் கொண்மின் இதென்றான்.* (யுத் : 2257)

**கொண்மு - கொண்மூ. மேகம். குறுக்கல் விகாரம்.** *வெண் கொடியோடு துடக்கிய கொண்மு வெலாம்.* **(யுத் : 1699)**

**கொண்மூ - மேகம்.** *சூனிறக் கொண்மூக் கிழித்திடை துடிக்கும் மின்னென.* (சு : 411)

**கொணர்தல் - கொண்டுவந்துதவுதல்.** *கொணரச் செப்பென்றான்.* **(யுத் : 622)** *காற்றின் படை கொண்டு நடந்தனுல்.* **(யுத் : 2351)** *கொணர்வல்.* **(கி : 207)** *கொணர்தி.* (கி : 375) *கொணர்குவென் விரைவில்.* **(யுத் : 2664)** *கொணரிய.* **(யுத் : 3206)**

**கொத்து - கூட்டம் தொகுதி. கூட்டத்தார். (உ. வி) பனங்குலே.** *கொத்துறு தலையான்.* **(யுத் : 725)**

**கொத்துதல் - குத்துதல்.** *மூக்காற் கொத்தி நகத்தாற் குடையா.* **(ஆ : 925)**

**கொத்துறுதலே - கொத்துக்கொத்தாக உள்ள தலே.** **(யுத் : 725)**

**கொத்துறு தலேயான் - இராவணன். (யுத் : 725)**

**கொதித்தல் - 1. பொங்குதல்.** *கொள்ளே கொள்ளக் கொதித்தெழு பாற்கடல்.* **(பா : 709)**

**2. கோபித்தல்.** *வானவர் தம் கோனென்பதென் எம்பி கொதித்திடு மேல்.* **(யுத் : 1755)**

**கொதிப்பு - 1. விரைவு.** *கொழுநரைத் தழுவுறும் கொதிப்பால்.* **(சு : 1209)**

**2. உக்கிரம். கடுமை.** *அமர்த்தொழிற் கொதிப்பை நீக்கினுன்.* **(ஆ : 474)**

**கொதுகின் இனம் - கொசுகுக் கூட்டம். (பா : 104)**

**கொதுகு - கொசுகு.** *கொசுகின் இனத்தையும் ... ... ... ... இதமல நினேவார் மனத்தையும் எறியும் பொறியுள என்றுல்.* **(பா : 104)**

**கொந்தளக் குஞ்சி - சுருண்ட தலேமயிர்.** *கொந்தளக் குஞ்சிச் செங் கேழ்ச் சண்ட வெங் கதிரோன் செக்கர்த்தழல்.* **(யுத் : 3127)**

**கொந்தளக் கோலக் கொண்டல் - சுருளாகப் பரந்த அழகிய மேகம்.** (யுத் : 2780) [பா : பே]

**கொந்தள பாரம் - கூந்தல்.** *வாசக் கொந்தள பாரஞ்சோரக் குலமணிக் கலன்கள் சிந்த.* (பா : 870)

**கொந்தளம் - 1. மயிர்க் கொத்து. மயிர்ச் சுருள். கூந்தல் முடி (குந்தலம் - மயிர்முடி)** *கொய்திறச் சடையின் கற்றைக் கொந்தளக் கோலக் கொண்டல் நொய்தினில் துளக்கி.* (யுத்: 1389) (யுத்: 2780)

2. **பொங்கி எழுகை.** (வை. மு) **சுருளாகப் பரத்தல்.** (கலா) குந்தலம் பாரக் கற்றைக் கொந்தளக் கோலக் கொண்டல். **(யுத் : 2780)**

**கொந்து - பூங்கொத்து.** கட் கொந்தார் குழலினுரை ஏற்றுதல் கடன் மைத்து என்ருன். **(யுத் : 4096)**

**கொப்பளித்தல் - கக்குதல். வெளிப்படுத்தல்.** குருதி கொப்பளிக்கும் வேலான். **(யுத் : 4280)**

**கொப்பூழ் - குமிழி.** சீறடி நீர்க் கொப்பூழின் நறியன. **(அ : 583)**

**கொம்பர் - பூங்கொம்பு. பூச்செடி.** அணியிழை எனலாகும் நகுமலர் நிறைமாலைக் கொம்பர்கள். **(அ : 700)** [பா : பே]

**கொம்பு - 1. தடி.** இம்பர் நல்லறஞ் செய்ய எடுத்த விற் கொம்புமுண்டு. **(கி : 568)**

2. **பூங்கொம்பு.** கொடியினெ டிளவாசக் கொம்புகள் ... ... ... துவள்வன. **(அ : 705)**

3. **துளைக்கருவி விசேடம்.** சங்கியம்பின கொம்பியம்பின. **(அ: 245)**

4. **பெண். (ஆகு)** குணங்களை யென் கூறுவது கொம்பினைச் சேர்ந்தவை யுய்யப் பிணங்குவன. **(பா : 767) (ஆ : 118)**

5. **ஊது கொம்பு.** கொட்டிய துடியினன் குறிக்கும் கொம்பினன். **(அ : 1001)**

6. **துத்தரிக் கொம்பு.** கொம்பு துத்தரி கோடதிர் பேரிகை. **(அ : 647)**

7. **தந்தம்.** மஞ்ஞைத் தோகையும் தும்பிக் கொம்பும். **(பா : 574)** கொம்பு நான் குடைக் குலக்கரி. **(யுத் : 1456)**

8. **கிளை. மரக்கிளை.** கற்பகக் கொம்பு. **(யுத் : 1074)** பெருந் தடங் கொம்பிடைப் பிரிந்த சேவலை. **(யுத் : 336)** கொம்பிற் கிள்ளைப் பிள்ளை. **(பா : 1002)**

9. **கிளையால் ஆகிய வீடு.** வெம்பு காட்டிடை வெரிநுறப் பாய்ந்த கொம்பு காட்டுதிரோ. **(ஆ : 512)**

10. **பூங்கொம்பு போன்ற பெண். சீதை.** கொம்பினைக் கண்டிலர் குப்புற்றேகினுர். **(கி : 836) (யுத் : 3230)**

**கொம்புடை மலை - யானை. (யுத் : 4337)**

**கொம்புதலை கட்டிய கொலைக்கரி - கொம்புகள் தலையில் உறுதியாக அமைக்கப்பட்ட கொலைத்தொழிலை மேற்கொண்ட மதயானை.** கொம்புதலை கட்டிய கோலைக்கரி கடுப்பான். **(ஆ : 529)**

**கொம்பு துத்தரி - ஊது கொம்பாகிய துத்தரி. இரு பெயரொட்டு. (அ : 640)**

**கொம்மை – 1 பருமை. பருமன்.** *குங்குமக் கொம்மைக் குவிமுலை.* **(சு : 416)** *கொம்மைக் குயம்.* **(யுத் : 1685) (அ : 911)**

**2. வலிமை.** (உ.வி) *கொம்மைக் குயம்.* **(யுத் : 1685)**

**கொம்மைக் குயவட்டணை கொண்டிலனோ – வன்மையுடைய வாட் படையால் (வலமிடமாகச்) சாரிதிரிந்து வெற்றிகொண்டேனல்லனோ.** (அண்) **மண் திரட்சையுள்ள குயவனுடைய சக்கரத்தைப்போலச் சுழல அடித்திலேனோ.** (வை. மு) **பருமையான அவர்கள் மார்பில் தாளம் இடுதலைச் செய்திலேனோ.** (கலா) **(யுத் : 1685)**

**கொம்மை நன்னிதிக் குவை – திரண்ட மிகுந்த பணக்குவியல். (யுத் : 1175)** [பா : பே]

**கொமை – திரட்சை.** *கொமையுற வீங்குகின்ற குலிகச் செப்பணைய கொங்கை.* (பா : 1211)

**கொய் குலமலர் – கொய்யப்பெற்ற சிறந்த மலர் மாலை.** *கொய் குலமலர் மார்ப கூறுவதுள தென்றான்.* **(அ : 718)**

**கொய்குறுதல் – கொய்தல்.** *கொய்யா மலரால் மலர் கொய்குறுவாள்.* **(ஆ : 775)**

**கொய்குறுவாள் – (பூக்) கொய்கின்றவள். (ஆ : 775)**

**கொய்சகம் – அரையில் உடுத்தும் சீலையிற் கொய்துவிடும் தலைப்பு.** *கலுழன் சிறைவிரித்தன்ன கொய்சக மருக்குறச் சேர்த்தி.* **(யுத்: 3611)**

**கொய்தல் – 1. துணித்தல். அறுத்தல்.** *உன் வழியோடுங் கொய்தானன்றே கொற்றமுடித்துன் குழுவெலாம்.* **(ஆ : 742)** *கொய்துகுறைத்தான்.* **(யுத் : 825)** *வாளிகள் கொய்வன தலைகொள.* **(யுத் : 1792)** *பகழியாலே கொய்தனன் அகற்றி.* **(யுத் : 1870)**

**2. பிடுங்கல்.** *கொய்யுமின் குடரினைக் கூறு கூறுகள் செய்யுமின்.* **(சு : 1043)**

**3. பறித்தல்.** *கொய்யுநர் இன்மையின் ...... உலர்ந்தன.* **(அ : 812)**

**கொய்தளிர் – இளந்தளிர்.** *கொய்தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரம்.* (சு : 933)

**கொய்திறச் சடையின் கற்றை – கொய்துவிடுவதற்குரிய தன்மை வாய்ந்த சடைத் தொகுதி.** (யுத் : 1389)

**கொய்யல் தழை – கொய்யா மரத்தின் தழை.** *தன்னேரில்லாள் அங்கொரு கொய்யற்றழை மூழ்கி.* (பா : 1005) [பா : பே]

**கொய்யா மலர் – என்றும் பறியாத தாமரை மலர். முன் கை.** (ஆ : 775)

**கொய்யுநர் - கொய்வோர்.** முதிர்ந்து கொய்யுநர் இன்மையின் மூக்கவிழ்ந்துதிர்ந் துலர்ந்தன ஒண் மலரீட்டமே. (அ : 812)

**கொய்யுளை - கொய்யும் பிடரி மயிர்.** கொய்யுளைப் புரவி. (யுத்: 1204)

**கொய்யுளைப் புரவி - கொய்த பிடரி மயிரினையுடைய குதிரை.** (யுத் : 1204)

**கொல் - 1. முறித்தல்.** கந்து கொல் யானை. (அ : 210)

**2. வதைத்தல்.** ஊனறக் கொன்று துகைக்கவும். (சு : 798) கொல்லோடு சுடர்க்கணை. (யுத் : 3456)

**3. கொலைத்தொழில்.** கொல்லினுல் அமைத்த தாண்டோர் கொடு முனைத் தண்டு. (யுத் : 2525)

**4. அசை.** அடியிணை பொறை கல்லா என்று கொல். (அ : 705) (பா : 371)

**கொல்கை - கொல்வது.** கொல்கை ஓர் பொருளிற்றேதான். (யுத் : 1653)

**கொல் கொள் வேற்கணூர் - கொற்றெழில் வாய்ந்த வேல்போலும் கண்களையுடையவர். (கொடிச்சியர்)** கொற் கொள் வேற்கணூர் குரீஇ யினத்தெறி குருவிந்தக் கற்கள். (அ : 753)

**கொல்லலிர் கொணர்திர் - கொல்லாமல் கொண்டுவாருங்கள்.** கொல்லலிர் குரங்கை நொய்திற் பற்றுதிர் கொணர்திர். (சு : 752)

**கொல்லலை தருக - கொன்றுவிடாமல் இங்கே கொணர்க.** (சு : 1070)

**கொல்லன் - கொல்லுந் தன்மையுடையவன்.** (வை. மு) **இரும்புப் பணியாளன்.** (கலா) விரிகடற்றட்டான் கொல்லன் வெஞ்சினத் தச்சன் வெய்யோன். (யுத் : 2385)

**கொல்லனுதுலை - கொல்லனுடைய ஊதுகின்ற உலைக்களம்.** கொல்லனுலையிற் றுள்ளும் பொறியிற் சுடுமன்னே. (யுத் : 5)

**கொல்லாத விரதத்தார் - ஆருகதர்.** கொல்லாத விரதத்தார்தம் கடவுளர் கூட்ட மொத்தார். (யுத் : 3129)

**கொல்லாத விரதத்தார் தம் கடவுளர் தம் கூட்டம் - கொல்லாத விரதத்தைக் கொண்டவரான அருக மதத்தவருடைய தெய்வங்களின் கூட்டம். இத்தெய்வம் அரையில் ஆடையின்றி இருக்கும்.** (யுத் : 3123)

**கொல்லாழி - கொல்லவல்ல சக்கராயுதம்.** கொல்லாழி நீத்தங்கோர் குனி வயிரச்சிலை தடக்கைக் கொண்ட கொண்டல். (பா : 717)

**கொல்லி - 1. ஒருவகைப் பண்.** (அண்) (கலா)

**2. அரிவாள்** (வை. மு) கொல்லி வாங்கிய குன்றவர். (அ : 749)

**கொல்லிய - கொல்லுதற் பொருட்டு.** *நின்னை என்னைக் கொல்லிய கொணர்ந்து. (கி : 361)*

**கொல்லியர் - கொலையாளிகள்.** *கொன்மின் என்றனன் கொல்லியர் சேர்தலும் நின்மின் என்றனன் வீடணன். (சு : 1152)*

**கொல்லிய வரினும் - கொல்லும்படி வந்தாலும்.** *கொல்லிய வரினும் உள்ளங் கூறுவன் தெரிய என்னு. (யுத் : 1599)*

**கொல்லினுல் அமைத்த கொடுமுனைத் தண்டு - கொல்லும் தொழிலினுல் இயற்றிய கூரிய முனையையுடைய தண்டாயுதம்.** (யுத்: 2525)

**கொல்லுதல் - 1. முறித்தல்.** *கந்துகொல் யானைக் களிமன்னர். (அ : 210)*

**2 ஒளி மழுங்கச் செய்தல்.** *பொன்னைக் கொல்லும் ஒளி. (யுத் : 226) மின்னைக் கொல்லும் ... ... எயிறு. (யுத் : 226)*

**3. வருத்துதல்.** *வயிறு கொன்று. (யுத் : 3631) என்னைக் கொன்றிறந்தபின். (சு : 432) ஆசை நோய் கொன்றதென்ருல் ஆண்மை மாசுணுதோ. (யுத் : 1594)*

**4. துவைப்பித்தல். உழக்குவித்தல்.** *கொன்ற நெற்குவைகள் செய்வார். (பா : 52)*

**5. உயிர் கவர்தல்.** *கோறிர். (யுத் : 3258) கொல்லலை நாசியைக் கொன்று நீக்கினுய். (ஆ: 1129) கொன்மின். (சு: 482) கொல்லியர். (சு : 1152) கொல்லிய. (யுத் : 1599) (யுத் : 226) கொல்லுநர். (யுத் : 226) கொன்றிடு வீரலிர். (யுத் : 2257) கொல்கிலாய். (பா : 640) கொல்கிலது. (அ : 877) கொல்வீர். (யுத் : 225) கொல்லான். (யுத் : 225)*

**6. கெடுத்தல். அழித்தல்.** *பொன்னைக் கொல்லும் ஒளி. மின்னைக் கொல்லும் வெயிற்றின் எயிறு. (யுத் : 226)*

**கொல்லுதல் செய்தல் - கொன்றுவிடுதல்.** *அக்கருணையில்லோன் கொல்லுதல் செய்தானுகில். (யுத் : 875)*

**கொல்லுநர் - கொலைசெய்பவர்.** *(யுத் : 226)*

**கொல்லுயர் களிற்றரசர் கோமகன் - பகைவரைக் கொல்லுவதும் உயர்ந்து விளங்குவதுமான யானைகளையுடைய மன்னவன். (தசரதன்)** *(பா : 1241)*

**கொல்லென் - கொல்ல என். தொகுத்தல் விகாரம்.** *நேரே செல்வென் கொல்லென். (யுத் : 3803)*

**கொல்லென - கொல் என்று சொல்லி. (உ. வி) கொல்லென்ற ஒலியுண்டாகும்படி.** *கொல்லென எறிந்தனன் ... ... பிழைப்பிலாச் சூலம். (யுத் : 1477)*

**கொல்லோடு சுடர்க்கணை** - கொல்லுதல் தொழில் மிக்குள்ள சுடரை யுடைய அம்புகள். (யுத் : 3456)

**கொல்வித்தல்** - கொல்லும்படி செய்தல். *கொல்விக்கும் சிந்தையனாய்.* (பா: 745) *கொல்வித்தான்.* (யுத்: 2162) *கொல்வித்து.* (யுத்: 1949) *கொல்விக்க.* (யுத் : 2843)

**கொலை** - 1. கொல்லுதல். உயிர் கவர்தல். *நின்னைத் தந்த உதவியை உணர நோக்கின் உயிர்க் கொலைக் குரியரல்லர்.* (சு : 477)

2. கொலைத்தொழில். *கொலை கிடந்த வேல்.* (யுத் : 1289)

3. கொலைத்தண்டனை. *தக்க கொலைகளிற் கொல்லும்.* (யுத் : 271)

**கொலைக் கண்** - கொலைத்தொழிலைச் செய்கின்ற கண். *கூற்றம் போலுங் கொலைக் கணினாலன்றி மாற்றம் பேசுகிலாளை.* (பா : 851)

**கொலைக்கணை** - கொல்லுந் தன்மையுள்ள அம்புகள். *ஆயிர கோடி கொலைக்கணை வீசி.* (யுத் : 2074)

**கொலைக்கரி** - கொலைத்தொழிலை மேற்கொண்ட மதயானை. (ஆ : 529)

**கொலை கோள்** - கொலைத்தொழில் செய்தல். *கொலை கோளறியா நின்றானொடு.* (யுத் : 1727)

**கொலை சூழ்தல்** - கொல்ல முயலுதல். *தாதை வந்து தான் தனிக் கொலை சூழினும் சாகான்.* (யுத் : 148)

**கொலைத்தலை வாளி** - கொலைத் தொழிலில் தலைமைபெற்ற அம்புகள். (யுத் : 2419)

**கொலை துமித்தல்** - கொலையை ஒழித்தல். *கொலை துமித்து உயர் கொடுங்கதிர் வாளின் அக்கொடியாள் முலை துணித்து.* (ஆ : 320)

**கொலை நீடுதல்** - கொலைத்தொழில் மிகுதல். *உயர் கொலை நீடிய இயல்பால்.* (யுத் : 2506)

**கொலை நேர்தல்** - கொலைக்குக் கொடுத்தல். கொலை நிகழுமாறு உடன்படல். *தந்தாயரைத் தனையர் யாரே கொலை நேர்ந்தார்.* (ஆ : 994)

**கொலை மிசை** - கொல்லுதல் தொழிலில். *கொலை மிசை நஞ்செனக் கொதிக்கும் நெஞ்சினார்.* (ஆ : 422)

**கொலையின்மேற் குறித்த வேடன்** - கொல்லுதல் தொழிலில் எண்ணங் கொண்ட வேடன். *கொலையின்மேற் குறித்த வேடன் கூர்ங்கணை உயிரைக் கொல்ல.* (யுத் : 3189)

**கொலை வல்லார்** - கொல்லுதல் தொழிலில் வல்லவர். *கோறிர் என்றனன் என்றலும் பற்றினர் கூற்றினுங் கொலை வல்லார்.* (யுத் : 216)

**கொலைவாட் கண் – கொல்லுதல் தொழிலுள்ள வாள்போன்ற கண்.** *கொலைவாட் கண் அரக்கியர்.* (யுத் : 1953)

**கொவ்வை – ஆதொண்டைப் பழம்.** *கொவ்வை வாய்த் திதில் தெய்வ மடந்தையர்.* (அ : 1078)

**கொவ்வைச் செவ்விவாய் – கொவ்வைப் பழம்போலச் சிவந்த அழகிய அதரம்.** *குயில்தொடர் குதலை ஓர் கொவ்வைச் செவ்விவாய் மயில் தொடர் இயலியாய் மருவல் நன்றெனா.* (ஆ : 253)

**கொவ்வை நோக்கிய வாய் – கொவ்வைப்பழம் போலும் வாய்.** *கொவ்வை நோக்கிய வாய்களை இந்திர கோபம் கவ்வி நோக்கின என்று கொல்.* (பா : 906)

**கொவ்வைப் பழன் – கொவ்வைப் பழம்.** *பவளமுங் கிடையுங் கொவ்வைப் பழனும்.* (கி : 792)

**கொவ்வை வாய் – கொவ்வைக்கனி போன்று சிவந்த வாய்.** (அ: 1078)

**கொவ்வை வாய்ச்சியர் – கொவ்வைக்கனி போன்ற வாயையுடைய பெண்கள்.** *குதைவரிச் சிலை நுதற் கொவ்வை வாய்ச்சியர்.* (பா: 141)

**கொழித்தல் – 1. தெரிவுசெய்து கொடுத்தல்.** (கு)

**2. பயனற்றவை என்று தள்ளுதல்.** (வை. மு)

**3. கொழித்து வெவ்வேறாக எடுத்தல்** (கலா) *குற்றபாகு கொழிப்பன ... ... தம் முன்றிலில் சிற்றில் கோலிச் சிதறிய முத்தமே.* (பா : 60)

**4. (அலை) வீசுதல்.** (வை. மு) **தெள்ளி யெடுத்தல்.** (கலா) **மிகுவித்தல்.** (அண்) *அணி கொழித்து வந்து.* (கி : 904)

**5. நிறைதல்** *பிணி கொழித்த வெம்பிறவி.* (கி : 904) [பா : பே]

**6. அடித்துக்கொண்டு செல்லல். ஒதுக்குதல்.** (அண்) *பிறவி வேரின் வன்துணி கொழித்து.* (கி : 904)

**7. வாரிக்கொண்டு சேர்த்தல். வீசுதல்.** (அண்) *மணி கொழிப் பதன் கரை.* (கி : 904)

**8. போக்குதல்.** (அண்) *பிணி கொழித்து.* (கி : 904)

**9. ஆர்த்தல்.** (அண்) *கொழிக்குங் கடல்.* (யுத் : 5)

**கொழு – கலப்பையின் நுனியிற் செறிக்கப்படும் இரும்பு.** *வீரவாட் கொழுவென மடுத்துழுதிரோ.* (ஆ : 514)

**கொழு கொம்பு – கொடிகள் மேலேறிப் படர்தற்குக் கொள் கொம்பு.** *முதிய நான்மறைக் கொழுந்து மேற்படர்தரக் கொழு கொம்பாயினான்.* (பா : 253) [பா : பே] *அழுந்திய உயிர்க்கெலாம் கொழுகொம்பாயினான்.* (பா : 839) [பா : பே]

**கொழுங் கடை - 1. கொழுவிய கண்களின் ஓரங்கள்.** *கொலை பயில் நயன வேலின் கொழுங் கடை சிவந்த.* (யுத் : 2779)

**2. அழகிய முனை.** *கொழுங்கடைப் புருவம் நெற்றி முற்றச் சென்றன.* (பா : 330)

**கொழுங்கடைப் புருவம் - செழுமையான புருவங்களின் முனைகள்.** (யுத் : 452)

**கொழுங்கதிர் - சிறப்பான கிரணங்கள்.** *கொழுங்கதிர் பகைக் கோளிருள் நீக்கிய கொள்கை.* (யுத் : 538)

**கொழுங் குவடு - கொழுத்த மலை. (மேரு)** கோவையார் வடக் கொழுங் குவடு உடைதர நிவந்த. (பா : 898)

**கொழுந்தன் - 1. கணவனுடன் பிறந்தவன்.** *கொழுந்தா என்ருள் அயோத்தியர் தங்கோவே என்ருள்.* (யுத் : 2632)

**2. கணவன்.** (கலா) (யுத் : 2632)

**கொழுந்தி - மைத்துனி.** *கொழுந்தியும் மீண்டாள்.* (யுத் : 3535) *மங்கை கொழுந்தி எனச்சொன்ன வாழி நண்பிணையுன்னி மயங்குவாள்.* (சு : 352)

**கொழுந் தீ - செழுமையான தீ.** *செய்ய கொழுந் தீ.* (யுத் : 2817)

**கொழுந்து - 1. தலைப்பு.** முன்பக்கமுள்ளது *சேனையின் கொழுந்து.* (பா : 889)

**2. சுட்டி. நெற்றிச்சுட்டி.** வானமீனினம் பிறையை வந்து கதுவுறுகின்ற தென்னக் கொழுந்தொளி கருலத் தூக்கி. (பா : 1206)

**3. மருக் கொழுந்து.** *விற் கொள் வாணுதல் விளங்கிழை இளந்தளிர்க் கொழுந்தே.* (பா : 753)

**4. முதிராத இள ஒளி.** *அயலெங்கும் கொழுந்துடைய சாமரை குலாவ.* (பா : 1226)

**5. நுனிப்பாகம்.** *கொடிக் குழியின கொழுந்தெடுத் தெழுந்து மேற் கொள்ள.* (யுத் : 2492)

**6. சுவாலை.** *கொழுந்துறு தீ.* (சு : 914)

**கொழுந்துடைய சாமரை - முதிராத இள ஒளியையுடைய சாமரை.** (பா : 1226)

**கொழுந்துவிட்டெரி வெகுளியன் - சுவாலை விட்டு எரிகின்ற கோபாக் கினியையுடையவன். சன்னு முனிவன்.** *'கொழுந்து விட்டெரி வெகுளியன் குடங்கையிற் கொள்ளா.* (பா : 534)

**கொழுந்து வீச - முற்பட்டு வீச.** *தூளி விசும்பின்மேற் கொழுந்து வீச.* (*யுத் : 2044*) [*பா : பே*]

**கொழுந் தோடிப்படர் கீர்த்தி - கொழுந்து விட்டுப் படரும் புகழ்.** *கொழுந் தோடிப் படர் கீர்த்திக் கோவேந்தன்.* (*பா : 238*)

**கொழுநர் - கணவர்.** *கொழுநர் மேல் மகளிர் மாழ்கிக் குயில் தலத்துக்க வென்னக் குழைகின்ற குழைவை நோக்கும்.* (*யுத் : 2423*)

**கொழுநன் - கணவன்.** *கொழுநன் துஞ்சும் எனவும்.* (*அ : 339*)

**கொழுமணி - பருத்த பேரொளியுள்ள மணி.** *கொழுமணி முடிகள் தோறும் கொண்டன மணியின் கூட்டம்.* (*யுத் : 872*)

**கொழுமுகம் - கொழுவின் முனை.** *உழுகின்ற கொழு முகத்தின் உரு வெளிப்பட்டெடன.* (*பா : 766*)

**கொழுமை - இளமை. அழகு.** *கொழுங்கண் நங்கைமார்களைப் புல்லுதிரோ நலநுகர்வீர்.* (*ஆ : 511*)

**கொழுவென மடுத்துழுதல் - கொழுவாகக் கலப்பையிற் செறித்து உழுதல்.** *அயில் வேல் வீரவாள் கொழுவென மடுத்துழுதிரோ.* (*ஆ : 514*)

**கொள் - 1. ஒத்த.** *வேய்கொள் தோளி.* (*அ : 833*)

**2. ஏற்றுக்கொள்.** *வள்ளல் மணத்தை மகிழ்ந்தனன் என்றால் கொள்ளென முன்பு கொடுப்பதையல்லால்.* (*பா : 779*)

**3. கொண்ட.** *நுதிகொள் மூக்கு.* (*சு : 666*)

**4. கொண்டிருத்தல்.** *உலைகொள் வெம்பொறி.* (*யுத் : 2420*)

**கொள்க - கொள்ளுவாயாக.** *அடிஒரு மூன்றும் நீ அளந்து கொள்க என.* (*பா : 452*)

**கொள் கடன் - பெறுதற்குரிய உபசாரங்கள்.** *கோமுனிக்கரசனை இருத்திக்கொள்கடன் ஏமுறத்திருத்தி.* (*பா : 257*)

**கொள்கை - 1. செயல்.** *குன்ற மன்னசிலை முறிந்த கொள்கை கண்டு.* (*பா : 804*) *புகுந்த கொள்கை.* (*யுத் : 1094*)

**2. இயல்பு. தன்மை** *குன்றெழுமித் தொருமாக் குன்றின் அரிதிற் சேர் கொள்கை போல.* (*சு : 310*) *அடுசிலை யுதைத்த பேரம்பு ... குரைகடற் குளித்த அக்கொள்கை.* (*யுத் : 1209*)

**3. நிகழ்ச்சி.** *குமரர் நீரிவண் அடைத்துதவு கொள்கை எளிதோ.* (*ஆ : 4*) *இது என்ன கொள்கையோ.* (*கி : 982*)

**4. உட்கோள்.** *காண்டகு கொள்கை உம்பர் இல்லெனக் கருத்துட் கொண்டான்.* (*சு : 2*)

5. **வல்லமை.** வானே நிலனே முதன் மற்றுமெலாம் கோனே எனை வெல்வதோர் கொள்கையதோ. (யுத் : 2357)

6. **கொள்ளுதலையுடைமை.** (அண்) அறநெறியுற்ற எண்ணிலாக் கோனிகர் குடிகள் தம் கொள்கை சான்றன. (பா : 126)

7. **கருத்து. எண்ணம்.** கோதைவிற் குரிசில் அன்னான் கூறிய கொள்கை கேட்டான். (அ : 662)

8. **கோட்பாடு.** கொன்று சோரி குடித்தவர் கொள்கையை வென்று மீளுதிர். (ஆ : 380)

9. **தோற்றம்.** கோயிலெய்தினன் குன்றன்ன கொள்கையான். (யுத் : 1288)

**கொள்கை மூத்தது - முதுமையடைந்தது.** (வை. மு) **வலிமை முடிந்திட்டது.** (கலா) கொள்கை மூத்தது போலாம் என்னுடைய முயற்சியெல்லாம். (யுத் : 2248)

**கொள் கொம்பு - கொழு கொம்பு. சிறு கொடி.** நுடக்கந் தீரக் குயிலுறத்தமைய வைத்த கொள் கொம் பென்றுணர்ந்து கோடி. (கி : 784) (பா : 253) (ஆ : 942)

**கொள்வார் - பொருளை வாங்கிக்கொள்பவர்கள்.** கொள்வாரிலாமைக் கொடுப்பார்களுமில்லை மாதோ. (பா : 165)

**கொள்ளக் குறையா நிதியின் குவை - (இரவலர்) கொள்ளக் கொள்ளக் குறையாத செல்வக் குவியல்.** அகன் மாநிலமும் அரசும் கொள்ளக் குறையா நிதியின் குவையும். (அ : 357)

**கொள்ளல் (கொள்ளுதல்) - 1. அறிந்து கொள்ளுதல்.** மாயங்கள் குறித்தனவே கொள்ளலாம். (ஆ : 362)

2. **வேண்டிப்பெறுதல்.** கூறிய மனிதர்பாற் கொற்றங் கொள்ளலை. (யுத் : 90)

3. **மனத்துக் கொள்ளல்.** கொன்றிடு வீரவிர் கொண்மினிதென்றான். (யுத் : 2257)

4. **தாங்குதல்.** சடை கொள் சென்னியர். (அ : 771) வளைகொள் வாளெயிற் றரக்கன். (யுத் : 1448)

5. **பொருந்துதல்.** மருக் கொள் தாமரை. (யுத் : 142) காடு கொண்ட காருலவைகள். (ஆ : 448) பொலங் கொள் நாண். (யுத் : 1202)

6. **பெற்றுக்கொள்ளுதல்.** ஆரிடைச் சென்றுங் கொள்ள வொண்ணிலா அழகு கொண்டாள். (பா : 1030) கைப்பொருள் கொண்டுழி ஒருநிலை நிற்பர். (யுத் : 376)

7. **ஆளுதல்.** தொல்லை அண்டங்கொள் தேவர். (யுத் : 726)

8. **ஏற்றுக்கொள்ளுதல்.** ஏவமென்றொரு பொருள் யாண்டுக் கொண்டியோ. (யுத் : 4014)

**கொள்ளாமை – கொள்ளுதலைச் செய்யாமை.** கொண்டல் நிறக் குறள் என்பது கொள்ளேல். (பா : 444) கொள்ளேன் நாடு என்றானுக்கு இவை ஏலாவோ. (சு : 650) பாரோர் கொள்ளார். (அ : 875) கொள்ளான் நின்சேய் இவ்வரசு. (அ : 211)

**கொள்ளி – தீக்கொள்ளி. கொள்ளிக்கட்டை.** கொள்ளியின் சுடர் அனலிதன் பகழி. (யுத் : 2882) கொள்ளி யொன்றங்கை கொண் டான். (யுத் : 2644)

**கொள்ளேல் – கருதாதே.** (பா : 444)

**கொள்ளை – 1. செழிப்பு. பெருக்கம். மிகுதி.** கொள்ளையின் அலர் கருங்குவளை நாண்மலர் கள்ளுகுவனவெனக் கலுழுங் கண்ணினார். (ஆ : 679)

2. **கவர்கை.** கொள்ளை வாட் கண்ணினார். (பா : 937) கொள்ளைப் போர் வாட் கணார். (பா : 1105)

3. **மிகுதி.** யாவையுங் கொள்ளை வெண்ணிலவினாற் கோலங் கோடலால். (பா : 1050) (உ. வி) (பா : 1321) (கி : 910)

4. **கொள்ளையடித்தல்.** பூண்டவுங் கொள்ளையிற் கொள் கெனக் கொடுக்கின்றாரினே. (பா: 1321) கொள்ளை வெஞ்செரு. (யுத்: 2487)

**கொள்ளை கொள்ளல் – கவர்தல். ஒருங்கு கவர்ந்து தன்வசமாக்குதல்.** கொள்ளைகொள்ளக் கொதித்தெழு பாற்கடற் பள்ள வெள்ளமெனப் படரும் நிலா. (பா : 709) கருங்கடல் கொள்ளை கொண்டென. (யுத் : 464)

**கொள்ளைநீர் – கடல்.** குரக்கினத் தவரொடு மனிதர் கொள்ளை நீர்க்கரைகண் வந்திறுத்தனர் என்ற காலையில். (யுத் : 321)

**கொள்ளைப் பட்டன – மிகுதியாக அகப்பட்டன. அளவு கடந்தன.** மறலிக்கோர் கொள்ளைப்பட்டன உயிர். (சு : 957)

**கொள்ளைப்போர் வாட்கணாள் – போரில் உயிரைக் கொள்கின்ற வாள் போலும் கண்ணையுடையவள்.** (பா : 1105)

**கொள்ளை படுதல் – மிகுதியாகக் கவரப்படுதல்.** இகலிராமன் கோதை புனையாமுன் உயிர் கொள்ளைபடு மன்றே. (ஆ : 752) (சு : 957)

**கொள்ளை பூணுதல் – திரளாக குவிதல்.** கொள்ளை பூண்டமரர் வைகும் குன்று. (யுத் : 779)

**கொள்ளை போகின்ற செல்வம் – 1. மிகவும் அதிகமாகக் கிடக்கின்ற செல்வம்.** (அண்) கொள்ளைபோகின்ற செல்வம் அவளுக்கே கொடுத்தி ஐய. (ஆ : 636)

**2. (நின்) காதன் மகளிராற் பெரிதும் கொள்ளப்படும் அச்செல்வம்.** (கலா)

**கொள்ளை மாக்கள் – கொள்ளையடித்துச் செல்லும் கள்வர்.** வயிரியர் கொள்ளைமாக்களிற் கொண்டனர் ஏகவே. (அ : 824)

**கொள்ளை மா நிதியம் – மிகவும் பெரிய செல்வம்.** கொள்ளை மா நிதிய மெல்லாம் அவளுக்கே கொடுத்தி ஐய. (ஆ : 637) [பா : பே]

**கொள்ளையிற் கொள்க – தாமே கொள்ளைபோலக் கொள்க.** (பா: 1321)

**கொன்னை வாட் கண்ணினர் – ஆடவருயிரைக் கொள்ளை கொள்ளும் வாள்போன்ற கண்களையுடைய மகளிர்.** (பா : 937)

**கொள்ளை வெஞ் செரு – உயிர்களைக் கொள்ளை கொள்ளுதற்குரிய கொடிய போர்.** (யுத் : 2487)

**கொளீஇ – 1. கொளுத்தி.** நந்தலில் வியன்கருப்பூர மென் பஞ்சி மீக் கொளீஇ. (ஆ : 577)

**2. கொள்ளுமாறு செய்து.** தசைக் கொளீஇ. (யுத் : 1291)

**கொளு கொம்பு – ஒன்று மேலே படர அதனைக் கொள்ளும் கொம்பு.** முதிய நான் மறைக் கொழுந்து மேற்படர்தரக் கொளு கொம்பாயி னன். (பா : 253)

**கொளுந்த – கொளுந்துதலால்.** கொடுங்கனல் தொடர்ந்தன கொளுந்த. (யுத் : 556)

**கொளுவுதல் – 1. பூட்டுதல்.** தடஞ்சிலையின் உயர் நெடுநாண் உட்கொளுவாச் சிரங்கோண்டான். (யுத் : 1579)

**2. எரித்தல்** கொடியைப் பற்றி விதானங்கொளுவி. (சு : 1183)

**கொளுஉ – கொண்டு.** பொன்னின் வார்கழற் புதுநறுந் தாமரை பூண்டு சென்னி மேற்கொளுஉ. (கி : 175)

**கொளை – பாட்டு இசை.** சிற்றியற் குறுங்கால் ஓரிக் குரல் கொளை இசையாப் பல்பேய் சுற்றியல் பாணி கொட்ட. (யுத் : 3601)

**கொற் கொள்வேல் – அச்சந்தரும் வேற்படை. (கொன் கொள்)** கொற்கொள் வேல் உழுவ. (பா : 659) கொற்கொள் வேற்கணார். (அ : 753)

**கொற்பெற்ற வேல் – கொல்லன் உலையிற் செய்த வேல்.** கொல் பெற்ற வெற்றிக் கொலை பெற்ற ஒள் வேலோய். (அ : 1126)

**கொற்ற ஆணை - வெற்றிதரும் ஆணைச் சக்கரம்.** *கொற்ற ஆணை யான.* (யுத் : 20)

**கொற்றச் செயல் - வீரச் செயல்.** *தேருதல் கொற்றச் செயலம்மா.* (கி : 1011)

**கொற்றத் தரம் - சிறந்த வெற்றி.** *கொடி நெடுங் கொற்றத்தரங் குடைந்தன.* (யுத் : 1440)

**கொற்றத்தார் - வெற்றிமாலை.** *கொற்றத்தார்க் குரிசில் இவர் ஆர்.* (அ : 1056)

**கொற்றத்தேன் - வெற்றிபடைத்த யான்.** *மூன்றுலகுங் காக்குங் கொற்றத் தேன் வீரக் கோட்டி பேசுவார் ஒருவற் காவி தோற்றிலன்.* (யுத் : 1594)

**கொற்ற நலம் - வெற்றி மேம்பாடு.** *தேசமுற்றென் கொற்ற நலத்தைச் சிரியாரோ.* (யுத் : 2611) *கொற்றத் தேன்.* (யுத் : 1594)

**கொற்றம் - 1. வெற்றி.** *மூவருந் தேவர் தாமும் முரணுக முற்றும் கொற்றம்.* (சு : 475) *கொற்ற வல்லேறு.* (கி : 274) *கொற்றப் போர்ச்சிலைத் தொழில்.* (சு : 318)

**2. அரசர்க்குரியது.** *கொற்ற மண்கணை குமுற.* (அ : 916)

**3. வலிமை.** *வழியோடுங் கொன்றுனன்றே கொற்றமுடித்துன் குழுவெல்லாம்.* (ஆ : 742)

**கொற்ற மங்கலம் - வெற்றிக்கு அறிகுறியாகவுள்ள மங்கல ஒலி.** *இரண்டு பாலும் கொற்ற மங்கலங்களார்ப்ப இராவணன் கோவில் புக்கான்.* (யுத் : 2156)

**கொற்ற மண் கணை - அரசனுக்குரிய மார்ச்சனையுடைய திரண்ட முரசு.** (அ : 916)

**கொற்றமா நகர் - அயோத்தி.** *பெற்ற தாயரும் தம்பியும் பெயர்த்தும் வந்தெய்திக் கொற்றமா நகர்க் கொண்டிறந்தார்களோ.* (சு : 346)

**கொற்றமாக் கோயில் - வெற்றி பொருந்திய பெரிய அரண்மனை.** (யுத் : 1261) (யுத் : 1267)

**கொற்றவர் - வீரர்.** *குந்தம் கற்றுயர் கொற்றவர்.* (அ : 805)

**கொற்றவன் - 1. வெற்றிபொருந்திய இராமன்.** *அக்கொற்றவன் இரங்க உய்ந்தனம்.* (யுத் : 755)

**2. சிவபிரான்.** *கொற்றவன் நெற்றிக்கண்ணின் வன்னி.* (சு: 1171)

**கொற்றவனார் - வெற்றிவீரனான இராமபிரான்.** (யுத் : 1670)

**கொற்ற வாகை - வெற்றிக்குரிய வாகைமாலை** *கொற்ற வாகையினிர்.* (கி : 754)

**கொற்ற வில் - வெற்றி விளக்கும் வில்.** குன்றம் போன்றுயர் தோளில் கொற்றவில் ஒன்று தாங்கினான். (பா : 336)

**கொற்ற வில்லி - வெற்றி பொருந்திய வில்லான். இராமபிரான்.** கொற்ற வில்லி வெல்க வஞ்சமாயர் வீக. (யுத் : 3331). **இலக்குவன்.** (யுத் : 2092)

**கொற்ற வெங்கணை - வெற்றி வாய்ந்த கொடிய அம்புகள்.** (யுத்: 2039)

**கொற்ற வெண்குடை - வெற்றியுறும் வெண்குடை. வெண் கொற்றக் குடை** இற்றதென் பகையென எழுந்த இந்திரன் கொற்றவெண் குடையென. (சு : 149) (அ : 297) (யுத் : 1205)

**கொற்றவை - வீரலட்சுமி.** கொற்றவை தழீஇய பொற்றோள் மலையினை நோக்கும். (யுத் : 3140)

**கொற்றன் - வெற்றியையுடையவன். முருகன்.** குன்றிசைத் தயிலுற எறிந்த கொற்றனோ. (சு : 1113)

**கொன் - 1. பெருமை. சிறப்பு வாய்ந்த தன்மை.** கொன்சேர் அல்குல் மேகலை தாங்கும் கொடியன்னார். (பா : 594)

2. **அச்சம்.** கொற்கொள் வேலுழவ. (பா : 659) கொன்னிறக் குருதி. (யுத் : 992)

3. **வலிமை.** (அண்) கொன்னியல் வயிரத் தோளாய். (யுத்: 2677) (யுத் : 2058)

**கொன் செய்தார் வீரர் - அச்சத்தை யுண்டாக்குபவரான வீரர்கள்.** (வை. மு) (கலா) **அச்சந்தரும் தூசிப்படையையுடைய வீரர்.** (அண்) (யுத் : 2058)

**கொன்மின் - கொல்லுங்கள்.** கொள்மின் என்றனன். (சு : 1152)

**கொன்மின் கொன்மின் - கொல்லுங்கள் கொல்லுங்கள்.** கொன்மின் கொன்மின் கொன்று குறைத்துக் குடராரத் தின்மின் தின்மின். (சு : 482)

**கொன்றல் - கொல்லுதல்.** நெடுந்தகை இவனைக் கொன்றல் உன்னிலன். (யுத் : 1213)

**கொன்றலது மீளேன்-கொன்று வென்றல்லாது திரும்பேன்.** (யுத் : 76)

**கொன்றன இன்னலள் - கொன்றாலொத்த துன்பத்தையுடையவள்.** கொன்றன இன்னலள் கொதிக்கும் உள்ளத்தள். (ஆ : 824)

**கொன்றன மானம் - தன்னைக் கொல்ல முயன்றதனால் தோன்றியது போன்ற ரோஷம்.** கொன்றன மானந்தோன்றக் கூற்றெனச் சீற்றங் கொண்டான். (யுத் : 1606)

**கொன்றீவது – கொல்வது.** *நின்னை நெடுஞ் செருவிற் கொன்றீவதோர் கொள்கை குறித்தலினே.* (*யுத் : 2640*)

**கொன்றை – கொன்றைக் காய்.** *கொன்றை துன்று கோதையயோ டொர் கொம்பு வந்து.* (*ஆ : 653*)

**கொன்றைக் குழல் – கொன்றைப் பழத்தை சுரத்தானங்களுக்கு ஏற்ப அளந்து துளைத்து ஆக்கப்பெற்ற குழல்.** *கொன்றை வேய்ங்குழற் கோவலர்.* (*பா : 65*)

**கொன்றையலங்கலான் – கொன்றை மாலையணிந்த சிவபிரான்.** *கொன்றை யலங்கலான் படை.* (*யுத் : 2553*)

**கொன்றொருக்குதல் – கொன்றொழித்தல்.** *கொன்றொருக்கினேன் எந்தையை.* (*யுத் : 2587*)

**கொன்னகம் – கொல் நகம்.** (வை.மு) **கொன் நகம் – வலிய நகம்.** (அண்) *கொன்னகங்களிற் கரங்களிற் குலைந்துக மலைந்தான்.* (*கி: 288*)

# கோ

**கோ – 1. சிறப்பு. தலைப்பு.** *கோமத்த நெடுங்கிரி.* (*யுத் : 1694*) *கோநகர் அணி கெனக் கொட்டும் பேரி.* (*அ : 122*) *கோவார் வீண்.* (*யுத் : 3551*)

**2. ஆரவாரம். ஒலிக்குறிப்பு** (*அண்*)

**3. தேவலோகம்.** (*கலா*)

**4. விட்டுணு.** (கு) *குன்றம் மாடக் கோவினளிக்குங் கடலன்றி அன்றம் மாடத்தும்பர் அளிக்கும் அமுதன்னாள்.* (*பா : 589*)

**5. அரசு. அரசன்.** *கோவின் துயிலைத் தவிர்வாய்.* (*யுத் : 2642*)

**6. பசு.** *இந்தக் கோ தரும் அமிர்தம்.* (*பா : 658*)

**7. ஆகாயம்.**

**கோக்கள் – அரசர்கள்.** *கோக்கள் வைகும் முற்றத்தான் முதற்றேவி.* (*அ : 1058*)

**கோக்குமரன் – அரசகுமாரன். பரதன்.** *கோக்குமரனுக்கது தெரியக் கூறுவான்.* (*அ : 937*)

**கோக்குலக் குமரன் – அரசவம்சத்து மக்கள்.** *அதிகாயன் முதல்வராய கோக்குலக் குமரர்.* (*யுத் : 1938*)

**கோகிலஞ் செற்றதன்ன குதலையள் – குயிலை வென்றதுபோன்ற மழலை மொழி பேசும் சீதை.** (அ : 525)

**கோகிலம் – குயில்.** *கோகிலந் துயர்ந்த மென் குதலை.* (சு : 416) (அ : 525)

**கோங் கரும்பு – கோங்கின் அரும்பு.** *கொங்கையன்ன பொருவில் கோங்கரும்பின் மாடே.* (பா : 944)

**கோங்கலர் – கோங்கரும்பு.** (ஆ : 74)

**கோங்கு - கோங்கமரம்.** *குரவங்குவி கோங்கலர் கொம்பினொடும்.* (ஆ : 74)

**கோசரம் – விஷயம். புலனுக்கு விஷயமானது.** *நயன கோசரம் மறைதலும்.* (பா : 608)

**கோசல நாடு – கோசலம் என்னும் தேசம்.** *கோசல நாடுடை வள்ளல்.* (யுத் : 1218)

**கோசலம் – கோசல நாடு.** *கோசலம் என்னும் கோதிலா நாடு.* (பா: 92)

**கோசலம் புனை ஆற்றணி – கோசல நாட்டை அழகுறுத்தும் (சரயு எனும்) ஆற்றின் பெருமை.** (பா : 12)

**கோசலை – 1. கோசல தேசம்.** *தண்டலைக் கோசலைத் தலைவன்.* (பா : 447) [பா : பே]

**2. கௌசலை.** *உய்யாள் உயர் கோசலைதான்.* (யுத் : 2638)

**கோசிகத் துகில் – கோசிகம் என்னும் பட்டினூலாகிய ஆடை.** *கோசிகத் துகில் உற்ற கொழுங்கனல் தூசின் உத்தரிகத்தொடு சுற்றுற.* (சு : 1207)

**கோசிக நுண்தூசு - பட்டாடை. பட்டாகிய நுட்பமான ஆடை.** (பா : 1214)

**கோசிகம் - 1. பட்டு.** *நிறஞ்செய் கோசிக நுண்டுசு.* (பா : 1214)

**2. ஒருவகைப் பட்டாடை.** *கோசிகத் துகிலுற்ற கொழுங்கனல்.* (சு : 1207)

**கோசிகன் – கௌசிக முனிவன்.** *ஓசையிற் பெரியதோர் உவகை எய்திய கோசிகன்.* (பா : 813)

**கோட்டகம் – நீர்நிலை.** *படைநெடுங் கண்ணுற் குவளைக் கோட்டகங் கடுத்தது.* (சு : 128)

**கோட்டம் – 1. வாசனையும் காரமுமுள்ள ஒரு வகைப் பூடு; கொட்ட மென்றும் வழங்கும்.** *கடலிடைக் கோட்டந் தேய்த்துக் கழிவது கரும மன்றால்.* (யுத் : 1364) *பெருங்கடற் கோட்டத் தேய்வை ஒத்ததென் னடிமைப் பெற்றி.* (யுத் : 2845) [பா : பே]

**2. வஞ்சகம். நேர்மையின்மை.** கோட்டமில் ஊட்டிடம். (பா: 68)

**கோட்டி – 1. செலுத்தி.** குழைதொடர் நயனக் கூர்வேல் குமரர் நெஞ்சுருவக் கோட்டி. (சு: 211)

**2. கூட்டம்.** கோட்டிமாக்களைக் கூவுவ போல்வன. (அ: 823)

**3. தலைசாய்த்து.** குவளைக் கண்ணியர் வான மடந்தையர் கோட்டித் துவள. (யுத்: 2574)

**4. துன்பம்.** கோட்டியின் தலைய கோடி கோடியம்பு. (யுத்: 2060)

**5. வரிசை.** வீரக்கோட்டி. (யுத்: 1594) வீரக்கோட்டியீர். (யுத்: 1679)

**கோட்டிகொள்ளல் – துன்புறுத்தல். இகழ்தல்.** கொள்ளைபூண்டு அமரரையும் கோட்டிகொண்ட வெள்ள நீர் வடிந்ததென்ன. (யுத்: 788) [பா: பே]

**கோட்டிமாக்கள் – கூட்டமான இரந்து வாழும் மக்கள்.** (அ: 823)

**கோட்டிய – மாறுபட்ட.** அக்கேள்வி தேர்கலாக் கோட்டிய சிந்தையான் உறுதி கொண்டிலன். (யுத்: 307)

**கோட்டு – கோடு. வளைவினையுடைய.** சிலைக்கோட்டு நுதற் குதலை. (பா: 735)

**கோட்டுதல் – 1. வளைத்தல்.** கொலைகொள் வெஞ்சிலையொடு புருவங் கோட்டினான். (அ: 746) கோட்டும் வில். (யுத்: 1034) கோட்டு வார்சிலை. (யுத்: 4054) (யுத்: 337) சேமவில் கால்கோட்டுமளவில். (ஆ: 322)

**2. அணியப் பெறுதல். குங்குமங் கோட்டில.** (அ: 970)

**3. மாறுபடல். நேர்மையின்றிச் செலுத்துதல்.** கோட்டிய சிந்தையான். (யுத்: 307)

**கோட்படாப் பதம் – அறிந்துசொள்ளப்படாத பதம்.** நாட்படா மறைகளாலும் நவைபடா ஞானத்தாலும் கோட்படாப் பதமே ஐய குரக்குருக் கொண்டது. (கி: 76)

**கோட்படுதல் – 1. பிடிக்கப்படுதல்.** புலிதானே புறத்ததாக் குட்டிக் கோட்படாதென்று. (ஆ: 326)

**2. அறிந்துகொள்ளல்.** கோட்படாப் பதம். (கி: 76)

**3. அடக்கிக்கொள்ளுதல்.** கூவலிற் புக்கு வேலை கோட்படும் என்று கொள்ளேல். (யுத்: 2651)

**கோட்பு – 1. கோட்பாடு.** இலங்கை தன்னை எப்புறத்தனவுந் தீய ஒருகணத் தெரித்த கோட்பால். (சு: 1179)

2. **வலிமை.** வீடினன் விதியின் கோட்பால். (சு: 570) [பா : பே]

3. **கொள்கை.** (அண்) குன்றினமென்ன நடந்தனர் கோட்பால். (யுத் : 2274) [பா : பே]

**கோடகத் தேர் – குதிரை பூட்டிய தேர்.** (அண்) கோடகத் தேர் படு குருதி தாவிய ஆடகத்தட்டு. (அ : 1098)

2. **முடியையுடைய தேர்.** (கலா) கோடகத் தேர்ப் படுகுதிரை தாவிய ஆடகத்தட்டு. (அ : 1098) [பா : பே]

**கோடகம் – 1. குதிரை.** (அண்) (அ : 1098)

2. **தேர்முடி.** (கலா) (அ : 1098) [பா : பே]

**கோடணை – பேரொலி (கோஷணை) முழக்கம். ஆரவாரம்.** கோடணை வரிசிலை. (யுத் : 3094) கோடணை முரசினம். (ஆ : 418)

**கோடணை குரங்கு – மரக்கிளைகளில் தத்திச் சேருந் தன்மையுள்ள குரங்கு.** கோடணை குரங்கினுக் கரசு. (யுத் : 1088)

**கோடணை குன்றம் – தந்தத்தோடு கூடிய மலையை ஒத்த யானை.** வெற்றிக் கோடணை குன்றமேறிக் கொண்டல் தேர் மருங்கு செல்ல. (யுத் : 4282)

**கோடணை முரசினம் – சங்கங்கள் பொருந்திய முரசினம்.** (அண்) **ஆரவாரத்தையுடைய பேரிகை வாத்தியங்கள்.** (வை .மு) கோடணை முரசினங் குளிறு சேனையர். (ஆ : 418)

**கோடணை வரிசிலை – பெரு முழக்கத்தையுடைய கட்டமைந்த வில்.** (யுத் : 3694) [பா : பே]

**கோடணை வரிவில் – பேரொலி செய்தலுள்ள கட்டமைந்த வில்.** (யுத் : 3094)

**கோடரம் – குரங்கு.** வேரம் வாங்கி இலங்கையும் சிதைந்ததம்மா கோடர மொன்றே. (சு : 744)

**கோடல் – 1. கொள்ளுதல்.** துணையெனக் கோடலே துணிந்தாய். (யுத்: 313) இராமனென்பான் உன்னுயிர் கோடலுக்குடன் வந்தான். (கி : 258)

2. **செங்காந்தள்** வாளெயிற் றரவம் போல வான்தலை தோன்ற வார்ந்த தாளுடைக் கோடல். (கி : 471).

3. **வெண்காந்தற் கிழங்கு.** கோடலுரிபோல் ஆராயினேது மிலையாதி. (யுத் : 2213)

4. **எண்ணல். கருதுதல்.** என்னையும் களத்திற் கொல்லும் ஆற்றலர் உளரெனக் கோடலுங் கோளே. (யுத் : 116)

5. **சென்று பற்றிக்கொள்ளுதல்.** (அண்) கண் கோடற் பொறியிற் கடிதேகி. (யுத் : 228)

**கோடற் பொறி – கொள்ளும் அளவு. (பொறி – அளவு)** கண்கோடற் பொறியிற் கடிதேகி. (யுத் : 228)

**கோடி – 1. நுனி.** அறிவின் கோடியார். (கி : 904)

2. **மிகுதியை விளக்குஞ் சொல்.** கனக ராசியொடு கோடி மணியாலும் தூர்மின் நெடு வீதியினை. (அ : 281)

3. **கொள்க. கொள்ளுதி.** வரமவை இரண்டும் கோடி என்றனள். (அ : 178) (அ : 421) (ஆ : 172)

4. **புதுமை.** கோடிய தாளங்கொட்டடல். (கி : 476) [பா : பே]

5. **தொகுதி. கூட்டம் வரிசை. திரள்.** பசும்பொற் கோடிய பொருமயிற் கணத்தன. (பா : 127) எண்ணில் தரு கோடிகள். (சு : 710)

6. **உட்கொள்ளல்.** எங்ஙனங் கோடி. (யுத் : 119)

7. **நினைத்துக்கொள்.** பொன்றினையாகவே கோடி போக்கிலாய். (யுத் : 1305)

8. **வரிசை.** மாட கோடி. (சு : 192) கோடிப் பஃறலை யோடும். (யுத் : 3805)

9. **கோடி என்னும் எண். நூறு லட்சம்.** எண்ணருங் கோடி. (கி : 725)

10. **முனை.** பொரு கோடியில் உயிருக்கன. (யுத் : 1825)

11. **கொள்வாய்.** மற்றும் ... ... எங்ஙனம் கோடி. (யுத் : 119)

**கோடி ஐந்து – ஐந்து கோடி.** தன்னுடைச் சேனை கோடி ஐந்துடன் தழுவ. (யுத் : 2360)

**கோடி ஓராயிரம் – ஓராயிரங் கோடி** கோடி ஓராயிரங் குறித்த தூதர்கள். (கி : 699)

**கோடிகல் தண்டு – மலைச் சிகரத்தை ஒத்த தண்டாயுதம்.** கோடி கல் தண்டு கூடம் குந்தம் வல்லோர்கள். (யுத் : 1270)

**கோடி கோடி – கோடியைக் கோடியாற் பெருக்கிய எண்.** குன்றினும் வலியவர் கோடி கோடியால். (யுத் : 491) (யுத் : 284)

**கோடி கோடி நூருயிரம் - பலகோடி லட்சம்.** கோடி கோடி நூருயிர எண்ணெனக் குவிந்த. (கி : 717) கோடி கோடி நூருயிரங் கொடுங் கணைக் குழாங்கள். (யுத் : 2565)

**கோடி கோடி நூறுயிரமாயிரம் - கோடி கோடி நூறுயிரம் ஆயிரம் என்னுங் கணக்கு.** கோடி கோடி நூறுயிரம் ஆயிரம் குறித்த ஆடலாளைகள். (யுத் : 2490)

**கோடி நாலைந்து - இருபது கோடி.** குன்றில் வாழ்பவர் கோடி நாலைந் திறுக்கிறைவர். (யுத் : 498)

**கோடி நூறு - நூறு கோடி.** கோடி நூறுய கொடிய அவுணர். (யுத் : 613) கோடி நூறமைந்த கூட்டத்திராக்கதர். (யுத் : 2044)

**கோடி மணி - மிகப் பல மணிகள்.** கோடி மணியாலும் தூர்மின் நெடு வீதியினை. (அ : 281)

**கோடி மேலும் நிதியம் - கோடிக்கும் மிகுதியாகப் பொன்.** தூதர்க்குக் கோடி மேலும் நிதியங்கொடுத்தனன். (அ : 798)

**கோடிய - 1. கோணிய.** உள்ளமுங் கோடிய கொடியாள். (அ : 178)

**2. கோடி என்னும் எண்ணிக்கை கொண்ட.** ஒரு கோடிய மத மால் கரி. (யுத் : 1825)

**கோடியர் - நட்டுவர்.** கோடியர் தாளங் கொட்டல். (கி : 476)

**கோடியையிரண்டு - பத்துக் கோடி.** கோடி ஐயிரண்டு தொக்க படைக்கல மள்ளர். (யுத் : 3481)

**கோடி யோராயிரம் - ஓராயிரங் கோடி.** கோடி ஓராயிரங் குறித்த தூதுவர் ஓடினர். (கி : 699)

**கோடி வீடெனில் - வீடு கோடி எனின்; விடுதலை செய்வாயாகில். விடுவித்துக் கொள்வாயென்றால்.** கோதை வெஞ்சிலையினுற் கோடி வீடெனிற் சீதையும் பெயர்ந்தனள் சிறை நின்றுமென்றான். (யுத் : 1503)

**கோடு - 1. தந்தம்.** ஆனையின் கோடு. (யுத் : 2539) கலைக்கோட்டுப் பெயர்முனி. (பா : 735)

**2. கொம்பு. மரக்கிளை.** கோடணை குரங்கு. (யுத் : 1088) கோட்ட தேம் பலவின் கனி. (கி : 935) கோட்ட. (யுத் : 1766)

**3. சிகரம். மலைச்சிகரம்.** கோடுறு மால்வரை. (கி : 772) சிமய நீள்கோட்டு ... ... அருந்ததி. (கி : 922)

**4. கரை. வரம்பு.** துயர்க் கோடு கண்டவன். (பா : 1380)

**5. சங்கு.** கொம்பு துத்தரி கோடு அதிர் பேரிகை. (அ : 647)

**6. மலை.** குலவரை நேமிக்குன்ற மென்ற வானுயர்ந்த கோட்டின் தலைகளும். (கி : 380)

**7. உச்சி.** அமரர் வைகும் குன்றையுங் கோட்டிற் கொண்ட. (யுத் : 779)

8. **நுனி.** *இரு கோடுடைய மத வெஞ்சிலை இளவாளரி.* (யுத்: 1825)

**கோடுதல் – 1. கோணலாதல். வளைதல்.** *சிலைக்கோட்டு நுதற் கனிவாய்.* (பா: 735)

2. **அறநெறியினின்றும் விலகுதல்.** *குறிக்கோடி கோடாதாய்.* (யுத்: 1576)

3. **தொழிலில் வழுவுதல்.** *கூற்றுக் கோடினும் கோடல்.* (யுத்: 3766)

4. **பிறழ்தல். மாறுபடல்.** *கூற்றுக் கோடினும் கோடல்.* (யுத்: 3766)

**கோடு நான்குடைப் பானிறக் குன்றம் – நான்கு தந்தங்களையுடைய பால்போன்ற நிறஞ்செறிந்த ஐராவதம் என்னும் யானை.** *கோடு நான்குடைப் பானிறக் குன்றமேற் கொண்டான்.* (யுத்: 2562)

**கோடும் – 1. கொள்ளுதும்.** *அன்னூர் தருவரேற் கோடும்.* (ஆ: 277)

2. **உட்கொள்ளுவோம்.** *பெருமை பெற்றது கோடும் என்றே.* (யுத்: 1279) (பா. பே)

**கோடுழுத – தந்தங்கள் உழுவதுபோன்று குத்திக் கிளறிய.** *பனைக்கை யானைக் கோடுழுத நெடுந்தழும்பு.* (யுத்: 3872) (சு: 312)

**கோடை – முதுவேனிற்காலம்.** *கோடையில் வறந்த மேகக் குலமென.* (யுத்: 4287)

**கோடைக்கதிர் – கோடைக் காலத்துச் சூரியன்.** *திண் கோடைக் கதிரிற் றெறுகண்ணன்.* (யுத்: 228)

**கோடை நாளிடிக்குலம் – கோடைக்காலத்தில் இடிக்கூட்டம்.** *கோடைநாள் இடிக்குலங்கள் வீழ வெந்த காடுபோல்.* (யுத்: 3348)

**கோடைப் பரிதி – கோடைக்காலத்துச் சூரியன்.** *கோடைப் பரிதியின் நடுவட்டோன்றும் பசுஞ்சுடர் மேகப்பண்பன்.* (யுத்: 2385)

**கோடை மாரி – வேனிற்காலத்து மழை.** *மேகமாலை வெங்கோடை மாரிபோல வாளிகூட.* (யுத்: 3241)

**கோடையிற் கதிர் – கோடைக்காலத்துச் சூரியன்.** *கோடையிற் கதிரெனக் கொடிய கூர்ங்கணை.* (யுத்: 1528)

**கோண் – 1. மிகமிக நுண்ணிய பகுப்பு.** *ஓர் தன்மை அணுவினைச் சத கூறிட்ட கோணினுமுளன்.* (யுத்: 254)

2. **மாறுபாடு.** *கோணிலா வானமீன்கள் இயைவன கோத்த தென்கோ.* (பா: 1029)

3. **வளைவு.** *கோணுடை மலை நிகர் சிலை.* (யுத்: 3751)

**கோண் மதி** - வலிய (கொடிய) மதத்தையுடைய வேழம் கோள் - வலிமை: மதி - மதீ என்பதன் விகாரம். கோண் மதித்திடர் கிடந்தன. (யுத் : 2089)

**கோண் மதித்திடர்** - வலிய யானையாகிய குன்றுகள். (யுத் : 2089)

**கோண் மதி மண்டலம்** - கிரகங்களைத் தன்னகத்துக்கொண்ட மதிக்கத்தக்க வானமண்டலம். (வை. மு) (கலா) ஒளியையுடைய சந்திரனைக் கொண்டதான மண்டலம். (உ. வி) தூக்கிய குண்டல மீன்குலந் தழுவிக் கோண்மதி மண்டலம் விழுந்தன போன்று மண்ணினே. (யுத் : 1784)

**கோண் மா** - 1. கொடிய விலங்கு. சிங்கம். கும்பத்தின் கரியைக் கோண்மாக் கொன்றென. (யுத் : 255)

2. முதலை. முரட் கரிக்கைக் கோண் மாவ. (யுத் : 3566)

**கோண் முகத்தரவம்** - கோள்முகத்தரவம் பார்க்க.

**கோண் முதல்** - கொண்டுசெல்லுதல். கோண் முதற்கமைந்த நாவாய் கொணருதி விரைவின் என்றான். (அ : 669)

**கோணம்** - மூலைத்திசை. கோணத்தின் பாலதேயோ. (யுத் : 1296)

**கோணல்** - உட்கோணுதல். கோணற் பூ பார்க்க.

**கோணற்பூ** - உட் கோணுதலையுடைய பூ. கோணற்பூ உண்டு வாழும் குரங்கின்மேற் குற்றமுண்டோ. (யுத் : 3307)

**கோணிலம்** - வலிய நிலம். குவிந்தன பிணக்குவை சுமந்து கோணிலம் நிமிர்ந்தது. (யுத் : 1083)

**கோணிலா வான மீன்கள்** - தம்முள் மாறுபடுதலின்றி நேரொத்தனவாகிய உடுக்கள். கோணிலா வான மீன்கள் இயைவன கோத்த தென்கோ. (பா : 1209)

**கோணுதல்** - 1. மாறுபடல். மனம் வேறுபடல். பொருய் எனக் கோணினுன் நெடுங்கொடுமை கூறினுன். (கி : 141)

2. வளைதல் கோணுதற் கமைந்த கோலப் புருவம்போல் திரையுங்கூட. (யுத் : 440)

**கோணெறி** - 1. ஆடவர் இதயங்களைக் கொள்ளும் நெறி. (கலா) குற்றமான நெறி. (கு) கோணல் நெறி. (அன்) களவு நெறி (வை. மு) கோணெறி கற்றிலாத கருங்கண் நுளைச்சியர். (பா : 60)

2. போர்த்துறை. (யுத் : 1706)

**கோத்தல்** - 1. இணைத்தல். பொருந்தல். எதிரெதிர் கோத்து. (யுத் : 3499) மொய்புனிர் நீத்த மோடி நெடுந்திரை நேருறக் கோத்த. (ஆ : 556)

2. **குவிதல்.** *கூறின கூறின சொற்கள் கோத்தலால் பீறின நெடுந் திசை.* (சு : 982)

3. **தொடர்ச்சி யாதல்.** *கோத்தூறும் குருதி.* (யுத் : 889) *கோத்திழி ... ... குருதி நீர்.* (யுத் : 1507)

4. **பக்கங்களிற் சூழ்தல்.** *கோத்தது புடைதொறும்.* (யுத் : 1534)

5. **பெருகுதல்.** *யானை ஈர்த்தன கோத்த சோரி.* (யுத் : 2364)

6. **ஒன்றுசேர்தல்.** *கோத்தோட நெடுங் குருதிப்புனல்.* (யுத்: 2345)

7. **கவித்தல்.** *வல்லிருள் கோத்தது.* (யுத் : 463)

**கோத்தாய் – க்ஷத்திரிய தர்மத்தையுடைய அன்னே.** *கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை இழைப்பக் கோல் துறந்து.* (அ : 1)

**கோத்து வாங்குதல் – தொடுத்து எய்தல்.** *கொற்ற வெஞ்சிலைச் சரம் கோத்து வாங்குவார்.* (ஆ : 485)

**கோத்து விடுதல் – ஏறிட்டு விடுதல்.** *விற்றொடை இராமன் கோத்து விடுதலும்.* (சு : 450)

**கோத்தேறுதல் – பரவி ஏறுதல்.** *குரைகடல் கோத்தேற.* (யுத்: 1567)

**கோதமன் – கௌதம முனிவன்.** *அமரர்கள் பிரமன் முன்னுவந்து கோமதனை வேண்ட.* (பா : 558)

**கோதறு குணம் – குற்றமற்ற குணம்.** *நீ இது கோதறு குணத்தினுய் மனத்துட் கோடியால்.* (அ : 938)

**கோதாவரி – கோதாவரி நதி.** *சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி.* (ஆ : 226) (கி : 764)

**கோதாவிரி – கோதாவரி நதி.** (யுத் : 4100)

**கோதில் செல்வம் – குற்றமில்லாத இன்ப வாழ்க்கை** *மாதர் யாவரும் வானவர் தேவியர் கோதில் செல்வத்து வைகினர்.* (அ : 1078)

**கோதிலான் – குற்றமில்லாத தூயோன். சுக்கிரீவன்.** *கொற்ற நன்முடி கொண்டது அக்கோதிலான்.* (கி : 331)

**கோது – 1. சக்கை** *எமைக் கோதென்றுண்டிலன் இத்தனையே குறை.* (பா : 397)

2. **குற்றம்.** *உணர்கிற்றியேல் தக்கன கோதிறந்தன நின்வயிற் கூறுதும்.* (சு : 1133)

**கோதுதல் – கவர்தல்; கறித்தல்.** *கொய்தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரம்.* (சு : 933) *இலைகள் கோதும் அக்குரங்கு.* (யுத் : 3242)

**கோதை – 1. வில்லின் நாண் முன்னங் கையிற்பட்டு ஊறு செய்யா திருக்கும்பொருட்டு அணியும் தோற்கவசம். இஃது கைத்தோற் கட்டி எனவும் படும். கையிற்பூணும் தோலுறை.** *நற்புறக் கோதையின் நளினச் செங்கையின் நிற்புறச் சுற்றிய காட்சி.* **(யுத் : 1074) (யுத் : 1503)**

2. **கோதா – உடும்புத் தோல். அதனால் இயன்ற விரற் சட்டை. விரற்கவசம்.** *வில்லிற் கோதை நாணுற.* **(பா : 1002)** *கோதையை விரலால் தாங்கி நாணினைத் தாக்கினன்.* **(யுத் : 550)** *நற்புதுக் கோதை.* **(யுத் : 1074)**

3. **மலர் மாலை.** *கோதை கொண்டோச்சுவாரும்.* **(பா : 1018)**

4. **தலையிற்சூடும் கண்ணி.** *சேடகம் புனை கோதை மங்கையர்.* **(அ : 262)**

5 **கூந்தல்.** *பொடியில் கோதையோடும் ஒசி கொம்பென விழ்ந்தனள்.* **(ஆ : 39)**

6. **ஒழுங்கு. வரிசை.** *விரல்கள் கோதையோடு சுவடெறிந்திட.* **(யுத் : 2013)**

7. **வெற்றிமாலை.** *எண்ணிறந்த கோதையார் வேலரக்கர் பட்டாரை.* **(யுத் : 1948)**

8. **மகளிர்.** (உ. வி) **(யுத் : 1948)**

**கோதைசூழ் குஞ்சி – மாலை சூடின மயிர் முடி.** *கோதை சூழ் குஞ்சியக் குமரர் வந்தெய்தலும்.* **(பா : 1143)**

**கோதை புடை பெயர – கூந்தல் அவிழ்ந்தலைய.** *தம்கோதை புடை பெயரக் கூற்றனைய கண்சிவப்ப.* **(அ : 391)**

**கோ நகர் – 1. அரச மாளிகை. அரசன் தங்குமிடம்.** *அரசர் கோ நகர் அடைந்தார்.* **(பா : 912)**

2. **சிறந்த நகர்.** *மானிடர் கோ நகர்ப்புறஞ் சுற்றினர்.* **(யுத்: 1296)**

**கோப்ப – நிறைய. முத்துக் கோப்பதுபோன்று விழ. (அண்)** *நெடுங்கண் ஆலி கொங்கை கோப்ப.* **(அ : 191)**

**கோப்புண்டல் (கோப்புண்ணுதல்) – படிந்து குவிதல். ஒன்றன்பின் ஒன்றாக மடிந்து குவிதல்.** *புண்டர ஆவிபுறத் தகலக் கோப்புண்டன வானர வெங்குழுவே.* **(யுத் : 2349)**

**கோபக் கனல் – கோபாக்கினி.** *பொழிந்த கோபக் கனலுகப் பொங்குவான்.* **(ஆ : 376)**

**கோபஞ் செய்தான் – வெகுண்டான்.** **(யுத் : 1870)**

**கோபத்தாறல் மாந்துதல் - கோபம் ஆறுதலைக் காணுதல்.** *அனையவர்த் தொழுது அவர் கோபத்து ஆறல் மாந்தினர் அரக்கியர்க்கு உயிரன்ன அரக்கர்.* (சு : *126*)

**கோபம் - 1. சினம்.** *கோபமும் மறனும் மானக் கொதிப்பும்.* (ஆ: *641*)

**2. இந்திர கோபம். தம்பலப் பூச்சி.** *இன்றுயில்வதி கோபத் தினம் விரவின எங்கும்.* (அ : *692*)

**கோப யானை - சினமுள்ள வேழம்.** *அந்நெடுங் கோப யானை அமரரும் வெயர்ப்ப அங்கிதன்னொடு மகனைச் சுற்றிப்பிடித்தது தடக்கை நீட்டி.* (யுத் : *1897*)

**கோப வெங் கோளரிமா - சினத்தையுடைய கொடிய வலிமைமிக்க சிங்கம்.** *குளிறு கோபவெங் கோளரிமா அடக் களிறெலாம்பட.* (ஆ : *388*)

**கோபுரக் குன்றம் - கோபுரமாகிய குன்றம்.** *கோபுரக் குன்றத்து ஏறி நின்றவன் புன்றொழில் இராவணன் என்றான்.* (யுத் : *841*)

**கோபுரப் புரிசை - கோபுரங்களையுடைய மதில்.** *கற்பகக்கானது கமலக் காடது பொற்பெருங் கோபுரப் புரிசை புக்கது.* (கி : *850*)

**கோபுரம் -** (கி : *850*) (யுத் : *2813*) (யுத் : *2819*)

**கோபுர வாயில் -** (யுத் : *959*)

**கோமகன் - சக்கரவர்த்தி திருமகன்.** *ஆழியெங் கோமகன்.* (சு : *453*) (அ : *975*) (ஆ : *258*)

**2. சிறந்த மகன்.** *என் கோமகனை அம்புக்கு இரையாக்கி.* (யுத் : *1949*)

**3. தலைவன்.** *குற்றம் வீந்த குணத்தின் எங் கோமகன்.* (ஆ: *816*)

**கோமகார் - அரசகுமாரர்.** *வெண் சங்கமார்ப்புறக் கோமகார் திருமுகம் குறுகி நோக்கினான்.* (பா : *290*)

**கோமணி - வயிரம். சிறந்த மணிகள்.** *கோமணிச் சிவிகை.* (யுத்: *4322*)

**கோமதி - ஒரு நதி.** *சரயு வென்றே மேன்முறை அமரர்போற்றும் விழுநதி யதனினோடும் ஆன கோமதி வந்தெய்தும் அரவம்.* (பா: *423*)

**கோ மருகன் - அரசவம்சத்தைச் சார்ந்த மருமகன்.** *இரண்டு விஞ்சை கோ மருகனுக்கு நல்கி.* (பா : *690*)

**கோமலர் - தாமரை.** *கோமலரோன் பெற்ற பெருமைத் தவ முனிவன் பேசுவான்.* (அ : *1134*)

**கோமலரோன் - பிரமன்.** (அ : *1134*)

**கோமளம் - அழகு.** *கோமளக் கொம்பரன்ன என் தேவி.* (சு : *571*)

**கோமனே - அரண்மனே.** குன்றன்ன தோளவன் தன் கோமனே பிற்படப் பெயர்ந்தான். (சு : 320)

**கோமான் – 1. பெருமையிற் சிறந்தோன். இராமபிரான்.** (சு : 682) கோமான் தனிப்பெருந் தூதன். (யுத் : 1853)

2. **தலேவன். பேரரசன்.** கோமானுலகுக் கொருநீ குறைகின்ற தென்னே. (ஆ : 712)

**கோமுடி - அரசனுய்ச் சூடும் முடி.** சீதை கொண்கன் கோமுடி புனேதல் காண்பான். (அ : 252)

**கோமுரசு – அரசனுடைய முரசுகள்.** கோமுர சிடியடங்கின. (பா: 496)

**கோமுறை – அரசாட்சி.** கோமுறை புரிகிலே என்னின் கூர் எரிச் சாம். (அ : 1198)

**கோமுலற புரிதல் – அரசாளுதல்.** (அ : 1198)

**கோமுனி – 1. ராஜரிஷி.** கோமுனி இருக்கையைக் கூடமாக்கினுன். (பா : 467)

2. **முனிவரில் சிரேஷ்டன்.** (வை. மு) **தலேமைத் தன்மையுள்ள முனிவன்.** (அண்) **வசிட்டன்.** (யுத் : 4301)

**கோமைந்தர் – அரசகுமாரர்.** அவன் குலக் கோமைந்தர் தமக்கும் அடுத்த தம்பிக்குமாம். (அ : 173)

**கோய் – மதுச் செப்பு. கள் முகக்கும் பாத்திரம்.** கோய் சொரி நறவ மென்னத் தண்புனலுகுக்கும் குன்று. (யுத் : 644)

**கோயில் – 1. மாளிகை. அரசமாளிகை.** கொற்றமாக் கோவில். (யுத் : 1261) யாருமின்றிக் கோயில் புக்கான். (யுத் : 1223) அகன் கோயில். (யுத் : 491)

2. **ஆலயம்** கருணேயங் கோயிலுள் இருந்த கண்ணனே. (யுத்: 356)

**கோரம் – 1. கொடுமை.** கோரவில்லி. (பா : 1188)

2. **வட்டில்.** குழைத்ததோர் அமுதுடைக் கோர நீக்கி. (சு : 25)

3. **பயங்கரம்.** கோர வாளி. (யுத் : 3352)

**கோர வாளி – பயங்கரமான வாளி.** (யுத் : 3352)

**கோர வில்லி – இராமன். கொடிய வில்லே ஏந்தியவன்.** கோர வில்லி முனே எனேக் கொல்கின்ற மார வேளின் வலியவர் யார். (பா : 1188)

**கோர வெங்கண் – அச்சத்தையுண்டாக்குகின்ற வெவ்விய கண்.** விராதனெனுமக் கோர வெங்கண் உருமேறெனக் கொடுந் தொழிலினுன். (ஆ : 19)

**கோரை – கோரைப்புல்.** *கோரையின் தலைய கோடி கொடுங்கணை.* **(யுத் : 2062)**

**கோரையின் தலைய கோடி கொடுங்கணை – கோரைப் புல்லைப்போன்ற நுனியையுடைய கொடிய அம்புகள். (யுத் : 2062)**

**கோல் – 1. துடுப்பு.** *தோலுடை நிமிர் கோல்.* **(அ : 677)**

**2. திரட்சி.** *கோல் தொடி.* **(பா : 824)**

**3. நீதி தவருத ஆட்சி.** *கோன் மேற்கொண்டும்.* **(அ : 210)**

**4. குதிரைச் சம்மட்டி. (ஓட்டுங் கோல்)** *கோல் கொளும் ஒருவனோடும்.* **(யுத் : 3071)**

**5. செங்கோல்.** *கோல் வருஞ் செம்மை.* **(பா : 1141)**

**6 அளவுகோல்.** *கோலிடை உலகம் அளத்தலின்.* **(பா : 103)**

**7. கம்பு. தடி.** *குந்தமும் குலிசமும் கோலும் பாலமும்.* **(ஆ : 402)**

**8. அம்பு.** *இச்சிலை உதைத்த கோற்கு இலக்கம் யாதென்பார்.* **(பா : 758)** *கோலின் கோவை.* **(யுத்: 3750)** *வெங்கோல்.* **(சு: 817)**

**9. கோலம். அழகு.** *கோல்படு மணிகளாகிய குலமணி யெவையுங் கூட்டி.* **(யுத் : 794)**

**10. குச்சி.** *கோல்பிடித் தொழுகுறு குருடர்.* **(யுத் : 1776) (யுத் : 3990)**

**11. அழகு.** *கோல்படு மணிகள்.* **(யுத் : 794)**

**12. தாம்பு.** *பவளக் கோலிவர் கவானர சன்னம்.* **(கி : 4)**

**13. ஊன்றுகோல்.** *திண்ணெடுங் கோல் பிடித்தொழுகுறு குருடர்.* **(யுத் : 1776)**

**கோல் உலகேழினுஞ் செல்லல் – அரசாட்சி உலகேழிலும் தடையில்லாமல் நடத்தல்.** *அரசர்க்கரசன் செம்மாண்தனிக் கோல் உலகேழினுஞ் செல்ல நின்றான்.* **(பா : 168)**

**கோல் கொள்வான் – தேர்ப்பாகன்.** *தேரிற் சென்றெதிர் கோல் கொள்வானுயிர் தின்றான்.* **(சு : 953)**

**கோல் கொள்ளல் – தேரைச் செலுத்துதல். சாரத்தியஞ் செய்தல்.** *அருணன் நின்றெனப் பரதன் கோல் கொள.* **(பா : 1317)**

**கோல் கொளுமொருவன் – சாரதி.** *கோல் கொளுமொருவனோடும் ... ... புரவியெல்லாம் படுத்தினான்.* **(யுத் : 3071)**

**கோல்படு மணிகள் – அழகு பொருந்திய மணிகள்.** *பத்திக் கோல்படு மணிகளாய குலமணி எவையுங் கூட்டி.* **(யுத் : 794)**

**கோல்பிடித் தொழுகல் – குச்சியைப் பிடித்துக்கொண்டு செல்லுதல்.** *கோல்பிடித் தொழுகுறு குருடர்.* **(யுத் : 1776)**

**கோல் முகத்தளத்தல் - கோல முகத்தினுலளத்தல்.** கோன் முகத் தளந்து குற்றஞ்செற்று உலகெலாங்கொள்ளும் ... ... ... மண்டபம். (யுத் : 4307)

**கோல்வருஞ் செம்மை - செங்கோலால் விளையும் நீதி.** (பா : 1141)

**கோல் வளை - அழகிய வளை. திரண்ட வளையல்.** கோல் வளை மாதர். (ஆ : 509) கோல் வளை மகளிர். (ஆ : 509) கோல் வளையாள். (ஆ : 887)

**கோலக் குருளை - பன்றிக்குட்டி.** பேணுதற் கரிய கோலக் குருளை. (பா : 934)

**கோலங் கோடல் - வெண்ணிறக் கோலத்தைக் கொள்ளுதல்.** யாரும் யாவையும் வெள்ளை வெண்ணிலவினுற் கோலங் கோடலால். (பா : 1050)

**கோலத்தின் துறை - அலங்காரத்தின் துறை.** நாள் செய் கோலத்தின் துறையற. (அ : 972)

**கோலப் புருவம் - அழகிய புருவம்.** கோணுதற் கமைந்த கோலப் புருவம்போல் திரையுங் கூட. (யுத் : 440)

**கோலம் - 1. அழகு.** தார்க்கோல மேனி மைந்தன். (யுத் : 1372) கார்க்கோல மேனியான். (உ. வி) (யுத் : 1372)

**2. எழுதும் உருவம் முதலியன.** நீர்க் கோல வாழ்வு. (யுத்: 1372)

**3. நிறம்.** கார்க் கோல மேனியான். (யுத் : 1372)

**4. வடிவம்.** நீ முயலும் கோலமோ யார்க்குந் தெரிவரிய கொள்கைத்தால். (ஆ : 1181)

**கோல மழித்தல் - கோலத்தை நீக்குதல்.** கோலமழித்து மேவிய அரம்பையர். (அ : 757)

**கோல மாமதி - அழகிய பூரண சந்திரன்.** கோல மாமதி குறைவற நிறைந்தொளி குலாவ. (அ : 488)

**கோலி - 1. சுற்றி.** இமையவர் நாடு இயல்வல்லி கோலி நிவந்தன. (சு : 1195)

**2. முயன்று. (வளைத்து)** வேலை கோலியடைத்துழி. (யுத் : 954)

**3. அமைத்து.** சுடு கணைகள் சிலையிற் கோலி எய்வர். (யுத் : 3356)

**கோலிடையளத்தல் - அளவு கோலைக்கொண்டு அளக்கப்படுதல்.** கோலிடை யுலகம் அளத்தலின். (பா : 103)

**கோலிய சிலை - வளைத்த வில்.** கோலிய வரிசிலை வலியும் கொற்றமும். (யுத் : 398)

**கோலின் மேவிய கூற்று - அம்பினிடத்து விரும்பியமர்ந்த யமன்,** கோலின் மேவிய கூற்றினுற் குமுதனுங் குலேந்தான். (யுத் : 2569)

**கோலுதல் - 1. அமைத்தல்.** தம்பி கோலிய சாலே. (அ : 779)

2. **தொடுத்தல்.** சுடு கணைகள் சிலேயிற் கோலி. (யுத் : 3356)

3. **முயலுதல்.** கோலிய வரிசிலே வலியும் கொற்றமும். (யுத்: 398)

4. **விரித்தல்.** (அண்) **கருதுதல். முயற்சிசெய்தல்.** (வை. மு) நாணின தொகுபீலி கோலின நடமாடல். (அ : 693)

5. **வளேத்தல்.** வேலேயின்னிடையே வெய்யவர் கோலி வெஞ்சரம் கின்னெடுங் கோத்தபோது. (சு : 619)

6. **செலுத்தல்.** என் சரங் கோலி. (யுத் : 1671)

**கோலும் மாதவம் - செய்தற்குரிய பெரிய தவம்.** கோலு மாதவத் திமகிரி மருங்கினிற் குறுகி. (பா : 524)

**கோலேயுமிழ் சிலே - அம்புகளேப் பொழியும் வில்.** கோலே வந்துமிழ் சிலேத்தம்பி கோலிய சாலே. (அ : 779)

**கோவம் - சினம்.** கோவமூண்டெழுந்துங் கொல்லான் காட்டுமேற் காட்சி கொள்வான். (யுத் : 249) கோவந் தோன்றிடில் தாயையும் உயிருண்ணுங் கொடியோர். (யுத் : 3229)

**கோவமூண் டெழுதல் - சினம் மிக அதிகப்படல்.** கோவமூண் டெழுந்தும். (யுத் : 249)

**கோவலர் - இடையர்.** கொன்றை வேய்ங்குழற் கோவலர். (பா : 65)

**கோவா முனி - கோ ஆம் முனி.** பெருமை பொருந்திய முனிவனுன **துருவாசன்.** (உ. வி) **கோவ முனி என்பது எதுகை நோக்கி நீண்டது என்பாரும் உளர்.** கோவா முனி சீறிய வேலே குளித்த வெல்லாம். (சு : 46)

**கோவியல் - 1.** அரசர்க்குரிய. கோவியல் கோயில் புக்கான். (யுத்: 3187) கோவியல் தருமம். (கி : 315)

2. **அரசியல்.** கோவியலழிந்ததென. (யுத் : 61)

**கோவியல் தருமம் - அரசர்க்குரிய தருமம்.** (கலா) **அரசனுக்குரிய இயல்பாகிய அறம்.** (அண்) (வை. மு) கோவியற்றருமம் உங்கள் குலத்துதித் தோர்கட் கெல்லாம் ... ... உடைமையன்றே. (கி : 315)

**கோவில் புரிகேன் - கோவிலாகச் செய்வேன்** கோவில் புரிகேன் பொருவில் தேர் கொணர்தி என்றுன். (யுத் : 3646)

**கோவிளங் களிறு - சிறந்த இளயானே போன்ற இலக்குவன்.** கோவிளங் களிற்றை வந்து கூடினுர் ஆடல் கொண்டார். (யுத்: 2551)

**கோவின் - ஆரவாரத்தோடு.** (பா : 589) **கோ. 2 பார்க்க.**

**கோவின் துயில் - அரசர் கொள்ளுகின்ற நித்திரை** பூவுந் தளிருந் தொகு பொங்கணைமேற் கோவின் துயிலைத் தவிர்வாய். (யுத் : 2642)

**கோவுரம் - கோபுரம். விகாரம்.** கோவுர முற்றும் விழுந்தது குன்றின். (யுத் : 2819) [பா : பே]

**கோவை - 1. வரிசை.** கோவை நின்ற பேரண்டம். (யுத் : 1188) நுண் குறும் பனித்திவலைக் கோவை. (யுத் : 335)

**2. மாலை. மணிமாலை.** கோவை தண்டை தோள்வளை கடகமென்றினையன. (யுத் : 1470) (சு : 215)

**3. தொடர்ச்சி.** கோவை மாலயன் மான் இடன் யாவரும் கொல்ல ஆவி தீர்கிலன். (யுத் : 145)

**கோவை இந்நகர் - இந்நகர வரிசை.** கோவை இந்நகரொடு எண் குறிக்கலாத அத்தேவர் தம் நகரி. (பா : 151)

**கோழ் - கொழுமை.** கோழ்வாய் அரியின் குலத்தாய். (சு : 67) [பா : பே]

**கோழி - ஒரு பட்சி.** குறி கொள் கோழி சிவல் குறும்பூழ். (அ : 806) அன்னங் கோழி. (சு : 246)

**கோள் - 1. வலிமை** கோளரி. (யுத் : 2532) நிமிர்ந்தது கோணிலம். (யுத்: 1083) கோளரிக் குழு. (யுத்: 211) கோளுற்றது. (யுத்: 2454) கோளுற்றவன். (யுத் : 1711) கோணிமிர் பதாகையின் குழாம். (பா : 130) நெடுங் கோளினன். (யுத் : 1285) கோளில் இடம். (யுத் : 3925) கோளினன். (யுத் : 538) கோள் வளை எயிறு. (சு : 764)

**2. கொல்லுதல். உயிரைக் கொல்லுதல்.** கோளரி. (பா : 291) கோளானர். (சு : 655) கோளவா அரியேறு. (யுத் : 798) கோளரா. (ஆ : 1043)

**3. அழிவு.** கொல்வா மன்றேற் கோளுறுமிவ்வூர். (சு : 182)

**4. யமன்.** (வை. மு) **தீக்கோள்.** (அண்) கோளாகி வந்தவா கொற்றமுடி தானென்பார். (அ : 399)

**5. கிரகம். இராகு. நவக்கிரகம். பாம்பு.** உவாமதியின் மேல் வரும் கோளென வந்ததே. (பா : 410) கோளோடு தாரகைகள். (யுத் : 2686)

**6. ஊர் கோள்.** நேமி கோளொடுந் திரிவதென்ன. (யுத் : 280)

**7. கொடுமை.** அம்பின் வனமென்னும் கோளின்வனவன் குழுவினிற் குறைபடுத்தான். (ஆ : 533)

8. **துன்பம் வேதனை.** ஒரு நாட் கவ்வும் உறுகோளும். (சு : 541) கோளிழைத்தாள் மதிக்கும் மதியாய். (அ : 427)

9. **தீமை. கேடு.** குற்ற மொன்றிலாதோர் மேலும் கோள்வரக் குறுகுமென்னு. (யுத் : 597) (உ. வி) (யுத் : 620) கோளிழைத்தாள் மதி. (அ : 427)

10. **இடையூறு. சிக்குண்டு நிற்கும் நிலை.** எந்தையே எந்தையே என் பொருட்டினுல் உனக்கும் இக் கோள் வந்ததே. (யுத் : 1615)

11. **மாறுபாடு. மாறுபாடான எண்ணம்.** (வை. மு) குற்றம் யாவையும் கோளொடு நீங்குக. (யுத் : 756)

12. **அறிதல்.** மறைகளாலும் ஞானத்தாலும் கோட்படாப் பதமே ஐய குரக்குருக் கொண்டதென்ருன். (கி : 76)

13. **அறிவுவன்மை.** உற்றது கொண்டுமேல் வந்துறு பொருள் உணருங் கோளார். (அ : 7)

14. **எண்ணம்.** கோள் கடைக்கணித்து முனிவொழி. (யுத் : 3847)

15. **மனப்போக்கு.** கோளொக்கு மென்னினல்லால் குறியொப்பக் கூறிற்ருமோ. (கி : 798)

16. **நல்லெண்ணம்.** முடியக்காத்துழல் கோதறு தம்பியும் விளியக் கோளிலன் சீதையை உவந்துளான் என்பர் சீரியோர். (யுத் : 2734)

17. **பெருமை.** கொடிமேலிருந்தோர் உலகேழொடேழு தொழ நின்ற கோளுமிலனுய்ப் படிமேலெழுந்து வருவான். (யுத் : 2201)

18. **ஒளி. ஒளி கொண்டுருக்குந்தன்மை.** கோளின் முற்ருச் செக்கரின் மேகக் குழுவின்கண். (யுத் : 2558) கோள் வயிரக் கம்பக் கரி. (ஆ : 95) கோள் மதிமண்டலம் (யுத் : 1784)

19. **கொள்ளல். பிடிக்கப்படுதல்.** கோளும் ஐம்பொறி. (அ : 111) கோளுறு மடங்கலிற் குமுறி விம்முவாள். (அ : 889) கோளானுர் உயிர்கோளோடும். (சு : 655) உயிர் கோன்முடியா நமனே. (யுத் : 2635) கோளுடைக்கணை. (யுத் : 1791) கோளுற்று. (யுத் : 3660)

20. **கொள்ளத்தக்கது.** என்னையுங் களத்திற் கொல்பவர் உளரெனக் கோடலுங் கோளே. (யுத் : 116)

21. **நீர் கொண்டிருத்தல்.** கோளமை கணமுகில் குமுறல் ஒவின. (கி : 549)

22. **மேகம்.** கோளுண்ட திங்கள் முகத்தாள். (பா : 988)

23. **அணிதல்.** எருவை வேந்தன் வீசிய வடகமீக்கோள் ஒத்தென விளங்கிற்றன்றே. (ஆ : 920)

**24. பாதுகாத்துக் கொள்ளல்.** மானிடரைக் கொல்லே னொரு நான் உயிர்கோள் நெறியிற் செல்லேனெனின் இவ்விடர் தீர்குவனே. (யுத் : 1706)

**25. கொண்டு செலுத்துதல்.** சுமத்தல். கோன்முதற் கமைந்த வில்லான். (அ : 660)

**26. காரியம்.** கொண்டுவருமென்றிருக்கும் யானிழைத்த கோளிது வால். (சு : 322)

**27. உட்கொள்ளல்.** புகைக் கொழுந்து சுற்ற உயிர்ப்பிலர் கோளுமுற்று அழுந்து பட்டுளர் ஒத்து. (சு : 1206)

**28. தன்மை.** யாவரும் உணருங் கோளிலர். (யுத் : 2742)

**29. கொள்கை. நல்லுணர்வு.** கோளில் கேடம். (யுத் : 3985) தாங்கலாற்றும் கோளிலா மன்னன் நாட்டுக் குடியென. (யுத் : 2542) கோளிலன் சீதையை உவந்துளான் என்பர் சீரியோர். (யுத் : 2734)

**30. அனுபவம்.** கூட்டினன் தேர்ப்பொறி கூட்டிக் கோன்முறை பூட்டினன் புரவி. (அ : 577)

**31. (தீய) கொள்கைகள்.** நிருதராய் நலியுங் கோளுக்கெல்லையும் வந்தன. (சு : 1018)

**32. வஞ்சனை. வஞ்சகச் சூழ்ச்சி.** (கலா) கோளும் என்னுலே எனல் கொண்டான். (அ : 871)

**33. உபாயம். வழி. நெறி.** கொண்டிடை தீர்வதோர் கோளறி கில்லான். (யுத் : 2825)

**34. குற்றம்.** கோளல தறநெறி குறையுண்டாகுமோ. (அ : 865)

**35. முதலை.** முரட் கரிக்கைக் கோண்மாவ. (யுத் : 3566)

**36. கொடிய தன்மை.** கோளவுணன் குறித்த வன்றாண். (கி: 266) கோளறிவு. (கி : 471)

**37. ஆற்றல்.** யாவையும் எண்ணுங் கோளார். (கி : 920)

**38. இழிவான நிலை.** என் பொருட்டுனக்கும் இக் கோள் வந்ததே. (யுத் : 1615)

**39. கொள்ளை.** கோளெடுத்தது மீள. (யுத் : 1557)

**கோள்களை ஆளுறுதிகிரி - நவக்கிரகங்களையும் ஆளுகின்ற துருவ சக்கரம். இஃது சிம்சுமார சக்கரம் எனப் பெயர்பெறும்.** கோளிரு நான்கினோடு ஒன்றுகூடின ஆளுறு திகிரிபோல் ஆழியான்தனை. (ஆ : 183)

**கோள் மதி - கோண்மதி பார்க்க.**

**கோள் மதி மண்டலம் – கோண்மதி மண்டலம் பார்க்க.**

**கோள் மழை – நீரைப்பருகி உட்கொள்ளுகின்ற மேகம்.** *கோள் மழை அஞ்ச முழங்கின மாமுரசே.* (*யுத் : 1697*)

**கோள் முகத்தரவம் – பற்றுந் தன்மைகொண்ட வாயினையுடைய இராகு.** *புழுங்கிய வெஞ்சினத் தரக்கன் பொங்குவான் அழுங்கலில் கோண் முகத்தரவ மாயினான்.* (*யுத் : 1489*)

**கோள் முறை - அனுபவ முறை.** *கோள்முறை பூட்டினன் புரவி.* (*அ : 577*)

**கோள்வரக்குறுகும் – தீங்குவந்தடையும்.** (*யுத் : 597*)

**கோளம் – உருண்டை.** *தம்பி தன்விற்புயல் அண்டகோளம் இற்றுற்று உடையப்படும் நாணுருமேறு கேட்டான்.* (*அ : 417*)

**கோளரவு – தீண்டும் பாம்பு.** (*கலா*) **கொலை செய்யுமியல்புடைய நாகம்.** (*வை. மு*) **பெண் பாம்பு.** (**அண்**) *உணர்வு வீந்த கோளர வென்னப்பின்னி.* (*கி : 471*)

**கோளரா – 1. கொடிய தொழிலையுடைய (கேது என்னும்) பாம்பு.** (*ஆ : 1008*)

**2. வலிய (கடற்) பாம்புகள்.** *எங்கணும் வற்ற அக்கடல் குடல் திறந்தன வெனக் கிடந்த கோளரா.* (*யுத் : 585*)

**3 கொல்லுந் தன்மையுடைய பாம்பு.** *தென்றலென்னும் கோளராத் தவழும் சாரல்.* (*ஆ : 1043*)

**கோளரி – வலிய ஆண் சிங்கம். சிங்க ஏறு போன்றவன்.** *பெரிய கோளரி பெயர்ந்தனன்.* (*சு : 83*) (*யுத் : 2531*)

**கோளரி மா – கோள் அரிமா. வலிமையுடைய சிங்கம்.** *குளிறு கோப வெங் கோளரி மா அடக் களிறெலாம் பட.* (*ஆ : 388*)

**கோளரியேறு – வலிமை படைத்த ஆண் சிங்கம்.** *சீறு கோளரி யேறனான் உடன்சென்ற.* (*யுத் : 3495*)

**கோளலது அறநெறி – அறநெறி குற்றமில்லாததே.** *மேயபார் ஆளவும் உளன் ஒரு பரதன் ஆயினால் கோளலது அறநெறி குறையுண் டாகுமோ.* (*அ : 865*)

**கோளவா அரியேறு – கொல்லுதல் தொழிலை அவாவுகின்ற ஆண் சிங்கம்.** *கோளவா அரியேறன்ன குரிசிலே.* (*யுத் : 798*)

**கோளவுணன் - கொடுமையையுடைய இரணியன்.** *கோளவுணன் குறித்த வன்றுணிடைத் தோன்றிய மாநர சிங்கமென்ன.* (*கி : 266*)

**கோளறிதல் – மேற்கொண்டு அறிதல்.** *கொலை கோளறியா நின்றான்.* (*யுத் : 1727*)

**கோளானர் - கொலை மேற்கொண்டவராகிய அரக்கர்.** கோளானர் உயிர் கோளோடும் மூளா வெஞ்சினம் முற்றுகா. (சு : 655)

**கோளி - பூவாமற் காய்க்கும் மரம். ஆலமரம்.** (வை. மு) கோளி பங்கயம் ஊழ்கக் குலைந்தவால். (பா : 959)

**கோளிரண்டு - சூரியன் சந்திரன் என்ற இரண்டு கிரகங்கள்.** கோளிரண்டையும் கொடுஞ்சிறை வைத்த அக்குமரன். (யுத் : 510)

**கோளிரண்டையுங் கொடுஞ்சிறைவைத்த அக்குமரன் - இந்திரசித்து.** (யுத் : 510)

**கோளிரு நான்கினோடொன்று - நவக்கிரகங்கள்.** (ஆ : 183)

**கோளிலது - கொள்கையுடையதன்று.** காணினும் காட்டினும் மீதிறைக் குன்று காணினும் கோளிலது. (யுத் : 3577)

**கோளிலா மன்னன் - கொள்கையில்லாத மன்னன்.** தாங்கலாற்றுங் கோளிலா மன்னன் நாட்டிற் குடியெனக் குலைவ கண்டான். (யுத் : 2542)

**கோளிழைத்தல் - கவருதலைச் செய்தல்.** நிற்கோர் உயிரென உரியோன் தன்னைக் கொன்று கோளிழைத்தால். (சு : 472)

**கோளின் வன வன்குழு - கொல்லுதலையுடைய அழகிய கூட்டம்.** அம்பின் வனமென்னும் கோளின்வன வன்குழுவினிற் குறைபடுத்தான். (ஆ : 533)

**கோளின் வேந்தன் - சூரியன்.** கூந்தன் மென்மழை கொண்மூவின் மேலெழு கோளின் வேந்தன்னது. (சு : 688)

**கோளுடை மதி - இராகுவினாற் கொள்ளப்பட்ட மதி.** கோளுடை வானமாமதி போலும். (யுத் : 1558)

**கோளுடைவான மாமதி - இராகுவினாற் பற்றப்பட்டுக் குறைபடுதலையுடைய வானத்து விளங்குகின்ற சந்திரன்.** (யுத் : 1558)

**கோளுண்ட திங்கள் - மேகஞ் சூழ்ந்த சந்திரன்.** கோளுண்ட திங்கள் முகத்தாள். (பா : 988)

**கோளும் ஐம்பொறி - சுவைகொள்ளுகின்ற ஐம்பொறி.** கோளும் ஐம்பொறியுங் குறைய. (அ : 111)

**கோளுறல் - பிடித்துக்கொள்ளல்.** துன்பம் கோளுறக் குலுங்கி. (யுத் : 2822)

**கோளுறுத்தல் - தடைசெய்தல்.** கோளுறுத்தற்கரிய குரங்கினம். (கி : 597)

**கோளுறுதல் – 1. கொல்லப்படுதல்.** கொல்வா மன்றேற் கோளுறும் இவ்வூர் எனல் கொண்டாள். (உ.வி) (சு : 182) நீ இக் கோளுற. (ஆ : 1016)

**2. கொள்ளப்படுதல்.** கோளுற்றவன் நெஞ்சு சுடக் குழைவான். (யுத் : 1710) கோளுற்று. (யுத் : 3660)

**3. அழிவடைதல்.** (சு : 182)

**4. கொள்ளுதல்.** குறித்த வெங்கோபம் யார்மேற் கோளுறுங் கொல். (ஆ : 1015)

**கோளுறு மடங்கல் – பொறியில் அகப்பட்ட சிங்கம்.** கோளுறு மடங்கலிற் குமுறி விம்முவான். (அ : 889)

**கோளெலாம் உலாவுகின்ற குன்று – ஒன்பது கோள்களும் சுற்றி வருகின்ற மேருமலை.** கோளெலா முலாவுகின்ற குன்றமன்ன யானையா. (பா : 111)

**கோற்றொடி – திரட்சியான வளை.** கோற்றொடி மகளிர். (பா : 824)

**கோறல் – கொல்லுதல்.** யாவரையும் நின்னெதிரே கோறும். (ஆ: 361) தகைப்புலக் கருமத்தோரைக் கோறலின். (சு : 1156) கோறல் மேற் கொண்டு விட்டான். (சு : 1318) (யுத் : 404) கோறிர். (யுத் : 3258)

**கோறி – கொல்லுதி.** ஆறிநின்ற தறனன்று அரக்கியைக் கோறி. (பா : 407) கோறியே. (சு : 1154)

**கோறிர் – கொல்லுங்கள்.** கோறிர் என்றனன். (யுத் : 210) இருவரைக் கோறிர். (யுத் : 3258)

**கோறும் – கொல்லுதும்.** (ஆ : 361) நுங்கள் குலம் வேரொடு மடங்கக் கோறுமென முந்தையொரு சூளுறவு கொண்டார். (ஆ: 614)

**கோன் – 1. எப்பொருட்கும் இறைவன். திருமால்.** கோனணி சங்கம் வந்து குடியிருந்தனைய கண்டம். (பா : 1208)

**2. அரசன். தலைவன்.** கோனிகர் குடிகள். (பா : 126) யாவரே எம் கோன் என்பதறிந்து பின்னைத் திறம்புவார் குறையினல்லால். (சு : 473)

**கோன்முறை பூட்டினன் – கோல் கொள்ளும் முறையில் ஓட்டுதற்கு இயையுமாறு பூட்டினான்.** (அ : 577) [பா : பே]

**கோனகர் – தலைமை பொருந்திய நகரம். இலங்காபுரி.** மானிடர் கோனகர்ப்புறஞ் சுற்றினர். (யுத் : 1296)

**கோனணி சங்கம் – திருமால் கையில் தாங்கிய சங்கு.** (பா : 1208)

**கோனிகர் குடிகள் – அரசனை ஒத்த குடிகள்.** (பா : 126)

**கோனிறக் குனிவில் – அம்பையும், ஒளியையுமுடைய வளைந்த வில்** கோனிறக் குனிவிற் செங்கைக் குமரனே. (யுத் : 797)

# கௌ

**கௌசலை - இராமனைப் பெற்றவள். தசரதன் முதல் மனைவி.** இவ் வெழுதரிய திருமேனிக் கருங்கடலைச் செங்கனிவாய்க் கௌசலை என்பாள் பயந்தாள். (பா : 740)

**கௌசாம்பி - குசன் என்னும் அரசனது தலைநகர்.** இவர்கள் தம்முள் குசன் கவுசாம்பி நாபன் குளிர் மகோதயம் ... ... ... வாழ்ந்தார். (பா : 425)

**கௌசிகி - கோசிகன் உடன் பிறந்தாள்.** (பா : 430—432)

**கௌதமன் - ஒரு முனிவன். அகலிகை கணவன்.** கோதமன் தன் பன்னிக்கு முன்னையுருக் கொடுத்ததிவன் போது நின்றதெனப் பொலிந்த பொலன் கழற்காற் பொடி கண்டாய். (பா : 749)

**கௌவை - துன்பம்.** காயெரியுற்றனர் அனைய கௌவையர். (அ: 478) கௌவையம் பெருங்கடல். (அ : 454)

# ச

**சக்கரத்தண்ணல் - இராமபிரான்.** அச்சக்கரத் தண்ணலைச் சார்ந்து முன்னினுன். (யுத் : 4248)

**சக்கரத்தயல் வருஞ்சங்கம் - திருமாலின் சக்கரப்படையின் அருகில் அமைந்த சங்கம்.** சக்கரத்தயல் வரு சங்கமாம் என மிக்கொளிர் கழுத்நணி தளர வெண்கொடி. (பா : 1299)

**சக்கரத் தலைவன் - சக்கரப் படையையுடைய திருமால்.** (யுத் : 3305)

**சக்கரத்தவன் - சக்கரப் படையையுடைய நாராயணன்.** ஒக்க நின்று உலகளித்து யோகின் எய்திய சக்கரத்தவனெனத் தமியனுயினுன். (அ : 3) (யுத் : 2138)

**சக்கரப் பொருப்பு - சக்கர வாளமலை.** (கி : 142-d) புறநிலைப்பெரும் சக்கரமால்வரைப் பொருப்பு. (யுத் : 3223)

**சக்கரம் - 1. நேமி. சக்கரப்படை.** சக்கரத்தயல் வரு சங்கம். (பா : 1299) (பா : 104) (ஆ : 806)

**2. ஆஞ்ஞா சக்கரம்.** (ஆ : 758)

**சக்கரம் நடத்தல் - ஆஞ்ஞா சக்கரத்தைச் செலுத்துதல்.** உலகம் யாவும் சக்கரம் நடத்தும் எனையோ தயரதன் தன் மக்கள் நலிகிற்பார். (ஆ : 758)

**சக்கர மால்வரை – சக்கர வாளமலை.** *புறநிலைப் பெருஞ் சக்கர மால்வரைப் பொருப்பின்.* (யுத் : 3223)

**சக்கர யூகம் – சக்கராயுத உருவத்தில் அமைக்கப்பெறும் அணிவகுப்பு.** *தடந்திரைப் பரவையன்ன சக்கர யூகம் புக்கு.* (யுத் : 2961)

**சக்கர வாகம் – இரவில் பிரிந்து இரைதேடும் இயல்பினது. சூரியன் ஒளியை அருந்தும் இயல்பினது இப்பறவை.** *சுடர்மணி இருளைக் கிறலால் தளர்ந்தில பிரிந்தில சக்கர வாகமே.* (அ : 132) (கி : 780) (சு : 687)

**சக்கர வாளம் – சக்கரவாகப் புள்.** (அ : 132) [பா : பே]

**சகடம் - 1. வண்டி.** *உகுளுடைச் சகடம் பூட்ட உடையவன் உய்த்த காரேறு.* (அ : 294) (யுத் : 1324)

**2. தேர்.** *கம்மியர் சகட மொத்தன தாரணி தேரெலாம்.* (யுத் : 2098)

**சகட வாழ்க்கை – சகடக்கால் போன்று (இன்ப துன்பங்கள்) மாறி வருந் தன்மையுள்ள (உலக) வாழ்க்கை.** *உருளுறு சகட வாழ்க்கை ஒழித்து வீடருளுமன்றே.* (யுத் : 1357)

**சகடு – வண்டி.** *சகடாயிரம் ஈகுவனுல்.* (யுத் : 1719)

**சகடை – ஒரு வாச்சியம்.** (யுத் : 2397)

**சகதண்டம் – உலகம்.** *சகதண்ட முழுதுக் காதிபர்களாய்.* (பாயி : 20)

**சகர நீர் வேலை – சகார்களால் தோண்டப்பட்ட நீரையுடைய கடல்.** *சகர நீர் வேலை தழுவிய கதிரில்.* (சு : 407)

**சகரம் – சகரரால் தோண்டப்பட்ட கடல்.** *சகரம் முந்நீர்ச் செம்புனல் வெள்ளம் தடுமாறு.* (யுத் : 3560)

**சகரம் முந்நீர் - சகர புத்திரர்கள் அகழ்ந்ததான கடல்.** *சகரம் முந்நீர்ச் செம்புனல் வெள்ளம் தடுமாறு.* (யுத் : 3560)

**சகரர் – சகரன் புத்திரர்.** *சகரர் தொட்டலாற் சாகரமெனப் பெயர் தழைப்ப.* (பா : 520)

**சகரன் – அயோத்தியையாண்ட ஓர் அரசன்.** *திண்டிறற் புனை சகரன்.* (பா : 512)

**சகாத்தம் – சக ஆண்டு.** *எண்ணிய சகாத்த மெண்ணூற்றேழின் மேல் சடையன் வாழ்வு நண்ணிய வெண்ணெய் நல்லூர்.* (பாயி : 6)

**சகுந்தம் – ஒரு பறவை.** *நிந்தையில் சகுந்தங்கள் நீளம் நோக்கின.* (அ : 777)

**சகோரம் – நிலவை உண்ணும் பறவை.**

**சங்குக் கரம்** – சங்குகளைச் சுமந்துவரும் கைகளாகிய அலை. (யுத் : 3651)

**சங்கங் கையுடைமை** – ஐம்படையில் ஒன்றான வளையைக் கையில் உடைமை. சங்கிறலியன்ற வளையல்களை யுடைமை. *சங்கங் கையுடைமையாலும் தாமரைக் கோயிலாலும்.* (பா : 1222)

**சங்க நீர்** – சங்குகளையுடைய கடல். *சங்க நீர் தந்ததனை வெல்வான் நிலந்தந்து நிரம்பிற்றன்றே.* (ஆ : 177)

**சங்கப் படகம்** – திரளான சங்கமென்னும் போர்ப்பறை. (யுத் : 1061)

**சங்கபாலன்** – அட்டமா நாகங்களுள் ஒன்று. *சங்கபால குளிகாதி வாலெயிறுதந்த திவிடம்.* (யுத் : 2014)

**சங்கம்** – 1. வளை. சங்கவளை. *தழங்கிய கலைகளும் நிறையும் சங்கமும்.* (பா : 609) (பா : 1024)

2. திரிவேணி சங்கமம். கங்கை, யமுனை, சரசுவதி கூடுமிடம். *கங்கையாளொடு கரியவன் நாமகள் கலந்த சங்கமாதலிற் பிரியலென்.* (அ : 720)

3. கூட்டம். திரள். தொகுதி. (உ. வி) *சங்கம் வந்துற்ற கொற்றத் தாபதர்.* (யுத்: 1233) *தீர்த்த சங்கக் கடலுக.* (யுத்: 1061) *சங்கத்தார் குரங்கு.* (யுத் : 1424) *மேகச் சங்கம்.* (யுத் : 3548)

4. சங்க வாத்தியம். *அண்டம் வெடிபட ஆர்த்த சங்கம்.* (யுத் : 1061) (யுத் : 2397) (பா : 269)

5. ஒரு பேரெண். *சங்கம் வந்துற்ற கொற்றத் தாபதர்.* (யுத்: 1233)

6. சங்குகள். நீர்வாழுயிர். *சங்க நீர்க் கடல்.* (யுத் : 1987) *நீரிடையுறங்குஞ் சங்கம்.* (பா : 37)

**சங்கமம்** – 1. இயங்குதிணை. *தாவர சங்கமம்.* (அ : 993)

2. கூட்டுறவு. *தாமகூடத் திரைத்தீர்த்த சங்கம ... ... ஏமகூடம்.* (கி : 828)

**சங்க முரல்தல்** - சங்கவாத்தியம் ஒலித்தல். *முரல் சங்கமும்.* (யுத் : 997)

**சங்கமுதுதல்** – வெற்றிக்கு அறிகுறியாகச் சங்கத்தை ஊதுதல். *சங்க மூதினன் தாதையை வல்லையிற் சார்ந்தான்.* (யுத் : 2578)

**சங்கமேறிய பெரும் புகழ்** – வீரர் குழுவில் உயர்ந்து விளங்கிய புகழ். *சங்கமேறிய பெரும் புகழ்ச் சாம்பன்.* (யுத் : 2568)

**சங்கரற் கழி முப்புரத்தவர்** – சங்கரனுக்கு அழிந்த முப்புரத்து அசுரர். (யுத் : 524)

**சங்கரன் – சிவபிரான்.** (யுத் : *524*)

**சங்க வளைக் குயில் – சங்கு வளையலையணிந்த குயில்போலும் மொழியினளான சீதாபிராட்டி.** *சங்க வளைக் குயிலைத் தழி நின்றார்.* (பா : *1341*)

**சங்கன் – வானரப்படைத் தலைவன்.** *கும்பனுங் குலச் சங்கனும் முதலினர் குரங்கின் தம் பெரும்படைத் தலைவர்கள்.* (கி : *725*)

**சங்காரம் – அழிக்கை. கொலை.** *சங்காரத்தாற் கண்டை யொலிப்ப.* (யுத் : *3799*)

**சங்கியா நிற்றல் – சந்தேகப்பட்டு நிற்றல்.** *இங்கணைந்தேறும் இயற்கை நோக்கியும் சங்கியா நிற்றியோ.* (யுத் : *4011*)

**சங்கினம் – சங்குத் தொகுதிகள்.** *சங்கினம் ஆர்ப்ப வந்து சார்வன போல.* (பா : *1118*)

**சங்கு – 1. ஓர் இசைக்கருவி.** *சங்கொலி வயிரிறேனசை.* (யுத் : *2399*) *பாண்டிலும் சங்கும்.* (பா : *489*)

**2. ஒரு நீர்வாழ் உயிர்.** *சங்கின் வாய் பொங்கும் ஓதை.* (பா : *34*)

**3. திருமாலின் சங்கு. பாஞ்சசன்னியம்.** *சங்குறை கரம்.* (பா: *387*) (யுத் : *3996*)

**4. சங்கினாலாய வளை.** *சங்கிற் பொலிந்த கையாளை.* (யுத் : *3*)

**சங்கு கைத்தாங்கிய தருமமூர்த்தி – சங்கினைக் கையிலே ஏந்திய அற உருவினனான திருமால்.** (யுத் : *3996*)

**சங்கு சக்கரக்குறி – சங்கு சக்கர ரேகைகள்.** *சங்கு சக்கரக் குறியுள தடக்கையில் தாளில்.* (கி : *152*)

**சங்குறை கரம் – பாஞ்ச சன்னியம் என்னும் சங்கு தங்குகின்ற திருக்கரம்.** *சங்குறை கரத்தொரு தனிச்சிலை தரித்தான்.* (பா : *387*)

**சங்குறை கழித்தன்ன சாமரை – உறையிலிருந்து இப்போதுதான் எடுத்த சங்கினைப் போலும் வெண்மையான சாமரை.** (பா : *882*)

**சங்கெறி தரங்கவேலை – சங்குகளைக் கரைகாண எறிகின்ற அலைகளையுடைய கடல்.** *சங்கெறி தரங்கவேலை தட்ட இச்சேதுவென்னும் இங்கிதின் எதிர்ந்தோர் புன்மை யாவையும் நீக்குமென்றே.* (யுத்: *4089*)

**சங்கை – 1. குற்றம்.** *சங்கையில் முகத்தார் நம்பி தம்பியரனைய ரானார்.* (அ : *250*)

**2. ஐயம். சந்தேகம்.** *சங்கை தீர்ந்து.* (அ: *929*) *சங்கியாநிற்றியோ.* (யுத் : *4011*) *சங்கையளாய தையல்.* (யுத் : *2652*) (யுத் : *2230*)

3. **மனம்.** சங்கையிற் சழக்கிலன். (கி : 973)

4. **எண்ணிக்கை (ஸங்க்யா).** சங்கையிலா என்வெப்புறு வாளிகள் இன்று விரைந்தால். (யுத் : 2834)

5. **கூச்சம்.** தவத்தியை முனிந்து வாளாற் சங்கையொன்றின்றிக் கொன்றுல். (யுத் : 3202)

6. **அச்சம்.** நிருத ரென்னும் சங்கையுமில்லாவண்ணம். (யுத்: 2003)

**சச்சரி - ஒரு தோற்கருவி வாச்சியம்.** (சு : 284)

**சசி - இந்திராணி.** இந்திரன் சசியைப் பெற்றுன். (ஆ : 634)

**சஞ்சலம் - 1. துன்பம்.** சஞ்சலம்புரி சக்கரவாகம். (சு : 687) சஞ்சலங் கலந்தபோது தையலாரை உய்யவந்து அஞ்சலஞ்சல் என்கிலாத ஆண்மை என்ன ஆண்மையே. (பா : 798)

2. **மனத்தடுமாற்றம்.** சஞ்சலந் துறந்து தானச் சந்திரன் உதிக்க லுற்றுன். (ஆ : 665)

**சஞ்சலம் புரிதல் - துன்பமடைதல்.** சஞ்சலம் புரி சக்கரவாகம். (சு : 687)

**சட்டகம் - 1. வடிவம். உருவழகு.** (கலா) சட்டகந்தன்னை நோக்கி யாரையுஞ் சமைக்கத் தக்கான். (கி : 781)

2. **மேல்வரிச் சட்டம்.** (உ. வி) (கி : 781)

**சடங்கு காட்டல் - கிரியை முறைகளைத் தெரிவித்தல்.** தக்க நன் மறையவன் சடங்கு காட்ட. (அ: 1146)

**சடசட - ஒலிக்குறிப்பு.** மரமுந்தூறும் தாளிடை ஒடியுமோசை சடசட ஒலிப்ப. (ஆ: 426)

**சடசட ஒலிப்ப - சடசட என்று ஒலிப்ப.** (ஆ : 426)

**சடம் - உடல்.** சடந்துடிக்கிலராய் வந்து தாக்கினும். (யுத் : 2967)

**சடன் - உடல்.** சடனுெக்கும் நிழலே. (பா : 1056) [பா : பே]

**சடாமண்டலம் - சடைமுடி.** புண்டரீகம் புனலவன் பொழி சடா மண்டலம் நிறைந்துபோய் வழிந்து சோரவே. (அ : 1119)

**சடாயு - கழுகரசன்.** சம்பாதி பின்வரு சடாயு என்றுன். (ஆ : 206)

**சடிலத்தலை - சடாபாரத்தைக் கொண்ட சிரசு.** தாதுன் சடிலத்தலை வைத்தது. (ஆ : 694)

**சடிலம் - சடை, சடைக்கற்றை.** ஆறுகொள் சடிலத்தானும் அயனும் என்றிவர்களாதி வேறுள குழுவை யெல்லாம் மானுடம் வென்ற தனறே. (இ : 97) சடில நீள் துகள் ஒளிதர. (யுத் : 4106)

**சடை** – திரியுண்ட மயிர்க்கற்றை. நிறமுமாம். *வரிசடை நறுமலர் வண்டு பாடிலாத் திரிசடை. (யுத் : 1674)*

**சடைக் கங்கை** – சடையினின்று பிரியுங்கங்கை. *காண்டகுஞ் சடைக் கங்கையை நிகர்ப்பன காணாய். (அ : 743)*

**சடைக் கற்றை** – சடைத் தொகுதி. *எண்புயத் தண்ணல் வண்ணச் சுருளுடைச் சடையின் கற்றைச் சுற்றெனச் சுடர்வ கண்டான். (யுத் : 2526)*

**சடைகொள் சென்னியர்** – சடையைத் தாங்கிய தலையினையுடையவர். *சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாம் மிதித்தேறப் படிகள் தாமென. (அ : 771)*

**சடைப்பரம்** – சடாபாரம். *சடைப்பரம் புனைந்து. (யுத் : 3987)*

**சடைப்பழுவம்** – காடுபோலடர்ந்த சடை. சடா டவி. *செங்கண் ஏற்றவன் செறிசடைப் பழுவத்தின் நிறைதேன் பொங்கு கொன்றை ஈர்த்தொழுகலால் பொன்னியைப் பொருவும் கங்கை. (பா : 509)*

**சடைமா மகுடம்** – சடை பெரியமுடி. பெரிய சடைமுடி. *உடைமா மகுடம் புனையென் றுரையாவுடனே கொடியேன் சடை மாமகுடம் புனையத் தந்தேன். (அ : 352)*

**சடையப்பன்** – சடையப்ப வள்ளல். *வாழ்வார் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பன் வாழ்த்துபெற. (பாயி : 2)*

**சடையன்** – சடையப்ப வள்ளல். *சடையன் வெண்ணெய் நல்லூர் வயிற்றந்ததே. (பா : 11) (பா : 636)*

**சடையின் மாலை** – சடைக்கற்றை. *மாசுண்ட சடையின் மாலை கழுவினன். (யுத் : 4266)*

**சண்டக் கொடு நெடுங்காற்று** – கொடிய விசையுள்ள நெடிய சண்ட மாருதம். கடுமைவாய்ந்த சண்டமாருதம். *(அண்) (யுத் : 3376)*

**சண்டச் சரமழை** – கொடிய அம்புமாரி. *(யுத் : 3715)*

**சண்டச் சிலை** – வலிய வில். *(யுத் : 3715)*

**சண்டம்** – 1. உக்கிரம். கொடுமை. *சண்டப் பிறை வாளெயிற்றான். (ஆ : 921)*

2. **வெப்பம்.** *சண்ட வான் கிரணவாள். (யுத் : 604)*

3. **வலிமை.** *கனகச் சண்டச்சிலை. (யுத் : 3715)*

4. **வேகம்.** *சண்டங்கொள் வேகம். (யுத் : 726)*

**சண்டமாருதம் – பெருங்காற்று.** பருவரைகள் எனைப்பலவும் வட பாகத்துச் சாய்ந்தன பேருடற்பிறந்த சண்டமாருதம் வீச. (யுத்: 2689) இடும்பனோர் சண்டமாருத மென்னத் தடவரை கொண்டு சீறி. (யுத் : 1025)

**சண்ட வெங் கடுங்கணை – உக்கிரமான கொடிய இராமபாணம்** (ஆ : 488)

**சண்ட வெங்கதிர் – கொடிய உஷ்ணகிரணனான சூரியன்.** சண்ட வெங்கதிரோன் செக்கர்த் தழலொடு மருவித்தாம மண்டலம் விழுந்த தென்ன விழுந்தது தலையும் மண்மேல். (யுத் : 3127)

**சண்ட வேகம் – கடுமையான வேகம். உக்கிரமான வேகம்.** சண்ட வேகத்தினன். (கி : 580) [பா : பே] (யுத் : 726)

**சண்பகக் காடு – சண்பகவனம்.** சண்பகக் காடு தோறும். (பா : 31)

**சண்பகவனம் –** சன்பகவனமாம். (பா : 79)

**சத்தான குணம் – நல்லனவான குணங்கள்.** புவனம் தாங்கும் சத்தான குணமுடையோன். (பா : 215)

**சத்திரம்— 1. வாள். வேலாயுதம்.** (வெ ப) **கைப்படை.** (கலா) அச்செயல் ஓர் தோன்றற்குச் சத்திரம் மார்பிடைத் தைத்த தொத்ததே. (பா : 1091)

**2. குடை.** சத்திரம் நிழற்ற. (அ : 280)

**3. படைக்கலம். [சஸ்த்ரம்] வாள். வேல்.** பேரபிமானம் என்னும் சத்திரம் மார்பில் தைக்க உயிரிலன் என்னச் சாய்ந்தான். (யுத்: 2353)

**4. யாகம். [ஸத்ரம்]** உத்தாம சத்திரஞ் செய்வார். (யுத் : 3784)

**சத்து – நன்மை.** சத்தான குணமுடையோன். (பா : 215)

**சத்துருக்கன் –** எத்திருக்கும் கெடும் என்பதை எண்ணிச் சத்துருக்கன் எனச் சாற்றினன் நாமம். (பா : 302)

**சத்துருக்கினன் – சததுருக்கன்.** பரதனை இளைய கோவைச் சத்துருக் கினனை. (யுத் : 4354)

**சதகூறு – நூற்றில் ஒரு கூறு.** ஓர் தன்மை அணுவினைச் சதகூறிட்ட கோணினு முளன். (யுத் : 254)

**சதகோடி – நூறு கோடி.** சத கோடி மின் சேவிக்கும் மின்னரசு. (பா: 594) [பா :பே] (யுத் : 612) (யுத் : 814) சதகோடிகள். (யுத் : 3361)

**சதங்கை – ஒரு வகைக் காலணி.** வானவர் மகளிர் போனார் மழலையஞ் சதங்கை மாழ்க. (யுத் : 2233)

**சதம் – நூறு.** *சத கூறு.* (*யுத் : 254*)

**சத மகன். இந்திரன். நூறுயாகம் செய்தவன்.** *சதமகற்கு அன்று அம்பரத்தின் நீங்கா அரசளித்த ஆழியாய்.* (*அ : 1128*) *சதமக கேள்.* (*பா : 492*)

**சதமன் – இந்திரன்.** *சதமன் அஞ்சுறு நிலையர்.* (*கி : 51*)

**சதவலி – ஒரு வானரப் படைத்தலைவன்.** *தானை யோடும் அச்சதவலி என்பவன் சார்ந்தான்.* (*கி : 705*)

**சதானந்தன் –[கௌதமமுனிவன் புதல்வன்.** *பூந்தண் சேக்கைப் புனிதனையே பொரு ஏய்ந்த கேண்மைச் சதானந்த னென்றுரை வாய்ந்த மாதவன்.* (*பா : 650*)

**சதி— 1. தாளத்திற்கு இயைய வைக்கப் பெறும் அடிவைப்பு.** *விதங்களின் விதிமுறை சதி மிதிப்பவர் மதங்கியர்.* (*பா : 144*)

**2. ஒத்த அடிவைப்பினால் உளதாம் ஓசை.** *தாரொடும் சதியொடும் தாவுமாயினும்.* (*பா : 836*)

**3. தாளவொத்து.** *கருவிதூக்கினர் எழுவிய சதியின்.* (*சு : 419*)

**சதிர் – திறமை.** *ஏந்திழை தன் துயர் தீர்க்குஞ் சதிரிலேன்.* (*அ : 1053*) [*பா : பே*]

**சதுக்கம் – நான்கு தெருக்கள் கூடுமிடம், நாற்சந்தி.** *அந்தணாளர் தம் சாலையும் சதுக்கமும் சமைக்க.* (*பா : 293*)

**சதுமுகன் – பிரமன்.** (*ஆ : 974*)

**சதுமுகன் தாதை – திருமாலின் அமிசமாகிய இராம பிரான்.** *தகையுடைத்தம்பிக் கந்நாள் சதுமுகன் தாதை சொன்னான்.* (*ஆ: 975*)

**சதுமுகன் படை – பிரமாஸ்திரம்.** *சாய்ந்த மாருதி சதுமுகன் படையெனுந்தன்மை ஆய்ந்து.* (*சு : 1038*) (*யுத் : 593*)

**சந்தக்கா – அழகானசோலைகள்.** *சந்தக் காவெலாங் களிவண் டீட்டம்.* (*பா : 33*)

**சந்தங்கமழுந் தோள் – சந்தன மணங்கமழும் தோள்.** *சந்தங் கமழுந் தோளாய் தழுவிக்கொள வாளனவே.* (*அ : 375*)

**சந்த நுண்டுகில் – அழகிய நுண்ணிய ஆடை.** *சந்த நுண்டுகிலும் வீழத் தளிர்க் கையால் அணைத்து.* (*பா : 870*)

**சந்தம்— 1. அழகு.** *சந்தக் காவெலாம் களிவண் டீட்டம்.* (*பா : 33*) *சந்த வன்னெடுந் தடக்கைகள்.* (*கி : 282*) *சந்தப்பூண் அலங்கல் வீர.* (*ஆ : 1191*)

**2. ஒளி.** *சந்த நுண்டுகிலும் வீழ.* (*உ.வி*) (*பா : 870*)

3. **வடிவம்.** *சந்த மொன்று கொடித்திரள்.* (சு : 683-c)

4. **சந்தஸ்.** இருடியும் சந்தமும் எண்ணி. (யுத் : 3777)

5. **சந்தனக் குழம்புவகை.** *சந்தமிவை.* (அ : 278)

**சந்தவன் னெடுந்தடக்கை – அழகிய வலிய நீண்ட கைகள்.** *இந்திரன் மகன் புயங்களும் இரவிசேய் உரனும் சந்த வன்னெடுந் தடக்கைகள் தாக்கலின் தகர்வ.* (கி : 282)

**சந்தனச் சேதகம் – சந்தனக்குழம்பு.** *வண்ணக் கொழுஞ் சந்தனச் சேதகம் மார்பணிந்த அண்ணற் கரியோன்.* (பா : 965)

**சந்தனப் பந்திசெய்தூண் – சந்தன மரத்தாலான வரிசையாகிய தூண்.** *சந்தனப் பத்திசெய் தூணின் மேற் பவளப் போதிகை.* (பா : 122)

**சந்தன வனம் – சந்தனக் காடு.** *சந்தன வனமல சண்பகவனமாம்.* (பா : 79)

**சந்தன விமானம் – சந்தன மரத்தாற் செய்த விமானம்.** (அண்) **தேர் போல் தோன்றுகின்ற விமானம்.** (வை.மு) (கலா) *அந்தமில் குணத்தினானை அடியிணை முடியினோடும் சந்தன விமானம் ஏற்றி.* (யுத் : 458)

**சந்து – அழகிய.** (அண்) **அப்படிப்பட்ட.** (உ. வி) [ச்யந்தன – தேர்]

**சந்தார் தடந்தோள் – அழகு நிறைந்த பெரிய தோள்.** (வை.மு) **சந்தனம் அணிந்த பெரிய தோள்.** (அண்) (ஆ : 708)

**சந்தி– 1. மூன்று தெருக்கள் கூடும் முச்சந்தி.** *சதுக்கமும் சமைக்க சந்தியும்.* (பா : 293)

2. **சத்தியா வந்தனம்.** வள்ளல் போய் ஒரு மணித்தடத்திற் சந்தி நோக்கினன் இருந்தது கண்டனள். (ஆ: 315)

3 **சந்தியா காலம். மாலைக்காலம்.** *சந்தி வந்தனைத் தொழில் முடிந்து.* (யுத் : 462)

4. **சொற்களின் சேர்க்கையால் வரும் சந்தி.** *சந்தியும் பதமுமாய்த் தழைத்த தன்மையான்.* (யுத் : 202)

5. **காலை நண்பகல் மாலை என்ற சந்தியா காலங்கள்.** *நாடோறுஞ் சந்தியின்றி நிரந்தரம் தம்முனூர் பந்தியங் கழற் பாத மருச்சியா.* (யுத் : 4125)

6. **இடையீடு.** (அண்) (யுத் : 4125)

**சந்திக்கலா வெண்மதி வாணுதலாள் – மாலைப் போதில் தோன்றும் கலைகள் சில கொண்ட வெண்மதி போலும் ஒளி நுதலாள்.** (பா : 996)

**சந்திநோக்குதல் – சந்தியா வந்தனத்திற் கருத்தைச் செலுத்துதல்** (ஆ: *315*)

**சந்திர கவிகை – சந்திரன் போன்ற வெண்குடை.** *சந்திர கவிகை ஓங்கும் தயரதராமன்.* (யுத்: *4303*)

**சந்திர காந்தகம் – சந்திர காந்தக் கல்மயமான ஒருமலே.** வெயிலியங்கும் *கனவரையும் சந்திர காந்தகமுங் காண்பீர்.* (கி: *766*) [பா: பே]

**சக்திரகாந்தம் – சந்திரனேக் கண்டபோது தண்ணீரைக் காலும் கல்.** *சந்திரகாந்த மீன்ற சீத நீர் தெளித்த மென்பூஞ் சேக்கை.* (பா: *794*) **சந்திர காந்தம் மலே என்பது பழைய வுரை.** (*கலா*)

**சந்திர சைலம் – ஒரு மலே. இந்து சயிலம் எனவும்படும்.** *ஊதத் தலேவனே யொத்துப் பொலிந்தது சந்திர சைலம்.* (பா: *904*)

**சந்திர மௌலி – சிவபிரான்.** இளஞ் சந்திர மௌலியும் தையலாளுடன் வந்தனன். (பா: *1327*)

**சந்திரர் – சந்திரர்கள்.** *சந்திரர் கோடி யென்ன.* (அ: *257*)

**சந்திர வதனம் – பூரண சந்திரன் போலும் திருமுகம்.** இருண்ட *குஞ்சியும் சந்திர வதனமும்.* (பா: *619*) *சந்திரவதனத் தருந்ததி.* (சு: *410*)

**சந்திரவுதயம் – சந்திரர்களின் உதயம்.** *சாளரந் தோறும் தோன்றும் சந்திரவுதயங் கண்டார்.* (பா: *577*)

**சந்திரன் அனேய தோர் சரம் – சந்திரன் போன்ற உருவத்தை யுடைய ஒப்பற்ற அம்பு. பிறைவாயம்பு.** *உருமினேற்றினேச் சந்திரன் அனேய தோர் சரத்தினுற்றரை சிந்தினன்.* (யுத்: *3741*)

**சந்திரன் தனிப்பதம் – சந்திரமண்டலத்தின் தனியரசு;** *சந்திரனது ஒப்பற்ற அரசபதவி.* (யுத்: *135*)

**சந்திரன் தேவிமார் – உடுக்கள்.** *சந்திரன் தேவி மாரில் தகையுறு தரளம்.* (யுத்: *3966*)

**சந்திரன் தோய் கோயில் – சந்திர மண்டலத்தை அளாவியுள்ள அரண்மனே.** *சந்திரன் தோய் கோயிலெய்தி.* (பா: *719*)

**சந்திரனுலகம்–சந்திரலோகம்.** *சந்திரனுலகத்தார் என்பார்.* (யுத்: *3706*)

**சந்திரனே வென்ருன் – சந்திரனே வென்ற ஒரு சூரிய குலத்தரசன். இவன் பெயர் சந்திரஜித் என்பர்.** *சந்திரனே வென்ருனும் உருத்திரனேச் சாய்த்தானும்.* (பா: *731*)

**சந்திராதித்தர் – சந்திரனும் சூரியனும்.** *அந்தரம் சந்திராதித்தர் இமைப்பிலர் திரிவர்.* (பா: *95*)

**சந்திவந்தனைத் தொழில்** - சந்தியா காலத்திற் செய்ய வேண்டிய கடமைகள். *சந்திவந்தனைத் தொழில் முடித்து.* (யுத் : 462)

**சந்தின் அடை** - சந்தன மரத்தின் இலை. *சந்தினடையிற் படலே.* (கி : 519)

**சந்து**- 1. சந்தனம். சந்தனமரம். *சந்தின் துண்டங்களாகத்தூவி.* (யுத் : 2001) *சந்தார் தடங் குன்று.* (சு : 578)

2. அழகு. *சந்தார் தடந் தோளோடும்.* (ஆ : 708)

3. உடற் பொருத்துக்கள். கூட்டுக்கள். *தாடைகள் சந்துமார்பு.* (யுத் : 1270)

4. சந்தி. கூட்டுக்கள். முட்டு. *தலைகள் சந்தறக் கடித்தன.* (யுத் : 1769) *சந்துகள் புல்லுறப் பொருந்துவ தொன்று.* (யுத் :2745)

**சந்துகள் புல்லுறப் பொருந்துவ தொன்று** - சந்தான கரணி. (யுத் : 2746)

**சந்நிதி** - சாந்நித்தியம். பிரத்தியட்சம். முன்பு காணப்பெறுதல். *ஆய்வளை மயிலை யாண்டும் சந்நிதி யுற்றிலாதார்நெடிது பின்தவிரச் சென்றார்.* (கி : 920)

**சபதம்** - சூளுரை. *முந்து சொன்ன சபதம் முடிப்பனுல்.* (யுத் : 4156)

**சம்பகநறும் பொழில்** - நல்ல மணம் விசுகின்ற சண்பகச்சோலை. *சம்பக நறும் பொழில்களிற் றருணவஞ்சிக் கொம்பமுதொசிந்தன எனச் சிலர் குழைந்தார்.* (அ : 546)

**சம்பரன்** - ஓர் அசுரன். *சம்பரனைக் குலத்தோடுந் தொலைத்து.* (பா : 325) (அ : 598)

**சம்பாதி**- 1. சடாயுவின் தமயன். *சம்பாதிபின்வரு சடாயு.* (ஆ: 206)

2. விபீடணன் மந்திரியருள் ஒருவன். *அரன் சம்பாதியும்.* (யுத் : 320)

**சம்பு** - சிவபெருமான். *சம்பு உம்பர் தம்நாளுடைமையின் அவர் நடுக்கம் நோக்கி.* (பா : 763)

**சம்புமாலி** - பிரகத்தன் மகன். *சம்புமாலி உலந்தான் ஒன்றே குரங்கென்றார்.* (சு : 861) (சு : 853)

**சமங்கடத்தல்** - போரை வெல்லுதல். *அறத்தினலன்றி மற்றமரர்க்கும் அருஞ்சமங் கடத்தல் மறத்தினலரிது.* (யுத் : 1214)

**சமம்** - போர். [ஸமரம்] *அருஞ்சமம். வெஞ்சமம்.* (யுத் : 2260) *வெஞ்சமத் தொழிலர்.* (கி : 47)

**சமயத்தோர் – சமயத்திலுள்ளவர்கள்.** நனிநின்ற சமயத்தோர் எல்லாரும் நன்றென்ன. (ஆ : 52)

**சமயம் – மதம்.** ஆயாதசமயமும் நின்னடியவே. (ஆ : 54)

**சமயவாதிகள் – மதங்கட்குரிய விவாதங்களைச் செய்பவர்.** சமய வாதியர் சூலையின் திருக்கலால். (யுத் : 207)

**சமரபூமி – போர்க்களம்.** சமரபூமிவும் ஒத்தது தானையே. (பா : 843)

**சமரம்– 1. போர்.** சமரம் வேட்டதோர் ஆளென உணர்கிலேன் ஆர் கொலாமிவன். (யுத்: 1329) (யுத் : 1500)

**2. கவரிமான்.**

**சமழ்க்கும் – பின்வாங்கும்.** மலர் நிறம் சமழ்க்குமன்றே. (கி : 808)

**சமழ்த்தல்– 1. பின்னடைதல்.** (கி : 808)

**2. வருந்தல்.** வழிதேடிக்கொடுத்தனர் சமழ்த்தனர். (யுத் : 1557)

**சமித்தது – ஒழிந்தது.** சுரர்க்கு வேந்தினிச் சமித்ததென்பகை யெனத்தம ரொடார்ப்பவே. (பா : 271)

**சமிதை – சமித்து.** அம்பினுற் பெரும் சமிதைகள் அமைத்தனன். (யுத் : 2557)

**சமிரணன் – வாயுதேவன்.** சமிரணன் அகன்ற பின்னர். (பா : 428)

**சமீரணன் – வாயுதேவன்.** (பா : 428) [பா : பே] சமீரணன் சேய். (யுத் : 2408)

**சமுகம் - கூட்டம். தொகுதி.** சமுகவாளியும் தனுவும். (கி : 912) **சமூகம் என்பது எதுகை நோக்கித்திரிந்தது.**

**சமுகவாளி – கூட்டமான அம்புகள் போன்ற கண்கள்.** குமுதவாயினுர் குயிலை ஏசுவார் சமுகவாளியும். (கி : 912)

**சமுதர் – பாகர். ஸம்மிதர் என்ற வடசொல் ஒத்தபாகர் என்று பொருள் படும். ஒத்தபாகர் என்னலாம்.** சமுதரோடு மடிந்தன. (யுத் : 3570)

**சமை – பொறுமை.** (வை.மு) **அழிதல்.** (கலா) சமையுறுதக்கனுர் வேள்விசாரவே. (பா: 761)

**சமைக்குதல் – முடித்தல்.** பின்னுளவிராம னெனும் பெயரான் தன்னுருயிர் கொண்டு சமைக்குவனுல். (யுத் : 1690)

**சமைத்தல்– 1. செய்தல். படைத்தல். இயற்றல். ஏற்படுத்தல்.** தேவரெதிர் தலையெடுத்து விழியாமை சமைப்பதே. (ஆ : 325) சமைத்தவரை இன்மை மறைதானு மெனலாம். (பா : 1230) சாலையும் சதுக்கமும் சமைக்க. (பா : 295)

2. **கொல்லல்.** *தத்த மாதரைத் தங்கழலாற் சிலர் சமைத்தார். (சு : 792) எழில்கொள் யாக்கையைச் சமைத்தியென்று எறிதர. (சு : 1286)*

3. **முடித்தல்.** *சமைக்குவனுல்.* (யுத் : 1690)

4. **உணவாகப் பக்குவப்படுத்தல்.** *இராமனெனும் பெயரான் ஆருயிர் கொண்டு சமைக்குவனுல்.* (யுத் : 1690)

5. **இலக்கணப்படி அமைத்தல்.** *சமைத்த கிதம் கின்னரர் முதலோர் பாட.* (யுத் : 2773)

**சமைதல் – 1. அமைதல்.** *தாள் தொடர் குலத்தை யெல்லாம் தொலைக்குமாச் சமைந்து நின்ருர்.* (ஆ : 433)

2. **சித்தமாயிருத்தல். ஆயத்தமாயிருத்தல்.** *நொய்துன் தாயை ஆருயிர் உண்டானை யான் கொலச்சமைந்து நின்றேன்.* (ஆ : 765) *தானுக அமைந்து சமைந்திலனுல்.* (ஆ : 770)

3. **அடங்குதல்.** நன்று நின் ஆண்மையாயினும் தருக்கினி இன்ரோடு சமையுந்தானென. (யுத் : 1483) சமையுமுன் வாழ்க்கை இன்ரோடு என்று தன் சங்க மூதி. (யுத் : 1860)

4. **பலித்தல்.** *தவியிருத்தனள் சமைந்ததென் சிந்தனை.* (ஆ : 316)

5. **நிரம்புதல்.** *ஆன்ற சராசரம் சமைந்த ஆற்றல் மும்மையேழ் உலகங்காக்கும் முதல்வர் நீர்.* (கி : 67)

6. **அழிதல்.** *தருக்கினி இன்ரோடு சமையும்.* (யுத் : 1438) *சங்கரற்கழி முப்புரத்தவரெனச் சமைந்தார்.* (யுத் : 524)

7. **இறத்தல்.** *தானைத் தலைவருஞ்சமைந்தார்.* (சு : 929)

8. **முடிவு செய்தல்.** மலரோன் படை தொடுப்பேன் எனச் சமைந்தான். (யுத் : 3025)

9. **எண்ணுதல்.** *நீர்சமைந்த வாறெலாம் ... ... ... சொல்லுவீர்.* (யுத் : 350)

10. **செய்தல்.** *இலங்கையை ... ... ... உரைத்தியேற் சமைவென்.* (யுத் : 2879)

**சமைப்பது – செய்வது.** *சமைப்பது கொலையலால் நக்கது யாவதோ.* (யுத் : 347)

**சமைய– 1. ஏற்ப. மனங்கொள்ளுமாறு.** *அறனும் அஃதே என்றிவை சமையச் சொன்னுன்.* (யுத் : 927)

2. **தேறும்படி.** வள்ளல் நீ சாருதி ஈண்டெனச் சமையச் சொல்லினுன். (யுத் : 3993)

**சமைவு- 1. அழிவு** *(கலா) தள்ளரும் துயரமும் சமைவும் சாற்றலும். (பா : 231)*

**2. நிறைவேறுதல்.** *சமைந்ததென் சிந்தனை.* **(ஆ : 316)**

**3. ஏற்பாடு.** *தம்பியுந் தானும் நிற்பதாலுன் சமைவி தென்ருன். (யுத் : 898)*

**4. நிகழ்ந்தது.** *சமைவுற அறிந்திலம் தக்கதாகுக. (பா : 1318) சமைவீது. (யுத் : 898)*

**சமைவுற - நன்ருக. பொருந்த.** *சங்கொடு தாரை சின்னம் சமைவுறச் சாற்றலுற்ருர். (யுத் : 1269)*

**சயக்கவி - வெற்றி பொருந்திய வானரம்.** *சயக்கவிப் பெரும்படை. (யுத் : 629)*

**சயத்துறை - வெற்றி பெறுதற் குரிய வழி.** *புயத்துறை வலியரேனும் பொறை யொடும் பொருந்தி வாழ்தல்சயத்துறை. (யுத் : 927)*

**சயந்தனம் - தேர்.** *ஆடகத் தசும்புறு சயந்தனம். (ஆ : 420)*

**சயம் - வெற்றி.** *சயந்தனைப் பொருந்தம்பியை உயிர் கொளச் சமைந்தான். (யுத் : 3518) சயங்கொடு தருவன் இன்றே மனிதரைத் தனு ஒன்ருலே. (யுத் : 3080) (கி : 718) சயக்கவிப் பெரும் படைத்தலைவர். (யுத் : 629)*

**சயனம் - படுக்கை.** *மெல்லென் சயனத்தான். (யுத் : 892)*

**சயனம் பரப்பல் - படுக்கையைப் பரப்புதல். (அவையல் கிளவி)** *அமுதொடும் பானமூட்டிச்சயனம் பரப்பவும் வான நாடியர் யாவரும் வந்தரால். (யுத் : 3583)*

**சயித்தம் - சைத்தியம். தெய்வமரங்கள் செறிந்ததும் சிகரம் பிரகாச முடையது மான தேவ கோட்டம்.** *நின்றதோர் சயித்தங் கண்டான். (சு : 739)*

**சயிலகோபன் - இந்திரன்.** *தளையவிழ் தருவுடைச்சயில கோபனும் கிளையும். (பா : 286)*

**சயிலம் - மலை.** *(பா : 286) தள்ளத்தக்கில் பெருஞ்சயிலம். (யுத் : 229)*

**சரக்கொடு** நெடுமதில் **- அம்புகளால் ஆனகொடிய நெடியமதில்.** *(யுத் : 3427)*

**சரங்கோலுதல் - அம்பைச் செலுத்துதல்.** *நாவரிய பேருலகத்தின்றெவ் சரங்கோலி. (யுத் : 1671)*

**சரங்களாய்க் காட்டும் - அம்புமயமாய் விடும்.** *அரக்கராவி போக்கிய போகவென்று கருதவே உலகமெல்லாம் சரங்களாய்க் காட்டுமன்றே. (யுத் : 1239)*

**சரண்**– 1. அடைக்கலம். *அன்னவர்கே சரண் நாங்களே.* (பா : 1)

2. நாடி அடையும் பொருள். (இலக்) ரக்ஷகப்பொருள். (வை. மு) (பா : 1)

3. வணக்கம். (கலா) (பா : 1)

4. அடி. பாதம். *சரணந்தாழ.* (யுத் : 444) (பா : 210)

**சரண்சேர்தி** – சரண்புகுவாயாக. அடைக்கலம் புகுவாயாக. *உறுதி வேண்டுமேல் அன்னவனைச் சரண்சேர்தி என்றென.* (சு : 1293)

**சரணஞ்சூடுதல்** - திருவடிகளைத் தலையில் வைத்து வணங்குதல். *மாமுனி சரணஞ்சூடி.* (பா : 210)

**சரணந்தாழ்தல்** – புகல் புகுதல் *தையலைவிட்டு அவன் சரணந்தாழ்ந்து.* (யுத் : 1306)

**சரணம்** – 1. கால். பாதம். திருவடி *மாயிருஞால முண்போன் கழுமன்மேற் சரணம் வைத்தான்.* (பா : 204) *சரணமல்லதோர் சரணில்லை.* (யுத் : 4026) *மாமுனி சரணஞ்சூடி.* (பா : 210)

2. அடைக்கலம். *தவறிங்கிது நின் சரணம் காவாயென்றுய் அதனூற் கடிய சாபங்கருதேம்.* (அ : 382)

**சரணம்வைத்தல்** - திருவடிகளை வைத்து ஏறுதல். *அண்ணலும் சரணம்வைத்தான்.* (சு : 1334) (யுத் : 1859)

**சரணருளுதல்** – அபய மளித்தல். புகலிடமளித்தல். *கைபுகுந்துறு சரண் அருளிக் காத்துமேல்.* (யுத் : 362)

**சரத்தணிவகுத்தல்** – அம்புத்தொகுதியை வகுத்தல். (வை. மு) அம்புகளால் அணியை வகுக்தல் *ஊசிநுழையாவகை சரத்தணி வகுக்கும்.* (யுத் : 3398)

**சரதம்**– 1. சத்தியம். உண்மை. *உன்னூல் அன்னூர் குறைவது சரதம் கோவே என்றனர்.* (சு : 462) *இது சரதம் என்றுன்.* (யுத் : 252)

2. நிச்சயம். திண்ணம். உறுதி. *இது சரதம் நின்னுணை சாற்றினேன்.* (ஆ : 1198)

3. தேனுகிய ரசத்தோடு கூடியது. *சரத நாண்மலர்.* (கி : 481)

4. நலம் (ஸரஸம்) *என் முகங் காண்பதன் முன்னம் யான் தன் முகங்காண்பது சரதந்தானென.* (யுத் : 1517)

5. விளையாட்டு. *இரத மாயிரம் ஏயெனும் மாத்திரை சரதமாகத் தரைப்படச் சாடுமால்.* (யுத்: 2095)

6. மெய்ம்மை. *சரதவானவர்கள்.* (யுத் : 4113)

**சரதமது பெறுவது - சத்தியஞ் செய்யச் சொல்வது.** *சங்கையுற்றவர் பெறுவது முண்டது சரதம்.* (யுத் : 4042)

**சரதமாநெறி - உண்மையான நல்ல நெறி.** *சரதமாநெறியும் வல்லோர் தத்தம் பதியைச் சார்ந்தார்.* (யுத் : 4354)

**சரதாரை - அம்பு மழை.** *சரதாரைமாரி மண்டச் சிறகாலடித்தான்.* (ஆ : 921) *முகில் போல் சரதாரைகள் வீசினிர் சார்கிலிரோ.* (ஆ : 891)

**சரதாரை மாரி - அம்புகளாகிய தாரையுடைய மழை.** (ஆ : 921)

**சரந்தாழ்வில்லாய் - அம்பு பொருந்தும் வில்லையுடைய அரசனே.** *சரந்தாழ் வில்லாய் தந்த வரத்தைத் தவிர்கென்றல் உரந்தானல்லால் நல்லறமாமோ உரை என்றாள்.* (அ : 219)

**சரபன் - ஒரு வானரப்படைத் தலைவன்.** *வினதனும் சரபனும்.* (கி : 722)

**சரம்- 1. அம்பு.** *உரவோன் விடுசரங்கள் ஓடின.* (ஆ : 387)

2. **வடம்.** *வருணற் கீந்த வருணசரம்.* (யுத் : 655)

**சரம் துரத்தல் - அம்புவிடுதல். அம்புதொடுத்து விடுதல்.** *தோளெடுத்தது துணித்தி என்று ஒரு சரந் தொடுத்தான்.* (யுத்: 1557) (யுத் : 1158)

**சரம் பயில் சாபம் - அம்புபொருந்திய வில்.** *சரம் பயில் சாப மன்ன புருவங்கள் தம்மினுட.* (பா : 940)

**சரம்பெய்தூணி - அம்புகள் பெய்த அம்பறுத் தூணிகள்.** *சரம் பெய்தூணியில் தளிரடிநூபுரந் தழைப்ப.* (பா : 487)

**சரமதில் - சரக்கூடம். அம்புமதில்.** *அரக்கருக்கன்று செல்வரிய தாம் வகை சரக்கொடு நெடுமதில் சமைத் திட்டானரோ.* (யுத் : 3427)

**சரமழை - அம்புமழை.** *சண்டச்சரமழை கொண்டு அவை இடையேயறத் தடுத்தான்.* (யுத் : 3715)

**சரமாரி - அம்புமழை.** *சிந்தினன் சரமாரி.* (யுத் : 2087) (யுத் : 3724)

**சரமாரிகள் - அம்பு மழைகள்.** *சரமாரிகள் பொழிந்தான்.* (யுத் : 3012)

**சரமாமழை - மிக்க சரமழை.** *பொருவில்லிகள் முடிவில்லவர் சரமாமழை பெய்வார்.* (யுத் : 3362)

**சரயு - ஸரஸில் தோன்றுவது. மானச சரசில் தோன்றுவது.** *மானச மடுவிற்றோன்றி வருதலால் சரயுவென்றே மேன் முறை அமரர் போற்றும் விழுநதி.* (பா : 423) *பொங்கும் சரயுவிற்புனலும் தந்தார்.* (யுத் : 4309) (பா : 23)

**சரவங்கன் - சரபங்கமுனிவன காமபாணத்தை வென்றவன்.** *சரவங்கனிருந்து தவங்கருதும் மரவங்கிளர் கோங்கொளிர் வாசவனம்.* (ஆ : 74)

**சரவணம் - நாணற்காடு.** *செய்வளர்ந்தருள் சரவணம் என்பதுந் தெரிந்தான்.* (பா : 507)

**சரவேலி - அம்புகளால் அமைக்கப்பட்ட காவல் மதில்.** *தணிப்பில் வெஞ்சர வேலியைக் கடந்திலர்.* (யுத் : 3426)

**சரளச்சோலை- 1. இனிய சோலை.** *பொன்றிணி சரளச் சோலைப் பொதும்பர் புக்காள்.* (ஆ : 295)

**2. அசோகவனம்.** *(அன்) புனைமலர்ச் சரளச் சோலை.* (யுத்: 1585)

**சரளம்- 1. ஒழுங்கு. மரங்களின் ஒழுங்கு.** (ஆ : 295)

**2. தொகுதி.** *சரள சண்பத் தசநவப் புலத்தகணி.* (கி : 907

**3. தேவதாரு மரம்.** *தேனுகு சரளச்சோலை.* (சு : 199)

**4. இனிமை.** *வேரியஞ் சரளச்சோலை.* (ஆ : 722) *தேனுகு சரளச் சோலை.* (யுத் : 1585)

**சரற்பருவம் - கூதிர்ப்பருவம்** ... ... ... ... *வீங்குஞ்சரற் பருவத்திரி மழைபோல்.* (யுத் : 1121)

**சரன்- 1. சுகேதுவின் தந்தை. தாடகையின் பாட்டன்.** *சரனெனும் வலத்தினன்.* (பா : 367)

**2. அம்புகள். சரன்படர் புட்டில் கட்டி.** (ஆ : 429)

**சராசரம் - சரம் அசரம்.** *வாழ்ந்தேம் என்ன ஆர்த்தன உலகினுள்ள சராசரம் அனைத்தும் அம்மா.* (யுத் : 449) (யுத் : 198)

**சரி - கைவளை.** *நீளரவச்சரி தாழ்க்கை நிரைத்தாள்.* (ஆ : 1085)

**சரிஉடை - சரித்த உடை.** *சரியுடைச்சுடர் சாய்நலஞ்சார்வுறச் சாத்தி.* (யுத் : 3613)

**சரித்தல்- 1. வலியற்று விழச் செய்தல்.** *மால்கடல் கிளரினும் சரிக்கும் வன்மையார்.* (சு : 886)

**2. சஞ்சரித்தல். உலாவருதல்.** *சந்திரன் தவிப்பதம் சரிக்கும்.* (யுத் : 136) (சு : 886)

**சரிதம் - நல்லொழுக்கம்.** *தருமன் அஞ்சுறு சரிதர்.* (கி : 51)

**சரிதல்- 1. கீழேசிந்துதல்.** *சரிந்த பூவுள.* (அ : 56)

**2. ஒதுங்குதல்.** *எங்கும் சரிந்தனர் அரக்கர்.* (யுத் : 1883)

**3. தளர்தல்.** *சரிந்தது நிருதர் தானை.* (யுத் : 2012)

4. **நிலைகுலைதல்.** *உத்திரியங்களும் சரிய ஓடுவார்.* (சு : 146)

5. **அவிழ்தல்.** *கனந்தலை வருங்குழல் சரிந்து கலை சோர.* (ஆ : 601)

6. **ஒழிதல்.** *சரிந்தது அரக்கர் வலி யென்றெண்ணி.* (சு : 860)

**சரிதை – ஒழுகலாறு ; செயல்.** *வேலைகடந்த வன்சரிதை.* (யுத் : 829)

**சரிநெறி – நேர்மையானவழி.** *சரிநெறிதுருவிப் போதி.* (சு : 1333)

**சரிப்பது – சஞ்சரிப்பது.** *கடலுளைப்பதும் கால் சரிப்பதும்.* (கி : 123) *[பா : பே]*

**சருமன் – தோலுடையினன்.** *உரிமானின் சருமனன்.* (அ : 710)

**சரோருகன் – திருமாலின் உந்திக்கமலத்தில் வாழ்பவனுகிய பிரமன்.** *விரைசெறி கமல மென் பொகுட்டு மேவிய வர சரோருகன் மகன்.* (பா : 184)

**சல்லியம் – அம்பு படை.** (யுத் : 2745)

**சல்லிய மகற்றுவது – விசல்லிய கரணி.** *சல்லிய மகற்றுவ தொன்று.* (யுத் : 2745)

**சலஞ்சலம் – சங்கின் சாதிபேதம். வலம்புரிச் சங்கம் ஆயிரஞ்சூழ இருப்பது. சலஞ்சலம் தானுக ஒலிப்பது.** *சலஞ்சல மலம்பு தவளக் கங்கணங்களும் இலங்கியகரம் பிறழவே:* (ஆ : 16) (பா : 49)

**சலத்த காலன் – கோபம் மிக்க யமன் போன்றவன். கும்பகருணன்.** (யுத் : 1566)

**சலதி – கடல்.** *தன்னுணர்வழிந்தது காதற் சலதியின் அழுந்தி.* (பா : 669)

**சலம்– 1. நீர். கடல் நீர்.** *சலம் வருதரளம்.* (பா : 1308)

2. **பொய்க் காரணம்.** *கனவெனும் சலத்தினுற் கணவற்புல்லினுள்.* (பா : 1110)

3. **கோபம். பழைமையாகவுள்ள கோபம்.** *தகுந்தொழின் முனிவரன் சலத்தை உன்னியே.* (பா : 383)

4. **கடல்.** (பா : 1308)

5. **வஞ்சனை. கபடம்.** *சலக்குறியிலர்.* (யுத் : 349)

6. **தணியாக்கோபம்.** *சலமுங்கோண்டாள்.* (ஆ: 294) *சலத் தெதிர் பாய்ந்த தானையும் பெருமையும்.* (யுத் : 1005)

7. **வயிரம். தணியாத முதிர்ந்த வயிரம். கறுவு.** *கரனை உங்கள் கூற்றுவனை இப்பொழுதே கொணர்கின்றேன் என்று சலங் கொண்டு போனுன்.* (ஆ : 367) *சலங்கைமேல் நிமிர வெஞ்சினந்திருகி வஞ்சன் மேனிமிர் தருக்கினுன்.* (யுத் : 2033)

8. **தீமை. தீவினை.** *சலந் துடித்தின்னமுந் தருவ துண்மையோ.* (சு : 361)

9. **பகைமை** *சலத் தோடியைவிலன் என் மகன்.* (பா : 1371)

10. **கவலை.** (வை.மு) *சலமுதலறுத் தருந்தருமந் தாங்கினர்.* (அ: 6)

11. **மனப்பிணக்கு.** *சந்திரற்குவமை சான்ற வதனத்தன் சலத்தை நோக்கி.* (ஆ : 800) *சலத்தர்.* (சு : 209) [பா :பே]

12. **அவித்தை. பொய் அறிவு.** *அச்சலந்தீர்ந்துன்னை தாதை யென்றுணர்குவ முத்திவித்து.* (யுத் : 4023)

**சலம்பிறிதுறல் – கோபம் நீங்கல்.** *சலம் பிறிதுற மனந்தளர்ந்து கூறுவாள்.* (அ : 887)

**சலம் வருதரளம் – கடல் நீரில் தோன்றும் முத்து.** (பா : 1308)

**சலம் வருதல் – சுழலுதல்.** *சலம் வரும் குயமகன் திகிரி.* (யுத் : 3730)

**சலமுதல் – கோபம் முதலிய குற்றங்கள். காமம் உலோபம் முதலியன.** (அ : 6)

**சலாகை – நாராசம். இரும்புக்கம்பி.** *காய்ந்தன சலாகையன்ன உரைவந்து கருவா முன்னம்.* (சு : 444)

**சலி - தளர்ச்சியடைவாயாக.** *சலியென்றுயர் மலரோன் உரைதந்தால் இறைசலியேன்.* (யுத் : 1143)

**சலித்தல்– 1. கோபித்தல். வெகுண்டுகூறுதல்.** *உறுவது புகலும் தருவன் இன்றுமக் கேற்றுள தொன்றெனச் சலித்தான்.* (யுத் : 2453) *அவர் மேல் சலிக்கின்றது என்னே.* (அ : 428)

2. **வருத்துதல். நிலை கலங்கல்.** *தராதலத் தெவரும் பேண அவனியே சலிக்கும் நீரால்.* (ஆ : 667)

3. **நடுங்குதல்.** *அஞ்சித் தருமமும் சலித்த தம்மா.* (யுத்: 269)

4. **கலங்குதல். கலங்கச் செய்தல்.** (உ.வி) (யுத் : 269) *தாயையாயினும் சலித்திடு வஞ்சனை தவிரான் மாயையானுளன்.* (யுத் : 497)

5. **பெறுத்தல்.** *தன் போர் தவிரா அதனைச் சலியா.* (யுத் : 2335)

6. **நிலை மாறல்.** *அலைகள் வேலைகள் அஞ்சின சலிக்கின்ற அயர்வும்.* (யுத் : 3637)

7. **சஞ்சலப்படுதல்.** *இமையவர் உலகெலாம் சலித்த.* (யுத்: 1148)

8. **வலிமை நிலைகுலைதல்.** *ஊழியினும் சலியாத மூவர்.* (ஆ : 326)

9. **தளர்ச்சியடைதல்.** *சலியேன்.* (யுத் : 1143)

**சலிப்புறுதல் – வெறுத்தல்.** *பிழைசெய்தாயென சாரதிப் பெய ரோனைச் சலிப்புறு.* (யுத் : 3845)

**சலியாநிலை – நடுங்காத நிலை.** *மழுவாளுடையான் வரவும் சலியா நிலையாய் என்றால் தவிர்வாருளரோ என்றான்.* (அ : 358)

**சலியாவலி – மனந்தளராத வலிமை.** தேவாசுராதியார் செய் செருவில் சாவான் இறையுஞ் சலியா வலியான். (யுத் : 1733)

**சவம் – பிணம்.** *நாம நாட்டிய சவமெலாம்.* (யுத் : 506) *நிருதர் போர்ச்சவம் கற்குவை நிகர்த்தன.* (யுத் : 1082) (யுத் : 1671) [பா: பே]

**சவரர் – வேடர்** *மைந்தர் நால்வர் தாமுறு சவரராகச் சபித்து.* (பா: 690)

**சவரி – வேடர் குலத்தில் தோன்றியதவமூதாட்டி.** *தாயினுமுயிர்க்கு நல்குஞ் சவரியைத் தலைப்பட்டு அன்னாள் ஏயதோர் நெறியின் எய்தி.* (ஆ : 1194)

**சவி– 1. செவ்வை.** *சவியுறத் தெளிந்து.* (ஆ : 225)

**2. அழகு.** (ஆ : 225)

**3. காந்தி; ஒளி.** *சவிச் சுடர்க் கலன் அணிந்த பொற்றோள்.* (சு : 1084) *சவியுடைத்தூசு.* (கி : 852)

**சவிச்சுடர்க் கலன் – சூரிய காந்திபோன்ற ஒளியை யுடைய ஆபரணங்கள்.** (சு : 1084)

**சவிபடு தகைசால் வானம் – சூரியனொளி சாயப் பெற்ற பரப்புமிக்க ஆகாயம்.** *சவிபடு தகைசால் வானம் தானொரு மேனியாக.* (சு: 277)

**சவியுறத் தெளிந்து. செவ்வை பொருந்தத் தெளிந்து.** (ஆ : 225)

**சவுனம் – குழந்தைகளுக்கு முதலாவதாகத் தலைமுடி களையும் சடங்கு.** *சவுளமொ டுபநயனமு முறைதருகுற்று.* (பா : 306)

**சவை – சபை.** *நீயிருக்குஞ் சவை நடுவே வந்தடியேன் நாணாது முகங்காட்ட வல்லேனோ.* (ஆ : 332)

**சழக்கன் – கொடியவன்** *அச்சழக்கன் கண்கள் காக முண்டதற்பின் மீண்டு முடிப்பென் என்கருத்தை என்றான்.* (யுத் : 2875)

**சழக்கி – குற்ற முள்ளவள். கொடியவள்.** *தாடகை என்பதச் சழக்கி நாமமே.* (பா : 365)

**சழக்கியர் – அறிவில்லாதவர். அறிவில்லாத அரக்கியர்.** *தீவினை தனக்கு வாழ்விடமாய சழக்கியர்.* (யுத் : 3956)

**சழக்கு**- 1. **குற்றம்.** *சங்கையில் சழக்கிலன் என்னுந்தன்மையை இங்கித வகையினுல் எய்த நோக்கினுன்.* (கி : 973)

2 **அவமானம். பரிபவம்.** *தந்தை தந்தை பண்டுற்ற சழக்கெலாம் எந்தை தீர்த்தனன் என்பதோர் ஏம்பலால்.* (யுத் : 2101)

3. **நீதிக்கு மாருனது. வழக்கிற்கு மாருனது.** *தாடகை என்பதச் சழக்கி நாமமே.* (பா : 365)

**சளசள** – **ஒலிக்குறிப்பு.** *சளசள வென மழைத்தாரை கான்றன.* (பா : 225)

**சன்மம்** – **பிறப்பு. பிறவி.** *சன்மத்தின் தன்மையானும்.* (யுத் : 1904)

**சன்னத்தம்** – **ஆயத்தம். போர்க்கவசம் பூண்டநிலே.** *இறையேனும் முனிவிலாதாய் சன்னத்தனுகித் தனுஏந்துதற் கேது என்ருன்.* (அ : 419)

**சன்னத்தன்** – **போர் முயற்சியுடையவன்.** (அ : 419)

**சன்னவீரம்**- 1. **வெற்றிமாலே.** *துமனிச் சன்னவீரமிடை மின்னுதட மார்பினெடுமே.* (ஆ : 12)

2. **வீர சங்கிலி.** *சன்னவீரத்த கோவை வெண்டரளம்.* (சு : 414)

**சன்னு** – **ஒருமுனிவன்.** *சன்னுவின் வேள்வியை அழிப்ப.* (பா : 534)

**சனகர் பெருமான்** – **சனகர் குலத்தலேவனுன அரசன்.** *முடிச்சனகர் பெருமானும் முறையாலே மறைவேள்வி முற்றி.* (பா : 719)

**சனகன்** – **சனகராசன். மிதிலேவேந்தன்.** *தாவில் வெண்கவிகைச் செங்கோற் சனகன்.* (பா : 1202)

**சனகன் குயில்** – **சீதாபிராட்டி.** *சனகன் குயிலும் நானுவிதவருபோகமும் நுகர்கின்ற அந்நாள்வாய்.* (பா : 1349) [பா :பே]

**கனகன் தையல்** - **சனகராசன் மகள்.** (அ : 355)

**சனகன் பூவை** – **சனகன் மகளாகிய சீதாபிராட்டி.** *சனகன் பூவையைத் துன்னி.* (அ : 1257)

**சனகன் பெற்றெடுத்த கொம்பு** - **சனகன் பெற்ற பூங்கொம்பு போன்றவளாகிய சீதை.** (யுத் : 3142)

**சனகன் பொன்** – **சீதாபிராட்டி.** *துன்னு தூசினெடு சந்திவை சுமந்த சனகன் பொன்னெடேகி.* (ஆ : 5)

**சனகன் மாமகள்** – **சனகனது முத்தமகள்.** (ஆ : 851)

**சனகன் மாமட மயில்** - **சீதாபிராட்டி. சனகன் பெற்ற சிறந்த இளமயில் போல்பவளாகிய சீதாபிராட்டி.** (அ : 737)

**சனகன் மாமயில் – சனகனுடைய பெரிய மயில் போன்ற சாயலை யுடைய பிராட்டி.** (யுத் : 4080)

**சனகன் மான் – சனகன் மகளாகிய மான் போன்ற விழியை யுடைய சீதை.** (கி : 487) (கி : 527)

**சனகி – ஜானகி சீதை.** *பெரும் புகழ்ச்சனகி.* (அ : 40) *சனகியாம் நெடியதாய நஞ்சு.* (யுத் : 104)

**சனகியெனும் பெருநஞ்சு – சனகி என்ற பெரியநஞ்சு** *சனகியெனும் பெருநஞ்சுன்னைக் கண்ணாலே நோக்கவுமே போக்கியதே உயிர் நீயுங் களப்பட்டாயே.* (யுத் : 3887)

**சனம் – மக்கள்.** *பல்சனம் பிறந்து வேறுருலகு பெற்றாரென மறந்து வைகினர்.* (அ : 1072) [பா :பே] (யுத் : 4255)

**சனர் – மக்கள்.** (அ : 1072)

# சா

**சா – இறந்துவிடு.** *செய்வது சாதியால் அன்றெனில் தக்கதோர் நெறி போதியால் என்றனன்.* (யுத் : 3988) *சாமின் நீர் என்றல்.* (யுத் : 3301)

**சாகத்தீவு – அரக்கர் உறையும் ஒருதீவு.** *சாகத்திவினில் உறைபவர் தானவர் சமைத்த யாகத்திற் பிறந்தியைந்தவர்.* (யுத் 3215)

**சாகம்– 1. இலை.** *சாகவன்தலையொடு மரமுந்தாழ.* (ஆ : 901)

2. **இலையுணவு.** *தானுகர் சாகமெல்லாம் முறை முறை சிலவர் தந்தார்.* (சு : 1251)

3 **கிளைகள்.** *சாகநெடுமாப் பனைதழைத்தன.* (சு : 712)

4. **தேக்கு.** *சாகத் தீவினிலுறை பவர்.* (யுத்: 3215) (உ. வி) (சு : 712)

**சாகரத்தானை – கடல் போன்ற பரந்தசேனை.** *சாகரத்தானையுந்தழுவச் சார்ந்தவர்.* (யுத் : 1678)

**சாகரத்தீவு – கடலிடையே உள்ள ஒரு தீவு.** *அதின் மறவோர் நிலய மென்பது சாகரத்தீவிடை நிற்கும்.* (யுத் : 3221)

**சாகரம் – கடல்.** *சகரர் தொட்டலாற் சாகர மெனப்பெயர் தழைப்ப மகரவாரிதி சிறந்தது.* (பா : 520) *சாகரத்தானை.* (யுத் : 1678)

**சாகலா உயிர் – இன்னும் போகாத உயிர். உடம்பை விட்டு நீங்காத உயிர்.** *சாகலாவுயிர் தாங்க வல்லேனையும் போகின் நின்னொடுங் கொண்டனை போகென்றான்.* (அ : 314)

**சாகா மூலம் – சாகமும் மூலமும்; இலைகளும் வேரும்.** *சாகா மூலந் தின்றுழல்வார்பாற் சலமென்னும்.* (சு : 177) **சாகமூலம் என்பது எதுகை நோக்கி நீண்டது.**

**சாகாவரத்தலைவர் – இறவாவரம் பெற்ற தலைவர்கள். சிரஞ்சீவிகளுள் தலைவர்.** (அண்) **சாகாவரம் பெற்ற சிரேட்டராகிய சிரஞ்சீவியர் எழுவர்** (வெ.ப) *சாகாவரத்தலைவரில் திலத மன்னுன்.* (சு : 85)

**சாகாவரத்தலைவரிற் றிலதமன்னுன் – அனுமான்.** (சு : 85)

**சாகை – 1. கிளை.** *துணரின்ற சாகைத் தன்கைக் கண்கள் புதைத்துத் துவள்வாளும்.* (பா : 1004) (ஆ : 901) [பா : பே]

**2. பிரிவுகள்.** *நிதறும் பெரும் சாகைகள் தழைக்கின்ற செயலால்.* (கி : 164)

**3. மரணம்.** *தோகையைக் கண்டிலா வகையுஞ் சொல்லி எஞ் சாகையும் உணர்த்துதி.* (கி : 963)

**சாங்கியம்–தன் மாத்திரைகள் ஐந்து பூதங்கள் ஐந்து ஞானேந்திரியங்கள் ஐந்து கருமேந்திரியங்கள் ஐந்து மஹாந் அகங்காரம் மனம் மூலப்பிரகிருதி புருஷன் என்னும் இருபத்தைந்து தத்துவங்களின் தன்மையை உள்ளபடி விரித்துக்கூறுவது சாங்கிய மார்க்கம்.** *சாங்கியம் யோகம் என்றிரண்டு தன்மைய வீங்கிய பொருளெலாம் வேறு காண்பன.* (யுத்: 190)

**சாசரம் – [ஸஹஸ்ரம்] ஆயிரம்.** *கையஞ்சாசர முடைய வக்கடவுளைக் கண்டும் மெய்யஞ்சாதவன்.* (கி : 723) [பா : பே]

**சாடி – 1. பானை.** *தன்னறைச் சாடியுள் தன்வாட்கணின் நிழலைக் கண்டாள் வண்டெ‌ன ஓச்சுகின்ருள்.* (பா : 1059) *மூடியநெய்யொடு நறவ முற்றிய சாடிகள்.* (யுத்: 2941)

**2. சாடுதல் பார்க்க.**

**சாடுதல் – மோதியழித்தல். மோதுதல், தாக்குதல்.** *ஆடு கொடிப்படை சாடி.* (அ : 1014) *சாடிக்கோன்றனன்.* (சு : 786) நனி *சாட.*

**சாண் – ஓர் நீட்டலளவை. முழத்தினளவிற் பாதி.** *சாணினுமுளன்.* (யுத் : 254)

**சாதகம் – 1. பூதம்.** *சாதகம் என்னவும் தழைத்தமாலையே.* (பா: 626) [பா :பே] *சாதகத்திட்டம்.* (யுத் : 2594)

**2. ஜாதகம்.** (பா : 289-b)

**சாதகர் – 1. கடுநோன்பும் சூளுறவுங்கொண்ட தேவி உபாசகர். தலைப்பலியிடுதல் போன்ற கொடிய நோன்புகளை நிறைவேற்றும் இவர்கள் மந்திர சாதகர் எனப்படுவர்.** *சாதகர் என்னவும் தகைத்தம்மாலையே.* (பா : 626)

2. **பூதகணம்.** *நிவந்தவான் குருதியின் நீத்தம் நீந்தி மெய் சிவந்த சாதகரொடு சிறுகட் கூளியும்.* (1100) *சாதகரீட்டம்.* (யுத் : 2594)

**சாதல் – இறத்தல்** *சாதல் காப்பவர்.* (சு: 509) *சாதியோ.* (யுத்: 1544) *சாக்கிலன்.* (யுத் : 147) (யுத் : 1881) *சாகான்.* (யுத் : 148) *சாவாதொழியான்.* (அ : 349) *போர்புரிந்திப் போதே சாதியோ.* (யுத் : 1544)

**சாதல் காப்பவர் – இறத்தலைத் தடுப்பவராகிய காவல் அரக்கியர்.** (சு : 509)

**சாதனம் – அரச முத்திரை.** *சூடிச்சாதனந் தோய்த்துடைச் சுற்று மண்மூடு தோட்டின் முடங்கல் நிமிர்த்தனன்.* (அ : 798)

**சாதி– 1. தொகுதி.** *சாதியில் நிமிர்ந்த தோர் தலையைத் தள்ளினுன்.* (யுத் : 3817)

2. **இனம்.** *சாதியால் வந்த சிறுநெறியறியான்.* (யுத் : 1575)

3. **இறந்து படுதல்.** *செய்வது சாதி.* (யுத் : 3988)

**சாதித்தல் – 1. அழித்தல்.** *இகலில் சாதியாதனவு மில்லை.* (ஆ : 22)

2. **செய்தல்.** (கலா) **கொல்லுதல்.** (அண்) *வெகுண்டவண் சாதியாது அவர் சொற்றரத்தக்கனே.* (கி : 572)

3. **முயன்று சித்திபெறுதல்.** *போதத்தானும் அப்புறத்துள அப்பொருளானும் சாதிப்பார் பெரும் பதம்.* (யுத் : 160)

**சாதியின் புன்மை – சாதியால் வந்த இழிகுணம்.** *சாதியின் புன்மை இன்னும் தவிர்ந்திலை போலும்.* (யுத் : 1353)

**சாது – 1 தக்கது.** *சாதுஆம் என்ற அத்தனுவின் செல்வனும்.* (கி : 228)

2. **நல்லவை.** *சாது வென்றுணர்கிற்றியேல் நக்கன நின்வயிற் கூறுதும்.* (சு : 1133)

**சாதுகை – சாத்வீகம் சாந்தம். (சாது-சாந்தம். கை-ஒழுக்கம்; சீலம்) நல்லொழுக்கம்.** *சாதுகை மாந்தரெல்லாம் தயரதன் தன்னை ஒத்தார்.* (அ : 251)

**சாதுகை மாந்தர் – சாதுவான ஒழுக்கத்துடன் கூடியமக்கள்.** (யுத் : 3944)

**சாதுராகம் – சாதிலிங்கம். (ராகம் – சிவப்பு)** *சாதுராகத்தடம்.* (யுத் : 1514)

**சாதுவாம் மாந்தர் – நற்குண அமைதியுடைய ராய மக்கள்.** (யுத்: 3974)

**சாந்தம் – சந்தனம்.** *திடருடைக்குங்குமச்சேறும் சாந்தமும்.* (அ : 476) (ஆ : 980) [பா : பே]

**சாந்தன - சாந்த குணத்தையுடையவன்: (கலைக்கோட்டு முனிவன்)** புராரியும் புகழ்தற்கொத்த சாந்தனுல் வேள்விமுற்றில் தனயர்கள் உளராம் என்ருன். (பா : 213)

**சாந்து - 1. சந்தனமரம்.** சாந்துயர் தடங்கள். (பா : 941)

**2. சந்தனம்.** சாந்தளாவிய கலவைமேல் தவழ்வுறு தண்டமிழ்ப் பசுந்தென்றல். (சு : 305)

**3. தைலம்.** சந்தனம் அகில் நாறும் சாந்தொடு தெருவெங்கும் சிந்தினர் திரிவாரும். (பா : 1268)

**4. மயிர்ச்சாந்து. கலவை சாந்து செங்குங்குமம். (அ : 761)**

**5. குழம்பு போன்ற கலவை.** சாந்து செய்குவனும்என முறை முறை அரைத்தனன் தரையோடும்: (யுத் : 1554)

**சாந்துசெய்தல் - சாந்துபோலாக்குதல்.** வானரப்படை முற்றும் சாந்துசெய்குவனுமென முறை முறை அரைத்தனன் தரையோடும். (யுத் : 1554)

**சாந்துபொதிசீதம் - சந்தனத்தின் கண் உள்ளகுளிர்ச்சி.** பூவின் வெறி சாந்து பொதிசிதம். (பா : 1229

**சாந்துயர்தடம். சந்தனமரங்கள் ஓங்கப்பெற்ற மலையிடம்.** சாந்துயர் தடங்கள் தோறும். (பா : 941)

**சாந்தை - கலைக்கோட்டு முனிவன் பன்னி.** சாந்தையாம் முகநலாள்தனை. (பா : 234) [பா : பே]

**சாந்தொழில் - சாதல்.** நீ சாந்தொழிற் குரியை என் சார்பு நிற்றியேல். (யுத் : 363)

**சாபத்துயர் - சாபத்தாலாகிய துயர்மிக்க உடம்பு.** அருவினையேன் சாபத்துயர் துடைத்தாய். (ஆ : 1180)

**சாப நாண் - வில் நாண்.** சாப நாணின் உகுவன மலைகள் எஞ்சப் பிறப்பன ஒலிகளம்மா. (யுத் : 1637)

**சாப நூல் - வில் வேதம்.** சாப நூல்நெறி மறப்பிலாதாய். (யுத்: 2896)

**சாபநூல் நெறி - தனுர்வேத வழி.** (யுத் : 3896)

**சாபம் - வில்.** நறையுருக் கரும்பின் சாபத் தனங்கவேள். (பா: 1156)

**சாம் - இறப்பேன்.** கூரேர்ச் சாம் இது சரதம் நின்னுனை. (அ : 1198)

**சாம்பர் - சாம்பல்.** சினைநறுஞ் சாம்பராய். (சு : 1201)

**சாம்பவன் - ஜாம்பவான்.** சாம்பவனும் எண்கின் வேந்தன். (யுத்: 3894)

**சாம்பன் - சாம்பவன். வானரத் தலைவன்.** சாம்பனியம்ப. (கி: 1028)

**சாம்பவனவன் – சாம்பன் என்பவன்.** சாம்பனவன் ஒன்றுரை செய்வான். (கி : 860)

**சாம்புதல் – 1. சோர்ந்து கிடத்தல். உணர்வழிதல்.** மண்ணிடைத் தன்னையும் மறந்து சாம்பினன். (ஆ : 950)

**2. ஓய்தல்.** வாயொடு மனமுங் கண்ணும் அயர்ந்து சாம்பித் தாயினை இழந்த கன்றில் தம்பியுந் தலத்தனானன். (யுத் : 2854)

**3. வாடுதல் ஒடுங்குதல்.** சானகி அழுது சாம்ப. (யுத் : 422) நாணத்தாற் சாம்புகின்றான். (யுத் : 1229) உயிர் சாம்புவாள். (சு : 356)

**4. இறந்தொழிதல். அழிதல்.** சாம்பவன் கொல்லச் சாம்பும். (யுத் : 2009) காகமுங் கரிகளும் கரிந்து சாம்பின. (பா : 353)

**5. மயங்கித் தூங்குதல். உறங்கிக்கிடத்தல்.** சாதல் காப்பவரும் என் தவத்திற் சாம்பினர். (சு : 509)

**சாம்புவன் – சாம்பவான்.** உலகெலாம் அளந்து கொண்டநாள் சாம்புவன் திரிந்தெனத் திரிந்து சாற்றினன். (பா : 823)

**சாம கீதம் – சாம வேதத்தின் இசை.** கொம்பலம்பின சாம கீதம் நிரம்பவே. (அ : 245)

**சாமரை – வெண்சாமரை. கவரி.** தானவர் விட்டகல் பேரிசை கட்டிய ஒத்திவர் சாமரையான். (ஆ : 81)

**சாமரை இரட்டல் – கவரி வீசுதல்.** இருபுறஞ் சாமரை இரட்ட. (யுத் : 4192)

**சாமின் – சாகுங்கள்.** சாமின் நீர் என்றல் தருமன்று. (யுத் : 3301)

**சாய் – 1. சாய்தல். சுருங்குதல்.** சங்கரற்கும் வலி சாய்வில் வலத்தோர். (யுத் : 814)

**2. தத்தம் நிலைமை. (அழகு)** தொடர் தடங் கிரிகளும் சாயழிந்தன. (கி : 187)

**3. சாயல். ஒப்பு.** சாயுரைப் பரியவாய தடந்தோள். (யுத் : 819)

**4. பெருமை.** சாயடங்க. (அ : 238)

**5. ஒளி. (அழகு)** (உ. வி) (ஆ : 238)

**6. அழகு.** சாய் நலஞ் சார்வுறச் சாத்தி. (யுத் : 3612) சாயழிந்தன அடித்தலம் எடுத்திடுதலால். (கி : 187)

**சாய்த்தல் – 1. அழித்தல்.** கிரண வாளால் தயங்கிருட்காடு சாய்க்கும் மண்டலம். (யுத் : 604)
**2. பெயர்த்தல்.** தார் கொன்றையினன் கிரி சாய்த்தவன். (யுத் : 1958)

**சாய்தல் – 1. கெட்டு ஓடுதல்.** *சிந்திச் சேனுறச் சாய்ந்தது.* (யுத் : 1777)

**2. குறைதல். மெலிதல். சுருங்குதல்.** *தளர்ந்து சாய்ந்தான்.* (யுத் : 865)

**3. ஒடுங்குதல். தளர்தல். வலி குன்றல்.** *தன்னுணர்வழிந்து சிந்தை அலமந்து தளர்ந்து சாய்ந்தான்.* (யுத் : 865) *திண்டிறல் சாய இந்திரனே பண்டு தந்தது.* (யுத் : 1085) *சாய்ந்தானை.* (யுத் : 1005)

**4. மடிதல்.** *சாரதி தலையைத் தள்ளிச்சென்றது நிருதர் சாய.* (யுத் : 1099)

**5. அழிதல்.** *சாயாப் பெருஞ் சாய் கெட.* (யுத் : 1973)

**6. தோற்றல்.** *எடுத்தலும் சாய்தல் தானும்.* (யுத் : 3313)

**7. நிலைகுலைந்து தளர்தல்.** *வெருவிச் சாய்ந்தனர் விண்ணவர்.* (இ : 287)

**சாய்ந்து சாய்ந்து – வலி மிகவும் ஒடுங்கி.** *சாய்ந்து சாய்ந்து சரம்படத் தள்ளலுற்று ஓய்ந்து வீழ்ந்த.* (யுத் : 995)

**சாய் நலம் – சாய்தலினுல் உண்டாகும் அழகு.** *சரியுடைச் சுடர் சாய் நலஞ் சார்வுறச் சாத்தி.* (யுத் : 3613)

**சாய்வது – குன்றுவது. குறைந்தொழிவது.** *தானுடை நெடுந்தவம் தளர்ந்து சாய்வது ஓர் மானுட மடந்தையால் என்னும் வாய்மொழி.* (யுத் : 89)

**சாய்வு – 1. குற்றம்.** *சுருதி நால்முறை சாய்வறத் திருத்திய சாலை.* (பா : 264)

**2. தளர்வு தளர்ச்சி. அழிவு.** (அண்) *சாய்வு நீக்குதல் சாரதி தன்மைத்தால்.* (யுத் : 3848)

**3. குறைவு.** *சங்கரற்கும் வலி சாய்வில் வலத்தோர்.* (யுத் : 814)

**சாயகக் கடுமை – அம்பின் விரைவு.** *முந்து சாயகக் கடுமையும் பிற்பட முடுகி.* (யுத் : 4122)

**சாயகங்கள் – அம்புகள்.** *தம்பிதன் கவசமீதே இரட்டி சாயகங்கள் தாக்கி.* (யுத் : 2372)

**சாயகம் – அம்பு.** *தண்டு வாளயில் சக்கரம் சாயகங்கொண்டு.* (யுத் : 1021)

**சாயத் தள்ளுதல் – தோற்கும்படி முறியடித்தல்.** *செருவிடை சாயத் தள்ளி.* (யுத் : 3057)

**சாயல் – வடிவொப்புவமை.** *பூணியல் நின சாயல் பொலிவது பல கண்ணிற் காணிய எனவாகும் களிமயில்.* (அ : 693)

**சாயா – நிழல்.** *சாயா வரந் தழுவினுய்.* (சு : 81)

**சாயாப் பெருஞ் சாய் – தளராத மிக்க ஒளி.** (யுத் : 1973)

**சாயா வரம் - நிழலைப்பற்றிப் பிணிக்கும் வரம்.** (சு : 81)

**சாயை – நிழல். ஒளி. பிரதிபிம்பம்.** *மாதவற் றொடர்ந்த சாயை போல் பொன்னின் மாநகர்ப் புரிசை நீங்கினுன்.* (பா : 337) *தாணின் நாப்பண் சாயை புக்குறலால்......... கைவிலோடும் ஆயிரம் மைந்தர் உளரெனப் பொலிந்த தவ்வூர்.* (கி : 664)

**சார்குவார் – சேர்பவர்கள்.** (கி : 143)

**சார்த்தல் – அடைவித்தல்.** *கை எழு நான்கையும் தழுவும் வாளிகளால் தலம் சார்த்தினுன்.* (ஆ : 386)

**சார்த்தூலன் – இராவணன் ஒற்றன்.** *சார்த்தூலன் இதனைச் சொல்ல.* (யுத் : 899)

**சார்தல் – 1. வந்து சேர்தல்.** *நீ நாவாயோடும் சாருதி விடிய என்றுன்.* (அ : 660) *சார்கிலிரோ.* (ஆ : 893)

**2. ஏறிச் செல்லுதல்.** *சாரு மானத்திற் சந்திரன் தனிப்பதம் செலுத்தும்.* (யுத் : 136)

**3. சார்ந்து இலங்குதல்.** (கலா) (யுத் : 136)

**4. அடைதல்.** *கடல்களெல்லாம் சார்வனபோலச் சார.* (பா: 1118)

**5. சென்றணைதல்.** *சந்திரன் இரவி தன்னைச் சார்வதோர் தன்மை தோன்ற.* (பா : 1117)

**6. வருதல்.** *மந்திரத் தலைவர் சார்க என.* (யுத் : 20)

**சார்ந்துளார்கள் – சார்ந்தவர்கள்.** *கிளைஞரும் சார்ந்துளார்களும்.* (அ : 478)

**சார்பு – 1. இடம்.** *இம்பர் நின்றேகினை இருக்கும் சார்பிழந்து.* (பா : 843)

**2. தஞ்சம்.** *சோர்ந்து நைவாள் ஒரு சார்பு காணுள்.* (ஆ : 942)

**3. பற்று.** *மனிதர்பால் வைத்த சார்பினை.* (யுத் : 314)

**சார்வில் வலம் – துணை வேண்டாத வலிமை.** *தந்தை மற்றவன் சார்வில் வலத்தோன்.* (யுத் : 828)

**சார்விலா உயிர் – அடைவதற்குரிய பற்றுக்கோட்டினைப் பற்றுத உயிர்.** *உயரும் சார்விலா உயிர்கள் செய்வினைப் பெயரும் பல்கதி பிறக்கு மாறுபோல்.* (பா : 86)

**சார்வு**—1. ஞானம். (கலா) பற்றுக்கோடு. உபாயம். (அண்) (வை. மு) உயரும் சார்விலா உயிர்கள். (பா: 86)

2. பற்றுக்கோடு. பழிக்குஞ் சார்வுமாய். (ஆ: 1163)

**சார**—சேர. தம்பியே சாற்றிப் போனான் என்பதுஞ் சாரச்சொன்னார். (யுத்: 771)

**சாரணர்**—பதினெட்டு தேவ கணங்களுள் ஒரு சாதியார். சேயிரு விசும்பிடைத் திரியுஞ் சாரணர். (பா: 319)

**சாரதி**—பாகன். இலங்கை வேந்தன் சாரதி. (யுத்: 1099) (சு: 951) (யுத்: 2071)

**சாரர்**—ஒற்றர். ஓடினார் சாரர் வல்லை உணர்த்தினார். (யுத்: 2554)

**சாரல்**—1. மலைச்சாரல். மலையடிவாரம். சாரல் மாரி தழங்கலா. (அ: 236)

2. பக்கவரை. ஏலமும் தமாலமும் தழைதரு சாரல். (அ: 738)

3. ஓரம். மாளிகையின் சாரல் சென்றனன். (சு: 195) [பா: பே]

4. சாராதே சால நாள் போர் செய்வாயாதியேல் சாரல். (கி: 184)

**சாரன்**—1. சாரணன் தான் வினவ எதிர் சாரன் விளம்பும். (யுத்: 824)

2. ஒற்றன். ஆமெனச் சாரன் சொன்னான். (யுத்: 2042)

3. இராவணன் ஒற்றன். சாரணன். சாரணன் என்தன் திரிபு போலும். சுகனிவன் அவனும் சாரன் என்பதுந் தெரியச் சொன்னான். (யுத்: 719)

**சாரி**—1. சாரிகை. வட்டமாக ஓடுகை. ஏர் கொழுநிசையும் சாரி பதினெட்டும் இயல்பின் எண்ணி. (சு: 824)

2. இடதுசாரி வலதுசாரி. நின்றார் திரிந்தார் நெடுஞ் சாரி நிலந் திரிந்த வன்றேரட் குயவன் திணிமட்கலத் தாழியென்ன. (கி: 274) கூடு சாரியில் குப்புற்றுக் கூத்து நின்றாடி. (யுத்: 3936) நெடு மரத்தால் சாரித்து அலைத்துருட்டும். (யுத்: 1837)

**சாரிகை**—1. வட்டமிட்டோடல். சுற்றிச் செல்லுதல். மண்டலா காரமான கதி. சிந்து சோரியொடு சாரிகை திரிந்தனரோ. (ஆ: 37) (கி: 284)

2. வட்டமாக இடசாரியும் வலசாரியுமாய் ஓடித் திரிதல். பெயர்க்குஞ் சாரிகை கறங்கென. (சு: 803)

**சாரிகை திரிதல்**—வலசாரி இடசாரியாகச் சுற்றி வருதல். திரிந்தனர் சாரிகை. (யுத்: 1484)

**சாரித்தல் – சாரி திரிதல்.** *நெடுமரத்தாற் சாரித்தலைத் துருட்டும். (யுத் : 1837)*

**சாரி திரிதல் – வலசாரி இடசாரியாகத் திரிதல்.** *திரிந்தார் நெடுஞ்சாரி நிலந்திரிந்த வன்றேட் குயவன் திரிமட்கலத் தாழியென்ன. (கி : 274)*

**சாரி புரிதல் – சாரி சுழன்று வருதல்.** *அரியினம் பூண்ட தேரும் அனுமனும் அனந்த சாரி புரிதலின். (யுத் : 2056)*

**சாரி போதல் – வலசாரி இடசாரியாகச் சுற்றிவருதல்.** *ஆயிரஞ் சாரி போந்தார். (யுத் : 1913)*

**சாரி வருதல் – சாரிகை வருதல்.** *விரைவுள சாரி வந்தார். (யுத்: 1271)*

**சாருதல் – பொருந்துதல். வருதல்.** *சாருநர் வலியோர் இல்லை. (யுத் : 928)*

**சாருநர் – மீண்டுவரும் உரிமையுடையவர்.** *மற்றிவனன்றி வந்து சாருநர் வலியோரில்லை. (யுத் : 928)*

**சாரும் – உண்டாகும்.** *வலியோரில்லை என்பது சாருமன்றே. (யுத்: 928)*

**சால் – 1. வயலில் ஒருமுறை நீள உழுதல்.** *பொற் கலப்பை வயிரத்திண் கொழு மடுத்திட் டலகில் பல சாலுழுதேம். (பா : 765)*

**2. உழவு சாலை.** *குல மள்ளர் ஏர்ச் சாலடித் தருஞ் சாலியின் வெண்முளை. (கி : 931)*

**3. நிறைவு** *சால்வருஞ் செல்வம். (பா : 1141)*

**4. சிறப்பு.** *சால்வரும் பெருங் கேள்வி. (யுத் : 384)*

**சால் படுத்தல் – பொருந்தும்படி செய்தல்.** *குலமணி எவையுங் கூட்டிச் சால் படுத்து. (யுத் : 794)*

**சால்பு – 1. மேன்மை.** *குலமணி எவையுங் கூட்டிச் சால் படுத்து. (யுத் : 794)*

**2. நிறைவு, எங்கும் நிறைந்திருத்தல். சர்வ வியாபகத்துவம்.** *தருமமும் தகவும் சால்பும் நீ என நின்ற நம்பி. (கி : 356)*

**சால்வருஞ் செல்வம் – தமக்கு அமைந்த நிறைந்த செல்வம்.** (அண்) **மிகப் பொருந்தின செல்வம்.** (வை. மு) கோல்வருஞ் செம்மையும் குடைவருந் தன்மையும் சால்வருஞ் செல்வ மென்றுணர் பெருந்தாதை போல். *(பா : 1141)*

**சால – 1. மிகுதியாக. மிகுதியான.** *சால அலசினேன். (யுத்: 2239) சால நாள். (கி : 184)*

**2. பெரிதும்.** *சாலப் பிழையாகும். (சு : 316)*

**3. விரிவாக.** *சால உரைத்தர் வாரிகடக்குந் தகவின்மை. (கி: 1014)*

**சால அலெசினென் – மிகவும் தளர்ந்தேன்.** (யுத் : 2239)

**சால கடங்கடர் – சால கடங்கடையின் வழித் தோன்றியவர் சால கடங்கடர். இவர் அரசு மேற்கொண்டு வாழ்ந்த அரக்க மரபினர்.** *எம்மோய் தாரணி புரந்த சால கடங்கடர் தம் மரபின் தையல்.* (ஆ : 274)

**சாலச் சீரிது – மிகவும் நல்லது.** (யுத் : 2186)

**சால நன்று – மிகவும் அழகிது.** *நன்றரசாளுமா சால நன்றரோ.* (யுத் : 2735)

**சால நினைத்தல் - நன்கு ஆராய்தல்.** *சால அன்னது நினைந்து* (யுத் : 120)

**சாலம் – 1. திரள். வரிசை. [ஜாலம்] கூட்டம்.** *நிரைத்த பொற் குடமும் தீப சாலமும்.* (கி : 663) *பேய்ச் சாலங்கள்.* (யுத் : 3044) (யுத் : 559) *செம்மயிர்ச் சாலம்.* (ஆ : 409)

**2. ஆச்சா மரம்.** *தங்கு சால மூலமார் தமாலம்.* (கி : 229)

**சாலவும் – அதிகமாக. மிகவும்.** *நாள்கள் சாலவும் நீங்கலின்.* (யுத் : 530) *சாலவும் தடுமாறுந் தனிமையோய்.* (சு : 619)

**சாலி – ஒருவகை நெல். உயர்ந்த செந்நெல்.** *பாய்ந்த சூதப் பசுநறுந் தேறலாற் சாய்ந்தொசிந்து முளைத்தன சாலியே.* (பா : 813) *சாலி வண்கதிர் நிகர் புரவித் தானையான்.* (யுத் : 2287) (சு : 207)

**சாலிகை – கவசம்.** *சாலிகை யாக்கையர்.* (யுத் : 3428)

**சாலிப் பரப்பு – நெற்பயிர் பரந்த வயல்கள்.** *சாலிப் பரப்பெலாம் அன்னம்.* (பா : 33)

**சாலியின் வெண்சோறு – சம்பா அரிசியாலாகிய வெண்மையான சோறு.** *நான் இன் சாலியின் வெண்சோறு அமுதென்ன நெய்யோ டுண்ணு நின்றது நின்முர் நினையாரோ.* (அ : 873)

**சாலி வண்கதிர் நிகர் புரவித்தானையான் – நெற்பயிரின் வளப்பம் பொருந்திய கதிர்போன்ற முகத்தையுடைய குதிரைப் படையை உடையவன்.** (யுத் : 2287)

**சாலி வேலி – நெற்பயிரோடு கூடிய வயல்கள்.** *தண்டலைப் பரப்பும் சாலி வேலியுந் தழீஇய வைப்பும்.* (பா : 43)

**சாலுடை யுயர்வு – உன்னதமான உணர்ச்சி.** *சாலுடை யுயர்விற் சக்கர நடத்துந் தன்மையில் தலைவரோத்துளதே.* (பா : 103) [பா : பே]

**சாலுதல் – பொருந்துதல்.** *சால் படுத்து.* (யுத் : 794)

**சாலும் – 1. மிகும். திரண்ட** *சாலும் வார்புனற் சரயு.* (பா : *91*)

**2. அடுக்கும்.** *இது சாலுமால் உங்கள் தன்மையினோர்க் கெலாம்.* (கி : *594*)

**சாலை – 1. யாகசாலை. இருப்பிடம். வீடு.** *அந்தணாளர் தம் சாலையும் சதுக்கமுஞ் சமைக்க.* (பா : *293*)

**2. பன்னசாலை குடிசை.** *இனியதோர் சாலை கொண்டேகி.* (ஆ : *127*)

**சாவம் – 1. சாபம். வில்.** *சாவந் தோன்றிட வடதிசை மேல்வந்து சார்வார்.* (யுத் : *3229*)

**2. சாபமொழி.** *பூவின்வந்த புராதனனே புகல் சாவமுண்டு.* (சு : *627*)

**சாவராக்குதல் – கொல்லுதல்.** *ஏவராக இடரிழைத்தாரெனின் ... ... சாவராக்கித் தருவென் அரசு என்றான்.* (ஆ: *214*)

**சாவாதிருத்தல் – உயிர்விடாதிருத்தல்.** *சாவாதிருத்தல் இவள் ஆனது உற்றது.* (ஆ : *967*)

**சாவாதிருத்தல் இவளானதுற்றது – இறவாதிருக்குந் தன்மையில்லாதவளான நிலைமை நேர்ந்தது.** (ஆ : *967*)

**சாவு – மரணம்.** *சாவு அரும்பெரும் புகழ்ச் சாம்பன்.* (யுத் : *2723*)

**சாளரத்தலம் – பலகணிகளின் இடங்கள்.** (சு : *229*)

**சாளரம் – சன்னல். சாளர வாயில். பலகணி.** *சாளரந்தோறும் தோன்றும் சந்திர உதயங் கண்டார்.* (பா : *577*) (ஆ : *723*)

**சாற்றல் – சொல்லல்.** *தன்னையாந் தன்மையைச் சாற்றன் மேயினான்.* (கி: *975*)

**சாற்றுதல் – பறையறைவித்தல்.** *தேவருங் களிகொளத் திரிந்து சாற்றினார்.* (அ : *122*) (ஆ : *723*)

**சாறின – அவிழ்ந்தன. நழுவின.** *கலையுஞ் சாறின.* (பா : *1109*)

**சாறு – கோவில்களிலும் அரண்மனைகளிலும் எடுக்கப்படும் விழாக்கள்.** *சாறும் வேள்வியும் தலை மயங்குமே.* (பா : *87*)

**சான்றவர் – எல்லா நற்குணங்களாலும் நிறைந்த பெரியோர்.** *சான்றவர் சான்றவ.* (பா: *258*) *சான்றவராக குரவராக.* (அ: *1191*)

**சான்றவர் குழாம் – பெரியோர் கூட்டம்.** *இருமை நோக்குறுஞ் சான்றவர் குழாத்தொடும்.* (அ : *1154*)

**சான்றவர் குழு - பெரியோர் கூட்டம்.** *சான்றவர் குழுவொடு தவத்துளோர்களும்.* (அ : 1202)

**சான்றவர் - 1. சாட்சியானவன். எடுத்துக்காட்டு.** *எல்லைதீர் நல்லறத்தின் சான்றவனே.* (ஆ : 1180)

**2. சான்று கூறியவன்.** *பொய்த்த சான்றவன் குலமென.* (யுத்: 559)

**சான்றாள் - மிகுந்தாள்.** *மிதிலை மன்னன் தன் பெருந் தனயை என்னும் தகைமைக்கும் தலைமை சான்றாள்.* (சு : 1305)

**சான்றிமையோர் குலமாக - தேவர் கூட்டம் சான்றாக.** *சான்று இமையோர் குலமாக மன்ன நீ அன்று ஏன்ற வரங்கள் இரண்டும் ஈதி என்றாள்.* (அ : 193)

**சான்று - 1. சாட்சி.** *தோன்றலுமிடையும் ஈறுந் தொடங்கிய பொருள் கட்கெல்லாம் சான்றவன்.* (யுத் : 252) *இத்திறத்துக் கெல்லாம் சான்று இனி அறனே.* (கி : 639)

**2. உதாரணம். திருஷ்டாந்தம்.** (வை. மு) *யாவர்க்கும் சான்றென நின்றவத் தருமம் அன்னவன்.* (ஆ : 495)

**சான்றுக்குச் சான்றில்லை - சாட்சியை நம்புவதற்கு ஒரு சாட்சி வேண்டப்படுவதன்று.** (யுத் : 4024)

**சான்றென நின்ற - சாட்சியாக நிற்கின்ற.** *சான்றென நின்ற நீ தடுத்தியோ.* (அ : 461) *சான்றென நின்ற வீரன் தான்வந்து வீடு தந்தான்.* (கி : 383)

**சான்றோர் - குணங்களால் நிறைந்த பெரியோர்.** *சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி.* (ஆ : 225)

**சான்றோர் கேட்கும் மொழி - புகழ். பெரியோர் காது கொடுத்துக் கேட்கும் புகழ்மொழி.** *சான்றோர் கேட்கும் மொழி கொடு வாழ்வ தல்லால் முறைகெடப் புற நின்றார்க்கும் பழிபட வாழ்கிற்பாரும் பார்த்திபருளரோ பாவம்.* (யுத் : 1647)

**சான்றோர் மாது - சான்றோர்களாற் பாராட்டத் தகும் நங்கை. சீதை.** (யுத் : 2607)

**சானகி - சீதாபிராட்டி.** *சானகி யெனும் பெயர் உலகின் தம்மனை யானவள்.* (யுத் : 87) (பா : 1112)

**சானகியார் - சீதாபிராட்டியார்.** *சானகியார் பேரழகும் அவர்தங் கற்பும்.* (யுத் : 3908)

**சானவி - கங்கை.** *சன்னுவின் செவிவழி வரலால் நிகரில் சானவி யெனப் பெயர் படைத்ததிந்நீத்தம்.* (பா : 538)



**சிக்க – உறுதியாக. தெளிவாக.** சிக்க உரைத்தேம் என்று தெழித்தார் சிலரெல்லாம். (சு : 485)

**சிக்க உரைத்தல் – மனத்திற் படச் சொல்லுதல். உறுதியாகச் சொல்லுதல்.** (சு : 485)

**சிக்கற – 1. ஐயமின்றி** அரக்கர் தம் சிர்ப்பைச் சிக்கறத் தேறினன். (ஆ : 224)

**2. குற்றமற.** (கலா) சேனையர் பெருமைதன்னைச் சிக்கறத் தெளிந்தேன். (கி : 62)

**சிக்கறத் தெளிதல் – ஐயமின்றித் தெளிதல்.** (அண்) (வை. மு) குற்றமறத் தெளிதல். (கலா) (கி : 62)

**சிக்கறுதல் – தவறு நீங்குதல்.** (வை. மு) **ஐயம் நீங்குதல்.** (அண்) சிக்கற நோக்கினேன். (சு : 370)

**சிக்கு - 1 ஐயம்.** (கி : 62) (ஆ : 224)

**2. குற்றம்.** (உ. வி) (கி : 62)

**சிக்குற - அழுத்தமாக. உறுதியாக.** செவிகளைச் சிக்குறச் சேமஞ் செய்தாள். (ஆ : 881) சிக்குறக் கடை சேமித்த செய்கைய. (கி : 598)

**சிக்கென – உறுதியாக.** சிக்கென அடைத்தேன் தோழி. (பா : 1161)

**சிகரகோடி – பலவாய சிகரங்கள்.** ஊழின் நெகுவாய சிகரகோடி நெரிவன தெரிய நின்றான். (கி : 1036)

**சிகரச் செல்லி – சிகரத் துணுக்குகள்.** மேலிடம் பெறாது திரிந்தன சிகரச்சில்லி. (யுத் : 641)

**சிகரச் செவ்வி – மலைபோலும் இயல்பு.** சிகரச் செவ்வி சுந்தரத் தோளினான். (ஆ : 800)

**சிகரச் சேர்ப்பு – மலையின் உச்சியிடம்.** மேருவின் சிகரச் சேர்ப்பின். (யுத் : 2708)

**சிகரம் – மலை.** இடியொடு முறிந்து வீழ் சிகரமென்னவே. (ஆ : 484) சிகர மேந்தி. (யுத் : 2120)

**சிகர மாளிகை – சிகரங்களையுடைய மாளிகைகள்.** சிகர மாளிகைத் தலந்தொறும். (சு : 124)

**சிகரவண் குடுமி – சிகரமாகிய வளமுள்ள உச்சி.** சிகரவண் குடுமி நெடுவரை எவையும் ஒருவழி திரண்டன சிவண. (சு : 407)

**சிகர வைப்பு – சிகரங்களாகிய இடங்கள்.** *மேருவின் சிகர வைப்பில்.* (யுத் : 2708)

**சிகரி – மலைகள்.** *வீரர் யாவரும் சிகரி ஏந்தி வந்தார்.* (யுத் : 2128)

**சிகழிகை – 1. சிரத்தைச்சுற்றி அணியும் பூமாலை.** *விண்ணின்ற மதியின் மென்பூச் சிகழிகைக் கோதை வேய்ந்தார்.* (பா : 1025)

**2. செங்கிடேச்சு முதலியவற்றால் நெற்றியிற் சூட்டுவதும் குஞ்சங்களை யுடையதுமான மாலை.** *செங்கிடைச் சிகழிகைச் செம்பொன் மாலையும்.* (பா : 1296)

**சிகாமணி – சிகையில் அணிந்துகொள்ளும் இரத்தினம்.** *செறிகுழற் சீதைக் கென்றோர் சிகாமணி தெரிந்து வாங்கி.* (சு: 735) (யுத்: 4225)

**சிகை – 1. தலை.** *சுடர்ச் சிகை.* (அ : 178)

**2. கொழுந்துவிட்டெரியும் தீயின் நுனி; சுவாலை.** *அனலின் சிகை பொதி கண்ணினர்.* (ஆ : 410) *சிகை சென்று நிரம்பிய தீ.* (யுத் : 2300)

**3. ஒளி.** *தெரிப்புறு செறிசுடர்ச் சிகையினால் திசைவிரித் திருந்தானென விளங்குவான்தனை.* (ஆ : 178)

**4. கூர்நுனி.** *சிகைக் கழுவலத்தார்.* (சு : 849)

**சிகைக்கொழுந்து – சுவாலைக்கொழுந்து.** *நெடுங்கடல் பருகும் பாவகன் சிகைக் கொழுந்திதுவெனத் திருகு நாவினான்.* (ஆ : 1152)

**சிகை நிறச் சூலி – அக்கினிச் சுவாலையின் நிறத்தைக்கொண்ட சிவபிரான். (சூலி – சூலப்படையை உடையவன்)** (யுத் : 57)

**சிகையிழந்தன தீவிகை – விளக்குகள் எல்லாம் அழற்கொழுந்தை இழந்தன.** *பொங்கழற் சிகை யிழந்தன தீவிகை.* (அ : 818)

**சிங்க ஊன் – சிங்கத்தின் இறைச்சி.** (யுத் : 1284)

**சிங்கக் குருளை – சிங்கக்குட்டி.** *சிங்கக் குருளைக்கிடு தீஞ்சுவை ஊனை வெங்கட் சிறு குட்டனை ஊட்ட விரும்பினாளால்.* (அ : 410)

**சிங்க நாதம் – சிங்கத்தின் கர்ச்சனைபோன்ற ஒலி.** *தலைவர் சிங்க நாதமும்.* (யுத் : 2496)

**சிங்கம் – சிங்கம்.** *சிங்கஊன் அயிறலைத் தொடர் அங்ககல் வாயினான்.* (யுத் : 1284)

**சிங்கல் – 1. குறைதல் சுருங்குதல்.** *சிங்குமாற் காலம்.* (யுத் : 2718) *சிங்கலில் பெரும் பொருள்.* (யுத் : 386) *சிங்க.* (யுத் : 1284)

**2. குற்றம்.** *சிங்கலில் அருமறை.* (பா : 1292)

**3. அழிதல். கெடுதல்.** *சிங்காமைத் தங்கள் கவசமாம்.* (ஆ : 99)

**4 குன்றுதல். நீங்குதல்.** *சிங்கினன் என்பதோர் எளிமை தேய்வுரு.* (*யுத் : 2954*)

**5. கழிதல்.** *சிங்குமால் காலம்.* (*யுத் : 2718*)

**சிங்கலில் அருமறை - குற்றமற்ற அரியவேதம்.** (*பா : 1292*)

**சிங்கவாதனம் – சிங்காசனம்.** *வீரச் சிங்க வாதனமும் வைத்து.* (*அ : 262*)

**சிங்கவுயர் தவன் – சிறந்த தவத்தையுடைய சிருங்க முனிவன்.** *ஒரு கலைமுகச் சிங்கவுயர் தவன் வருதல் வேண்டும்.* (*பா : 212*) [*பா : பே*]

**சிங்க வேறு - ஆண் சிங்கம்.** *சிங்க வேறனைய வீரன்.* (*அ : 660*) *சிங்க வேறனைய வீரர்.* (*யுத் : 2128*)

**சிங்களாதிபர் - சிங்கள நாட்டு அரச பரிவாரங்கள்.** *சிங்களாதிபர் சேரலர் தென்னவர்.* (*பா : 1194*)

**சிங்கன் – மகரக்கண்ணனுடன் சென்ற அரக்க வீரன். பனசனுற் கொல்லப்பட்டான்.** *சிங்கன் வெங்கணையன் வில்லன் தாரணிதேரின் மேலான்.* (*யுத் : 2389*) (*யுத் : 2361*)

**சிங்காமை – அழியாமை** *சிங்காமைத் தங்கள் கவசமாய்.* (*ஆ : 99*)

**சிச்சி - சிச்சீ. இகழ்ச்சிக் குறிப்பு.** *சிச்சி எனத் தன் மெய்ச்செவி பொத்தித் தெருமந்தான்.* (*ஆ : 736*)

**சிச்சிரம் – விநோதம். சித்திரம் என்பதன் விகாரம்.** *மாச்சிச்சிரம் பாய்ந்து.* (*ஆ : 938*) [*பா : பே*]

**சிச்சிரம் பாய்ந்து – விநோதமாகப் பாய்ந்து.** (*ஆ : 938*) [*பா : பே*]

**சிச்சிரல் – மீன்கொத்திப் பறவை. சிரல்.** *மாச்சிச்சிரல் பாய்ந்தென மார்பினும் தோள்கள் மேலும் ஒச்சி.* (*ஆ : 938*)

**சிச்சு – நெருப்பு.** *சிச்சின் உருக்கிட்டுய்த்தன னென்னக் கிளராமுன்.* (*அ : 736*)

**சிசிரம் – பின்பனிக்காலம். மாசி, பங்குனி மாதங்கள்கொண்ட இருது.** *முன்னைச் சிசிரம் நன்று.* (*ஆ : 660*)

**சிஞ்சுப வனம் – அசோக வனம். சிம்சுபா வனம்.** *சிஞ்சுப வனத்திடைச் சிறை வைத்தானரோ.* (*ஆ : 958*)

**சிட்டது – சிட்டர்கள் மேற்கொள்ளும் செயல். சிறந்ததாகிய செயல்.** *சிட்டது செய்தி யென்றான்.* (*யுத் : 3595*)

**சிட்டது செய்தல் – சிரேட்டருக்குரிய செயலைச் செய்தல்.** (*யுத்: 3595*)

**சிட்டர் – பெரியோர். மேலோர்.** *சிட்டர் செயல் செய்திலே.* (*யுத் : 65*)

**சிட்டர்தம் தனித்தேவன் – இராமபிரான்.** (*யுத் : 3770*)

**சிட்டு – சிட்டரின் தன்மை.** *சிட்டது செய்தி என்ருன்.* (*யுத் : 3595*)

**சித்தங்கள் – மனம்.** *சித்தங்கள் நடுங்கி அரக்கர் திகைத்தார்.* (*யுத் : 1917*)

**சித்தந் திகைத்தல் – சிந்தை திகைத்தல்.** *சித்த நீ திகைக்கின்ற தென்.* (*அ : 317*)

**சித்தம் – மனம்.** *சித்தமொத்துளன் என்ருேதும் திருநகர்த் தெய்வ நன்னூல் வித்தகன்.* (*யுத் : 4318*)

**சித்தம் ஒத்தல் – மனதிற்கு ஒத்தல். ஒத்த மனமுடைமை.** *சித்தம் ஒத்துளன்.* (*யுத் : 4318*)

**சித்தம் நடுங்குதல் – மனம் நடுங்குதல்.** (*யுத் : 1917*)

**சித்தர் – தேவருள் ஒரு பிரிவினர்.** *நயப்புறு சித்தரை நலிந்து வவ்வின.* (*ஆ : 414*)

**சித்தி – 1. அணிமா முதலிய எண்வகைச் சித்திகள்.** *தத்திணை கடல் அது தவத்தினுயதோ சித்தியினியன்றதோ.* (*சு : 583*)

**2. பயன்.** *வெந்திறற் சித்தி கண்ட விடணன்.* (*யுத் : 1884*)

**சித்தி காணுதல் – பயனைப் பெறுதல்.** (*யுத் : 1884*)

**சித்தியர் – சித்த மகளிர்.** *தென்னகு குடமுட் பாடல் சித்தியர் இசைப்ப.* (*சு : 281*)

**சித்திர இலக்கம் – பார்த்திராத லட்சியம்.** (வை. மு) **அதிசயமான இலக்கம்.** (அன்) *பத்துள தலையுந் தோளும் பலபல பகழிதூவும் வித்தக வில்லினுற்குத் திருவிளையாடற்கேற்ற சித்திர இலக்கமாகும்.* (*சு : 448*)

**சித்திரக்குலப் பன்னிற மணிகள் – அழகிய சிறந்த பல நிறத்தையுடைய மணிகள்.** (*யுத் : 2306*)

**சித்திர கூடம் – விசித்திரமான சிகரங்களையுடையது.** *வரத்து வாசவன் வணங்குறு சித்திர கூடம் பரத்து வாசன் உறைவிடம்.* (*யுத் : 4101*)

**சித்திரச் சேவடிக் கழல் – அழகிய தன்மைவாய்ந்த வீரக்கழல்.** (*யுத் : 1072*)

**சித்திரத் தடந்தேர் – அழகமைந்த விசாலமான தேர்.** (கலா) **சித்திர வேலைப்பாடமைந்த விசாலமான தேர்.** (அன்) *சித்திரத் தடந்தேர் மைந்தர் மங்கையர்.* (*பா : 866*)

**சித்திரத் தன்மை – சித்திரம்போனறு உயிர்பெருத தன்மை.** *சித்திரத் தன்மையுற்ற சேவகன் உணர்வு இர்ந்தான். (யுத் : 2853)*

**சித்திரத் தேர் – அழகிய தேர்** *வீரன் சித்திரத் தேரைத் தெய்வப் பகழியாற் சிதைத்து வீழ்த்தான். (யுத் : 2183)*

**சித்திரந் திருத்தல் – சித்திரத்தைத் திருத்தமுற அமைத்தல்.** *கருத்திலான் கண்ணிலான் ஒருவன் கைக்கொடு திருத்துவான் சித்திரம் அணைய செப்புவாய். (யுத் : 79)*

**சித்திர நகரம் – அழகிய ஊராகிய இலங்கை.** *(சு : 189)*

**சித்திர நிரை தோயுஞ் செந்துகில் – சித்திர வரிசைகள் அமைந்த சிவந்த ஆடைகள்.** *சித்திர நிரை தோயும் செஞ்துகில் புனைவாரும். (பா : 1280)*

**சித்திரப் பத்தி – சித்திர வரிசை. ஓவியத் தெழுதிய உருவங்களின் வரிசை.** *சித்திரப் பத்தியில் தேவர் சென்றனர். (சு: 146) சித்திரச் சுவர் நெடுஞ்சேனை திட்டிய பத்தியை நிகர்த்தது அப்படையின் கூட்டமே. (அ : 982)*

**சித்திரம் – 1. அழகு.** *சித்திர நகரம். (சு : 190) (யுத் : 2129) சித்திரத் தடந்தேர். (பா : 866)*

2. **வேலைப்பாடு** *சித்திரமிங் கிதுவொப்ப தெங்குண்டு. (பா : 768)*

3. **சிறப்பு.** *சித்திரக் குனிசிலைக் குமரர். (ஆ : 2)*

4. **வியக்கத்தகும் பண்பு. ஆச்சரியம்** *பல்கலை சித்திரத்தினிற் சிந்தி. (யுத்: 2075) சித்திர வனமுலைச் சீதை. (யுத்: 1479) (உ. வி) (பா : 768)*

5. **அதிசயம்.** *சித்திர இலக்கமாகும். (சு : 448) (யுத் : 2883)*

6. **தக்க சமயம்.** (வை. மு) **குறைவு. பலக்குறை.** *(கலா) சித்திரம் பெறுதலிற் செவியும் மூக்குங்கொண்டு அத்திசை போயினன் அல்ல தொண்ணுமோ. (யுத் : 1512)*

7. **விசித்திரம்.** (வை. மு) (அண்) **பொய்.** *(கலா) அயோத்தி போன வார்த்தை சித்திரம். (யுத் : 2883) (யுத் : 2129) சித்திரக் குலப் பன்னிற மணிகள். (யுத் : 2303) (உ. வி) (பா : 1091)*

8. **சித்திரித்த உருவம்.** *சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை. (சு : 349)*

9. **குறைவு. பலக்குறை.** *(உ. வி) (யுத் : 1512)*

10. **வியப்பு.** *(அண்) சித்திரம் போன்ற அச்செயல். (பா : 1091)*

**சித்திரம் இமைத்தல் – சித்திரம் விளங்குதல்.** *சித்திரம்...... அயிருற இமைப்பன. (கலா) (பா : 121)*

**சித்திரம் இமையாமை – சித்திரங்கள் கண் கொட்டாமலிருத்தல்.** *பழுதறு மேனியைப் பார்க்கும் ஆசை கொல் எழுது சித்திரங்களும் இமைப்பிலாதவே.* (பா : 142)

**சித்திர இலக்கம் – அதிசயமான இலக்கம். (அம்பெய்யுங் குறி)** *வித்தக வில்லினுற்குத் திருவிளையாடற்கேற்ற சித்திர இலக்கமாகும்.* (சு : 448)

**சித்திரம் உயிர்பெறக் குயிற்றல் – சித்திரம் உயிர்பொருந்தியன என்று சொல்லும்படியாகச் செய்யப்படுதல்.** (கலா) (பா : 121)

**சித்திரம் பொருதல் – விசித்திரமாகப் போர்செய்தல்.** *தாம சத்திரம் சித்திரம் பொருதனர் தயங்க.* (யுத் : 3784) [பா : பே]

**சித்திர முடி – அழகிய முடி** *நன்று சித்திர நளிமுடி கவித்தற்கு.* (அ : 73)

**சித்திரமெனக் காணுதல் – சித்திரங்கள் போலக் கண்கள் இமையாமலும் மூச்சு விடாமலும் காணுதல்.** *தெரிவை தூய்வடிவு கண்டார் ... ... ... எல்லாம் இமைத்திலர் உயிர்த்துமிலர் சித்திர மெனத் தாம்.* (பா : 1230)

**சித்ரதிவதை – சித்திரவதம். கைவேறு கால்வேறு என இவ்வாறு உறுப்புக்களைத் தனித்தனி அறுத்துத் துடிக்கச்செய்து பின்பு கொல்லுதல்.** *இத்துணை பேரையும் இராமன் வெஞ்சரஞ் சித்திர வதை செய்யக்கண்டு தீர்தியோ.* (யுத் : 318)

**சித்திர வனமுலை – பல வண்ண வரிகள் அமைந்த தொய்யில் எழுதப் பட்ட அழகிய தனங்கள்.** *சித்திர வனமுலைச் சீதை.* (யுத் : 1479)

**சிந்து – ஞான சொரூபம். முற்றறிவுடைய முழுமுதற் பொருள்.** (அண்) *சித்தென அருமறைச் சிரத்தின் தேறிய தத்துவம்.* (யுத் : 191)

**சிதர்தல் – சிதறிக் கிடத்தல்** *வெள்ளடை தம்பற் குப்பை சிதர்ந்தென விரிந்த மாதோ.* (கி : 472)

**சிதர்ந்து சிந்துதல் – நாற்புறமும் சிதறுதல்.** (வை. மு) **பலவாகச் சிதறுதல்.** (அண்) **நன்ருகச் சிதறுதல்.** (கலா) *சாறு பெருந்துறை மண்டிடச் சிதர்ந்து சிந்தி அழிந்தன தேங்கனி.* (அ : 812)

**சிதல் – கறையான். கறையான் புற்று** *ஈண்டில பிறந்தவால் இனங் கொள் செஞ்சிதல்.* (சு : 371)

**சிதறுதல் – இறைத்தல்.** *உருமுறழ் தெறுகணை முறைமுறை சிதறினனால்.* (யுத் : 3094)

**சிதைத்தல் – அழித்தல். கெடும்படி செய்தல்.** *வேள்வியைச் சிதைய நூறி.* (யுத் : 3076) *அது சிதைந்து பேர்ந்ததால்.* (யுத் : 2952) *வேள்வி சிதைத்திலையேல் என்றிக்கடல் வெல்கும் யாம்.* (யுத் : 2917)

**சிதைவகல் காதல் - எக்காலத்திலும் கெடுதலில்லாத அன்பு.** *சிதைவகல் காதல் தாய்.* **(கி : 626)**

**சிதைவித்தல் – சிதையும்படி செய்தல்.** *மெய்யைச் சிதைவித்து நின் மேன்முறை நீத்த நெஞ்சிற் கரியாள்.* **(அ : 420)**

**சிதைவியல் – அழிந்த செயல்.** *சிதைவியல் கடிபொழி லொன்றே.* (சு : 771)

**சிதைவு – கெடுதல்** *சிதைவகல் காதல்தாய்.* (கி : 626)

**சிதைவுறல் – கேடுவரும் செயல்.** *சிதைவுறல் அவர்க்கு வேண்டின்.* (சு : 477)

**சிந்தர் – மூன்றடி உயரமே உள்ளவர்கள்; அந்தப்புர ஏவலாளர் ஆவார். குறளரைக் காட்டிலும் சிறிது பெரியவர்.** *வாலதி பூமி தோய்பிடி சிந்தரும் போயினர்.* **(பா : 855)**

**சிந்தனை – 1. மனக்கவலை.** *நம் சிந்தனை முடிந்தன என்னும் சிந்தையார்.* **(யுத் : 344)** *சிந்தனை முகத்தில் தேக்கிப் போயின என்றபோது.* (அ : 1027)

**2. எண்ணம். கருத்து.** *அந்தமில் பேரரசு அளித்தி அன்னது சிந்தனை எமக்கு.* (அ : 944) *சிந்தையார்.* (யுத் : 343)

**3. மனக் கிடக்கை.** *சிந்தனை உரை செய்வான்.* (அ : 670)

**சிந்தனை சிந்துதல் – எண்ணம் கெடுதல்.** *மனமுவக்கின்றேன் தன் சிந்தனை முழுதுஞ் சிந்தத் தெளிவிலார்போல மீள வந்ததென் தனியே என்றான்.* (யுத் : 1348)

**சிந்தனை செய்தல் – எண்ணுதல்.** *குதியிற் சென்று கூடுவன் என்பது சிந்தனை செய்யா, நின்று காரியம் அன்றென நீதியின் நினைந்தான்.* (சு : 1102)

**சிந்தனை முகத்தில் தேக்கி – மனக்கவலை முகத்தில் நிறைவித்து.** *சிந்தனை முகத்திற்றேக்கிப் போயின என்றபோது.* **(அ : 1027)**

**சிந்தனையிடுதல் – ஆலோசித்தல்.** *சிந்தனையிட்டு அவ்வரக்கர் தம் சீர்ப்பைச் சிக்கறத் தேறினன்.* **(ஆ : 224)**

**சிந்தாகுலம் – 1. மனக்கலக்கம். மனோவியாகூலம். மனத்துன்பம்.** *உயர்வேலை ஒளித்த குன்றம் சிந்தா குலமுற்றது.* (சு : 54) *சிந்தா குலங்கள் கனிவாய் தளர்ந்து துயர்கூரல் என்ன செயலோ,* **(யுத் : 2202)**

**2. மனக்கவலை. மனத்துயரம்.** *சிந்தாகுலம் எந்தை திரித்திடுவான் வந்தான்.* **(யுத் : 1713)** (யுத் : 2992)

3. **பெருந்துன்பம்.** *சிந்தா குலத்தொடுரை செய்த செய்கையது திருமென்று தெளிவாய்.* **(ஆ : 968)** [பா : பே]

**சிந்தா வினை – மனத்தொழில். மனத்தால் நினைத்தமாத்திரத்தே தோற்றுவித்தல் சங்கற்ப சிருட்டி என்பர். (அன்)** *சிந்தா வினை யன்றியும் செய்வினையாலுஞ் செய்தான்.* **(ஆ : 715)**

**சிந்தித்தல் – ஆலோசித்தல்.** *துணைவரும் தானும் சிந்தியா நின்றனன்.* **(யுத் : 316)**

**சிந்தினன் – சிந்தச் செய்தான்.** *அவையும் இற்றுகக் கேடகப் புறத்தினால் கிழியச் சிந்தினான்.* **(யுத் : 1528)**

**சிந்து – 1. கடல்.** *சிந்தாரத்தின் செச்சை அணிந்தாள்.* **(சு : 175) (யுத் : 1532)**

2. **புளிய மரம்.** *சிந்து அவானந் திரிந்துக.* **(சு : 725)**

3. **பண்.** *அரக்கர் தம் கன்னிமார்கள் சிந்நோக்குஞ் சொல்லினர்.* **(யுத் : 3182)**

4. **குறள் வடிவிலும் சற்று உயர்ந்த வடிவம்.** *சிந்தொடு குறளுங் கூனும்.* **(பா : 1224)**

**சிந்துதல் – 1. மாய்த்தல்.** *நெடுங் கொடும் பழிகொண்டு அரும்புகழ் சிந்தும் அத்தியடங்கிய சிந்தையாள்.* **(அ : 238)**

2. **முறித்தல்.** *விதியினூர் தரும வேலியைச் சிந்தினர்.* **(ஆ : 952)** *சிந்தினன்.* **(யுத் : 1551)**

3. **போதல். இழத்தல், அழிதல்.** *சிந்திய நயனம் வந்தனைய செய்கையான். காலவிருள் சிந்து கதிரோன்.* **(யுத் : 846)**

4. **தாக்குதல்.** *தெருண்டிலா மதத்த யானை சீறி நின்று சிந்தலால் இருண்ட காழ் அகிற்றடத் தொடிற்று வீழ்ந்த சந்து.* **(கி : 233)**

5. **வெளிப்படுத்தல்.** *வாயில் சிந்திய மொழியன்.* **(யுத் : 600)**

6. **தொடுத்தல்.** *சரஞ் சிந்தி.* **(யுத் : 1551)**

7. **பலவிடங்களிலும் சிதறுதல்.** *சிந்திச் சேணுறச் சாய்ந்தது.* **(யுத் : 1777)**

8. **இரிந்தோடுதல். சிதறுதல்.** *தேவரு மடங்கினர் இயக்கர் சிந்தினர்.* **(யுத் : 35)**

9. **வெளிப்படுத்தல்.** *சிந்திய மொழியான்.* **(யுத் : 600)**

10. **கொழித்தல். (வை.மு)** *அம்பிகள் சிந்தும் முத்தம்.* **(ஆ: 1051)**

11. **வீழ்ந்து வருந்தல். (துடித்தல்)** *எரி நரகிற் சிந்திய என்பில் பல்லுயிர்.* **(கி : 840)**

12. **ஒடுக்கல்.** அரக்கர் தம் செருக்குச் சிந்துவான்...... வானரத் துருக் கொண்டனன் அந்தகன் கொல். (சு: 1055)

13. **வைத்தல்.** நெருப்புச் சிந்தி மீண்டதும் விளம்பான். (சு: 1255)

14. **சிதறுதல். பொழிதல்.** தீய வெங்கணை ஐம்பது சிந்தினன். (யுத்: 2080) தலை பத்தும் சிந்துவாயோ. (சு: 446)

**சிந்துபு – சிந்தி.** சேயரிக் குவளை முத்தம் சிந்துபு சிறிப் போனள். (ஆ: 797)

**சிந்து முந்துலகம் – சிருஷ்டியிலே கடலை முன்பாகக்கொண்ட உலகம். (கலா) கடலினுல் முந்தப்பெற்ற (சூழப்பெற்ற) உலகம்.** சிந்து முந்துலகினுக்கிறுதி புக்குரு வொளித் துலைதல் செய்வார். (யுத்: 106)

**சிந்துரக் களிறு – சிந்துரப் பொடி அப்பிய யானை.** சிந்துரக் களிறு கூடம் புக்கெனக் கோயில் சேர்ந்தான். (யுத்: 1223)

**சிந்துரச் சென்னி – சிந்துரப் பொடிகள் நிறைந்த சிகரம்.** சிந்துரச் சென்னித் தாங்கோர் மைவரை. (ஆ: 1038)

**சிந்துரப் பவளச் செவ்வாய் – சிந்துரம் போலவும், பவழம் போலவும் செந்நிறம் வாய்ந்த வாய்.** சிந்துரப் பவளச் செவ்வாய்த் தேம்பசும் பாகு தீற்றி மந்திரத் தயினி நீரால் வலஞ்செய்து காப்புமிட்டார். (யுத்: 3960)

**சிந்துரம் – 1. சிவப்பு நிறம்.** முழுமதி முகத்துச் சிந்துரம் பயில் வாய்ச்சியர். (சு: 233)

2. **குங்குமத் திலகம். குங்குமம்.** மாடுமுத நறுங்கலவை வயக் களிற்றின் சிந்துரத்தை மாறுகொள்ள. (சு: 313)

3. **திலகமிடுதற்குரிய ஒருவகைச் செம்பொடி.** சிந்துரக் கிரிகள் தாவித் திரிந்தனன். (யுத்: 943) (அ: 278)

4. **யானை.** சிந்துரம் வயப் புரவி தேர் திசை பரப்பி. (ஆ: 530)

**சிந்து ராகம் – சிவப்பு நிறம்.** சிந்து ராகத்திற் செறி துகிற் கச்சொடு செறிய. (சு: 1081)

**சிந்து வாரம் – வெண்ணொச்சி.** சிந்து வாரம் திசைதொறும் சென்றன. (சு: 724)

**சிந்தூரம் – 1. சிந்தூரத் திலகம்.** வெய்யோன் திசையாளும் மத கரியைச் சிந்தூரம் அப்பிய போற் சிவந்த மாதோ. (பா: 714)

2. **ஒருமரம்.** நடுக்குறு சந்தம் சிந்தூரத்தொடு நரந்த நாகம். (பா: 24)

**சிந்தை - 1. மனநிலை.** *சென்று மற்றவன் சிந்தையைத் தேர்குவாய்.* (கி : 567)

**2. மனம்.** *சிற்றிடைச் சீதையென்னும் நாமமும் சிந்தை தானும் உற்றிரண் டொன்ருய் நின்ருல்.* (ஆ : 643)

**சிந்தைக் கருத்து - மனத்திற்கொண்ட குறிக்கோள்.** (கி : 339)

**சிந்தை குறைதல் - மனம் வருந்துதல்.** *யாவரும் கோனை எய்தினுர் குறையுஞ் சிந்தையார்.* (அ : 1158)

**சிந்தை சிந்தல் - 1. மனங்குலைதல்.** *வானந் தன்னிற்றேவரும் சிந்தை சிந்த.* (ஆ : 728)

**2. எண்ணம் குலைதல்.** *சிந்தனை முழுதுஞ் சிந்த............ மீள வந்ததென்.* (யுத் : 1349)

**சிந்தை சீரின் உயர்தல் - உள்ளத்து உயர்வில் மிகுதல்** (கலா) **மனத்தில் மிக்க பெருமை பரராட்டுதல்.** (வை. மு) *அந்த வேலையின் ஆர்த்தெழுந்தாடினுர் சிந்தை சீரினுயர்ந்தனர் தேவர்கள்.* (யுத்: 2101)

**சிந்தை செய்தல் - எண்ணுதல்.** *சிந்து மேகலை சிந்தையுஞ் செய்கலார்.* (பா : 857)

**சிந்தை தளர்வுற்றயர்தல் - மனம் தளர்ந்து சோர்தல்.** *சிந்தை தளர்வுற்றயர்தல் சிறிதும் இலனுய் இன்சொல் மைந்தன் உளன் என்றதனுன் மகிழ்வோடு இவன் வந்தனனுல்.* (அ : 383)

**சிந்தை தெளிதல் - மனம் தெளிதல்.** *தேறினர் நின்றனர் சிந்தை தெளிந்தார்.* (யுத் : 2268)

**சிந்தை நடுங்குதல் - மனம் துடித்தல்.** *தளர்ந்த சிந்தை தம்மிடையினு நடுங்கிட.* (சு : 287) [பா : பே]

**சிந்தை நுடங்குதல் - மனம் துடித்தல்.** *தளர்ந்த சிந்தை தம்மிடையினு நுடங்கிட.* (சு : 287)

**சிந்தை நோய் - மனோ வியாதி.** *அனங்கன் எய்த அம்பின் வந்த சிந்தை நோய்.* (பா : 800)

**சிந்தை பின் செலல் - மனம் பின்னே தொடர்தல்.** *சிந்தையும் நிறையும் நலனும் பின்செல மைந்தனும் முனியொடு மறையப் போயினுன்.* (பா : 602)

**சிந்தை பின்வரச் செல்பவன் - தன் மனமும் பின்ருகும்படி விரைந்து செல்பவன். (அனுமன்)** *நாயகன் தனிச் சிலையின் முந்துசாயகக் கடுமையும் பிற்பட முடுகிச் சிந்தை பின்வரச் செல்பவன்.* (யுத்: 4123)

**சிந்தை புரண்டு மீதிடப் பொங்கிய உவகையர் - உள்ளத்தினின்று எழுந்துமேல் புரண்டு வழியுமாறு பொங்கிய மகிழ்ச்சியையுடையவர்.** (அ : 32)

**சிந்தைபார வணங்கல் - மனமகிழ வணங்குதல்.** *வந்தெதிர்ந்த முனிவனை வள்ளலும் சிந்தை ஆர வணங்கலும்.* **(பா : 648)**

**சிந்தையிற் கொள்ளல் - மனதிற் கொள்ளல். அதுவே கருத்தா யிருத்தல்.** *இந்திரனெனின் அவன் அரக்கர் ஏயின சிந்தையிற் சென்னியிற் கொள்ளுஞ் செய்கையான்.* **(ஆ : 132)**

**சிந்தையிற் செறி திண்மை - மனத்திற் பொருந்தியுள்ள திட்பம்.** *சிந்தையிற் செறி திண்மையால் ஊடல் கண்டவர்.* **(அ : 242)**

**சிந்தையிற் பார்த்தல் - மனத்தால் நினைத்தல். உள்ளத்தாற் கருதுதல். நோக்கல் நோக்கம்.** *ஆர்த்தியுற்ற மடந்தையர் ஆரையும் தீர்த்தன் இத்தனை சிந்தையிற் பார்த்திலான்.* (பா : 1179)

**சிந்தையின் செம்மை - மனத்தின் நடுவுநிலை.** *சிற்றமில்லை தம் சிந்தையின் செம்மையால்.* (பா : 70) [பா : பே]

**சிந்தையினுன் - சிந்தையினுளாகிய ஒரு மன்னன்.** (அண்) (வை. மு) **மன்மதன்.** (கலா) **(சித்தஜன் - மன்மதன்)** *ஐங்கணை நூருயிர மாகச் சிந்தாநின்ற சிந்தையினுன் செய்குவது ஓரான்.* (பா : 999)

**சிந்தையினுறைபவன் - யாவரது மனத்திலும் தங்குபவனாகிய மன்மதன்.** *சிந்தையின் உறைபவற் குருவந் தீர்ந்ததால்.* **(ஆ : 231)**

**சிந்தையுட் புகல் - மனத்துட் புகுதல்.** *முந்தை நான்முகன் படைக் கலந் தொடுக்குற்ற முறையுஞ் சிந்தையுட் புகச் செப்பினன்.* **(யுத் : 2483)**

**சிந்தையொத்தல் - மனமொத்தல்.** *ஒத்த சிந்தையர் உவகையர்.* (அ : 76)

**சிந்தோடரி ஒண்கண் - சிதறிய வரிபரந்த ஒளிதங்கிய கண்கள்.** *சிந்து ஓடு அரி ஒண்கண் திலோத்தமை.* **(கி : 276)**

**சிமயக் கிரி - சிகரத்தையுடைய குருகுக் கிரி.** (பா : 1362)

**சிமயக் கோடு - மலைச்சிகரம்.** *பொன் பிறழ் சிமயக் கோடு பொடியுற.* **(சு : 7)**

**சிமயத்தடம் - மலையுச்சியிடம்.** *கல்லார் சிமயத்தடம்.* **(சு : 49)**

**சிமயத்துச்சிக் குச்சி - சிமயம் - மலை. உச்சி - சிகரம். குச்சி - மேல் முகடு. மலையினது உச்சி முகடு.** *பெயர்ந்த தூளி பொன்னுடைச் சிமயத் துச்சிக் குச்சியும் புதையப் போனுன்.* **(யுத் : 2360)**

**சிமயம் - மலை.** *சேண் தொடர் தெய்வ மயேந்திரத் தும்பர் சென்ருன்.* **(கி : 1033)**

**சிமையம் - சிகரம்.** *சிமையக் கிரி யுருவத் தனி வடிவாளிகள் தெரிவான்.* (பா : 1362)

**சிரக்குவை - தலைகளின் கூட்டம். பல தலைகள்** *சேட றும் வெருக் கொடு சிரக்குவை செளித்தான்.* (ஆ : 605)

**சிரத்தவன் - தலைமை பெற்றவன்.** (வை. மு) **நெடுங்காலமிருப்பவன்.** (கலா) **(சிரம் - நெடுங்காலம்)** *இச்சிரத்தவன் உரைத் திறுக்கு மெல்லையில்.* (யுத் : 40)

**சிரத்தின் நான்மறை இறைஞ்சவும் தொடரவும் சேயோன்-இராமபிரான்.** (யுத் : 3790)

**சிரத்தினிற் பணத்தினோர்கள் - நாகர்.** *தெவ்வுலகத்துங் காண்டி சிரத்தினிற் பணத்தினோர்கள் அவ்வுலகத்துங் காண்டி.* (ஆ : 631)

**சிரத்தை - 1. விசேட முயற்சி.** (வை. மு) *அச்சிரத்தைக் கொரு பொருளன்று.* (யுத் : 40)

2. **உறுதி. உறுதியுரை.** (அ·ண்) (யுத் : 40) (சு : 1019)

**சிரத்தொகை - சிகர வரிசை.** *பைம்பொழில் சிரத்தொகை மதிற்புறந் திறுதி சேர்தர.* (யுத் : 4184)

**சிரதலங் கரஞ்சேர்த்தல் - தலையிடத்தே கைகளைச் சேர்த்தல். தலை மேற் கைகுவித்து வணங்கல்.** *மறையவன் அந்தச் சிரதலங் கரஞ் சேர்த்திடா...... நவின்றான்.* (யுத் : 167)

**சிரதலம் - தலை** *மறலியும் சிரதலங் குலைந்தான்.* (கி : 297) *சிரதலம் கரஞ் சேர்ந்திட.* (யுத் : 167) [பா : பே]

**சிரதலம் குலைதல் - 1. தலை நடுக்கக்கொள்ளல்.** *தேவதேவனும் விரிஞ்சனும் சிரதலங் குலைந்தார்.* (யுத் : 1188)

2. **சிரக்கம்பஞ் செய்தல்.** (கி : 297)

**சிரப்படை - சிறந்த படை. மேன்மைபெற்ற படை.** *நச்சிரப்படை நாலிரு கோடிக்கு நாதன்.* (யுத் : 501)

**சிரம் - 1. சிகரம்.** *எண்ணற்கரிதாகி இலங்கு சிகரங்கள்.* (பா : 963)

2. **தலை.** *சிரம் பத்துடையவன்.* (யுத் : 4196)

**சிரம் பொதிர்தல் - தலை நடுங்குதல்.** *சிரம் பொதிர்ந்தமரர் அஞ்ச னைதினன்.* (யுத் : 2405)

**சிரமம் - களைப்பு. அயர்வு. துன்பம்.** *இகற்பெருஞ் சிரமம் நீங்கி.* (யுத் : 2252) *அமர்த் தொழிற் சிரமம் வீய்ந்த.* (யுத் : 2362) *போர்த் தொழிற் சிரமம் போக்கி.* (யுத் : 3085)

**சிரமுகம் – சிரசுடன் சேர்ந்த முகம். பிரதான முகமுமாம்.** தேர் நின்று நெடுநிலத்துச் சிகரமுகங் மேற்பட விழுந்தான் சிகரம்போல் வான். (யுத் : 3867)

**சிரமொருங்குதல் – தலையறுதல்.** விராதனது மால்வரைகள் மானும் சிரம் ஒருங்கியது. (யுத் : 102)

**சிரல் – மீன்கொத்திப் பறவை.** கின்னரங் குரண்டம் கிலுக்கஞ் சிரல். (சு : 246)

**சிரற்றுதல் – பேரொலிபடக் கதறுதல். துன்பத்தால் அரற்றுதல்.** பறவையை ஊறுகொண்டெழச் சிரற்றின பார்ப்பினிற் சிந்தை சிந்தி. (யுத் : 1487)

**சிரன் – 1. தலை.** சிரன் நெரிந்தவும் கண்மணி சிதைந்தவும். (சு : 1010)

**2. தலையிடம் உச்சி.** விரிதரு சிரனெடு. (யுத் : 3753)

**சிரித்த பங்கயம் – மலர்ந்த தாமரை.** சிரித்த பங்கயமொத்த செங்கண் இராமன். (அ : 235)

**சிரித்தல் – நகுதல்.** சிரிக்கிலிரோ. (ஆ: 894) [பா: பே] சிரித்திடுவிர். (ஆ : 894)

**சிருங்க உயர்தவன் – மான்கொம்பை (முகத்திலே) கொண்ட சிறந்த தவத்தையுடைய முனிவன்.** ஒரு கலை முகச் சிருங்க உயர்தவன். (பா : 212)

**சிருங்க பேரம் – குகன் தலைநகரம்.** சிருங்க பேரம் அதுவென்றோதும் செழுநகர். (யுத் : 4351)

**சிருங்க பேரியது – சிருங்க பேரம்.** சிருங்க பேரிய தென்றோதும் செழுநகர்க்கிறை. (யுத் : 4351) [பா : பே]

**சிருங்கம் – விலங்கின் கொம்பு.** ஒரு கலைமுகச் சிருங்க உயர்தவன். (பா : 212)

**சிருங்கி பேரம் – குகனது நகரம்.** சிருங்கி பேரமெனத் திரைக் கங்கையின் மருங்கு தோன்று நகருறை வாழ்க்கையன். (அ : 653)

**சிருங்கி பேரியர் கோன் – குகன். சிருங்கி பேரம் என்னும் ஊரிலுள்ளார்க்குத் தலைவன்.** (அ : 1039)

**சில் – மாதர்கள் தலையில் அணியும் பொன்வட்டத் தகட்டணி.** சில்லலோதியை இருந் துறைவிடம் தேடினர். (கி : 822)

**சில்கணை – அற்பக்கணை.** சில சில்கணையால் ஆய்ப்புண்டவனும். (யுத் : 1686)

**சில்லரக்கு** – குளிர்ந்த செம்பஞ்சுக் குழம்பு. *கல்லரக்குங் கடுமைய வல்ல நின் சில்லரக்குண்ட சேவடிப்போது.* (அ : 518)

**சில்லரி** – ஒரு தாளக்கருவி. சில்லரி என்னும் வாத்தியம். (கலா) (வை. மு) *நிரம்பு சில்லரிப் பாணியும் குறடும் நின்றிசைப்ப.*(சு: 1089)

**சில்லரிச் சதங்கை** – சிலவாகிய அரிகளையுடைய சதங்கை. *தெய்வ வானக மகளிர் வந்தார் சில்லரிச் சதங்கை பம்ப.* (யுத் : 2775)

**சில்லரிப் பாண்டில்** – சிறிய பருக்கைக் கற்களோடு கூடிய ஓர் இசைக் கருவி. *சில்லரிப் பாண்டில் தழுவிய முழவொடுங் கெழுமி.* (சு: 417)

**சில்லரிப்பாணி** – ஓர் இசைக்கருவி (அண்) சில்லரி என்னும் வாத்தியமும் கைத்தாளமும். (வை. மு) சில்லரி என்னும் வாத்திய தாளம். (கலா) (சு : 1089)

**சில்லலோதி** – 1. சிலவாகிய கூந்தல். *சில்லலோதியைச் செங்கையிற் றிருகுறப் பற்றி.* (ஆ : 317) [பா : பே] சில்வல் ஓதி பார்க்க.

2. பொன்வட்டத் தகட்டணியை அணிந்த இருள்போன்ற கூந்தல். (கி : 822)

**சில்லறம்** – அற்ப ஒழுக்கங்கள். *போரின் வில்லறம் துறந்து வாழ் வேற்கும் இன்னன மேன்மை இல்லாச் சில்லறம்.* (கி : 432)

**சில்லி** – 1. தகட்டணி. (அண்) *சில்லியல் ஓதி.* (பா : 1213)

2. சிறு துண்டுகள். *ஒன்றின்மேல் ஒன்று வீழ உகைத் தெழுந் தும்பர் நாட்டுச் சென்று மேலிடம் பெறாது திரிந்தன சிகரச் சில்லி.* (யுத் : 641)

3. தேர் உருளை. சக்கரம். *சில்லிமாப் பெருந்தேர்.* (யுத் : 503)

**சில்லிடம்** – சிலவாகிய இடம். சிறியதாகிய இடம். *சில்லிடம் உலகெனச் செறிந்த தேர்கள்தாம்.* (பா : 826) *சில்லிட மொழியத் தெய்வ இலங்கையுஞ் சிதைந்தது.* (சு : 747)

**சில்லியந் தேர்** – சில்லியைக்கொண்ட தேர். *சில்லியந் தேர்மேல்...... ஒருபுறம் போனான்.* (யுத் : 3260)

**சில்லியல் ஓதி** – 1. மெல்லிய தன்மை வாய்ந்த (கூந்தல்) கூந்தலை யுடைய பிராட்டி. (பா : 1213)

2. தகட்டணி யணிந்த நல்ல தன்மைவாய்ந்த (கூந்தல்) கூந்தலை யுடைய பிராட்டி. (உ. வி) (பா : 1213)

**சில்லியல் கோதை** – சில வகைகளாக வகுத்து அலங்கரிக்கப்படும் (கூந்தல்) கூந்தலையுடைய பிராட்டி. (உ. வி) *சில்லியல் கோதையை நினைந்து தேம்பிய வில்லியை.* (யுத் : 464)

**சில்லியென்னும் ஆழிகூடு தேர் – சில்லி எனப்படும் உருளையுடன் கூடிய தேர்.** வாசியோடு சீய மாவு மீளியும் செறித்தமைந்த சில்லி யென்னும் ஆழிகூடு தேரெலாம். (யுத் : 3337)

**சில்லுடல் – சிறிய உடல்.** மற்றவர் சில்லுடற் குருதிநீர் தேக்கி வென்று மீளுதும். (யுத் : 3257)

**சில்லுளை – சிலவாகிய பிடரி மயிர்.** சில்லுளைப் பரி. (யுத் : 3493)

**சில்லோர் – சிலர்.** வீடினூர் சிலவர் சில்லோர் பெற்றிலர் விளிந்து வீழ்ந்தார். (யுத் : 2116)

**சில்வல் ஓதி – சிலவாகிய வலிய கூந்தல்.** சில்வலோதியைச் செங் கையிற் றிருகுறப் பற்றி. (ஆ : 317)

**சில – 1. குறைந்த அளவு.** சில தேன். (பா : 130)

**2. சிறிய.** ஆற்றுநீர் சிலவென்று மருவான். (யுத் : 134)

**3. இரண்டு.** (வை. மு) எள்ளுடைப் பொறி விரவின உளசில இளநீர். (அ : 57)

**சில சில் கணை - சிற்சில அம்புகள்.** சில சில் கணையால் ஆய்ப்புண்ட வனும். (யுத் : 1686)

**சில சில – சில; சில** ஈர்த்தன சில; சில சென்னி ஏந்தின. (யுத் : 625)

**சிலதர் – ஏவலாளர் பணியாளர்.** அவ்வழிச் சிலதர் அஞ்சி. (ஆ: 671)

**சிலதியர் – ஏவற் பெண்டிர்; பணிப்பெண்கள்; சேடியர்; குற்றேவல் புரிபவர்.** அரமடந்தையர் சிலதியர் அரக்கியர்க்கு. (சு : 104)

**சிலம்பல் – 1. ஒலித்தல். முழங்குதல்.** வெள்ளஞ் சிலம்பு பாற் கடல். (ஆ: 1065) அளியுங் கள்ளுஞ் சிலம்பு பூங்கோதை. (ஆ: 1065)

**2. வருந்துதல்.** புனைகோலம் உள்ளுஞ் சிலம்பும். (ஆ : 1065)

**3. கண்ணுக்குப் புலப்படுதல்.** புனைகோலம் உள்ளுஞ் சிலம்பும் சிலம்பாவால். (வை. மு) (ஆ : 1065) [பா : பே]

**சிலம்பி – சிலந்தி.** சிலம்பி பஞ்சினிற் சிக்கறத் தெரிந்த நூல். (அ : 768) (யுத் : 2618)

**சிலம்பி நூல் – சிலந்திப்பூச்சியின் நூல்.** சிலம்பிதன் வாயிற் கூர்நூல் இயையக் கூடியற்றிப் பண்டும் இன்றும் அமைக்கின்ற படியை ஒருவாய் பரமேட்டி. (யுத் : 2618)

**சிலம்பு – 1. மலை.** சிலம்புகள் சிலம்பிடை செறித்த கழலோடும். (பா : 389)

**2. காலணி. காற்சிலம்பு.** சிலம்பிடை. (பா : 389)

3 **சிலவாகிய அம்பு.** (அன்) புனைகோல முள்ளுஞ் சில் அம்பும் சிலம்பாவேல். (ஆ: 1065)

4. **முழக்கம்.** முனிவர்கள் எண்டிசைதொறும் சிலம்பும் ஒலில. (ஆ: )

**சிலம்புதல் – 1. ஒலித்தல்.** தெள்ளொலிச் சிலம்புகள் சிலம்பு பொன்மனை. (அ: 502)

2. **புலப்படுதல்.** (ஆ: 1065) [பா: பே] **சிலம்பல் பார்க்க.**

**சிலம்பு நொந்தழுதல் – சிலம்பு வருந்தி அழுவதுபோன்று ஒலித்தல்.** நூபுரம் புலம்பிடச் சிலம்பு நொந்தழக் கோபுரந் தொறும் குறுகினர் சிலர். (யுத்: 3897)

**சிலர் – சிலர்.** சூது உந்தலிற் பொழுதுபோம் சிலர்க்கு அவ்வொண்ணகர். (பா: 161)

**சிலர் சிலர் – 1. வெவ்வேறு குழுவினரைக் குறிப்பது.** கிணத்தின் மேல் விழுந்தழுந்தினர் சிலர்; சிலர் நிவந்த பிணத்தின்மேல் விழுந் துருண்டனர். (ஆ: 504) (சு: 785)

2. **சிற்சிலர் ஒரே குழுவினரைக் குறிக்கும் அடுக்கு.** சிலர் சிலர் பருகிப்பட்டார். (யுத்: 1935)

**சிலர் சிலர்கள் – சிலச்சிலர். சிற்சிலர்.** உருவென்றார் சிலர் சிலர்கள் ஒளியென்றார் சிலர் சிலர்கள். (யுத்: 2694)

**சிலரெல்லாம் – ஒரு குழுவினில் உள்ளவர் யாவரும்.** தின்மின் தின்மின் என்று தெழித்தார் சிலரெல்லாம். (சு: 482) (சு: 4583) (சு: 484)

**சிலவர் – சிலர்.** தானுகர் சாகமெல்லாம் சிலவர் தந்தார். (சு: 1251) (யுத்: 2116) (யுத்: 2317) (அ: 466)

**சிலை – 1. வில்.** வில்லி வாங்கிய சிலையென. (அ: 749) (பா: 104)

2. **புருவம். (உருவகம்)** குதைவரிச் சிலைநுதல் கொவ்வை வாய்ச்சியர். (பா: 141)

3. **மலை.** நுதலவன் சிலைவிலின் நோன்மை நூறிய புதல்வன். (அ: 842) சிலைக்கைம்மா. (யுத்: 2115) [பா: பே]

4. **கல்.** மீ எரி உய்ப்பதோர் கற்செல விட்டான் தீயவர் அச் சிலையைப் பொடி செய்தார். (சு: 915)

5. **ஒரு மரம். (உ. வி) சிலைவில் பார்க்க.**

6. **மலை.** சிலையிற்......... பொலிகின்றான். (யுத்: 232) மீதுற்று ஆர் சிலைமீது கிடந்தான். (யுத்: 232)

**சிலை ஊன்றி நிற்றல் - ஊன்றுகோற் போன்று வில்லை ஊன்றி நிற்றல்.** *சிலையூன்றியே ஆறி நின்றனன்.* (யுத் : 2078)

**சிலை ஒலி – வில்லின் நாண் ஓசை.** *வார்சிலை ஒலியின் அஞ்சி உருமெலாம் மறுக்கங் கொள்ள.* (ஆ : 424)

**சிலைக் குரிசில் – வில்லையேந்திய குரிசில். (இலககுவன்)** *தன்னொடும் பிரியா வண்ண வெஞ்சிலைக் குரிசிலும் மருங்கினி திருப்ப.* (அ : 50)

**சிலைக் குன்றவர் – வில்லைத்தரித்த மலைவாணர்** *அறை கழற் சிலைக் குன்றவர்.* (அ : 758)

**சிலைக்கோட்டு நுதல் – விற்போலும் வளைந்த நெற்றி.** *சிலைக்கோட்டு நுதற் கனிவாய்க் கருநெடுங்கண்...... இடையார்.* (பா : 735)

**சிலை குலாந் தோள் – வில் விளங்குந் தோள்.** *சிலை குலாந் தோளினாய் சிறியன் சாலவே.* (பா : 455)

**சிலைத் தொழிற் குமரன் – விற்றொழிலில் வல்ல முருகப்பெருமான்.** (யுத் : 2515)

**சிலை நிகர் புருவம் – வில்லைப்போன்ற புருவங்கள்.** *கொற்றச் சிலை நிகர் புருவம் நெற்றிக் குனிந்தன.* (யுத் : 2779)

**சிலை நுதல் – வில்லைப்போன்ற புருவத்தையுடைய நெற்றி.** *சிலை நுதற் கொவ்வை வாய்ச்சியர்.* (பா: 141) *சிலை நுதற் கடையுறை செறித்த வேற்கணாள்.* (பா : 611)

**சிலை நெடுங்குரல் – வில்லினது பெருங்குரல்.** *கூற்றின் வெம்புருவ மன்ன சிலை நெடுங் குரலுங் கேளா.* (யுத் : 1105)

**சிலைப்பு – பேரொலி** *சிலைக்கடல் சிலைப்புத் தீர.* (சு : 828)

**சிலைப் பொருப்பு - வில்லாகிய மலை.** *புரஞ்சுட வரிசிலைப் பொருப்பு வாங்கிய பரஞ்சுடர் ஒருவன்.* (சு : 981)

**சிலை பூணுங் கை – வில்லைத் தரித்த கை. (வில் வீரர்)** *கடிதோடுங் காலுள சிலை பூணுங் கையுள.* (அ : 673)

**சிலை மறை – வில் வேதம்.** *வரிசிலை மறைவலோனே.* (ஆ : 789)

**சிலை மா மேகம் – வில்லாகிய பெரிய மேகம்.** *சிலை மா மேகம் சோனைபடக்குடர் சூறைபடச் சுடர் வாளோடும் தானைபடத் திரள் சாயேனோ.* (அ : 1012)

**சிலையிராமன் – வில்லேந்திய இராமன்.** *சிலையிராமன் தோள்வலி கூறுவோர்க்கே.* (பாயி : 23)

**சிலையின் குடுமி – வில்லின் நுனி.** *சிலைகளின் குடுமிய சிரத்தின் மேலன மலைகளிற் பெரியன குரங்கு வாவுவ.* (யுத் : 2000)

**சிலையின் நிற்றல் – வில்லினை ஊன்றிக்கொண்டு நிற்றல்.** *தேரின்மேற் சிலையின் நின்ற இந்திரசித்து.* (யுத் : 2416)

**சிலையுடைக் கயல் – வில்லோடமைந்த கயல்மீன்கள்.** *சிலையுடைக் கயல் வாள் திங்கள் ஏந்தி ஓர் செம்பொன் கொப்பர்......... முளைத்த தன்னாள்.* (பா : 1324)

**சிலையுடை மலை – வில்லையேந்திய மலை.** *சிலையுடை மலையெனத் தேர் மேல் நின்ற தூடணன்.* (ஆ : 525)

**சிலையுதைத்த கோல் – வில்லால் ஏவப்பட்ட அம்பு.** *இச்சிலை யுதைத்த கோற்கு இலக்கம் யாதென்பார்.* (பா : 758)

**சிலையுழவன் – விற்போர் வல்லவன். இராமபிரான்.** *வரிசிலை யுழவனும் மறையுழவனை நீ புரிதொழில் எனையது புகலுதி என்ன.* (ஆ : 111)

**சிலையெடுத்துத் திரிதல் – வில்லேந்தி வீரராய்த் திரிதல்.** *தாபதர்கள் சிலையெடுத்துத் திரியுமிது சிறிதன்றே.* (ஆ : 325)

**சிலை வருடம் - கல் மழை.** *மருளொரு திசை யொருதிசை சிலை வருடம்.* (யுத் : 3759)

**சிலை வலாண்மை – வில்வித்தையிற் பயின்று வல்லமை பெற்றுள்ள வீரம்.** (யுத் : 2031)

**சிலைவலி – வில்வலியிற் சிறந்த வீரர்.** *இச்சிலைவலி வீரரைத் தெரிகிலேன் எனு.* (ஆ : 190)

**சிலை வாளியன்ன விசை – வில்லினின்று எய்யப்பட்ட அம்பின் வேகம் போன்ற வேகம்.** *சிலை வாளியன்ன விசைபோய் ஆணிப் பசும்பொன் அனையாள் இருந்த அவிர் சோலை வல்லை அணுகா.* (ஆ : 969)

**சிலை வில் – மலைபோன்ற வில்.** (அண்) **மேரு மலையின் அமிசமான வில்.** (வை. மு) **முழங்கும் வில்.** (கலா) **சிலையென்னும் மரத்தாற் செய்த வில்.** (உ. வி) *கன்னுடை நுதலவன் சிலை விலின் நோன்மை தூறிய புதல்வன்.* (அ : 842)

**சிலை வீரம் பழிப்பது – வில்லினது வீரத்தன்மையைப் பழிப்பதற்கு இடமாக்குவது.** (கலா) **வில்வீரச் செயலிற் பழிப்படைவது.** (வை. மு) **வில்லானது வீரத்தைப் பழிப்பதாக அமைதல்.** (அண்) *தாரம் மற்றொருவன் கொளத் தன் கையில் பார வெஞ்சிலை வீரம் பழிப்பதே.* (கி : 327)

**சிலை வேடர் – விற்பிடித்த வேடர்.** *ஐயிருபத்தோடைந் தாயிரர் உளர் ஆணை செய்குநர் சிலை வேடர்.* (அ : 674)

**சிவண** – 1. ஒப்ப. (அண்) **விளங்க.** (கலா) *சிகர வண்குடுமி நெடுவரை எவையும் ஒருவழித் திரண்டன சிவண.* (சு : 407) (யுத் : 1564)

2. பொருந்த. *அறம் சிவண.* (ஆ : 38)

**சிவணது** – வடிவொத்தது. (வை. மு) *அறம் சிவணது அன்னசிறை முன்னவரொடேகு செலவத்து.* (ஆ : 38) [பா : பே]

**சிவணுதல்** – 1. பொருந்துதல். **விளங்கல்.** (ஆ : 38)

2. ஒத்தல். (சு : 407) *சிவண வண்ணவான் கருங்கடற் கொண்டுய்த்த செயலினும்.* (யுத் : 1564)

**சிவணும்** – ஒக்கும் *தீச்சிகை சிவணும் சோதிச் செம்மணிச் செய்த தூணின்.* (யுத் : 791) *செங்கயல் நறவமாந்திக் களிப்பன சிவணுங் கண்ணூர்.* (அ : 250)

**சிவந்த குன்று** – உதயமலே. *விசும்பிடைச் சிவந்த குன்றின் மேனின்று குதித்தன பகலவன் குதிரை.* (யுத் : 537)

**சிவப்புறு சூட்டு** – சிவந்திருக்கின்ற உச்சிக் கொண்டை. *கறுப்புறு மனமும் கண்ணிற் சிவப்புறு சூட்டுங்காட்டி.* (பா : 47)

**சிவப்புறு மலர்** – செந்தாமரை மலர். *சிவப்புறு மலர் மிசைச் சிறந்த செல்வியும்.* (அ : 30)

**சிவல்** – கௌதாரி. *இழைபுரையுந் தாம்பிரை யூர்க்குருவி சிவல் காடையுடன் பிறவு மீன்ருள்.* (ஆ : 203)

**சிவன் ஐம்முகமுடையான் படை** – ஐந்து முகங்களேயுடைய பாசுபதப் படை. (யுத் : 3042)

**சிவன்காண் அயன் காண் எனும் தூதன்** – சிவனென்றும் அயனென்றும் கண்டோர் சொல்லும் தூதன்; அனுமன். (யுத் : 1834)

**சிவன நம்படை** – சிவபிரானது நல்ல பாசு பதாஸ்திரம். (யுத் : 3040) [பா : பே]

**சிவனின் படை** – முக்கணன் படை. பாசுபதாஸ்திரம். *சிவனின் படைதொடுத்தாருயிர் முடிப்பேனெனத் தெரிந்தான்.* (யுத் : 3040)

**சிவிகை** – பல்லக்கு. *சென்றன தரள வான் சிவிகை ஈட்டமே.* (பா : 834) (பா : 1279)

**சிவிறி** – நீர் வீசுங்குழல். பீச்சாங்குழல். *தையலார் பந்தியிற் சிவிகையாற் சிந்த.* (பா : 297)

**சிவிறி ஓடுதல்** – பரந்து ஓடுதல். பரந்து பெருகல். *ஊடுறு கமலக் கண்ணீர் திசைதொறும் சிவிறி ஓடத் தாள்தொட தடக்கையாரத் தழுவினன்.* (யுத் : 4268)

**சிவை - துருத்தி. ஊதுலே.** *பத்துச் சிவையின் வாயென்னச் செந்தீ உயிர்ப்புறச் சிவந்த மூக்கன்.* (யுத் : 1232)

**சிவையின் வாய் - துருத்திவாய்** (யுத் : 1232)

**சிற்குணத்தர் - ஞானிகள்.** *சிற்குணத்தர் தெரிவருும் நன்னிலே.* (பா: 2)

**சிற்சிலர் - சிலச்சிலர்.** *சிற்சிலர் விதிசெய்த தீமைதானென்பார்.* (பா : 758)

**சிற்பதம் - ஞானசொரூபம். எங்கும் பரவி விளங்கும் தன்மை சிறிதும் குன்ருது ஒடுங்கி யோகியரின் உள்ளத்தே காட்சியளிக்கும் இறை சொரூபம்.** *அற்புதன் அற்புதரே யறியுந் தன் சிற்பத மெய்க்கொடு சென்ருன்.* (பா : 440)

**சிற்பம் - 1. சித்திரம்.** *தொழில்மாய் சிற்பங்களின் வீவன சேர்குவெனே.* (ஆ : 91)

2. **சிறுமை. அற்பம்.** *சிற்பங்கொள் பகலெனை.* (ஆ : 184)

3. **தொழில் திறமை.** *சிற்பத்தை நம்மாற் பேசச் சிறியவோ.* (யுத் : 1245) [பா : பே]

4. **புனேமொழி** *புலவர் போற்றும் சினேவரால் பகழி ஆவம் நெற்சினே என்னும் சிற்பம்.* (கி : 778) [பா : பே]

**சிற்பரம் - அறிவிற்கு எட்டாத கடவுள்.** (பா : 440) [பா : பே]

**சிற்றடிமை - அடிமைத்தொண்டு புரியுங் குற்றேவல் மக்கள்.** *சிற்றடிமை குற்றம் பொறுப்பரென் றெண்ணவேண்டா.* (கி : 373)

**சிற்றவை - சிறிய அன்னே.** *சிற்றவை தானுமாங்கே கொணர்கெனச் செப்பினுர்.* (அ : 266) (ஆ : 953)

**சிற்றிடை - சிறிய இடை.** *செயிரில் சிற்றிடையாயுற்ற சிறுகொடி.* (கி : 784) *சிற்றிடைச் சீதை யென்னும் மான்.* (ஆ : 638)

**சிற்றியல் - சிறிய தன்மை.** *சிற்றியற் குறுங்கால் ஓரிக்குரல் கொளே இசையாப் பல்பேய் கற்றியல் பாணி கொட்ட.* (யுத் : 3601) *சிந்தையில் நினேந்து நான் வருந்தும் சிற்றியல்.* (யுத் : 2955) [பா : பே]

**சிற்றில் - சிறு வீடு.** (பா : 60)

**சிற்றில் கோலுதல் - சிறு வீடுகட்டி விளேயாடுதல்.** *சிற்றில் கோலிச் சிதறிய முத்தமே.* (பா : 60)

**சிற்றிலே - சிறிய இலே.** *சிற்றிலே மரந்தோறு.* (கி : 525)

**சிற்றினக் குரங்கு - சிறுமையுடையதாய் வரும் இனத்திற் பிறந்த குரங்கு.** *தோல்லேச் சிற்றினக் குரங்கினேடுந் தெரிவுறச் செய்த செய்கை.* (கி : 362)

**சிற்றினத்தவர் - அற்பர். சிற்றினத்தைச் சேர்ந்தவர்.** சிற்றினத் தவரொடும் செறிதல் சீரிதோ. (யுத் : 380)

**சிற்றெறும்புகள் - சிறிய எறும்புகள்.** திணைந்துணை வலியிலாச் சிற்றெறும்புகள். (அ : 7910)

**சிற்றையாளன் - சிறியோன். சிறுமையுடையவன்** சிற்றையாளனைத் தேவர்தம் தேரொடும் பற்றி வானிற் சுழற்றிப் படியின்மேல் எற்றுவேன். (யுத் : 3711)

**சிறகால் தழுவுதல் - கையினால் தழுவுவதுபோன்று சிறகுகளால் தழுவுதல்.** மருவினிய குணத்தவரை இருசிறகால் உறத்தழுவி. (ஆ : 208)

**சிறத்தல் - மிகுதல்.** சிறந்த காதல். (பா : 571)

**சிறந்த தம்பி - ஏனையோரினும் சிறந்த தம்பி. (பரதன்)** சிறந்த தம்பி திருவுற, (அ : 312)

**சிறந்தவர் - மேம்பட்டவர்.** மன்னுயிர்க்கு இராமனிற் சிறந்தவரில்லை. (அ : 41)

**சிறப்பு - 1. வீடுபேறு.** அருஞ்சிறப் பமைவருந் துறவும். (அ : 22)

2. **உபசாரம். மரியாதை.** சென்றான் எதிர்கொண்டு சிறப்பமையா. (ஆ : 87)

3. **சன்மானம்.** சிறப்பவன் செய்திடச் செல்வ மெய்தினர். (யுத் : 488)

4. **செல்வம்.** உபயலோகத்திலுள்ள சிறப்புங் கேட்டுவந்தேன். (யுத் : 1349)

**சிறப்புடை முனிவன் - சீரியஞான முனிவன். கோசிகன்.** சிறப்புடை முனிவன் என்னே தெருமரல் செப்புகென்ன. (பா : 687)

**சிறிஞர் - இளைஞர்.** அறிஞரும் சிறிஞரும் ஆதியந்தமா. (அ : 978)

**சிறிதிடம் தீர்தல் - சிறிது நிலம் கடத்தல்.** செம்மலும் இளைய கோவும் சிறிதிடந் தீர்ந்த பின்னர் மைம்மலி பொழில் யாதென்ன. (பா : 434)

**சிறிது - 1. சிறுமை தருவது. குறைவானது.** தாபதர்கள் சிலை யெடுத்துத் திரியுமிது சிறிதன்றே. (ஆ : 325)

2. **சற்றுநேரம்.** சிறிதினிற்றேற. (யுத் : 1176)

**சிறிது தேறுதல் - சிறிது தேறுதலடைதல்.** தேற்றினள் அன்னைதான் சிறிது தேறிய கூற்றுறழ் வரிசிலைக் குரிசில் கூறுவான். (அ : 849)

**சிறிய - சிறுமைத் தன்மையுடைய. அளவில் சிறிய.** இளைய கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை இழைப்ப. (அ : 1)

**சிறிய தாய் – சிற்றன்னை.** (*அ : 1*)

**சிறியர் – அற்பர். வலிமையற்றவர்.** அத்தலை அன்ன செய்யச் சிறியரோ வலியரம்மா. (*யுத் : 1611*)

**சிறியன் - சிறுவன்.** வானவருலகை வென்றநாள் சிறியன்கொல் நீ சொன்ன தேவன். (*யுத் : 125*)

**சிறியார் – அற்பர்.** அது அன்றெனின் சிறியாரோ உபகாரஞ் சிந்தியார், (*இ : 393*) (*சு : 249*)

**சிறியாழ்ப்பாணர் – சிறிய யாழையுடைய பாணர்கள்.** தெள்விளிச் சிறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவ மாந்தி. (*பா : 39*)

**சிறியோர் – 1. வலிமையற்றவர்.** முடியுநாட்டானே வந்து முட்டினுல் துன்ப முந்நீர் படியுமாஞ் சிறியோர் தன்மை. (*யுத் : 2858*)

**2. தம்பியர்.** சிறியோர் நாள் பருகினரென்றால். (*ஆ : 734*)

**சிறுகட்கரி – சிறிய கண்களையுடைய களிற்றி யானை.** சேவகம் அமைந்த சிறுகட்கரிகள் என்ன. (*அ : 543*)

**சிறுகட்கூளி – சிறிய கண்களையுடைய பேய்.** சாதகரொடு சிறுகட் கூளியும் கவந்தமும். (*அ : 1100*)

**சிறுகட் செம்முகக் காரினம் – சிறிய கண்களையும், சிவந்த முகத்தையுமுடைய மேகம்போன்ற யானைக்கூட்டம்.** சிறுகட் செம்முகக் காரினம் நெருங்கின. (*அ : 400*)

**சிறுக நோக்கல் – குறையுடையவனாகப் பார்த்தல். குற்றமுடையவனாகப் பார்த்தல்.** சேவகம் இதுவெனிற் சிறுகநோக்கலென். (*இ : 209*)

**சிறுகா இருள் – குறையாது பெருகின இருள்.** செல்லா இரவே சிறுகா இருளே. (*சு : 492*)

**சிறுகு காலங்கள் – சிறிய அளவுள்ள பொழுதுகள்.** சிறுகு காலங்கள் ஊழிகளாம் வகை திரிந்து. (*சு : 289*)

**சிறு குறள் – குறுகிய வாமனவதாரங்கொண்ட திருமால்.** ஒத்திரு சிறுகுறள் பாதமுய்த்த நாள். (*யுத் : 1072*)

**சிறு குறுநகை – புன்சிரிப்பு.** தேந்தளவுகள் செய்யுஞ் சிறு குறுநகை காணாய். (*அ : 698*)

**சிறு கூதாளி – ஒரு செடி.** சிங்கலில் சிறு கூதாளி. (*கி : 783*)

**சிறுகூழ் – இளம்பயிர்.** அழுனையிற் சிறுகூழ். (*அ : 1015*)

**சிறுத்தல் – குறைதல்.** சிறுகா இருளே. (*சு : 492*)

**சிறுத்தொழில் – சிறு காரியம்.** *சிறுத்தொழில் முடித்தகறல் தீதெனல் தெரிந்தான்.* (சு : *691*)

**சிறு தாதை – சிறிய தந்தை.** *அவன் சிறு தாதையுமனுகா.* (யுத் : *3019*) (யுத் : *3058*)

**சிறுதாய் – சிற்றன்னை.** *திட்டாத வேற்கண் சிறுதாய்.* (அ : *408*)

**சிறு தொழில் – சிறிய தொழில். அற்பத் தொழில். இழிந்த செயல்.** *இழிவரு சிறு தொழிலியற்றி.* (அ : *900*) *ஒளித்தியாற் சிறு தொழில் கேோய்.* (யுத் : *1215*) *சிறு தொழில் மனிதர்.* (யுத் : *1308*)

**சிறுநகை – புன்முறுவல்.** *திண்டிறலரக்கனும் சிறுநகை செய்தான்.* (யுத் : *839*)

**சிறுநிலை – வறுமை. (இளைப்பு)** *சிறுநிலை மருங்கின்.* (அ : *583*)

**சிறுநெறி – அதரும நெறி.** *சாதியால் வந்த சிறு நெறியறியான் என் தம்பி.* (யுத் : *1575*)

**சிறுபிறை – சிறிய பிறைச்சந்திரன்.** *செக்கர் மேகத்துச் சிறுபிறை.* (யுத் : *219*)

**சிறுமா – யானைக்கன்று.** *பிடிதரு சிறுமா.* (அ : *699*)

**சிறு மானுடர் – அற்பமான மனிதர்.** *சிறு மானுடர் சினப் போர் வென்று.* (யுத் : *70*)

**சிறுமை – 1. இளப்பம். தாழ்வு. இகழ்ச்சி.** *புரவலன் தேவிதன்னைத் திறத்துழியன்றி வஞ்சித் தெய்துதல் சிறுமைத்தாகும்.* (ஆ : *766*) *குலச்சிறுமை செய்தாய்.* (யுத் : *65*) *சிறுமை என்னே.* (யுத் : *760*)

**2. இளப்பம் அல்லது துன்பம். குறைபாடு. திறமைக்குறைவு.** *சேயிரு விசும்புளோருந் தீர்ந்ததெம் சிறுமை என்றார்.* (பா : *204*) *படைக்குநர் சிறுமை.* (ஆ : *284*)

**3. துன்பம். துயரம்.** *தேடி இவ்வழிக் காண்பனேல் தீரும் என் சிறுமை.* (சு : *330*) (யுத் : *1583*) (யுத் : *2900*)

**4. இழிகுணம். அற்பகுணம்.** *சிறுமையிற்றீரார்.* (யுத் : *543*)

**5. அற்பம்.** *சிற்றியற் சிறுமையாற்றற் சிறுதொழில் மனிதர்.* (சு : *476*)

**6. பிழை. குற்றம்.** *சாதியால் வந்த சிறு நெறியறியான்.* (யுத் : *1575*) *இந்தச்சிறுமை செய்தேன்.* (சு : *188*)

**7. தீமை.** *சிறுமை தீரா வெவ்வழி மாயை.* (யுத் : *1582*)

**8. சிறியதாகச் செய்தல்.** *பரவையைச் சிறுமைசெய்த அக்காழக் கடை வரிசிலைக் கடல்.* (அ : *1091*)

9. **சின்னத்தோற்றம்.** (யுத் : 548)

10. **அளவிறந்த காமம்.** சிறுமை திரா வெவ்வழி மாயை. (யுத் : 1582)

**சிறுமை கண்டவர் – சின்னத் தன்மையைக் கண்டவர்.** சிறுமை கண்டவர் பெருமை கண்டல்லது தேருர். (யுத் : 548)

**சிறுமையாய்த் தோன்றல் – மிக எளிமையாய் உலகுக்குத் தோன்றுதல்.** நாம்...... துக்கமே யுழப்பதென்ருற் சிறுமையாய்த் தோன்றுமன்றே. (யுத் : 2862)

**சிறுமையில் தீர்தல் – துன்பத்தினின்றும் விடுதலையடைதல்.** சீதையை எய்தி உள்ளம் சிறுமையிற்றீருஞ் செய்கை யாதெனக் குணர்த்தி. (யுத் : 1583)

**சிறுவர் – புதல்வர்.** நின் சிறுவர் நால்வரினும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி. (பா : 327) (யுத் : 97) (அ : 606)

**சிறு விலை – உயர்ந்த விலை. பஞ்சகால விலை. விலையில் உயர்ந்ததாய் அளவில் குறைந்ததாய் உள்ளது.** சிறுவிலை எளியவர் உணவு சிந்திஞேன். (அ : 904)

**சிறுவிலை எளியவர் உணவு – எளிய மக்கள் உண்ணும் விலையுயர்ந்த சிறிய அளவுள்ள உணவு.** (அ : 904)

**சிறுவிலை நாள் – பஞ்சகாலம்.** சிறுவிலை நாள் முந்திந்ததோர் உணவின் பயன் எனலாயின முதல்வன். (யுத் : 3719)

**சிறை – 1. இடம். பக்கம்.** ஒரு சிறையிற்ருதல். (யுத் : 725) செற்றம் நீங்கிய மனத்தினன் ஒரு சிறை சென்ருன். (சு : 232) (யுத் : 1002)

2. **சிறைச்சாலை.** நெடுஞ்சிறை. (சு : 233)

3. **இறக்கை. சிறகு.** பயில் சிறை அரச அன்னம். (பா : 45)

4. **கட்டு.** வினையென்னும் சிறை. (கி : 91)

5. **அணை. கரை.** புனற் சிறைகள் ஏரு. (பா : 923)

6. **குளம். நீர்நிலை.** வரம்பில் வான்சிறை மதகுகள். (பா : 541)

7. **காவல்.** அருஞ்சிறை போக்கி. (யுத் : 1656)

8. **தற்காப்பு.** (கலா) பெருஞ்சிறைக் கற்பினுள். (யுத் : 2841)

**சிறை கோலுதல் – சிறகைப்பிரித்து விரித்தல். (விரித்து வீசுதல்)** கூந்தன் மென்மயில் குறுகின நெடுஞ்சிறை கோலிக் காந்து குண்டத் திலடங்கெரி எழுப்புவ காணுய். (அ : 767)

**சிறை சிறை – பற்பல பக்கங்களிலும்.** சிறை சிறை கெடுவீர். (யுத் : 3292)

**சிறை தட்டல் – சிறையிலே தடுத்துவைத்தல்.** சான்றோர் மாதைத் தக்க அரக்கன் சிறை தட்டால். (யுத் : 2607)

**சிறைதுள்ளி மீதெழுபுள் – சிறகுகளை அசைத்துக்கொண்டு துள்ளி மேலே எழுகின்ற பறவைகள்** (அ : 233)

**சிறை துறத்தல் – கட்டினின்றும் நீங்குதல். சிறையைத் துறத்தல்.** தொய்யன் மாநிலச் சிறை துறந்து. (அ : 62) வினையெனுஞ் சிறை துறந் துயர்பதம் விரவினர். (கி : 91)

**சிறை நிறைகால் வழங்கல் – இறகுகள் நிறைந்த காற்றினை வீசுதல்.** திசையானை கண்கள் முகிழா ஒடுங்க நிறைகால் வழங்கு சிறையான். (யுத் : 2196)

**சிறைப் பந்தர் வீசுதல் – சிறகுகளை பந்தர்போல வீசுதல்.** இருஞ் சிறைப் பந்தர்வீசி எயில்வகுத் தெய்துகின்ற. (கி : 54)

**சிறை மாவண்டு – சிறகுகளையுடைய கரிய வண்டு.** வாடிய சிறை மாவண்டு அந்தரின் இசை முன்னம் பாடிய பெடை கண்ணு வருவன பல காணும். (அ : 702)

**சிறை மீட்டல் – சிறையினின்றும் விடுவித்தல்.** எம்பிரான் தேவி பட்ட அருஞ்சிறை மீட்ட வண்ணம் அழகிதுபோலும் அம்மா. (யுத் : 2841)

**சிறையகத்து வைத்தல் – காவலுள் வைத்தல்.** வேகின்ற உள்ளத் தாளை வெஞ்சிறையகத்து வைத்தான். (கி : 1004)

**சிறையுடைச் சரம் – சிறகையுடைய அம்பு.** சிறையுடைக் கொடுஞ் சரமெலாம் இமைப்பினிற்றிரிய. (யுத் : 3768)

**சிறையுற்றுளது – அடக்கிக்கொண்டது.** உறையரவம் சிறையுற்றுளது. (யுத் : 2821) [பா : பே]

**சிறையுறுதல் – அடக்கிக்கொள்ளல்.** (யுத் : 2821) [பா : பே]

**சிறைவீடு – சிறையினின்றும் விடுதலை செய்தல்.** காத்திருந்தவற் கேகடன் இடை கோத்த வெஞ்சிறைவீடென்று கூறுவாய். (சு: 637)

**சிறை வைத்திடுதல் – சிறையிலே வைத்துவிடுதல்.** மண்டவுதரத்தவள் மலர்க்குழல் பிடித்துக் கொண்டு சிறை வைத்திடுதலிற் குறையு முண்டோ. (சு : 694)

**சிறைவைப்பு – சிறை.** வஞ்சர் சிறைவைப்பில். (சு : 612)

**சின்மதி – சிற்றறிவு.** பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மையால். (சு : 618)

**சின்ன – சிறிய.** சின்ன நுண்டுகிலினைப் புனைகின்றார் சிலர். (அ : 487)

**சின்னஞ்செய்தல் – வெட்டுதல்.** சின்னமே செய்யக்கண்டும் தீவினை நெஞ்சம் ஆவி பின்னமே ஆயதில்லை. (யுத் : 2838)

**சின்னந் தருமலர் – விடுபூவாக அணியத்தக்க மலர்.** சின்னந் தருமலர் சிந்திய செறி நந்தன வனம். (அ : 624)

**சின்ன நுண்டுகில் – சிறிய நுண்ணிய துகில்.** கிழிக்கப்பட்ட நுண்ணிய நூலாடை. (உ. வி) (அ : 487)

**சின்னப்பூ - விடுபூ.** (அன்) **ஓர் ஆபரணம்.** (கலா) சின்னப்பூ செருகுமென்பூ. (பா : 1218)

**சின்ன பின்னங்கள் செய்தல் – துண்டுதுண்டுகளாக அறுத்துத் தள்ளுதல்.** தலைகள் பத்தும் சின்னபின்னங்கள் செய்யச் செருக்களஞ் சேர்தல் நன்றோ. (யுத் : 930) (சு : 463)

**சின்னபின்னஞ் செய்தல் – கண்டதுண்டமாக்குதல்.** முன்னையர் முறைகெட முடித்த பாவியைச் சின்னபின்னஞ் செய்து என் சினத்தைத் தீர்வெனேல். (அ : 988)

**சின்னபின்னம் படுத்திடுதல் – பல துண்டுகளாகத் தகர்த்தல்.** (கலா) **பலவாறு சிதைத்தல்.** (அன்) மலையினைச் சின்னபின்னம் படுத்தலும் சினவி. (கி : 185)

**சின்னம் – 1. துண்டு.** சின்னம் முறும். (ஆ : 917) தளிர் கைக் கொண்ட சின்னங்கள். (பா : 951)

**2. விடுபூ.** நனை சின்னம். (பா : 986)

**3. அறுபட்ட கந்தை.** சின்ன நுண்டுகில். (அ : 487)

**4. ஓர் ஊது கருவி.** (யுத் : 1269) (அ : 918)

**5. துணிவுற்றது.** கார்முகமும் சின்னமென்றும் தனியென்றும் சிந்தியான். (ஆ : 544)

**சின்னம் முறும் – பல துண்டமாகும்.** அரக்கன் யாக்கை சின்னம் முறும் இப்பொழுதே. (ஆ : 917)

**சின்னமாதல் – சிதைதல்.** இலங்கையின் பரப்பில் சின்னமானவர் கணக்கிலர். (யுத் : 526)

**சின்னமானவர் – தலையறுபட்டவர்.** (வை. மு) **உடல் சிதையப் பெற்றவர்.** சின்னமானவர் கணக்கிலர். (யுத் : 526)

**சின்னமே செய்தல் – துண்டங்களாகப் பிளத்தல்.** (யுத் : 2838)

**சின்னாள் – சிலநாள்.** சின்னாள் நீ இடர்தீராய் இன்னுவைகலின் எல்லோரும் நன்னாள் காணுதல் நன்றன்றோ. (சு : 658)

**சின்னீர் – சிறிது (ஆகிய) நீர்.** பனியுடை வேலைச் சின்னீர் பருகினன் பருதி என்ன. (யுத் : 1257) கூவலின் உயிர்த்த சின்னீர். (ஆ : 724)

**சின்னெறி - 1. சிறியவழி.** *விடரகங்களும் வேய் செறி கானமும் படருஞ் சில்நெறிபயப்பய நீங்கினர்.* **(ஆ: *144*)**

**2. சிறிது தொலைவு.** *(அண்) சின்னெறி இருளிற் சென்றார்.* **(யுத்: *2671*)**

**சினக்கொடுந்திறற் சீற்ற வெந்தீ - கோபமானது விரைந்து மாறிய வலிய வெகுளி என்னும் வெவ்விய கனல்.** *(அ: 1067)*

**சினக் குறும்பு - சினமாகிய பகை.** *சினக் குறும்பெறிந்து.* *(அ: 841)*

**சினக் கொடுந்திறலவன் - சினத்தோடு கொடுமையான வலிமை யுடையவன்; கும்பகருணன்.** **(யுத்: *1496*)**

**சினக் கொடுந்திறற் சீற்ற வெந்தீயினன் - கொடிய வலிமையுடைய மிக்க கோபமாகிய கொடிய தீயையுடையவன்.** *(அ: 1067)* *[பா: பே]*

**சினக் கொடும்படை - சினத்தைக்கொண்ட கொடிய படைகள்.** *வானோர் சினக் கொடும்படை செருக்களத் தென்னை என் செய்த.* *(யுத்: 115)*

**சினஞ் செய்தல் - கோபங்கொள்ளுதல்.** *செய்த வெஞ்சினத்துடன் சிறக்குஞ் செல்வனை வைதது தெழித்தது.* **(யுத்: *3820*)**

**சினத்தயில் - கோபத்தையுடைய வேல்.** *சினத்தயில் கொலைவாள்.* **(பா: *104*)**

**சினத் தீ - கோபத் தீ. வெகுளித் தீ.** *தெரிகின்ற சினத்தீப் பொங்கச் செருச் செய்வான் செருக்கி நின்றார்.* **(கி: *646*)**

**சினத்துழவர் - கோபத்தையுடைய வீரர்.** *அடுசினத் துழவராம் வெங்கதத் தலைவரும்.* **(கி: *817*)**

**சினத்துளார் - கோபத்துக்கு இலக்கானவர்.** *என் சினத்துளார் யாவர் தீர்ந்தார்,* **(யுத்: *1607*)**

**சினந்தமீக்கொள - கோபம் தம்மை விஞ்சி அதிகப்பட** *வனைந்த தாமன்ன மேனியினன் தன்மேல் வாளெயிறு உற ஊன்றிச் சினந்த மீக்கொளக் கடித்தன.* **(யுத்: *218*)**

**சினந்திருகல் (சினந்திருகுதல்) - கோபம் முதிர்தல். கோபத்தால் மாறுபடல்.** *வீரர் யாவரும் பொரு சினந்திருகி வெற்றிப் போர்க்கள மருங்கிற் புக்கார்.* *(யுத்: 2513)* *சேற்றவளை தன் கணவன் அருகிருப்பச் சினந்திருகி.* **(ஆ: *346*)**

**சினப்போர் - சினங்கொண்டு செய்யப்படும் போர்.** *மானுடர் சினப் போர் வென்று.* *(யுத்: 70)*

**சினம் - அகத்தே எழும் கோபம்.** *சினக் கடுந்திறற் சீற்ற வெந்தீயினன்.* **(அ: *1067*)**

**சினம் வீங்குதல் - கோபம் பெருகுதல்.** வெல்வென் மாவிடர் இருவரை எனச் சினம் வீங்க. (யுத் : 1158)

**சினமா - சினம்பூண்ட யானை.** தேருதன மலைநின்றன தெரியாதன சினமா வேருயின அவை யாவையுமுடனே வரவிட்டான். (யுத்: 1824)

**சினமுடித்தல் - சினத்தைத் தீர்த்தல்.** சினமுடித் தமைவென். (யுத் : 2371)

**சினயானை - கோபத்தன்மையுடைய யானை.** பண்ணுறு படர்சினப் பருமயானையான். (அ : 2)

**சினவாள் - கோபத்தோடு (உருவும்) வாள்.** செய்யுமற்றுமிகலென்று சினவாளுருவி. (ஆ : 35)

**சினவி - கோபித்து.** செறுக்கும் வன்றிறல் திரிபுரம் தீயெழச் சினவி. (கி : 153) (கி : 185)

**சினவினர் - கொதித்தெழுந்தோர். சினத்தாற் பொரவந்தவர். பகைவர்.** பொய்யுரைத் துலகினிற் சினவினர் குலமறப் பொருது. (யுத் : 96)

**சினவுண்மை - சினம் உள்ளமை. உண்மைச்சினம்.** சினவுண்மை தெரிந்ததில்லை. (யுத் : 1235)

**சினவு (தல்) - கோபித்தல். வெகுளல்.** வேலிகற் சினவு தாடகை விளிந்துருள விற்கோலி. (கி : 84) வாரணத் துரிவையான் மதனனைச் சினவுநாள். (பா : 343)

**சினவெங்காரேறினர் - வெகுளிமிக்க கொடிய மேகத்தையொத்த யானையினமேல் ஏறியவர்கள்.** (யுத் : 2513)

**சினை - 1. பூக்கிளை.** சினையின் மேலிருந்தான். (பா : 1011)

2. **அரும்பு** கருந்தகைய தண் சினைய கைதை மடல். (கி : 521)

3. **முட்டை.** புள்ளி நாரை சினை பொரியாதவென்று. (கி : 934)

4 **தேகவுறுப்பு. அங்கம். தேகம்.** சினையின் பந்தமும் பகுதிகள் அனைத்தையுஞ் செய்தோன். (யுத் : 4032)

**சினைக் கைமா - துதிக்கையாகிய உறுப்பையுடைய யானை.** தேர்களும் சினைக் கைமாவும். (யுத் : 2115)

**சினையால் - கிளையையுடைய ஆலமரம்.** தின்புனலிற் சினை ஆலின் இலையிற் பிள்ளையெனப் பொலிகின்முன். (யுத் : 232)

**சினையின் பந்தம் - தேகசம்பந்தம்.** (வை. மு) **அண்டப்பரப்பு.** (அன்) **சினை 4. பார்க்க.** (யுத் : 4032)

**சினைவரால் - கருக்கொண்டுள்ள வரால் மீன்.** சினைவரால் பகழி ஆவம் நெற்சினையெனும் செப்பம். (கி : 778)



**சீக்கும் – அகற்றும். அழிக்கும்.** பாய் திரைப் பரவை ஞாலம் படர் இருள் சீக்கும் பண்பின் ஆய்கதிர்க் கடவுள் தேரூர் அருணன். (கி : 998) (கி : 1022)

**சீகரத் திவலை – பனிநீர்ச் செம்பினின்றும் தூவும் நீர்த்துளி.** சீகரத் திவலை உருக்கிய செம்பெனத் தெறிப்ப. (சு : 420)

**சீகரத் தென்றல் – துளிகளுடன் விரவிய தென்றற்காற்று.** மென்பனி நீர் தோய்ந்த சீகரத் தென்றல். (யுத் : 711)

**சீகரம் – 1. சிறு திவலை துளி.** சீகர மகர வேலைக் காவலன் சிந்த. (ஆ : 573) மாரிச் சீகரம். (கி : 534)

2. **பனித்துளி** (கலா) (உ.வி) (ஆ : 573)

3. **குளிர்ச்சி.** சாந்தின் சேறளாவிய சிறு நறுஞ் சீகரத் தென்றல். (சு : 1096)

**சீசி – இகழ்ச்சிக் குறிப்பு.** சீசி யுற்றது வெனத் தீயு நெஞ்சினுன். (யுத் : 1516) சீசி என்று யாரும் எள்ளத் திகைப்பொடு பழுவஞ் சேர்ந்தான். (பா : 674)

**சீத்தல் – நீக்குதல்.** பாருலகெங்கும் பேரிருள் சீக்கும் பகலோன். (கி : 1022)

**சீதங்கொள் வேலை – குளிர்ச்சி பொருந்திய கடல்.** (யுத் : 2197)

**சீதக் கார் - குளிர்ந்த கார்காலம்** அமுதளவிய சீதக் காருறு குறி வானங்காட்டியது அவணெங்கும். (அ : 690)

**சீதச் சந்தனம் - குளிர்ந்த சந்தனக்குழம்பு.** நானச் சாரமுண்டிருந்த சீதச் சந்தனம். (ஆ : 664)

**சீத நீர் – குளிர்ந்த நீர்.** சீத நீர் தெளித்த மென்பூஞ் சேக்கை. (பா : 794) (யுத் : 2856)

**சீதப் பள்ளி – குளிர்ந்த படுக்கை.** யாணர்ப் பளிங்குடைச் சீதப் பள்ளி. (சு : 276)

**சீதப் பனிநீர் – மிகக்குளிர்ந்த பனிநீர்.** சீதப் பனிநீர் அளவித் திண்கால் உக்க மென்கால் போதத்தளவே தவழ. (அ : 334)

**சீதம் – குளிர்ச்சி.** சீதங் கொள் வேலை. (யுத் : 2197) ஓத வேலையின் சீதம் நின்ருர்த்தன. (யுத் : 2762) (யுத் : 216)

**சீதமணி – சந்திர காந்தக்கல்.** பெருங் கோயிற் சீத மணியின் வேதிகைவாய். (பா : 632)

**சீதமணியின் வேதிகை – குளிர்ந்த (சந்திரகாந்த) மணியால் இழைத்த மேடை.** (பா : *632*)

**சீத மதி மண்டலம் – குளிர்ந்த சந்திர மண்டலம்.** *பொலந்தேர் சீத மதி மண்டலமும் ஏனையுலகுந் தன் பாதமென நின்றது படிந்தது விசும்பில்.* (யுத் : *3647*) [பா : பே]

**சீதர மூர்த்தி – திருமால்.** *திருவும் ஆரமும் அணிந்தனன் சீதர மூர்த்தி* (பா : *503*)

**சீதரோதக் குருதித் திரை - குளிர்ச்சியையும் கரையையுமுடைய இரத்தக்கடல்.** *சீதரோதக் குருதித் திரை ஓரீஇ.* (யுத் : *3145*)

**சீதளம் – குளிர்ச்சி.** *மணிக் கற்பகச் சீதளக்கா.* (ஆ : *716*) *சீதளச் சேக்கை.* (ஆ : *721*)

**சீதா – சீதை.** *சீதா பவழக்கொடி யன்னவள்.* (சு : *574*)

**சீதை – உழுபடைச்சால். அதில் தோன்றியவள். சீதாபிராட்டி,** *சீதை யுருவோ நிருதர் தீவினைய தன்றே.* (ஆ : *752*)

**சீதை சீதையென – சீதை சீதையென்று கருதியவண்ணம்.** *உள்ளம் சீதை சீதையென ஆருயிர் தேய.* (யுத் : *813*)

**சீதை நலம் – சீதையின் கன்னிமை அழகு** *இவன் ஏற்றின் நன்று மலர்க்குழற் சீதை நலம் பழுதாகாதென்றான்.* (பா : *773*)

**சீப்ப – ஒழிக்கும் பொருட்டு.** *சேணுற்றிருள் சீப்ப.* (ஆ : *717*) [பா : பே]

**சீப்பன – ஒழிப்பன.** *மணிச்சுடராய் விளக்கம் சேணுற்றிருள் சீப்பன.* (ஆ : *717*)

**சீய்த்தல் - அழித்தல்.** *பாயிருள் சீய்க்கும் தெய்வப் பரிதி.* (யுத்: *607*)

**சீயக்குருளை – சிங்கக்குட்டி. சிங்கம் போன்றவன். அனுமன்** (யுத் : *2094*) *பேணுதற்கரிய சீயக்குருளை.* (பா: *934*) [பா : பே]

**சீயம் – சிங்கம். சீரேட்டம்.** (வை. மு) *குன்றுறழ் தோளினுரை நோக்கிய குரக்குச் சீயம்.* (கி : *78*) *செங்கட் சீயம்.* (யுத் : *257*) (யுத் : *760*)

**சீய மா – சிங்கம். சிங்கமாகிய விலங்குகள்.** *சீய மாவு மீளியும்.* (யுத் : *3337*) (கி : *125*)

**சீர் – 1. சமநிலை.** *ஈசன் நிகராய் உலகு சீர்பெற இருந்தான்.* (ஆ: *157*)

2\. செல்வச்சிறப்பு. *தம்முன் வாழ்ந்தநாள் சீர்க்குறவாய்.* (யுத்: *372*)

**3. சிறப்பு. மேன்மை.** *சீர்த்த வீரியராயுள்ளார்.* (யுத் : 1243) *சீர்த்தவர்.* (யுத் : 2781) *சீரிய அல்ல சொல்லித் தலை பத்தும் சிந்துவாயோ.* (சு : 446) *சீரிற் செல்கின்றதில்லை இச்செரு.* (யுத் : 1178)

**4. அலங்காரம்.** *சென்றுதா நமதேவியைச் சீரொடும்.* (யுத்: 3957)

**5. செல்வம்.** *தம்முன் வாழ்ந்தநாட் சீர்க்குறவாய்.* (யுத் : 372)

**6. இயல்பு.** *நாசியிழந்து பதைக்கும் திண்டிறலாளொடு தாடகை சீராள்.* (ஆ : 1086)

**சீர்க்குறவாய் – செல்வத்தை அனுபவிப்பதற்கு வேண்டிய உறவுபூண்டு.** (யுத் : 372)

**சீர்த்த – சிறப்புப் பொருந்திய.** *சீர்த்த வீரியர்.* (யுத் : 1243)

**சீர்த்தது – சிறப்புடையது.** *யாவது எப்பொருள் இம்மையும் அம்மையும் தேவரைப் பரவுந்துணை சீர்த்ததே.* (அ : 107)

**சீர்த்தல் – நிறைதல்.** *காயுங் கனிகளும் பிறவுஞ் சீர்த்துக் கானகம் பொலிதலாலே.* (யுத் : 4230)

**சீர்த்தவர் – சிறந்த குணமுடையோர்.** *மேலாஞ் சீர்த்தவர் செய்யத் தக்க கருமமே செய்தார்.* (யுத் : 2718)

**சீர்த்தி – 1. (மிகு) புகழ். பெரும்புகழ்.** *ஓங்கி ஓங்கி வளர்ந்துயர் சீர்த்தியின் பூங்கொழுந்து.* (பா : 1197) *முனிக்கணங்கள் ஓதினர் சீர்த்தி.* (யுத் : 205)

**2. பெருமை.** *சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்.* (அ : 1024)

**சீர்ப்பு – வலிமைச் சிறப்பு.** *அரக்கர் தம் சீர்ப்பைச் சிக்கறத் தேறினன்.* (ஆ : 224)

**சீர்மகள் – சிறப்புடைய மகள்.** *சீர்மகளைத் திருமகளை.* (யுத் : 3893)

**சீர்மேற் படர்தல் – நல்லதை மேற்கொண்ட செய்கை.** *நெடுங்குன்று நிமிர்ந்து நிற்றல் சீர்மேற் படராது.* (சு : 53)

**சீர்மை – சிறந்த ஒழுக்கம்.** *அத்தேவரிற் சீரியன்.* (கி : 595)

**சீரங் கொடுத்தவள் – மரவுரியை அளித்த கைகேசி.** *என் அன்பன் உடுக்க நெடுஞ் சீரம் அன்று கொடுத்தவள் மைந்தர்.* (அ : 1013) [பா : பே]

**சீரணி – சிறந்த அலங்காரங்கள்.** *சீரணி யணிகெனச் செப்புவாய்.* (யுத் : 4183)

**சீரணி சோழநாடு – சிறப்புமிக்க சோழநாடு.** *சீரணி சோழ நாட்டுத் திருவழுந்தூருள் வாழ்வோன்.* (பாயி : 1)

**சீரம் - மரவுரி.** *திராமனத்தாள் தரவந்தன சீரம் என்றார்.* (அ : 440) (அ : 521)

**சீரிது - பெருமை வாய்ந்தது.** *சீரிது மேலிம் மாற்றம் தெரிவுறக் கேண்மின்.* (யுத் : 412)

**சீரிய - சிறந்த. மேம்பாடளிக்கும்.** (யுத் : 425)

**சீரிய கூரிய தீஞ்சொல் - சிறந்த நுணுக்கமான இனிய சொல்.** *செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூறிய தீஞ்சொல் வவ்விய கவிஞர்.* (பா : 93)

**சீரிய தன்மை - மேம்பாடளிக்கும் பண்பு.** *சீரிய தன்மை நோக்கின் இதனின் மேற் சிறந்ததுண்டோ.* (யுத் : 425)

**சீரியரல்லார் - சிறப்பில்லாதவர். (அரக்கர்)** *சீரியல்லார் மாட்டுச் சேர்கிலென்.* (ஆ : 267)

**சீரியன் - தலைசிறந்தவன்.** *திங்கிழைப்பார்கட் கெல்லாம் சீரியன்.* (யுத் : 2136)

**சீரியோர் - பெரியோர்.** (யுத் : 2734)

**சீரிற்செல்லல் - சிறப்பாக இருத்தல். ஒத்த நிலையில் நிகழ்தல்.** (அண்) *சீரிற் செல்கின்றதில்லை இச்செரு.* (யுத் : 1178)

**சீரிற்று - சிறந்த செயல்.** *பேரறிவாள சீரிற்று அறிதியே.* (யுத்: 1260)

**சீரை - மரவுரி. ஆடை.** *கடுங்கனலுட் பொதி சீரைஞ்ஞூறவை சேமஞ் செலுத்துமோ.* (சு : 1144) *நெடுஞ்சீரை அன்று கொடுத்தவள்.* (அ : 1013)

**சீரை சாத்துதல் - மரவுரியைத் தரித்தல்.** *எந்தலும் தன்னுடைத் திருவரைச் சீரை சாத்தினன்.* (அ : 985) *சீரையைத் தம்பி சாத்திட.* (அ : 446)

**சீரை சுற்றுதல் - மரவுரி உடுத்தல்.** *சீரை சுற்றித் திருமகள் பின் செல.* (அ : 527)

**சீலச் சேனை - வீர ஒழுக்கமுள்ள சேனை.** *இனித் தக்க சீலச் சேனையும் சேனையின் செய்கையுந் தெரிக்கில்.* (யுத் : 3250)

**சீலம் - மேலோர் ஒழுக்கம். நல்லொழுக்கம்.** *மேலோர் சீலமும் புகழ்க்கு வேண்டுஞ் செய்கையும்.* (அ : 8)

**சீலம் தருந் திரு - நல்லொழுக்கங்கள் விளைக்கின்ற ஐசுவரியம்.** *சீலமும் அவை தருந் திருவுமா யுளான்.* (யுத் : 204)

**சீலம் பார்க்குரியோர்கள் - சீலத்தைப் பார்க்க உரியோர்கள். விகாரம்.** *சீலம் பார்க்குரியோர்கள் என்னுறு செய்பவோ.* (சு : 317)

**சீல மங்கையர் – ஒழுக்கத்திற் சிறந்த மங்கைப்பருவத்து நங்கையர்.** *சீல மங்கையர் வாயென.* **(கி : 762)**

**சீற்றக் கனல் – கோபக்கனல்.** *மின்னெனத்த சீற்றக் கனல்விட்டு விளங்க நின்ற பொன்னெனத்த மேனி.* **(அ : 419)**

**சீற்றச் சேனை – கோபத்தையுடைய வானரப்படை. (யுத் : 2228)**

**சீற்றஞ் செய்தல் – கோபங்கொள்ளுதல்.** *அதற்கவன் சீற்றஞ் செய்தான்.* **(யுத் : 3595)**

**சீற்றத் தீ – கோபத் தீ.** *சீற்றத்தீப் பிறக்க.* **(யுத் : B 844)** *சீற்றத் தீ கன்று கண்ணின் வழிச் சுடர் கான்றிட.* **(யுத் : 1048)**

**சீற்றந் தீர்தல் – சினம் நீங்குதல்.** *அனையவர் சீற்றந் தீர்வர்.*

**சீற்றம் - 1. சீற்றத்திற்குக் காரணமான தீங்கு.** *புகன்ற சீற்றத்தாற் கொன்றிலை போலும்.* **(ஆ : 1127)**

**2. கோபம். மனத்தினுள்ளே தோன்றும் நிலையில் சினம் என்றும் புறத்தே தோன்றும்போது சீற்றமென்றும் கொள்ளப்படும்.** *சினக் கடுந்திறற் சீற்ற வெந்தீயினன்.* **(அ : 1067)** *சீற்றஞ் செய்தான்.* **(யுத் : 3595)**

**சீற்றம் மாற்றுதல் – கோபம் நீங்குதல்.** *மதம் புலர் களிறெனச் சீற்றம் மாற்றினர்.* **(யுத் : 2957)**

**சீற்றம் வைத்தல் – கோபங்கொள்ளுதல்.** *மானுடர் வலியர் என்ன மாற்றத்தாற் சீற்றம் வைத்தான்.* **(ஆ : 872)**

**சீற்றமா மபிநயம் – வெகுளியாகிய அபிநயம்.** *சீற்றமாம் அபிநயந் தெரிக்கின்றாரினே.* **(பா : 1067)**

**சீற்றமும் தானும் நின்றான் – கோபமே இவன் என்னும்படி நின்றான்.** *சீற்றமுந் தானு நின்றான் பெயர்ந்திலன் சிறிதும் பாதம்.* **(யுத்: 1118) (யுத் : 1406)**

**சீற்றமெடுத்தல் – கோபம் மிகுதல்.** *அண்ணலோடு உடற்றவே கோலாம் இப்படை எடுத்ததென்று எடுத்த சீற்றத்தான்.* **(அ : 998)**

**சீற்ற வெந்தீ – கோபமாகிய கொடிய நெருப்பு. (சு : 568)**

**சீறடி – சிறிய அடி.** *தாமரைச் சீறடி.* **(பா : 850)** *சிற்றிடை நுடங்க ஒளிர் சீறடி பெயர்ந்தாள்.* **(பா : 1228) (யுத் : 2315)** *பஞ்சளாவிய சீறடிச் சுவடுகள் பாராய்.* **(அ : 756)** *சீறடியளாகி.* **(ஆ : 253)**

**சீறடிப்பூ – சிறிய பாதமலர்.** *சீறடிப் பூமுக நெடுநிலம் புல்லி.* **(ஆ: 824)**

**சீறிய – சினந்த. வென்ற.** *தாமரை சீறிய கைகளால் தொழுது.* **(அ : 1190)**

**சீறு கோளரியன்னான் - சீறுகின்ற வலிய ஆண்சிங்கம் போன்ற இராவணன்.** (யுத் : 3405)

**சீறுதல் - 1. விரோதித்தல்.** அறமுஞ் சீறுமால். (யுத் : 382)

**2. வெகுளல்.** சீறிய நெஞ்சினர் செங்கணர். (யுத் : 2268) சீறுவாயலலை. (கி : 619) இவட் சீறிநின்று இது செப்புகின் றேனலேன். (பா : 407) சீறினாள். (பா : 1074) தாமரை சீறிய கைகள். (அ : 1190)

**3. பிளத்தல்.** நொய்தவன் கவசஞ் சீறி நுழைவன பிழைப்பிலாத. (யுத் : 1870)

**சீறு நூல் - கோபித்துப் போர்செய்யும் தொழிலைப்பற்றிய சாஸ்திரம். நூலையறிந்து போர்செய்வோர் கோபம் நூல்மேல் ஏற்றப்பட்டது. உபசார வழக்கு.** சீறு நூல் தெரிந்த சிந்தை இலக்குவன். (யுத் : 2069)

**சீறூர் - சிற்றூர்.** எயினர் வாழ் சீறூர். (பா : 25)

**சீனர் - சீனர்.** பப்பரர் எயினர் சீனர். (பா : 662)

## சு

**சு - அழகிய.** அஞ்சுவணத்தின் (அம்சுவண்ணத்தின்) முத்தொளிர் ஆரம். (சு : 174)

**சுக்கிரீவன் - வாலியின் தம்பி. சூரியன் மகன்.** கவிக்குல மவற்றுக் கெல்லாம் நாயகன் சுக்கிரீவன் என்றுளன் நவையிற் றீர்ந்தான். (சு : 518)

**சுகம் - இன்பந்தருந் தொழில்.** சுகம் பல்போரால் வேறிலன். (யுத் : 494)

**சுகன் - இராவணன் ஒற்றன்.** இராவணன் தந்த ஒற்றன் சுகன் இவன் அவனும் சாரன் என்பதுந் தெரிபச் சொன்னான் (யுத் : 719)

**சிகிர்த்தல் - வகைப்படுத்தல். சிக்குவிடுத்தல்.** வேணியை அரம்பை மெல்ல வரன்முறை சுகிர்த்து விட்டார். (யுத் : 3963)

**சுகிர்தல் - கிழித்தல்.** வன்றோல் சுகிர்படுத்துரிக்கும். (யுத் : 268)

**சுகேது - இயக்கர் குலத்துளான். சரற்சரன் என்பவன் மகன்.** சரன் எனும் வலத்தினான் அருள் துயக்கிலன் சுகேது என்றுளன். (பா : 367)

**சுசேடணன் - வானரப் படைத்தலைவன்.** தோன்றினான் வந்து சுசேடணன் என்னுந் தோன்றல். (கி : 706)

**சுட்டி – நெற்றிச்சுட்டி.** கொழுந்து சேர் நுதற் கோதறு சுட்டி. (பா : 711)

**சுட்டிய வலி – பெருமைபெற்ற வலிமை.** சுட்டிய வலியினுலே கோறலைத் துணிந்து நின்ருன். (யுத் : 3078)

**சுட்டிய – சுடும்படி.** சுட்டிய நிமிர்ந்த சுடர்ச் சுடரும். (யுத் : 3451)

**சுட்டுண்டாய் - சுட்டாய். (உண் — துணைவினை) எரித்துவிட்டாய்.** எதிர்ந்துளோர் இருக்கை யெல்லாம் சுட்டுண்டாய். (யுத் : 1616)

**சுட்டுதல் – 1. நினைத்தல்.** சுட்டினன் நின்றனன் தொழுதகையினன். (சு : 588)

**2. ஆராய்ந்தறிதல்.** (வை. மு) (அ : 611)

**3. கெடுத்தல்.** (அண்) **அழித்தல்.** (கலா) உணர்வைச் சுட்டுச் சேர்தல் ஆற்றுமோ. (அ : 611)

**சுடர் – 1. ஒளி.** துப்புறழும் நீர்த்த சுடர்த் திருவடி. (ஆ : 61)

**2. சூரியன்.** விசும்பினாருஞ் சுடரையு மறைத்த. (அ : 260)

**3. சூரிய சந்திரர்கள் சஞ்சரிக்குமிடம். வானவீதி.** சூழுமா மதிலது சுடர்க்கு மேலதால். (யுத் : 479)

**4. தீ.** சுடர் சுட. (யுத் : 3429)

**5. பொறி.** கண்ணின் வழிச்சுடர் கான்றிட. (யுத் : 1048)

**சுடர் ஐந்து – பஞ்சாக்கினி. நான்கு திசையில் நான்கு அக்கினியும் மேலே சூரியனும் என்பவை.** அருங் காணம் ஐந்து சுடர். (யுத்: 3654)

**சுடர்க்கடவுள் – அக்கினி தேவன்.** எரிசுடர்க் கடவுளும் கருதின்வேம் உள்ளமும். (பா : 346)

**சுடர்க்கணை – ஒளியுடைய அம்புகள்** திரிவன சுடர்க்கணை திசைக்கை யானைகள் வெருவரச் செய்வன காண்டி வீர நீ. (அ : 1097) அங்கொர் சுடர்க் கணையால். (யுத் : 2337)

**சுடர்க்கனல் – சுழன்று (கொழுந்துவிட்டு) எரிகின்ற நெருப்பு.** சுட்டதில்லை நின் தோன்றலைச் சுடர்க்கனல். (யுத் : 217)

**சுடர்கள் – சூரிய சந்திரர்.** தாரகை சுடர்கள் மேகம் என்றிவை தவிர. (சு : 9)

**சுடர்ச் சிகை – கதிர்களின் கொழுந்து.** திக்கெலாந் தெரிப்புறு செறி சுடர்ச் சிகையினுல் திசை விரித்தனன் என விளங்குவான் தனை. (ஆ : 178)

**சுடர்த் தடங்கல் வரை – ஒளிவாய்ந்த பெரிய கற்களையுடைய மலை.** (யுத் : 2015)

**சுடர் தருதல் – ஒளிவிடுதல்** ஏலமுந் தமாலமும் சுடர் தரு சாரல். (அ : 738)

**சுடர்தல் – விளங்குதல்.** சுடர்க் குதிரையின் வாய் முகத்திடை நிமிர்ந்து வடவேலை பருகுந் தீ முகத் திரிசிகைப்படை. (ஆ : 26)

**சுடர் நெடு நேமி – ஒளிமிக்க பெரிய ஆணைச் சக்கரம்.** சூரியன் மரபிற் றோன்றிச் சுடர் நெடு நேமி யாண்ட ஆரியன். (கி : 69)

**சுடர் நேமி – திருமால்.** சூர் அறுத்தவனும் சுடர் நேமியும். (ஆ: 139)

**சுடர்ப் படலை – சுவாலையின் தொகுதி.** எழு சுடர்ப் படலையொடும் இரும்புகை எழும்பி. (யுத் : 598)

**சுடர்ப்படை – ஒளியுள்ள ஆயுதம்.** தொடுவனே குரங்கைச் சீறிச் சுடர்ப்படை என்று. (யுத் : 949)

**சுடர் மணிக் கடல் – விளக்கமுள்ள இரத்தினாகாரமான கடல்.** சொற்கலை முனிவனுண்ட சுடர் மணிக் கடலும். (பா : 569)

**சுடர் மழு – பழுக்கக் காய்ச்சிய இரும்பு; கோடாலி.** சூலம் சுடர் மழுக்குலிசம். (சு : 940)

**சுடர் முகம் – ஒளிசிறந்த முகம்** மிடலுடைக் கொடிய வேலே யென்ன வாள் மிளர்வ என்னச் சுடர் முகத் துலாவு கண்ணாள். (பா : 1029)

**சுடர் வலயம் – (சூரியனது) ஒளிவட்டம்.** இரவி சுடர் வலயம் மாறுபட. (யுத் : 3421)

**சுடர் வாய் வாளி – ஒளியோடு கூடிய நுனியையுடைய அம்பு.** சுடர் வாய் வாளி தாங்கிய வலங்கையவர். (ஆ : 21)

**சுடர்விடு கவசம் – ஒளிவிடுகின்ற கவசம்.** சுடர்விடு கவசஞ் சூழ நீளநீள் பவளவல்லி நிரையொளி நிமிர்வவென்ன வாளிவாய் தொறும் வந்து வடிந்தன குருதிவாரி. (யுத் : 2070)

**சுடருறு வடிவேல் – ஒளி பொருந்திய கூரிய வேற்படை.** சுடருறு வடிவேலாய் சொன்முறை கடவேல். (அ : 687)

**சுடரெனப்புகர் எஃகு – ஒளியுடைய எஃகுப் பகுதிகள்.** எல்லுடைச் சுடரெனப் புகரெஃகெல்லாம் உருக. (சு : 1217)

**சுடரைத் தூண்டு கண்ணன் – கோபாக்கினியானது தீப்பொறியைக் கக்கச் செய்கின்ற கண்ணையுடைவன்.** (வை. மு) **சூரியனுக்கு நெருப்புக் கொடுக்குங் கண்ணையுடையவன்.** (கலா) **சூரியனாகிய சுடரைத் தன் சினப்பொறியாகிய சுடரால் தூண்டுகின்ற கண்ணை யுடையவன்.** (அன்) (யுத் : 1957)

**சுடரோன் – 1. சூரியன்** கடற்குனை புடைசூழச் சுடரோன் என்ன ஏகி. (பா : 237) சுடரோனைக் காணவந்த கட்செவி யென்னக் கனல் கண்ணள். (சு : 170)

**2. தழல் வண்ணனாகிய சிவன்.** இனிச்செயல் பணித்தி சுடரோய். (யுத் : 3408)

**சுடரோன் மகன் – சூரிய குலத்துத் தோன்றிய இராமபிரான்.** அரக்கர் கோன் உரஞ்சுடச் சுடரோன் மகன் உந்தினன். (யுத் : 3861) (யுத் : 1922)

**சுடல் – 1. காரம். சூடுபோடுதல்.** அதன் உதிரமூற்றிச் சுடலுறச் சுட்டு வேறோர் மருந்தினால் துயரந் தீர்வர். (யுத் : 1364)

**2. சுடாதே.** கற்பினால் தாயேனென்னிற் றொழுகின்றேன் எரியே அவனைச் சுடலென்றான். (சு : 1169)

**சுடலை – நன்காடு.** இருளிடைச் சுடலையாடும் எண்புயத் தண்ணல். (யுத் : 2540)

**சுடிகை – சுட்டி. நுதலணி. நெற்றிச்சுட்டி.** சுடிகைப் பூங்கமல மன்ன சுடர்மணி முகத்தினர். (பா : 945)

**சுடுகணை – சுட்டெரிக்கும் இயல்புள்ள அம்புகள். காயும் கணை.** சோனை மாரியிற் சுடுகணை பலமுறை துரந்தான். (யுத் : 508) (அ : 654) (யுத் : 2048)

**சுடுகளம் – மயானம்.** பேயிருங் கணங்களோடும் சுடுகளத் துறையும் பெற்றி ஏயவன் தோள்கள் எட்டும். (யுத் : 1242)

**சுடு சரம் – சுட்டு வருத்தும் அம்பு.** எரியின் மும்மடி கொடியன சுடு சரமெய்தான். (யுத் : 552)

**சுடு சரமனைய சொல் – அம்பு போன்ற சுடுசொல்.** தூயவன் அவனை நின்கைச் சுடு சரமனைய சொல்லால்...... ஏயினன். (பா : 555)

**சுடு சினம் - தீப்போலும் கொடிய சினம்.** துந்துபிப் பெயருடைச் சுடு சினத்தவுணன். (கி : 181)

**சுடு சுரம் – சுடுகின்ற பாலைவனம்.** பரிதி மண்டில மகன் குன்றினின்றி வர ஓர் சுடு சரங்குறுகினர். (பா : 345)

**சுடுதல் – 1. வருத்துதல். அராவுதல். தாக்குதல். வருத்திக் கூர் செய்தல்.** அரஞ் சுட அழல்பிமிர் அலங்கல் வேலினய். (அ : 1106) அரஞ் சுடச்சுடர் நெஞ்சன் அரக்கர் கோன். (யுத் : 3861) அரஞ் சுடு குலிசவேல். (யுத் : 3430) (பா : 186)

**2. கெடுத்தல்.** உணர்வைச் சுட்டுச் சேர்தலாற்றுமோ. (அ : 611) வரஞ்சுடும். (யுத் : 3430)

3. தண்டித்தல். தீயன வந்தபோது சுடுதியால் தீமையோரை. (கி : 423)

4. தகர்த்தல். அரக்கர் உரஞ்சுட. (யுத் : 3861)

5. ஒழித்தல். பையுள் நோய் சுட்டவன்.

6. எரித்தல். புரஞ் சுடு கடவுளும். (யுத் : 3430)

7. வலியழித்தல். உரஞ் சுடுகிற்கிலர். (யுத் : 3430)

8. அழித்தல். வலி சுடும் வாழுநாள் சுடும். (யுத் : 3430)

9. போக்குதல். வாழுநாள் சுடும். (யுத் : 3430)

10. ஒழித்தல். பையுள் நோய் சுட்டவன் மானவன். (யுத் : 4247)

சுடுதியை – சுடுகின்ற தீயை. சுடுதியைத் துகிலிடைப் பொதிந்து. (யுத் : 353)

சுடு தீ – சுடும் இயல்பினதாகிய தீ. குளிர்ந்தது சுடு தீயே. (யுத்: 215)

சுடு தொழில் – வருத்துந் தொழில். சுடு தொழில் அரக்கர். (பா: 186)

சுடுவித்தல் – சுடுமாறு செய்தல். தோற்பித்தீர் மதிக்கு மேனி சுடுவித்தீர். (யுத் : 1592)

சுடேணன் – ஒரு வானர வீரன். சதவலி சுடேணன் வினதன். (யுத் : 2571)

சுண்டுதல் – குறைதல். இறந்துபோதல். வானீர் சுண்டி மண்ணற வற்றி மறுகுற்ற மீனே என்ன. (அ : 594)

சுண்ண நுண்பொடி – சூர்ணமான நுண்ணிய பொடி. கிரிக்குலம்...... சுண்ண நுண்பொடியாகித் தொலைந்தன. (யுத் : 663)

சுண்ணம் – 1. வாசனைப்பொடி. சுண்ணமக் குழிகளைத் தொடர்ந்து தூர்ப்பன. (பா : 136)

2. புழுதி. தேரோட நீராகிச் சுண்ண நிறைந்த தெருவெல்லாம். (அ : 397)

3 மலரிலுள்ள நறுமணப் பொடி. வாசக் கணங்கிளர் தரு சுண்ணங் கல்லிடையன. (அ : 704)

சுணங்கு - தேமல். உன் அணி வட முலைமுன்றிற் சுணங்கின மவை மானத்துறுவன பல காணாய். (அ : 704)

சுதீக்கணன் – ஒரு முனிவன். சுடரும் மேனிச் சுதிக்கணன் என்னும் அவ்விடரிலானுறை சோலை சென்றெய்தினர். (ஆ : 144)

சுதை – அமுதம். சுதை புரை நுரை. (பா : 76)

2. பால். சுதைக்கண் நுரையைப் பொருவு தூசு. (பா : 913)

3. **சுண்ணாம்பு.** (கலா) *சங்க வெண் சுதையுடைத் தவள மாளிகை.* (பா : 119)

4. **வெண் சாந்து. சுண்ணச் சாந்து. சுண்ணக் குழம்பு.** *மிகு வெண்ணிலவாம் வெண் சுதையால்.* (பா : 637)

5. **காசிபன் மனைவி.** *மருட்டிஎழும் ஒருதலைய புயங்கமெலாம் சுதையென்னும் மாது தந்தாள்.* (ஆ : 204)

**சுதைத்தலன் – சுண்ணாம்பு தீற்றிய இடம்.** *சுதைத் தலனிடைக் கடிதடிக்கொடு துகைத்தான்.* (யுத் : 850)

**சுதை தரு மொழியன் - அமுதம்போலும் இன்சொற்களுடையவன்.** *கோமகன் அம்பரீடன் சுதை தரு மொழியன்.* (பா : 683)

**சுதையம் – நட்சத்திரம். வெண்ணிறம்.** (அண்) **நட்சத்திர மண்டலம்.** *சுதையத் தோங்கிய சுவேலம்.* (யுத் : 843)

**சுந்தரக்கண் – அழகிய கண்கள்.** *சேயரிப் பெரும் சுந்தரக்கண்களை எற்றித் துள்ளி.* (யுத் : 4002)

**சுந்தரக் குரிசல் – அழகிய தோற்றமுடைய குரிசில். பரதன்.** *அறிஞர் யாவரும் சுந்தரக் குரிசிலை மரபிற் சுற்றினர்.* (அ : 935)

**சுந்தரத்தனு – அழகிய வில்** *சுந்தரத் தனுவலாய் சொல்லு நீ என்ருன்.* (கி : 545)

**சுந்தரப் பவளவாய் – அழகிய பவளம்போன்ற வாய்** *யானிவன் பணியினிற்பன் சுந்தரப் பவள வாயாலொருமொழி சிறிது சொல்லின்.* (யுத் : 1633)

**சுந்தரப் பொற்ருேளான் – அழகிய பொன் ஆபரணங்களைப் பூண்ட தோளையுடைய இராமபிரான்.** (யுத் : 1573)

**சுந்தரம் - அழகு.** *சுந்தரப் பொற்ருேளான்.* (யுத் : 1573) *சுந்தரக் குமுதச் செவ்வாய்.* (யுத் : 1597)

**சுந்தர மகளிர் – அழகிய (தேவ) மாதர்.** *சுந்தர மகளிர் அங்கை சாமரை தென்றல் தூவ.* (யுத் : 2707)

**சுந்தர வதனம் – அழகிய முகம்.** *சுந்தர வதனமும் மதிக்குத் தோற்றவே.* (அ : 471)

**சுந்தர வரிவிலான் – அழகிய கட்டமைந்த வில்லையுடையவன். பரதன்.** *சுந்தர வரிவிலானும் சுமந்திரன் தன்னை நோக்கி.* (அ: 1039)

**சுந்தரவில்லி - அழகிய கோதண்டபாணியாகிய இராமபிரான்.** *இந்திரன் முதலிய அமரர் ஈண்டினர் சுந்தரவில்லியைத் தொழுது வாழ்த்தினர்.* (பா : 473)

**சுந்தரன் - அழகன். அழகனான கணவன்.** பந்தணி விரலினாள் ஒருத்தி பையுளாள் சுந்தரன் ஒருவன்பால் தூது போக்கினாள். (பா : 1080)

**சுந்தரி - 1. தேவமாதர்.** (வை.மு) (அன்) **இந்திராணி** (கலா) இந்திரனும் மலரயனும் இமையவரும் பணிகேட்பச் சுந்தரி பல்லாண் டிசைப்ப. (ஆ : 332)

**2 அழகுடையவள்.** சுந்தரி மரபிற் கொத்த தொன்மையின் துணிவிற்றன்றால். (ஆ : 273)

**சுந்தரியர் - மகளிர்.** மற்றும் சுற்றச் சுந்தரியர் எனைப்பலரும் கை தலையிற் பெய்திரங்கித் தொடர்ந்து சொல்ல. (யுத் : 4147)

**சுந்தன் - தாடகையின் கணவன்.** தன்னை நாயகன் சுந்தன் என்ப வற்கு நல்கினான். (பா : 371)

**சுந்தோப சுந்தர் - சுந்தன் உபசுந்தன் என்றும் இருசகோதரர்கள்.** திலோத்தமை காதல் செற்ற சுந்தோப சுந்தப்பெயர் தொல்லையினோரு மொத்தார். (கி : 276)

**சுபாகு - தாடகையின் இரண்டாவது மகன்.** விறல் மற்பொரு சுபாகு. (பா : 373)

**சுபாரிசன் - அரக்க வீரன்.** நின்றிலர் ஓடினார் பொற்குலாவு சுபாரிசன் பொன்றவே. (யுத் : 1042)

**சும்புளித்தல் - கூசுதல்.** காவலர் கண்ணொடும் சுமந்த நாகமும் கண் சும்புளித்தவே. (பா : 695)

**சும்மை - 1. சுமை என்பதன் விகாரம். தொகுதி. கூட்டம்.** சொரிகின்ற சுடரின் சும்மை விசும்புற. (யுத் : 789) (யுத் : 368)

**2. ஒலி.** (கலா) பல்லியந் துவைக்கும் சும்மையின் விளையொலி கடலொலி மெலிய விம்மமே. (பா : 152)

**3. கூட்டம்.** தோகையர் குழாமும் மைந்தர் சும்மையும் துவன்றி. (அ : 253)

**4. திரட்சி.** சொற்பங்கமுற நிமிர் இசையின் சும்மையை. (ஆ: 184)

**5. நாடு. தொகுதி.** (அண்) வரம்பறு சும்மையர் தலை மயங்கினார். (சு : 1058)

**6. பழிக்கத்தக்க செயல்.** வேறொரு சும்மையான் உயிர்கொளத் துணிதலாலன்று. (யுத் : 368)

**சுமடர் - துஷ்டர்.** சுமடரைக் கொல்வரென்றும். (கி : 936)

**சுமத்தல் - தாங்கிக்கொள்ளல்.** பாழிவன் தடந்திசை சுமந்தோங்கிய பணைக்கை பூழைவன் கரி. (யுத் : 133)

**சுமதி - கருடன் தங்கை சகரன் இரண்டாம் மனைவி. சகர புத்திரர் அறுபதினாயிரவரைப் பெற்றவள்.** *பறவை வேந்தனுக் கிளைய மென் சுமதி முற்பயந்த அறனின் மைந்தர்கள் அறுபதினாயிரவர் வலத்தார்.* (பா : 511)

**சுமந்திரன் - தசரதன் அமைச்சன்** *சுமந்திரனே முதல்வராய வன்றிறல் சேர் அமைச்சரொடு.* (பா : 236)

**சுமாலி - இராவணனின் தாயாகிய கேகசி என்பவளுடைய தகப்பன். சுகேசன் எனனும் அரக்கனுக்கு மகன்.** *நீங்கினர் சுமாலியை நேர்ந்து.* (பா : 381)

**சுமாலி சேய் - பிரகத்தன்.** *துன்படைத்த மனத்தன் சுமாலி சேய்...... வன்படைத்த வரிசிலை வாங்கினான்.* (யுத் : 1030)

**சுமித்திரை - தசரதன் மூன்றாம் மனைவி.** *எம்மோய் சுமித்திரை உய்ய ஈன்ற நன்மகன்.* (யுத் : 1625)

**சுமித்திரை சிங்கம் - சுமித்திரையின் சிங்கம்போன்ற புதல்வனான இலக்குவன்.** *சென்று தாக்கினன் ஒரு தனிச் சுமித்திரை சிங்கம்.* (யுத் : 1426) (ஆ : 990)

**சுமை - பாரம் -** *சுமையுடைக் காம வெந்நோய்.* (யுத் : 1631) *சுமையொடுஞ் சூடுண்டாற்ற.* (யுத் : 1621) (யுத் : 3211)

**சுமையுடற் பொறை - பூமிக்குப் பெருஞ்சுமையான உடற்பாரம்.** *சுமையுடற் பொறை சுமக்க வந்தனன் எனச்சொன்னான்.* (யுத்: 2588)

**சுமையுடைக் கற்றை - பாரமான குழற்றொகுதி.** *சுமையுடைக் கற்றை நிலத்திடைக் கிடந்த.* (சு : 339)

**சுமையுறு செல்வம் - மிகுதி பொருந்திய செல்வம்.** *சுமையுறு செல்வத்தோடுந் தோன்றலை.* (ஆ : 266)

**சுயம் பிரபை - பிலநகரில் வானர வீரர் கண்ட தவமூதாட்டி.** *அன்னது சுயம்பிரபை கூற.* (கி : 883)

**சுரசை - தக்கன் மகள். காசிபன் மனைவி. அரக்கி உருவாகி அனுமனைத் தடைசெய்தவள்.** *அரக்கியாகித் தோன்றுற்று நின்றாள் சுரசைப் பெயர் சிந்தை தூயாள்.* (சு : 66)

**சுரத்தல் - கொள்ளக் குறைபடாது ஊறுதல். பெருகுதல்.** *பெறுதற் கரிய தங்குலஞ் சுரக்கும் ஒழுக்கங் குடிக்கெலாம்.* (பா : 69) *நெல்லெலாம் சுரந்துதவு நீர் நாட.* (ஆ : 362) [பா : பே] *நிலஞ்சுரந் தெழும் வென்றி.* (யுத் : 2558)

**சுரத நூல் - காம சாஸ்திரம்.** *சுரத நூல் தெரி விடரெனத் தேன் கொண்டு தொகுப்ப.* (கி : 481)

**சுரந்தளித்தல் – விளைவித்துக் கொடுத்தல்.** நெல்லெலாம் சுரந்தளிக்கும் நீர் நாட. (ஆ : 362)

**சுரந்துதவுதல் – மிகுதியாக விளைந்தளித்தல்.** (கலா) நெல்லெலாம் சுரந்துதவு நீர் நாட. (ஆ : 362) [பா : பே]

**சுரநதி - தேவகங்கை.** சுரநதியின் அயலது. (கி : 767)

**சுரபி – 1. காமதேனு** சுரபி வாம்பரி மதமலை முதலிய. (பா : 495) [பா : பே]

**2. பசு.** அருந்தவன் சுரபியே ஆதி வானமாய். (சு: 151) [பா: பே] (யுத் : 4335)

**3. காசிபன் மனைவி.** சுரபி என்பாள் தேனுவுடன் சராசர மற்றுளவாய பிற பயந்தாள். (ஆ : 202)

**சுரம் – 1. பாலைவனம்.** நெடுஞ் சுரத் தென்று போவ தெனு எழும். (அ : 307)

**2. காடு.** பனிக்கற் சுரத்து. (சு : 544)

**சுரர் – தேவர். அமுதமாகிய உணவினர்.** சுராசுரர். (பா : 498) (யுத் : 1557)

**சுரர்க் கிறைவன் – தேவர்கட்குத் தலைவனான இந்திரன்.** சுரர்க் கிறைவன் ஈந்துள இது என்றான். (யுத் : 3663)

**சுரர்க்கு வேந்து - இந்திரன்.**

**சுரர் நாடீந்தான் – தேவலோகத்தை இந்திரனுக்களித்த தசரதன்.** இனிது வந்தான் சுரர் நாடீந்தான். (பா : 241)

**சுரருலகு – தேவர் உலகம்.** சுரருலகின் மகளிர். (யுத் : 3414)

**சுரன் - பாலைவனம்.** அஞ்சுவரும் வெஞ்சுரனும். (கி : 768)

**சுராசுரர் – தேவர்களும் அசுரர்களும்.** சுராசுரர் வேறு வேறுள்ளார் கொத்திரண்டு பால் வலிப்பவர். (பா : 498) (பா : 502)

**சுரி குழல் – சுடைகுழன்ற கூந்தல். சுருண்ட கூந்தல்.** தொத்துறு தொழின் மாலை சுரி குழலணிவாரும். (பா : 1280) உதவுந் தோடி வர்ந்த தார் சுரி குழலாள் தனைக்கானான். (ஆ: 770)

**சுரிகை – 1. உடைவாள்.** சுரிகையிற் கண்மலர் குன்று நீங்கினர். (அ : 470) (சு : 164)

**2. கத்தி.** அயிலுடைச் சுரிகையால் அலகு தாக்கறுத்து. (அ: 783)

**சுரிகை வாள் – சுரிகை என்னும் உடைவாள்.** கொன்றுயிர் குடிப்ப னென்னுச் சுரிகைவாள் உருவிக்கொண்டான். (யுத் : 1651)

**சுரித்தல் - 1. சுருக்கிக்கொள்ளுதல்.** *ஆமை தலை புடை சுரிப்ப.* (பா : 49)

**2. உள்ளொடுக்குதல். அமிழ்தல். உள்ளமிழ்த்துதல்.** *தொய்யில் வெஞ்சுழியிடைச் சுரிக்கும் மேனியள்.* (சு : 585) *சுழிகள் தோறும் சுரித்திடை தோன்று தேனொழுகு தாமரை யொத்தன.* (யுத் : 973)

**3. வளைதல்.** *ஒற்றை வயிரச் சுரிகொள் சங்கினொலி பொங்க.* (பா : 1243)

**4. சுருளுதல். எரிந்து சுருளுதல்.** *நெருப்பிடைச் சுரிக்க நீட்டும்.* (யுத் : 267)

**5. புதைத்தல். பதிதல். சுற்றுதல்.** *குன்றமொன்று பறித்தவன் நெற்றி முற்றப் பரப்பிடைப்பாகம் உள்ளே செறித்தெனச் சுரிக்க வீசி.* (யுத் : 1415)

**சுரிதல் - 1. சுழலுதல்.** *சுரிபடைத் தொழிலும் மற்றை அங்குசத் தொழிலும்.* (சு : 823)

**2. புதைதல். ஆழ்தல்.** *சுரிக்கின்ற மாலைக் குன்றம்.* (யுத் : 638)

**சுரிப்பு - சூழற்சி.**

**சுரிபடைத் தொழில் - வாள் முதலிய ஆயுத வித்தை.** (சு : 823)

**சுரிவளை - சுரிந்த மூக்கையுடைய சங்குகள்.** *சுரிவளை மேய்வன.* (பா : 66)

**சுரிவளை முத்து - சுழிகளையுடைய சங்கீன்ற முத்து.** *சுரிவளை முத்தும் பூவும்.* (யுத் : 4260)

**சுருக்கம் - குறைவு. அளவிற் குறைதல்.** *சுருக்கமுண்டவர் வலிக் கென்று தோன்றுமால்.* (யுத் : 375) (யுத் : 3427)

**சுருக்கமுறல் - அழிதல்.** *சுருக்கமுற்றனர் அரக்கர்.* (யுத் : 1151)

**சுருக்கில் - சுருக்கமாகக் கூறின்.** *சுருக்கில் நான்மறை தொன்று தொட்டுரை தொறும் தோன்றுதிருக்குந் தெய்வமும் இரணியனே நம என்னும்.* (யுத் : 140)

**சுருக்குண்ணல் - சுருக்கேறுதல்.** *நீந்தரு நெறியினுற்ற நெருக்கினால் சுருக்குண்டு அற்றுக் காந்தின மணியும் முத்தும் சிந்தின.* (பா : 873) *வில்லினாற் சுருக்குண்டு.* (யுத் : 5250)

**சுருங்கிடை - நுணுகிய இடை(யையுடையவளே).** *சுருங்கிடை...... கருங்கடல் கடந்தனென் காலினால் என்றான்.* (சு : 586)

**சுருங்குதல் - குறைதல்.** *வன்மை சுருங்கும்.* (யுத் : 1419)

**சுருட்டி - மடக்கி. நீக்கி** *அல்லைச் சுருட்டி வெயிலைப் பரப்பி.* (*யுத் : 2198*) (*யுத் : 2234*)

**சுருண்டனர் புரண்டனர் - சுருண்டு (துவண்டு) புரண்டனர்.** *சுருண்டனர் புரண்டனர் தொலைந்தனர் மலைந்தார்.* (*சு : 480*)

**சுருதி - 1. கேள்வி. வேதம். வேதமந்திரத்தைக் குறிப்பது.** *சுருதி கற்றுயர் தோமிலர்.* (*அ: 626*) *சுருதி நாயகன்.* (*சு: 338*) (*யுத்: 170*)

**2. இசை** *சுருதி போற்றெளி மரகதக்கொழுஞ் சுடர் சுற்ற.* (*அ: 739*) (*அ : 804*) (*அ : 622*)

**சுருதி ஆதியில் தொடங்குறும் எல்லை - வேதம் ஆதியில் தொடங்கும் எல்லை. பிரணவம்.** (*யுத் : 170*)

**சுருதிச் சுவையமுது - இசையாகிய இனிய அமுது.** *தொளை கட்டிய கிளை முட்டிய சுருதிச் சுவையமுதின்.* (*அ : 622*)

**சுருதிச் சொல் - வேத மந்திரம்.** *தொழுகின்ற சனகன் வேள்வி தொடங்கிய சனகன் சொல்லால்.* (*கி : 918*)

**சுருதி ஞானத்தின் கொழுந்து - வேதத்திற் கூறப்பட்ட பரப்பிருமம். இராமபிரான்.** *சுருதி ஞானத்தின் கொழுந்தினைப் பூசலிட்டரற்றுங் கொள்கையான்.* (*யுத் : 4006*)

**சுருதி நாயகன் - வேதங்களுக்குத் தலைவனுன இராமபிரான்.** *சுருதி நாயகன் வரும் வரும் என்பதோர் துணிவால் கருதி.* (*சு : 338*)

**சுருதி நூல் - வேத சாஸ்திரம்.** *சுருதி நூல் உணரவல்ல வரமுனி வஞ்சம் என்று.* (*பா : 663*)

**சுருதி நூல் முறை - வேத சாஸ்திரங்களின் விதிமுறை.** *சுருதி நூல் முறை சாய்வறத் திருத்திய சாலை புக்கனன்.* (*பா : 264*)

**சுருதி மூர்த்தி - வேதங்களாற் பரம்பொருளாகச் சொல்லப்படுகின்ற சுவாமி.** *காத்தருள் சுருதி மூர்த்தி.* (*யுத் : 602*)

**சுருதியன்ன மந்திரச் சுற்றம் - வேதத்தை ஒத்த மந்திரிகளாகிய சுற்றம்.** *சுருதியன்ன தன் மந்திரச் சுற்றமும் சுற்ற.* (*அ : 71*)

**சுருதியன்ன மாதவன் - வேதத்தின் உருவமே போன்ற கோசிகன்.** *சுருதியன்ன வாழி மாதவற் பணிந்து.* (*பா : 718*)

**சுருதியோர் - முனிவர்.** *சுருதியோர் உறையுள் எய்தி.* (*அ : 641*)

**சுரும்பு - 1. வண்டினத்துள் ஒருவகை. எல்லா மணத்திலும் மொய்ப்பது.** *எண்ணரும் சுரும்பு.* (*அ : 994*) (*கி : 825*)

**2. வண்டு.** *தோடுறு மலரெனச் சுரும்பு சுற்றருத் தாடுறு தடக்கை.* (*சு : 536*)

**சுரும்பு மூசு தேன்** – சுரும்பு என்னும் வண்டும் நறுமணமலரில் மொய்க்கின்ற தேன் என்னும் வண்டுகளும். சுரும்பு மூசு தேன் பன்னி ஆடிடங்களும் பரந்து சுற்றினர். (கி : 825)

**சுருள்** – 1. மலராது குவிந்த நிலையிலுள்ள தளிர்.

2. ஓலைபோன்ற காதணி. செம்பொன் செய் சுருளும் தெய்வக் குழைகளும் சேர்ந்து மின்ன. (பா : 979) (யுத் : 2776)

3. சுருளுகை. வண்ணச் சுருளுடைச் சடையின் கற்றை. (யுத் : 2540) சுருள் கடற்றிரை.

4. சுழல் காற்று. சுருளொரு திசையொரு திசைமழை தொடரும். (யுத் : 3759)

**சுருள் கடல் திரை** – சுருளுந் தன்மையுள்ள கடலின் அலைநீர். சுருள் கடற்றிரைகளைத் தொலைய உண்டு. (யுத் : 584)

**சுருள்தல்** – வெந்து குறுகுதல். மெய் சுருண்டாள். (யுத் : 2631)

**சுலவுதல்** – சுழற்றுதல். சுழலுதல். மராமரஞ் சுலவு கையினுன். (யுத் : 2021)

**சுலாம்** – சூழ்ந்த. சூழ்ந்திருக்கும். நெடுங்கடல் சுலாம் மண் துளங்க. (ஆ : 8)

**சுலாய** – சூழ்ந்தன. ஆழ்கடல் ஏழும் இங்கர்ச் சுலாய கொல். (சு : 242)

**சுலாவுதல்** - சூழ்தல். முற்றுறச் சுலாவிய முடிவில் தானையை. (சு : 889) உற்றேவிய யூகமுலோகமுடைச் சுற்றுயிரமூடு சுலாய தனை. (யுத் : 2909)

**சுவடு** - 1. அடையாளம். அடித்தடம். தடம். குங்குமச் சுவடு. (பா : 831) தொடர்தும் தேரின் சுவடு. (அ : 611) (கி : 85)

2. தழும்பு. சுவடெறிந்தொரு தொழில்பட. (யுத் : 2013)

3. காலடி ஓசை. வருகின்ற சுவட்டை ஓர்ந்தான் செவிகளால் வயிரத்தோளான். (யுத் : 2672)

**சுவடெறிதல்** – தழும்பு படுதல். தழும்பை நீக்குதல். சுவடெறிந்தொரு தொழில்பட. (யுத் : 2013)

**சுவணக்கோலம்** – பொன்மயமான மேனிநிறம். சுவணக் கோலத்துண்ட நகந்தொல் சிறைவெல் போர் உவணப்புள்ளே ஆயின வானேருலகெல்லாம். (யுத் : 3809)

**சுவணகத்துறை** – சுவணகம் என்னும் ஆற்றின் துறை. சொன்ன தீவினைகள் தீர்க்கும் சுவணகத் துறையிற் புக்கார். (கி : 920)

**சுவணம் - 1. பொன்.** சுவணத் தனியண்டம். (சு : 44) சுவண வண்ணன். (ஆ : 38) உருக்கிய சுவண மொத்து. (ஆ : 178)

**2. ஒரு நதி.** இமையோர் வேண்டத்தெவ்வாறு முகத்தொருவன் தனிக்கிடந்த சுவணத்தைச் சேர்திர் மாதோ. (கி : 765)

**சுவண வண்ணம் – பொன்னிறம்.** செறிகற்றைச் சுவண வண்ண வெஞ்சிறையுடைக் கடுவிசை முடுகிய தொழிலாலும். (யுத் : 1564)

**சுவண வண்ணன் – இலக்குவன்.** சுவண வண்ணனெடு கண்ணன் மிசை கொள்ள. (ஆ : 38)

**சுவர் – 1. தேரின் சுற்றுப்பக்கங்களில் மரத்தால் அமைந்த மறைப்பு.** நெடுஞ் சுவர்க் கொடியும் யாவும். (அ : 1044)

**2. பக்கச் சுவர்கள். மதில்.** அண்டகோளச் சூழிருஞ் சுவர். (யுத் : 270) சுவரின. (ஆ : 487) சூழுடை அண்டத்தின் சுவர்கள். (யுத் : 3736)

**சுவரின – பக்கச் சுவர்களையுடையன.** கைம்மலைச் சுவரின. (ஆ: 487)

**சுவல் – 1. பிடரி மயிர். குதிரைக் கழுத்து மயிர்.** விடுஞ் சுவற் புரவியோடும். (அ : 1044) (யுத் : 2791)

**2. பிடரி. முதுகு.** கொற்றத் திண்கவல் வயிரக் கைகொடு குத்திப் புடையொரு குதிகொண்டான். (சு : 962)

**சுவறி – வற்றி.** தோயின் ஆழியோரேழுநீர் சுவறி வெண்டுகளாம். (கி : 726)

**சுவறுதல் – வற்றுதல்.** சொறிந்த வெம்பொறி படக்கடல் சுவறின தோற்றம். (யுத் : 1153)

**சுவாகு – சுபாகு. தாடகையின் இளைய மகன்.** விறல் மற்பொருவு சுவாகு. (பா : 373)

**சுவாச வாதம் – மூச்சுக்காற்று.** (யுத் : 1268) [பா : பே]

**சுவாத வாதம் – சுவாசக்காற்று.** சுவாத வாதம் மண்டுற வீரலெல்லாம் வருவது போவதாகி. (யுத் : 1268)

**சுவேலம் – ஒரு மலை** இடையுவாவிற் சுவேலம் வந்திறுத்து. (யுத் : 4059) (யுத் : 843)

**சுவை – 1. இனிமை.** சுவையமுது. (அ : 622)

**2. இனிப்பு முதலிய சுவை. சுவைக்குந் தன்மை.** நவையறு பாகை அன்றி அமுதினை நக்கினுலும் சுவையறப் புலர்ந்த நாவான். (யுத் : 1232)

**3. அழகு.** ஓவியம் சுவைகெடப் பொலிவதோர் உருவொடே. (பா : 1135)

**சுவை கெடல்** - அழகிழத்தல். (பா : 1135)

**சுவையமுது** - இனிய அமுது. (அ : 622)

**சுவையாறு** - இனிப்பு முதலிய ஆறு சுவைகள். அருந்தவன் சுவைகள் ஆறேடு அமுதினிதளிப்ப. (யுத் : 4232)

**சுழல் கண்** - சுழல்கின்ற கண். சுழல்கணேடு ஒற்றும். (யுத் : 3173)

**சுழலிடு கூந்தல்** - பனிச்சை. கடை குழன்ற கூந்தல். சுழலிடு கூந்தலும் துகிலும் சோர்தர. (பா : 606)

**சுழற்றல்** - அரைக்கவேண்டிச் சுழற்றுதல். மடக்கி மடக்கி அரைத்தல். தூநீர்க் குழவி முறை சுற்றி. (யுத் : 10)

**சுழி** - 1. வஞ்சனை. சுழியுடைத் தாயுடைக் கொடிய சூழ்ச்சியால்' (அ : 866) சுழிக்கும் வினை. (அ : 344)

2. நீர்ச்சுழி. சுழல். நீர்ச்சுழியின் நடுப்பாகம். சுழி பட்டோங்கிய தூங்கொலியாறு. (அ : 641) சுழிகள் தோறும் சுரித்து. (யுத் : 973) தொடு சுடற்சுழி. (யுத் : 175) சுழி ஒன்றி நின்றதன்ன உந்தியாள். (பா : 1062) சுழிதொறுங் கொணர்ந்துந்தி. (யுத்: 1541)

3. சுழித்தெரிவது நெருப்புக்குக் காரணக்குறி. சுழி படர் அழுவம். (யுத் : 217)

4. வட்டம். சுழிவட்டம். கண்ணுடைச் சுழிகளும் குருதி கால்வன. (யுத் : 1515)

5. வளைதல் வளைவு. துளவொடு தும்பையுஞ் சுழியச் சூடினன். (யுத் : 1077)

**சுழிக்கும் வினை** - சூழ்வினை. வஞ்சகச் செயல். மறைக்குஞ் செயல். என்கான் முளையைச் சுழிக்கும் வினையால் ஏகச் சூழ்வாய். (அ : 344)

**சுழிகொள் வாம்பரி** - நல்ல சுழிகளையுடைய தாவுகின்ற குதிரை. சுழிகொள் வாம்பரி துள்ள ஓர் தோகை வழுவி வீழ்தலும். (பா: 847)

**சுழித்த செம்பொன்** - மாற்றுயர்ந்த செம்பொன். சுழித்த செம் பொனின் தொளைபுரை உந்தியின் துணையே. (அ : 757)

**சுழித்தல்** - ! மறைத்தல். சுழிக்கும் வினை. (அ : 344)

2. சுழியுண்டாக்குதல். வட்டமாக இடல். சுழித்த செம் பொனின் தொளைபுரை உந்தி. (அ : 757)

3. சுழலுதல். சுழித்தெறி ஊழிக் காலில் துருவினன். (யுத் : 2544)

4 வட்டமிடுதல். சூறை மாருதமெனச் சுழித்து மேற்றொடர்கின்ற தொழிலானை. (யுத் : 1568)

5. **நீர்ச்சுழி உண்டாதல்.** *சுழித்து நீர் வருதுறையாறு.* (அ : 1055)

6. **சுழன்றெரிதல்.** *சுழிக்குங் கொல்லன் ஒல்லுலே.* (யுத் : 5)

**சுழிதல் – 1. சுழிசுழியாகச் சுருண்டிருத்தல்.** *சுழியுங் குஞ்சிமிசைச் சுருப்பார்த்திட.* (பா : 849)

2. **சுழித்து முடித்தல்.** (உ. வி) (பா : 849)

**சுழிப்படுதல் – சுழியில் சிக்குதல்** (கலா) **சுழி பொருந்துதல்.** (வை. மு) *சுந்தரமுடைக்கரம் வலிப்ப ஓர் சுழிப்பட்டு எந்திர மெனத்திரி இரக்கமில் அரக்கன்.* (யுத் : 856)

**சுழிபடு கங்கை – வேகத்தாற் சுழிகள் உண்டாகின்ற கங்கை.** *சுழிபடு கங்கையந் தொங்கன் மௌலியான்.* (பா : 361)

**சுழிபுரை உந்தி – நீர்ச்சுழியைப்போன்ற கொப்பூழ்.** *சுழித்த தண்புனற் சுழிபுரை உந்தியந் தோகாய்.* (அ : 757) [பா : பே]

**சூழிபெற்றமா – முகபடா மணிந்த யானை.** (யுத் : 3353)

**சுழியம் – முடிக்கொண்டையில் சிகழியைப் பிணிக்கும் வட்டவடிவமான அணிவகை. மயிர்முடி.** *சிகழிக்ச் செம்பொன் மாலையும் தொங்கலுந் துயல்வரச் சுழியஞ் சூடியே.* (பா : 1296)

**சுழியல் – முடிமாலை.** *கிளை வண்டின் சுழியத் தொங்கல்.* (யுத் : 3872)

**சுள்ளி – மரத்தின் சிறு கிளை.** *சுள்ளியில் இருந்துறை குரங்கு.* (யுத் : 37) (யுத் : 975)

**சுளி – கோபம்.** *நங்களைச் சுளிக்கிலையாமெனத் தொழுகின்றார் சிலர்.* (சு : 1053)

**சுளித்தல் – வெகுளுதல். கோபித்தல்.** *தொழுந்தகை யமைச்சரைச் சுளித்து நோக்குறா.* (யுத் : 1677) *சுளிகிலையாம்.* (சு : 1053) *சுளியன் மின்.* (யுத் : 1722)

**சுளித்து நோக்கல் – வெகுண்டு பார்த்தல்.** (யுத் : 1677)

**சுளிதல் – 1. கோபித்தல்.** *அவன் சுளியும் என்றலால்.* (கி : 123)

2. **மாறுகொள்ளல்.** *சுளியும் மென்னடை.* (பா : 1039)

**சுளை – பலா முதலியவற்றின் சுளை.** *பலவின் கனிச்சுளை.* (கி : 926)

**சுற்றம் – 1. பரிவாரம்.** *சுற்றம் அப்புறம் நிற்க.* (அ : 654)

2. **உறவினர்.** *தன் கிளைச் சுற்றத்தாரும்.* (யுத் : 1223)

**சுற்றூர் மணியின் வடிவாள் – நான்கு பக்கங்களிலும் இழைத்த மணிகளையுடைய கூர்செய்த வாள்.** (அ : 411) [பா : பே]

**சுற்றி – உடுத்து.** *செற்ற வாளுழுவை அதள் திருகுறச் சுற்றி.* (ஆ : 15) *சீரை சுற்றி.* (அ : 527)

**சுற்றிச் சூழ்தல் – சூழ்ந்து கட்டிப்பிடித்தல்.** *தொகை செய்வார்க்கரிய தோளால் தாள்களாற் சுற்றிச் சூழ்ந்தான்.* (யுத் : 277)

**சுற்றிய – 1. சஞ்சரித்தல்.** *எல்லி சுற்றிய மதிமுகர் முகத்தியர்.* (யுத் : 2312)

**2. சுற்றி அணிதல்.** *அரிவீழ் அல்லி சுற்றிய கோதையர்.* (யுத் : 2312)

**3. தழுவிய. சுற்றப்பட்ட.** *வல்லி சுற்றிய மாமரம்.* (யுத் : 2312)

**4. மிக்க.** *செயிர் சுற்றிய படையான்.* (பா : 1360)

**சுற்றினர் – சுற்றியிருந்தவர்கள்.** (யுத் : 2603)

**சுற்று – 1. ஒன்றைச் சுற்றியிருத்தல்.** *சுற்றிய சுற்று நீங்கப் பேர்வுறு கின்ற வாறும் ஒத்தது அப்பிறங்கு பேழ்வால்.* (சு : 35) *சுற்று மண்மூடு தோட்டின் முடங்கல்.* (அ : 798)

**2. பிராகாரம். திருச்சுற்று** *தாணெலாம் சுடருங்காசு சுற்றெலாம் முத்தம்.* (சு : 742)

**3. சுற்றுப்பக்கம். சுற்றிடம்.** *தொத்தின தாரகை மயிரின் சுற்றெலாம்.* (சு : 590)

**4. வளைத்தல்.** *சுற்றுூர்ந்த கச்சு.* (அ : 411)

**5. வட்டம்.** *சடையின் கற்றை சுற்றெனச் சுடர்வ.* (யுத் : 2540)

**சுற்றுண்ட பாச நாஞ்சிற் சுமை – கயிற்றினாற் பிணிக்கப்பட்டுள்ள கலப்பையாகிய பாரம்.** (யுத் : 1621)

**சுற்றுதல் – 1. உடுத்தல்.** *வேசியர் உடுத்த கூறை வேந்தர்கள் சுற்ற.* (யுத் : 4290)

**2. சூழ்தல். சூழ்ந்துகொள்ளல்.** *அங்நெடுந்தானை சுற்ற அமரரை அச்சஞ் சுற்ற.* (அ : 825)

**3. தொடர்தல்.** *சொல்லிய என்பழி அவரைச் சுற்றுமோ.* (சு: 502)

**4. சூழப்படுதல்.** *தும்பி ஈட்டம் புரை கிளை சுற்றினான்.* (அ : 647)

**5. சுழற்றுதல்.** *உலகு சுற்றி எயிற்றின் இடந்து.* (யுத் : 829) [பா : பே]

**6. நெருக்குதல்.** *உலகு சுற்றும்.* (யுத் : 829)

**சுற்றுமுற்றும் வளைதல் – சுற்றிலும் முற்றும் வளைதல்.** *உற்றுருத்தெழு வெள்ளம் உடன்றெழாச் சுற்றுமுற்றும் வளைந்தன தாவின.* (யுத் : 3390)

**சுற்றுற – 1. சூழ.** *தாக்கிய வேய்களிற் சுவரும் சுற்றுறப் போக்கி மண்ணுறைந்து.* (அ : 781) (சு : 1111)

2. சூழ்ந்துவர. இரட்டை. கவரியின் கற்றை சுற்றுற. (அ : 2)

**சுறவம் - சுறுமீன்.** புழுங்கு வெஞ்சினைச் சுறவது நிறைபுடைப் புணரி. (யுத் : 3277)

**சுறவு - மீன்வகை.** சுறவு தூங்க ஒள்ளிய பணைமீன் துஞ்ச. (சு : 23) நகைவாள் சுறவொத்தன. (யுத் : 3459)

**சுறு - சுறு நாற்றம்.** உதிரம் சுடர்வற்றின சுறுமிக்கது. (யுத் : 3002) துடித்த தொடர் மீசைகள் சுறுக்கொள உயிர்ப்ப. (ஆ : 608) சுறுக்கொள நீங்கி. (சு : 1216)

**சுறுக்கொண்டேறுதல் - தீந்து கருகுதல்.** சொரிந்தன நறுமலர் சுறுக் கொண்டேறின. (பா : 1613)

**சுறுக்கொள்ளல் - 1. தீப்பற்றுதல்.** துடித்த தொடர் மீசைகள் சுறுக்கொள உயிர்ப்ப. (ஆ : 608)

2. **நெருப்பினால் வேகுதல்.** உடற்பொறை சுறுக்கொள இறுக்கி. (யுத் : 851)

3. **தீய்ந்துபோதல்.** உலகமேழும் சுறுக்கொள நோக்குவான். (சு : 928) சுறுக்கொண்டேற. (சு : 930)

**சுறு நாறுதல் - தீப்பற்றிய நாற்றம் வீசுதல்.** ஏறு மங்கையர் நறுங் கூந்தலின் சுறு நாறுகின்றது. (யுத் : 25)

**சுனை - நீர்ச்சுனை.** படிகத்தின் தலமென்றெண்ணிப் படர்சுனை முடுகிப் புக்க...... முகத்தினர். (பா : 945)

## சூ

**சூசி - ஊசி.** காரும் வார்சுவைக் கதலியின் கனியைச் சேருஞ் சூசியிற் சென்றது. (கி : 294) [பா : பே]

**சூட்ட கல் - சுட்ட கல்.** சூட்டு அகல். (சுடப்பட்ட சட்டி) சூடேறிய சட்டி. சுட்டகன் மேலெழு பொரியிற் றுள்ளினர். (கி : 841)

**சூட்டல் - சூட்டுதல்.** அலங்கல் மாமுடி தொன்னெறி முறைமையிற் சூட்டக் காண்டிரால். (அ : 950) சூட்டுதி மகுடம். (யுத் : 450)

**சூட்டியன்ன - சூட்டினாற் போன்றன.** நிலக்கொழுந்தை மௌலி சூட்டியன்னவே. (பா : 118)

**சூட்டு - உச்சிக்கொண்டை.** சூட்டுடைத்தலைத் தூநிற வாரணம். (பா : 58)

**சூட்சி** - **சூழ்ச்சி. ஆலோசனை.** (யுத் : 23) [பா : பே]

**சூட்சியின் கிழவர்** - **ஆலோசனைக் குரியவர்.** சூட்சியின் கிழவரை நோக்கிச் சொல்லுவான். (யுத் : 23) [பா : பே] கல்விசால் சூட்சியின் கிழவர். (யுத் : 325)

**சூடக அரவு** - **கடகமாகிய பாம்பு.** சூடக அரவுறழ் சூலக்கையினள். (பா : 365)

**சூடகம்** - **1. கைவளை.** (பா : 365)

2. **முன் கைவளை.** சூடகத் தளிர்க்கை மாதர். (அ : 1046)

**சூடிகை** - **1. தலையில் அணியும் பொன்னணி.** சூடல் நீத்தன சூடிகை. (அ : 817)

2. **சிகரம்.** (கலா) சூடல் நீத்தன சூடிகை சூளிகை. (அ : 817)

**சூடிச்சூடி** - **அடிக்கடி சூடி.** நறுமாலை சூடிச்சூடிக் கண்ணடி நோக்கித் துவள்வாளும். (பா : 1000)

**சூடின மலர்க்கரம்** - **தலைமேற் குவித்த தாமரை மலர்போன்ற கைகள்.** சூடின மலர்க்கரம் சொல்லின் முன் செவி கூடின. (அ : 858)

**சூடு** - **1. நெற்பயிரின் தலைப்புறம்.** கதிர்ச் சாலிசூடறுப்புண்ட எனக் கழுத்தறுப்புண்டதம்மா. (ஆ : 516)

2. **புடம் வைத்தல்.** சூடுறு பொன். (கி : 829)

3. **எரிதல்.** கார் உலவைகள் கதழெரி கதுவச் சூடு கொண்டன எனத் தொடர் குருதி மீத்தோன்ற. (ஆ : 448)

4. **வெப்பம். சுவாலை.** (உ. வி) (ஆ : 448)

5. **உச்சி.** சூட்டுடைத்தலை தூநிற வாரணம். (பா : 58)

**சூடு கொள்ளல்** - **எரிதல்.** சூடு கொண்டான் என. (ஆ : 448)

**சூடுண்டல்** - **குத்துண்டல். காய்ச்சிய இருப்புச் சலாகையினுற் சூடேறப்பெறுதல்.** சுற்றுண்ட பாசநாஞ்சிற் சுமையொடுஞ் சூடுண்டாற்ற எற்றுண்டு. (யுத் : 1621)

**சூடுதல்** - **1. பெறுதல்.** துறையறி பெருமையான் அருளும் சூடினுர். (அ : 12)

2. **தலைமேற் கொள்ளல். அணிதல்.** சூடின மலர்க்கரம். (அ: 858) மகுடஞ் சூடலேன். (கி : 219) சூடலை. (யுத் : 3094)

**சூடுபடல்** - **எரியுண்ணல். எரியுண்டழிதல்.** சூடுபட்டது கொடிநகர். (யுத் : 521) சூடுபட்டது தென்னகர். (யுத் : 521) [பா : பே]

**சூடுமின் சூடுமின்** - **(தலையில்) அணியுங்கள் அணியுங்கள்.** சூடுமின் சூடுமின் தூதன் தாளெனும். (யுத் : 4171)

**சூடுறுமேனி - தாபம்மிக்க வடிவம்.** சூடுறு மேனிய அலரி. (யுத்: 4016)

**சூடை - தலை. தூபியின் உச்சி. தலையில் அணியும் ஓர் அணி.** உச்சிச்சூடை நல்லணி முனிந்தன தொன்மனை. (அ: 507)

**சூடைக்காசு - முடிமணி.** சூடாமணி. உறுசுடர்ச் சூடைக் காசுக் கரசினை. (சு: 735)

**சூடைக்காசுக் கரசு - சிறந்த சூடாமணி.** (சு: 735)

**சூடையின் மணி - சூளாமணி.** சூடையின் மணி கண்மணி ஒப்பது. (சு: 689)

**சூத்திரத்தர் உபாயம் வல்லவர் சூட்சுமத் தன்மைவாய்ந்த சேவகர்.** (உ. வி) மனைகாவல் விரும்பும் காத்திரத்தர் பதினுயிரர் சுற்ற. (யுத்: 820)

**சூத்திரம் - 1. இயந்திரம்.** முன்பயில் சூத்திரம் இதுவெனத் தோளின் வாங்கினுன். (பா: 810)

**2. சூட்சுமத் தன்மை.** விரும்பும் சூத்திரத்தர். (யுத்: 820)

**3. உபாயம்.** (உ. வி) சூத்திரத்தர் பதினுயிரர். (யுத்: 820)

**சூதப் பசுந்தேறல் - மாங்கனிகளின் பசுமையான தேன்போன்ற சாறு.** ப்ாய்ந்த சூதப்பசுந் தேறலால் சாய்ந்து ஒசிந்து முளைத்தன சாலியே. (அ: 813)

**சூதம் - மாமரம்** (அ: 813)

**சூதர் - 1. அரசன் புகழை நின்றேத்துவோர்.**

**2. தேர்ப்பாகர்.** வில்லுடைத் தலையாளொடு சூதரை வீழ்த்த. (யுத்: 1435)

**சூதன் - பாகன்.** சூதனு முடுகத் தூண்ட. (யுத்: 3683)

**சூதார் முலை - சொக்கட்டான் காய்போன்ற முலை.** (யுத்: 4100)

**சூது - 1. சொக்கட்டான் காய். சூதாட்டத்தில் வைக்கப்படும் வல்லுக்காய். (வட்டுக்காய்)** சூதார் முலைத்தோகை. (யுத்: 4100) துப்பொன்று திரள் சூதென்பென். (கி: 786)

**2. உபாயம். உபாயச் செயல். தந்திரம்.** துப்புற முருக்கி உயிருண்பல் இது சூதால். (சு: 696)

**3. வஞ்சனை.** சூதகற்றுந் திருமறையோர். (கி: 771) [பா: பே]

**சூது உந்தல் - சூதாடுதல். சூதாட்டக் கருவியை வீசி உருளவிடுதல்.** தேறல் மாந்திச் சூதுந்தலிற் பொழுதுபோஞ் சிலர்க்கவ் வொண்ணகர். (பா: 161)

**சூது பொருதல் - சூதாட்டமாடுதல்.** பொன்னின் நன்பலகைச் சூது துயில்கிலர் பொருகின்றாரும். (சு : 280)

**சூர் - 1. கொற்றவை.** சூரும் ஓடாது கூடாதரோ. (பா : 350)

**2. கொடுந்தெய்வம்.** சூர் ஒடுங்கு அயில் திரிந்திறுதல் கண்டு. (ஆ : 29)

**3. சூரபன்மன்.** சூரறுத்தவனும் சுடர்நேமியும். (ஆ : 139) (யுத் : 2468)

**4. தேவர். (சுரர்)** (வை. மு) சூர் புகலரியதோர் அரக்கர் தொன்மதில். (ஆ : 1159)

**5. சூரத்தன்மை. வீரம். வீரியம்.** சூரிழந்து தன் கவசமுமிழந்து. (யுத் : 1197) சூரொடுந் தொடர்ந்த தண்டு. (யுத் : 2518)

**6. வலிமை.** சூரொடுந் தொடர்ந்த சுடர்க்கணை தான். (யுத் : 3455)

**7. அச்சம்.** (உ. வி) சூரொடுந் தொடர்ந்த தண்டு. (யுத்: 2519) சூர் முடி. (யுத் : 2295)

**8. தீண்டி வருத்துங்கொடுந் தெய்வம்.** சூர் புகலரியதோர் அரக்கர் தொன்மதில் ஊர்புகு வாயிலோ இது. (ஆ : 1159)

**9. பேய்.** சூருடை நிலை. (பா : 836)

**10. சூரியன்.**

**11. கொடுமை.** சூரொடுந் தொடர்ந்த தண்டு. (யுத் : 2518)

**சூர் ஒடுங்கு அயில் - சூர் என்னும் கொடுந்தெய்வமும் அடங்கும் சூலம்.** (ஆ : 29)

**சூர் தடிந்தவன் - சூரபன்மாவைக் கொன்றவன். முருகன்.** சூர் தடிந்தவன் மயில். (சு : 880)

**சூர்ப்பணகை - இராவணன் தங்கை.** சூர்ப்பணகை வரவிருந்தான் இருந்த பரிசு உரைத்தும் மன்னோ. (ஆ : 560)

**சூர் முசு - அச்சத்தைச் செய்யும் குரங்கு.** வேல்பிடித் தரக்கரை எறியும் ஓர் சூர் முசு. (யுத் : 2295)

**சூர நெடுந்தகை - சூரனாகிய பெருமைக்குணமுடைய இலக்குவன்.** (ஆ : 344)

**சூரர் - வீரர்.** சூரரென்றுரைக் கற்பாலார். (யுத் : 3102) இறப்பினும் திருவெலாம் இழப்ப எய்தினும் துறப்பிலர் அறம் எனல் சூரர் ஆவதே. (அ : 560)

**சூரர மகளிர் - அச்சமுண்டாக்குந் தெய்வப் பெண்டிர். கொடுமை யுடைய தெய்வ மகளிர்.** மாதவிச் சூழலிற் சூரர மகளிர் படுத்து வைகிய பல்லவ சயனங்கள். (அ : 759) (கி : 109)

46

**சூரறுத்தவன்** - முருகக்கடவுள். *சூரறுத்தவனும் சுடர் நேமியும்.* (ஆ : *139*)

**சூரிய காந்தகம்** – சூரிய காந்தக்கல்மயமான மலை. (*வை. மு*) சூரிய காந்தக்கல். (*அன்*) *சூரிய காந்தகமென்னத் தோன்றி மாதர் கவ ணுமிழ்கல் வெயிலியங்குங் கனவரையும்.* (கி : *766*)

**சூரிய காந்தம்** - சூரியனைக் கண்டபோது நெருப்பை உமிழும் கல். சூரிய காந்தம் மலை என்பது பழையவுரை. (*கலா*) *சூரிய காந்தம் மெனவே தோன்றி.* (கி : *766*) [*பா : பே*]

**சூரிய சத்துரு** – இராவணன் மந்திரிகளுள் ஒருவன். *நேர்வின் தைவரு சூரிய சத்துரு வென்பான்.* (யுத் : *2273*)

**சூரியன்** – இரவி. *சூரியன் மரபிற் றோன்றி.* (கி : *69*)

**சூரியன் பகைஞன்** – சூரிய சத்துரு. இராவணன் மந்திரத்தொருவன். *சிறியம் யாமெனச் சூரியன் பகைஞன் என்றொருவன் சொல்லினன்.* (யுத் : *55*) (*யுத் : 499*)

**சூரியன் மைந்தன்** – சுக்கிரீவன். (யுத் : *1919*)

**சூரியன் மரபு** – இரவி குலம். *சூரியன் மரபுக்கும் ஓர் தொன்மறு.* (கி : *324*)

**சூரியன் மருமான்** – கதிரவன் வழித்தோன்றலாகிய இராமபிரான். (யுத் : *4109*)

**சூருடை நிலை** – தெய்வத்தின் தன்மை. (*கலா*) பேயின் அடி. (*அண்*) *சூருடை நிலையெனத் தோய்ந்து.* (*பா : 836*)

**சூருளோர்** - தேவர்கள். வீரம் உடையவர்கள். (*அண்*) (சூர் – சூரத் தன்மை). *சூலமுண்டது சூருளோர் காலமுண்டது.* (யுத் : *1310*)

**சூல்** – கரு. கருப்பம். *நீருண்ட கமஞ்சூற் காளமேகமும் நாகமும் தெரிகில காணய்.* (*அ : 738*) *சூலடிப் பலவின் சுளை.* (கி : *930*) *சூல் நிறக் கொண்மூ.* (*சு : 411*) *சூலிரும் பெருவயிறு.* (சு : *661*)

**சூல்தல்** – தோண்டுதல். *கண்களைச் சூல்கின்றாரும்.* (யுத் : *3185*) *கண்களைச் சூன்று நீங்கி.* (யுத் : *3602*)

**சூல்நிற முகிற்குலம்** – கருக்கொண்ட (நீரையுட்கொண்ட) நிறம் மிக்க மேகங்கள். *சூனிற முகிற் குலந்துவன்றி.* (கி : *445*)

**சூல்வயிறு** - கருக்கொண்ட வயிறு. *ஒளிறுவான் மதிக்குழவி தன் சூல்வயிற் றுதைப்பப் பிளிறுமேகம்.* (*அ : 736*)

**சூலடிப்பலவு** – கருவை வேரின் கட்கொண்ட பலாமரம். (கி : *930*)

**சூல நாள் - ரேவதி நட்சத்திரத்தோடு கூடிய நாள்.** (அண்) **கருவுயிர்க்கும் நாள்.** (வை. மு) *தான் சூல நாளில் தகைமுத்த முயிர்த்த சங்கம்.* (சு : 48)

**சூலப்பத்திகள் – சூல வரிசைகள்.** *சூலப்பத்திகள் கோடி கோடி பரப்பி.* (யுத் : 2381)

**சூலம் – 1. மாளிகையின்மீது இடியேற்றத்தைத் தாங்குவதற்கு உயர்வாக வைக்கப்படும் இரும்புக்கம்பி.** *துகிலென நெடுங்கொடிச் சூலம் மின்னுவ.* (பா : 128)

**2. மூன்று முனைகளையுடைய வேல்போன்ற ஒரு கருவி.** *தோமரம் உலக்கை சூலம்.* (சு : 940)

**சூலமேகம் - 1. சூலம் ஏகம்.** ஒப்பற்ற சூலப்படை. *சூலமேகம் திருத்திய தோளினன்.* (யுத் : 1283)

**2. கருங்கொண்ட மேகம்.** *சூல மேகமெனப் பொலி தோற்றத்தான்.* (யுத் : 1283)

**சூலல் (சூலுதல்) - 1. தோண்டுதல்.** *கண்களைச் சூல்கின்றரும்.* (யுத் : 3185) *கண்களைச் சூன்று நீக்கி.* (யுத் : 3602)

**2. குடைதல். தோண்டி எடுத்தல். அகழ்தல்.** (வை.மு) *செந்தீக் கண்களைச் சூலும்.* (யுத் : 268) *கழுது சூன்ற.* (யுத் : 3832)

**சூலி – சிவபெருமான்.** *சூலியைப் பொருப்பினோடுந் தூக்கிய விசயத் தோளாய்.* (யுத் : 2800) (யுத் : 2287)

**சூலிளம் பிடி – சூல் முதிர்ந்த இளம் பெண் யானை.** *பெருகு சூல் இளம் பிடி.* (அ : 746)

**சூலையின் திருக்கு – குடைதலால் உண்டான மாறுபாடு. மன எரிவினால் கூறப்படும் மாறுபாடு.** (அண்) **பல்வேறு வகைப்பட்ட மதங்களில் உள்ளவர்கள் தத்தமது கொள்கைகளுக்கு இணங்க வேதம் முதலிய பிரமாணங்களை நலிந்து கூறுதலாகிய மாறுபாடு.** *சமயவாதிகள் சூலியின் திருக்கலால் சொல்லுவார்க்கெலாம் வேலையுந் திரையும்போல் வேறுபாடிலான்.* (யுத் : 207)

**சூழ்க்கிற்பாயல்லை - ஆலோசித்தற்குரியவனில்லை.** (யுத் : 1382)

**சூழ்ச்சி – 1. வஞ்சனை. வஞ்சனையான உபாயம்.** *சூழ்ச்சியின் இமையோர் மாயையும்.* (அ : 174)

**2. தந்திரம்.** *மேலைநாள் எண்ணிய சூழ்ச்சியும் ஈண்டிக்கொண்டவும் அண்ணலே ஒருவரால் அறியற் பாலவோ.* (கி : 542)

**3. ஆராய்ச்சி.** *சூழ்க்கிற்பாயல்லை.* (யுத் : 1282) (பா : 30)

4. **சூழ்ந்த மதி. ஆராயும்படியான தன்மை.** சூழ்ச்சிப்பல் பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்ததன்றே. (பா : 30)

5. **ஆலோசனை. ஆலோசனைத்திறம்.** பெறலருஞ் சூழ்ச்சியர். (அ : 11)

6. **நாற்புறமும் சூழ்ந்திருத்தல். வழிபோலத் தோன்றிப் புகுவாரை அகப்படுத்தும் தன்மைபோல்வன.** வெய்ய சூழ்ச்சியின் வெலற் கருவலத்தின். (பா : 103)

7. **எண்ணம்.** சூழ்ச்சியான். (சு : 595) வஞ்சன் அயோத்திமேற் போன சூழ்ச்சி. (யுத் : 2868)

**சூழ்ச்சியின் இருக்கை – மந்திராலோசனை சபை.** எண்ணுறு சூழ்ச்சியின் இருக்கை எய்தினான். (அ : 2)

**சூழ்ச்சியின் கிழவர் – மந்திரக்கிழவர்.**

**சூழ்தர – புடைசூழ.** சேனை சூழ்தர. (பா : 228)

**சூழ்தல் – 1. சுற்றுதல். சுற்றிவருதல்.** அன்பின் சூழ் பிடி என்னப் பிரிவுற்றான். (அ : 598)

2. **வலம்வருதல்.** கங்கை நாவாய்க்கிறை குகன் தொழுது சூழ்ந்தான். (யுத் : 4330)

3. **வளைந்துகொள்ளல்.** சூழ்ந்த நெருப்பு. (யுத் : 957)

4. **வளைதல். எல்லை கட்டி உரிமையாக்கிக்கொள்ளுதல். கவிதல்.** சூலுடை மழைமுகில் சூழ்ந்து சுற்றிய வாலிடை ஒரு மலை ஈர்த்து வந்த வால். (யுத் : 626) மஞ்சு சூழ் நெடிய மாளிகை. (பா : 1145) இஞ்சி சூழ் மிதிலை. (பா : 1145)

5. **எண்ணுதல்.** கரண்புகு சூழலே சூழ. (யுத் : 360) சூழ்க்கிற் பாயல்லை. (யுத் : 1382)

6. **அணிதல்.** மஞ்சு சூழ் மெல்லடிப் பாவைமார். (பா : 1145)

7. **நிறைதல்.** நஞ்சு சூழ் விழிகள். (பா : 1145) மகர நீர்சூழ் வேலை. (யுத் : 4095)

8. **சதிசெய்தல்.** பொருந்தா நயனம் பொருந்தி நமைப் பொன்றச் சூழ்ந்ததெனப் புரண்டார். (அ : 610)

9. **மொய்த்தல். கூடுதல்.** சூழமைந்த சுரும்பு. (அ : 826)

10. **செல்லுதல்.** (உ. வி) (யுத் : 360)

11. **செய்தல். பண்ணுதல்.** உம்மை யான் சூழ்ந்ததும் பொறுக்கென முதன்மை சொல்லினான். (சு : 1296)

12. **சூழ்ச்சி செய்தல்.** *தாதைவந்து தான் தனிக்கொலை சூழினும் சாகான். (யுத்: 118) கொலை சூழ்க என நீ கொடுத்தாய். (யுத்: 1959)*

13. **தீர்மானித்தல்.** *பின்னைக் கலங்கலர் ஏவல்செய்தல் கடனெனக் கருதிச் சூழ்ந்தார். (யுத் : 4353)*

14. **சுற்றிக்கட்டுதல்.** *மேகலையை நீக்கி மலர்த்தொடை அல்குல் சூழ்ந்தாள். (பா : 1062)*

15. **எண்ணிச்செய்தல்.** *சூழ்வதோர் பொருள் உண்டு. (ஆ : 812)*

**சூழ்ந்தமைந்த சுரும்பு - மொய்த்தல் பொருந்திய வண்டுகள்.** *சூழமைந்த சுரும்பும் நரம்புந் தம் ஏழமைந்த இசையிசையாமையான். (அ : 826)*

**சூழ்போக்கி - சுற்றிவரக் கொண்டுபோய்.** *நகரைச் சூழ்போக்கி எல்லை கடக்கவிடுமின்கள். (சு : 1159)*

**சூழ்வர – பொருந்த.** *தாங்கிருங் குண்டலம் செவியிற் சூழ்வர. (யுத் : 4179 )*

**சூழ்வருதல் – வலம்வருதல்.** *வேள்வி......... வெங்கனல் சூழ்வரு போழ்தில். (பா : 1335)*

**சூழ்விலா மாயம் - ஆராய்ந்துணர்தற்கு முடியாத வஞ்சகச்செயல். நினைத்தற்கும் ஒவ்வாத தீயவஞ்சனை. (அண்)** *(யுத் : 924)*

**சூழ்விலா வஞ்சம் – ஒருவராலும் ஆலோசிப்பதற்கு முடியாத வஞ்சனைத் தொழில்.** *(யுத் : 728)*

**சூழ்வினை – ஆலோசனை செய்தல்.** *சூழ்வினை மனிசரால் தோன்றிற்று மெனு. (யுத் : 56)*

**சூழ்வு – உபாயம். சூழ்தல். (யுத் : 924) (யுத் : 728)**

**சூழல் – 1. தலம்.** *தேவர் தம் சூழலுட் போயினர். (பா : 699)*

2. **இடம். தங்கிடம்.** *நீண்டவன் துயின்ற சூழல் இதுவெனின். (அ : 1033) தோற்றுள கூற்றின் சூழல். (யுத் : 1377)*

3. **மாயம்.** *தூயவர் தெரிதலுண்டோ நும்முடைச் சூழலெல்லாம். (சு : 738)*

4. **பொழில்,** *தொக்கமென் மரநிழல் துவன்றிய சூழல். (பா : 507)*

5. **வழி.** *கரண்புகு சூழலே சூழ. (யுத் : 360)*

6. **சுற்றுப்பக்கம்.** *உயர்ந்த குன்றின் சூழல்கள் இனிது நோக்கி. (பா : 927) உலகின் சூழல். (யுத் : 2170)*

7. **தொகுதி.** *குரங்கின் சூழல். (யுத் : 576)*

சூழி - நெற்றிப்பட்டம். ஓடை. *சூழிபெற்ற மா.* (யுத் : 3353)

**2. முகபடாம்.** *உறக்கநீந்த சூழி யானையின் எழுந்து.* (பா : 718)

**3. உச்சி.** *சூழிச் சடைமுடி விண்தொட.* (பா : 1359)

**சூழிக் கொடுங் கடுங்காற்று - சுழலுந்தன்மையதான கொடிய சண்ட மாருதம்.** *சூழிக் கொடுங் கடுங் காற்றதனுடனே வரத்தூர்க்கும்.* (யுத் : 3045)

**சூழிபெற்ற மா - நெற்றிப்பட்டத்தைப் பெற்ற அப்படிப்பட்ட (மிகச் சிறந்த) யானை.** *ஆளொடச் சூழி பெற்ற மா வழுந்தும்.* (யுத்: 3353)

**சூழி மா - முக படாத்தையுடைய களிறு.** *தொழுவில் நின்றன போன்றன சூழி மா.* (யுத் : 3688)

**சூழிமால் யானை - முகபடாமணிந்த யானைச்சேனை.** *சூழிமால் யானை யார்.* (சு : 82)

**சூழி வெங்கட கரி - முகபடாத்தையும் விரும்பத்தக்க மதத்தையு முடைய யானை.** (அண்) (யுத் : 1535).

**சூழி வெங்கட களிறு - முகபடாமணிந்த கொடிய மதப்பெருக்குள்ள யானை.** *சூழி வெங்கட களிற்றரசற் சொல்லி.* (அ : 567)

**சூழெழு - திரண்ட இருப்புலக்கை.** *சூழெழு வனைய தோள்.* (யுத்: 2067)

**சூள் - சபதம். வஞ்சினம்.** *சூளுறு கட்டுரை.* (அ : 889)

**சூளி - பிரமதத்தன் தந்தை.** *நிறைதவன் சூளி நல்கும் திமிரறு பிரமதத்தன்.* (பா : 428)

**சூளிகை - சிகரம். நிலா முற்றம். மாடத்துச்சி யறை.** *சூளிகை மழை முகில் தொடர.* (பா : 156)

**சூளுற்ற - சபதஞ்செய்த. சித்தாத்தஞ்செய்த.** *தொல்லை முதன் முனிவர் சூளுற்றபோதே தொகைநின்ற ஐயந்துடைத்திலையோ எந்தாய்.* (ஆ : 104)

**சூளுறவு - சபதம்.** *முந்தையொரு சூளுறவு கொண்டார்.* (ஆ : 614) *முன்னஞ்சொன்ன சூளுறவு என்னும் தோன்றல்.* (யுத் : 925)

**சூளுறவு கொண்டார் - சபதங்கூறி உறுதி மேற்கொண்டார்கள்.** (ஆ : 617)

**சூளுறு கட்டுரை - சூளாகப்பொருந்திய உறுதிமொழிகள்.** *சூளுறு கட்டுரை சொல்லல் மேயினான்.* (அ : 889)

**சூளுறுதல் - வஞ்சினங்கூறல்.** *சூளுற்றது முண்டது சொல்லுதியால்.* (யுத்: 1710) *உயிர்கொள்வான் சூளுற்றேன் இது சரதம்.* (யுத்: 2454)

**சூறை - சுழல்காற்று.** *குடர் சூறைபட.* (அ : 1012)

**சூறை படல் – 1. கொள்ளைபடுதல்.**

**2. சுழல் காற்றில் அகப்படுதல்.** (அ : *1012*)

**சூறைமாருதம் – சுழல்காற்று.** *சூறை மாருதமெனச் சுழித்து.* (யுத் : *1568*)

**சூறையாடல் (சூறையாடிடல்) – கொள்ளையிடுதல்.** *சுட்டது குரங்கு எரி சூறையாடிட.* (யுத் : *24*) *உருகிச் சோர்ந்தனர் துக்கம் நின்ற றறிவினைச் சூறையாடவே.* (அ : *493*)

**சூன் மழை - கருக்கொண்ட மழைகள்.** *எண்ணிற் சூன் மழை அல்ல.* (யுத் : *3708*)

**சூன் முகில் – கருக்கொண்ட மேகம்.** *சூன் முகிலின் நீர்த்தாரையின் அம்பவர் நீட்டினரால்.* (யுத் : *2913*)

**சூன்று – தோண்டி.** *சுரிகையிற் கண்மலர் சூன்று நீங்கினர்.* (அ: *470*)

**சூனிறக் கொண்மூ – சூல்நிறக் கொண்மூ. கருவைத் தன் உடலிற் கொண்ட மேகம்.** *சூல்நிறக் கொண்மூக் கிழித்திடை துடிக்கும் மின்னென மார்பினூல் விளங்க.* (சு : *411*)

# செ

**செக்கர் – 1. செவ்வானம்.** *எரி நிறச் செக்கர்.* (பா : *625*)

**2. சிவந்த. சிவப்பு நிறம்** *குருதிச் செக்கர்ச் சுவடுறப் பொலிந்த தோளான்.* (யுத் : *900*) *சிகை நிறக் கனல் பொழிதெறுகட் செக்கரான்.* (யுத் : *2283*)

**செக்கர் அந்தி – செவ்வானம் ஒளிரும் அந்திப்போது.** *செக்கர் அந்தி வந்தென.* (யுத் : *1567*) *செக்கர் சூடிய கந்தரக் கயிலையை நிகர்க்கும் காட்சியான்.* (ஆ : *904*)

**செக்கர் நிறத்தெரி குஞ்சி – செவ்வானின் நிறங்கொண்டு தீப்போலத் தோன்றும் செம்மயிர்.** *செக்கர் நிறத் தெரி குஞ்சிச் சிரக்குவைகள் பொருப்பென்ன உக்கனவோ முடிவில்லை.* (பா : *747*)

**செக்கர் மேகம் – செவ்வானம். சிவப்பு நிறமான மேகம்.** *செக்கர் மேகத்துச் சிறுபிறை நுழைந்தன செய்கைய வலிசிந்தி உக்க பற்குலம்.* (யுத் : *219*)

**செக்கர் வார் கூந்தல் – சிவந்த நீண்ட அளகம்.** *செக்கர் வார் கூந்தல் அணங்கு வெள்ளெயிற் றரக்கியர்.* (யுத் : *2313*)

**செக்காரம் - தேமாமரம். [ஸஹகாரம்]** *செக்காரத்தின் கற்றையந் தளிர்கள் என்ன.* (யுத் : *799*)

**செகதண்டம் - உலகம்.** *செகதண்ட முழுதுக் காதிபர்களாய்.* (பாயி : 20) [பா : பே]

**செகதல மகள் - பூமிதேவி.** *செய்ய மாமகளு மற்றச் செகதல மகளுஞ் சற்றும் நையுமாறின்றிக் காத்தான்.* (யுத் : 4356)

**செகதல மடந்தை - பூமிதேவி. நிலமகள்.** *செகதல மடந்தையோடும் இவ்வுலகத்துளோர்கள்.* (யுத் : 4277)

**செகுத்தல் - 1. மாய்த்தல்.** *பூவெழு மழுவினால் பொருது போக்கிய சேவகன் சேவகம் செகுத்த சேவகற்கு.* (அ : 77)

**2. மாய்த்தல். மாறுகொள்ளுதல்.** *சீதம் வீங்குவரியைச் செகுக்கு மாறுரு காதி காதலன் தரு கடல்.* (கி : 5)

**செங்கட்கார் - சிவந்த கண்ணையுடைய மேகம்போன்ற யானை.** *செங்கட் காரெலாம் துமிந்த.* (யுத் : 1112) (யுத் : 2121)

**செங்கட் சீயம் - கண்கள் சிவக்கப்பெற்ற சிங்கம்.** *சிரித்தது செங்கட் சீயம்.* (யுத் : 257)

**செங்கண் - சிவந்த கண்** *செங்கண் வெங்கை மா.* (கி : 2)

**செங்கண் மால் - திருமால்.** *செங்கண் மால் பிறந்தாண்டு அளப் பருங் காலம் திருவின் வீற்றிருந்தனனென்றால்.* (பா: 98) (பா: 434)

**செங்கண் மீன் - சிவந்த கண்களைப் படைத்த மீன்கள்.** *செங்கண் மீன் கொம்பொடும் பரவையிற்றிரியுங் கொட்பென.* (யுத் : 2446)

**செங்கணாயகன் - இராமபிரான்.** (யுத் : 2577)

**செங்கணான் - 1. திருமால்.** *வாழ்த்தொலி கேட்ட செங்கணான் யோக நீங்கினனென இளவல் ஓங்கினான்.* (யுத் : 2759)

**2. தாமரைக் கண்ணன். (இலக்குவன்)** *யாருமச் செங்கணானைப் பூண்டனர் தழுவிப் புக்கார்.* (யுத் : 3597)

**செங்கணேற்றவன் - சிவந்த கண்களைக்கொண்ட, இடபத்தைக் கொண்ட சிவபெருமான்.** *செங்கணேற்றவன் செறி சடைப்பழுவம்.* (பா : 509)

**செங்கதிர் - சூரியன்.** *திங்களோ அன்று செங்கதிர்.* (ஆ : 690)

**செங்கதிர்ச் செல்வன் - 1. சூரியன். சிவந்த கிரணங்களையே செல்வமாகக்கொண்ட சூரியன்.** *தீயையுந் திக்குந் தெய்வச் செங் கதிர்ச் செல்வன் சீறி.* (கி : 999) (யுத் : 436) (கி : 817)

**2. சூரியன் மகனான சுக்கிரீவன்.** *செங்கதிர்ச் செல்வன் செய்த வென்றியை நிறையத் தேக்கி.* (யுத் : 890)

**செங்கதிர்ச் செல்வன் செம்மல் - சூரியன் மகனான சுக்கிரீவன்** (யுத் : 436)

**செங்கதிர்ச் செல்வன் சேய் – சுக்கிரீவன்.** (யுத் : 4082)

**செங்கதிரவன் – சூரியன்.** *செங்கதிரவன் சிறுவனே.* (யுத் : 859)

**செங்கதிரோன் – சூரியன்.** *செங்கதிரோன் ஊரொடு படிந்தன னெத்து.* (யுத் : 3455)

**செங்கமல பாதம் – சிவந்த தாமரை மலர் போன்ற பாதங்கள்.** *தூய செங்கமல பாதம் தோய்தொறும் குழைந்து தோன்றும்.* (கி : 55)

**செங்கயல் – சிவந்த கயல்மீன்.** *செங்கயல்போற் கரு நெடுங்கண்.* (ஆ : 343)

**செங்கழுநீர் – செங்கழுநீர்ப்பூ.** *நாறு வளர்க்குறும் நாறு நாறுவ செங்கழு நீரரோ.* (கி : 941)

**செங்களம் – சிவந்த போர்க்களம்.** *தெம்முறை துறந்து வென்ற செங்களம்.* (யுத் : 2168) *காகப் பந்தர்ச் செங்கள மெங்கும்.* (யுத் : 3548)

**செங்கனகம் – செம்பொன்.** (கி : 114)

**செங்கனல் - செந்தீத்திரள்.** *செங்கனல் வெண்மயிர் செல்ல.* (கி: 287)

**செங்கனிவாய் – கொவ்வைப்பழம் போன்ற சிவந்த அதரத்தையுடைய வாய்.** *சிலைக்கோட்டு நுதற்குதலைச் செங்கனிவாய்க் கரு நெடுங்கண்.* (பா : 735) (ஆ : 708)

**செங்கான் மடவன்னம் – சிவந்த அடிகளையுடைய இளமைவாய்ந்த அன்னம்.** *செங்கான மட அன்னம்போல் பாய்புனல் மடவார் படி நெடு நாடவை போனார்.* (அ : 625)

**செங்கிடை – 1. கிடேச்சு. செந்நிறமான நெட்டி. (உவ) அதரம்.** *வண்டின் கேளொடு கிடந்த நீலச் செங்கிடையுங் கொண்டு.* (பா : 577) (யுத் : 2787)

**2. செங்கிடை மலர்.** *சேடுறு நறுமுகை விரிந்த செங்கிடை.* (கி : 557)

**செங்கிடைச் சிகழிகை – கிடேச்சால் அமைந்த வாசிகை. (சிகழிகை – செங்கிடேச்சு முதலியவற்றால் நெற்றியிற் சூழச் சூட்டுவதும் குஞ்சங்களுடையதுமான மாலை).** *செங்கிடைச் சிகழிகைச் செம் பொன் மாலையும்.* (பா : 1296)

**செங்குங்குமம் – சிவந்த குங்குமம்.** *கலவை சாந்து செங்குங்குமம்.* (அ : 761)

**செங்குருதி – சிவந்த இரத்தம்.** *செங்குருதியன்ன செறி குஞ்சியர்.* (சு : 165)

**செங்குழற் கற்றை** — சிவந்த கூந்தலின் திரள். *செங்குழற் கற்றை சோரத் தெரிவையர் அரற்ற.* (யுத் : 2117)

**செங்கேழ் நிறம்** — செந்நிறம். *வெண்மதி செங்கேழ் நிறம் விம்மி மாருேர் வெய்யோன் மண்டிலம் ஒக்கின்றது காணீர்.* (யுத் : 3563)

**செங்கை** — இயல்பாகவே சிவந்த (அழகிய) கை. *செங்கையுங் கொட்டிச் சிரிப்பரால்.* (யுத்: 3202) *செங்கைகள் கூப்பி.* (யுத்: 4298) (சு : 638)

**செங்கை தாங்கிய சிரம்** — சிவந்த கைகளைத் தாங்கிய தலை. தலையின் மேற் கையை வைத்த துக்கநிலை. (யுத் : 1518)

**செங்கை பற்றுதல்** — செவ்விய கையால் பற்றுதல். *மங்கையர்க்கு விளக்கு அன்னமாதையும் செங்கை பற்றினன்......... கங்கையின் ஆடிருன்.* (அ : 633)

**செங்கோனெறி** - நீதிதவருத அரசாட்சிமுறை. *திண்மையுஞ் செங்கோல் நெறியுந் திறம்பாத உண்மையு மெல்லாம் உடனே கொண்டேகினையே.* (அ : 1131)

**செச்சை** — 1. சட்டை. *வீரர் உதிரத்திஞேளிர் செச்சையிஞேடே.* (ஆ : 9) *சிந்தாரத்தின் செச்சை.* (கி : 175)

2. செஞ்சந்தனக் குழம்பு. செங்குழம்புப் பூச்சு. *சிந்து ரத்தந்து தைந்தெழு செச்சையான்.* (யுத்: 961) *செச்சை மறுவுற்ற அலங்கன் மார்பர்.* (யுத் : 4283)

**செஞ்சடைத் தலைவர்** — சிவந்த சடையையுடைய முனிவர். *துன்று செஞ்சடைத்தலைவரும் சுற்றமும்.* (சு : 1160)

**செஞ்சடை முதலோன்** — செஞ்சடைக் கடவுளாகிய சிவபெருமான். (யுத் : 3034)

**செஞ்சரம்** — சிவந்த அங்கியங்கணை. *அஞ்சன வண்ணன் ஆழியிலே வுஞ் செஞ்சர மென்னச் சென்றது.* (யுத் : 2816)

**செஞ்சவே** — 1. மிகவும் செம்மையாக. *செஞ்சவே செருமுகத்தமர் செயும் திறனிலா வஞ்சர்.* (பா : 348) *பாதமஞ்சமலர் செஞ்சவே படர்வரென் படைஞர்.* (யுத் : 547)

2. நன்ருக. *செஞ்சவே நெடு மரகதப் பாறையில் தெரிவ.* (அ: 756)

3. கோணுதலின்றி. *செஞ்சவே நீண்டு.* (பா : 1216)

**செஞ்சவே படர்வர்** — நேராக நடப்பார். (யுத் : 547)

**செஞ்சாந்தம்** — செஞ்சந்தனக் குழம்பு. *தெய்வ நாறு செஞ்சாந்தமும் சேர்த்திஞன்.* (யுத் : 1293)

**செஞ்சிதல் — செந்நிறமான கறையான்.** *இராவணன் வளர்க்கும் அவ்வனல் ஈண்டிப் பிறந்தவால் இனங்கொள் செஞ்சிதல்.* (சு : 371)

**செஞ்சுடர்க் கடவுள் — செங்கிரணங்களுள்ள சூரியன்.** *செஞ்சுடர்க் கடவுளென்னத் தேரிடைச் சென்று சேர்ந்தான்.* (பா : 1322) (கி : 901)

**செஞ்செவி — நல்ல அழகு. மிக்க அழகு.** *செஞ்செவி செழும் பவளம்.* (சு : 99)

**செஞ்செவிய கஞ்சம் — சிவந்த அழகுள்ள தாமரை.** *செஞ்செவிய கஞ்ச நிமிர் சீறடியளாகி.* (ஆ : 255)

**செஞ்செ வேலவர் — செம் செவ் வேலவர். மிகவும் செந்நிறமான வேலையுடையவர்.** *செஞ்செ வேலவர் செறி சிலைக் குரிசிலர்.* (கி : 488)

**செஞ் சேவகனர் — நேர்மையான வீரரானவர். (இராமபிரான்)** *செஞ் சேவகனர் நிலைநீர் தெரிவீர்.* (ஆ : 890)

**செஞ் சொலறிவாளர் — நூலறிவிற் சிறந்த புலவர்.** *தேசங் கலந்த மறையாளர் செஞ் சொலறிவாளர் என்றிம் முதலோர்.* (யுத் : 2215)

**செஞ்சோறு — செவ்விய சோறு. செஞ்சோற்றுக் கடன்.** *உண்ட செஞ்சோறு நோக்கார் உயிருக்கே உதவிசெய்தார்.* (யுத் : 2126)

**செடி — 1. நெருக்கம். ஒளி என்றும் ஆம்.** *செடியுடை நெடுநிழல்.* (அ : 1087)

**2. மரம்.** (வை. மு) (அ : 1087)

**செடில் — துர்நாற்றம். (செடி — துர்நாற்றம்; செடில் என வந்தது)** *செடில் ஒரு திக்கின் மாகால் பிடித்தோடுகின்றது.* (கி: 577) [பா: பே]

**செண்டாடுதல் — குதிரை ஓட்டத்திற்கென்று தனித்தமைக்கப்பட்ட வீதியில் ஐந்து கதியும் பதினெட்டு சாரியும் அமையப் பழக்குதல். இது வையாளிபோதல் என்றும் வழங்கும். இந்த வீதி வையாளி எனப்படும்.** *வாலுளைப் புரவியில் பொருவில் செண்டாடிப் போர்க் கலை தெரிதல்.* (பா : 160)

**செண்டியங்கும் பரி — செண்டு வெளியில் திரிகின்ற குதிரைகள்.** *வாளியில் வாவுறும் செண்டியங்கும் பரியும் செறிந்தவே.* (அ : 809)

**செண்டு — செண்டு வெளி. வையாளி வீதி.** *வாளியின் வாவுறும் செண்டு.* (அ : 809)

**செண்டை — ஓர் இசைக்கருவி.** (யுத் : 2397)

**செத்த மரம் — சத்தில்லாத மரம். பட்டுப்போன மரம்.** *மூலப் பொத்தற் செத்தமரத்தேழ் முதலுக்கும்.* (யுத் : 2608)

**செத்திய இருள்** — அழித்த (செறிந்த) இருள். *செத்திய இருள் இன்றாக விளங்கிய செயலை நோக்கி.* (யுத் : 2709)

**செதுகுதல்** - அழித்தல். தவறுதல். *செதுகாப் படை.* (யுத் : 3022)

**செதுகை** — 1. போர்செய்தல். (வயிரம்) *செதுகைப் பெருந்தானவர்.* (யுத் : 1974)

2. கொல்லுகை. (உ. வி) (யுத் : 1974)

**செதுத்தல்** — 1. அழித்தல். *செதுகாப்படை.* (யுத் : 3022)

2. சோர்தல் (வை. மு) சிதைவுற்று அழிதல். (அண்) *செதுநெறி நிலையினரே.* (யுத் : 762)

**செதுநெறி** — தீய நெறி. (யுத் : 762)

**செதுநெறி நிலையினர்** — பட்டுவீழும் நிலையினர். (வை. மு) சோர்கின்ற நிலையினர். (உ. வி) தீய நெறியில் நிலைத்து நிற்பவர். (கலா) சிதைந்தழியும் கெடு நெறிகளில் நிற்பவர். (அண்) (யுத் : 762)

**செந்தமிழ் நாடு** — பாண்டிய நாடு. *இனிய தென்தமிழ் நாடு சென்றெய்தினர்.* (கி : 942) [பா : பே]

**செந்தயிர்க் கண்டம்** — சிவந்த தயிர்க்கட்டி. *செந்தயிர்க் கண்டம் கண்டம் இடையிடை செறிந்த சோற்றில்.* (பா : 50)

**செந்தலை** — செந்நிறத் தலை. *செந்தலைக் குலம்.* (யுத் : 3301)

**செந்தலை அன்றில்** — சிவந்த தலையையுடைய அன்றிற் பறவை. *சேவலோடுறை செந்தலை அன்றிலின் நாவினால் வலி எஞ்ச நடுங்குவாள்.* (ஆ : 300)

**செந்தழல்புரி செல்வன்** - செவ்விய எரியை ஓம்புதலையே செல்வமாக உடையவன் *செந்தழல்புரி செல்வன் திசைமுக முனி செவ்வே தந்தன உயிரெல்லாம் தன்னுயிரென நல்கும் அந்தணன்.* (அ : 711)

**செந்தளிர்க் கை** — சிவந்த தளிர்போன்ற கை. (யுத் : 4002)

**செந்தாமரை** — சிவந்த தாமரை. (பா : 407)

**செந்தளிர்க் கைகள்** — சிவந்த தளிர்போலுங் கைகள். (யுத் : 4002)

**செந்தறுகட்கார்** — அழிப்பனபோலத் தோன்றுகின்ற செந்நிறமுள்ள கண்களைக்கொண்ட யானை. *செந்தறுகட் கார் மேலுளர்.* (யுத்: 3471)

**செந்தனிக் கோல்** — ஒப்பற்ற செங்கோல். *நாதன் பாதுகம் செந்தனிக் கோன்முறை செலுத்த.* (அ : 1205)

**செந்தனிச் சுடரோன்** — செம்மை நிறம் வாய்ந்த ஒப்பற்ற கதிரவன் மைந்தன். *செந்தனிச் சுடரோன் சேய்.* (யுத் : 971)

**செந்தாமரைக்காடு – செந்தாமரைத் தொகுதி.** *மீட்டெழுந்து விரிந்த செந்தாமரைக் காட்டை வென்றெழு கண்கலுழிப் புனல்.* (யுத்: 4133)

**செந்தாமரைத்'தடங்கண் – செந்தாமரை மலர்போன்ற பெரிய கண்கள்.** *செந்ததமரைத் தடங்கண் செவ்வி அருள் நோக்கம் அந்தோ பெறுதுமோ ஆவிதியேயோ என்பார்.* (அ : 467)

**செந்தாமரைப் பொகுட்டு – செந்தாமரை நடுவிலுள்ள கொட்டை.** *செந்தாமரைப் பொகுட்டிற் செம்மாந்து வீற்றிருக்கும் நந்தா விளக்கை.* (யுத் : 294)

**செந்திருமுகம் – சிவந்த அழகிய முகம்.** *கதிரெழுந்தனைய செந்திரு முகக் கணவன்மார்.* (சு : 972)

**செந்தீ – 1. செந்நிறத் தீ.** *இவற்கு உரிமை செய்யும் நாளில் செந்தீயில் ஆவினீத்திர்.* (அ : 607) (யுத் : 831)

**2. சிவந்த தீப்பொறி.** *செந்தீச்சிந்த அடித்தாள்.* (சு : 185)

**செந்தீ மறை வாணன் – செந்நிறமுடைய தீயில் ஓமம்செய்யும் வேதம் வல்ல அந்தணன்.** (யுத் : 3719)

**செந்து – ஒரு பண்.** *செந்தொக்கும் சொல்லினுர்.* (யு : 3182)

**செந்துகில் – செந்நிறத்துகில்.** *சேணுறு திவலையால் நனைந்த செந்துகில்.* (யுத் : 633)

**செந்துவர் - செம்மை நிறம்.** *செந்துவர் அழிதரத் தேறல் மாந்தி* (பா : 161)

**செந்தேன் – 1. செந்நிறமுள்ள தேன்.** *முருகு செந்தேனினை முறை நின்றும் வாங்கி.* (அ : 746)

**2. செந்நிறமான கள்.** *செந்தேன் பருகுத் திசைதிசையும் நீ வாழ.* (யுத் : 1667)

**செந்நாகம் – இராகு.** (வை. மு) **கேது.** (கலா) *செந்நாகம் விழுங்கிய திங்கள்.* (யுத் : 2926)

**செந்நிறம் - சிகப்பு நிறம்.** *பதாகைப் பரப்பெலாம் செந்நிறத்தனவாய் நிறந்தீர்ந்தவே.* (யுத் : 992)

**செந்நீர் – உதிரம்.** *செந்நீர்ப் புணரி.* (யுத் : 1395)

**செந்நெல் – செந்நெற் பயிர்.** *நட்ட செந்நெலின் நாறு வளர்க்குமே.* (பா : 57)

**செந்நெலங் கழனிக்கானம் - செந்நெற் பயிரையுடைய அழகிய கழனிக்காடு.** *கரும்பலர் செந்நெலங் கழனிக்கான நாடு.* (அ : 908)

**செந்நெலங் கழனி நாடன் – நல்ல நெல் விளையும் வயல்களையுடைய நாட்டையாண்டவன். சனகன்.** (ஆ : 669)

**செந்நெறி - ஒழுங்கான மார்க்கம். சன்மார்க்கம்.** *நீதித் திறந் தெரிந்துலகம் பூணச் செந்நெறி செலுத்தி.* (சு : 1123)

**செந்நெறிச் செல்வர் - முனிவர்கள். நன்னெறியே செல்வமாகக் கொண்ட முனிவர்கள்.** *உவந்தெதிரெழுஞ் செந்நெறிச் செல்வரோ டன்றுறைந்து.* (பா : 345)

**செப்பகல் - செம்பினுற் செய்யப்பட்ட அகல்.** *வெந்த செப்பகல் வெண்ணெய்.* (யுத் : 2270)

**செப்பம் - 1. வார்த்தை.** *நேர்படப்புலவர் போற்றும் சினைவரால் பகழி ஆவம் நெற்சினை என்னும் செப்பம்.* (கி : 778)

**2. நன்மை.** *செப்ப மிக்காள்.* (ஆ : 868)

**செப்பமிக்காள் - நன்மைக்குணம் மிக்கவளாகிய பிராட்டி.** (ஆ : 868)

**செப்பல் - 1. சொல்லுதல்.** *சென்றது முதலாவந்திறுதியாகச் செப்பற் பாலை.* (சு : 1251) *செவ்வியிற் றொடர்ந்த வல்ல செப்பலை.* (யுத் : 3877)

**2. செப்பற்க.** *ஐய நீ சிரிய வல்லன செப்பல்.* (அ : 576)

**செப்பலை - சொல்லாதே.** (யுத் : 3877)

**செப்பிற்று - பகர்ந்தது.** *என் இச்சிறுமை நீ செப்பிற்று.* (யுத் : 1252)

**செபபினை தருதி - சொல்லிப் பின்பு அறிவிப்பாயாக.** (யுத் : 130)

**செப்பு - 1. இரத்தினச் சிமிழ்.** *செப்பென்பென் கலசமென்பென்.* (கி : 786)

**2. செம்பு.** *செம்பிற் செம்புனல் தோய்ந்த.* (யுத் : 989)

**செப்புதல் - சொல்லுதல்.** *இவட் சிறி நின்றிது செப்புகின்றேனலேன்.* (பா : 407) *செப்புறு.* (யு : 3934) *செப்பினன்.* (யுத் : 3934) *செப்பினை தருதி.* (யுத் : 930) *செப்புதி தெரிய.* (யுத் : 1272)

**செப்புருக்கு - செம்பினை உருக்கின உருக்குநீர்.** *செப்புருக்கெனத் தெரிந்தது.* (யுத் : 2305)

**செப்புறு - சொல்லுவாய்.** *தோகைபாற் செப்புறிப்படி போயெனச் செப்பினன்.* (யுத் : 3934)

**செம்பராகம் - தாமிரத்தினது செந்நிறம்.** *செம்பராகம் படச் செறிந்த கூந்தலாள்.* (ஆ : 233)

**செம்பால் - இரத்தம்.** *வழி செம்பால் பொத்தின நதியின் கிளர்படி பொத்தின.* (ஆ : 457)

**செம்பிட்டுச்செய்த இஞ்சி-செம்புகொண்டு செய்த மதிள்** *செம்பிட்டுச் செய்த இஞ்சித் திருநகர்ச் செல்வந்தேறி.* (யுத் : 1378)

**செம்பு – 1. செம்புக் குழம்பு. உருக்கிய செம்பு.** *செம்பு காட்டிய கண்ணிணை பாலெனத் தெளிந்தீர்.* **(ஆ : 512)**

**2. செந்நிறம்.** *செம்புகச் சுடர் வேற்கணஞ் செல்லவே.* **(யுத்: 981)** *செம்பொடு திரத்திரையாழி. (யுத் : 3457)*

**செம்புக – செந்நிறம் தோன்றும்படி.** *(யுத் : 982)*

**செம்பு காட்டிய கண்ணிணை – உருக்கிய செம்பின் இயல்பைத் தோற்று வித்த இரு கண்களும். (ஆ : 512)**

**செம்புணீர் – இரத்தநீர். செந்நிறமுள்ள இரத்தம்** *சேனைபட்டது பட்டது செம்புணீர்.* **(யுத் : 1012)** *இருவிர் செம்புணீர் கொடு கடன் கழிப்பேன் என்று தெரித்தான்.* **(யுத் : 2158)**

**செம்புனல் – இரத்தம்.** *அழி செம்புனல். (யுத் : 3363) செம்புனற் சுவடு. (யுத் : 2383)* **(யுத் : 989)** *ஊறுபடு செம்புனல்.* **(யுத் : 857) (யுத் : 1206)** *(யுத் : 2153)*

**செம்பொத்த குருதி தேக்கி – தாமிரம் போன்ற செந்நிறமுடைய இரத்தத்தைக் குடித்து.** *(யுத் : 256)*

**செம்பொற் கவசம் – செம்மையான பொன்னாலியன்ற கவசம்.** *(யுத் : 2069)*

**செம்பொற் கோபுரம் – செம்பொன்னாலியன்ற கோபுரம்.** *சென்னி வான்தடவும் செம்பொற் கோபுரம்.* **(யுத் : 804)**

**செம்பொன் – செம்மையான பொன்.** *திருவடி இரண்டும் செம்பொன் மௌலியர். (யுத் : 4192)*

**செம்பொன் அரம்பம் – பிதாம்பரம்.** *அம்பரம் செம்பொன் உடுத்த நாயகன் தானென உணர்தலின்.* **(யுத் : 1172)**

**செம்பொன் கவசம் – செம்பொன்மயமான கவசம்.** *(யுத் : 2069)*

**செம்பொன் நாடு – தேவலோகம்.** *செம்பொன் நாட்டுள சித்தரைச் சிறையிடை வைத்தான்.* **(யுத் : 494)**

**செம்பொன் பருவரை – மேருமலை.** *செம்பொன் பருவரையும் நெடு வெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்.* **(பா : 742)**

**செம்மணி – 1. பதுமராகம்** *அவிர் செவ்வழிச் செம்மணித் தூணஞ் சேர்த்திய அவ்வெழில் மண்டபம்.* **(யுத் : 17)**

**2. செந்நிறமுள்ள இரத்தினம்.** *அரவின் செம்மணி விராய்.* **(ஆ: 16)**

**3. அரதனம்.** *(கலா)* **(யுத்: 17)**

**4. சிவந்த மாணிக்க மணிகள்.** *எரிசுடர் செம்மணி ஈட்டம்.* **(கி : 831)**

**செம்மணி பழுத்தமைந்தவாய்** – மாணிக்கமணிபோன்ற அழகு முதிர்ந்த வாய். (*யுத் : 471*)

**செம்மணி மகுட நீங்கித் திருவடி புனைந்த செல்வன்** - பரதன். (*யுத் : 444*)

**செம்மணி மகுடம்** – சிவந்த மாணிக்கம் பதிப்பிக்கப்பெற்ற முடி (*யுத் : 444*)

**செம்மயிர்** – சிவந்த நிறமுள்ள மயிர். *துன்னு செம்மயிர்ச் சுடர் நெடுங் கற்றைகள்.* (*சு : 1082*) (*யுத் : 2910*) *கருநிறச் செம்மயிர்க்காலன் தோன்றினன்.* (*பா : 625*)

**செம்மயிர்க் கருந்தலை** – செம்பட்டை மயிரையுடைய கரிய தலைகள். *விரிந்த செம்மயிர்க் கருந்தலை மலையென வீழ்ந்தான்.* (*ஆ : 453*)

**செம்மயிர்ச் சாலம்** – செம்பட்டை மயிர்த்திரள். செந்நிறம் வாய்ந்த உரோமத் தொகுதி *சூலமும் பாசமுந் தொடர்ந்த செம்மயிர்ச் சாலமும்.* (*ஆ : 409*)

**செம்மல்** – 1. பெருமையிற் சிறந்தோன். *நின் சிறுவர் நால்வரினும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி.* (*பா : 327*)

2. மகன். புத்திரன். *அருணன் செம்மல்.* (*ஆ : 184*)

3. தலைமையுடையோன். *சினம் கெழுவாட்கை ஓர் செம்மல்.* (*பா : 1089*) (*ஆ : 831*)

**செம்மலை** – 1. செந்நிறமான மலை. *கருமலை செம்மலை யனைய காட்சியர்.* (*ஆ : 191*)

2. செவ்விய மலை. *நிடதமென்னும் செம்மலை.* (*யுத் : 2680*)

**செம்மழை** – செம்மேகம். (*யுத் : 2475*)

**செம்மன்னர்** – நீதியுள்ள அரசர். *ஈவுதனை மேற்கொண்ட செம்மன்னர்.* (*பா : 771*)

**செம்மாண் தனிக்கோல்** – மாட்சிமை கொண்ட ஒப்பில்லாத செம்மையான ஆட்சி. (*பா : 168*)

**செம்மாத்தல்** – 1. மேலெழுந்து வளர்தல். இறுமாந்திருத்தல். *செம் மாந்த தெங்கின் இளநீரை.* (*பா : 991*)

2. மிகுந்த களிப்போடிருத்தல். *செந்தாமரைப் பொகுட்டிற் செம்மாந்து வீற்றிருக்கும் நந்தா விளக்கை.* (*யுத் : 294*)

**செம்மாமயிற் கோசலை** – செம்மைப் பண்புடைய மயில்போன்ற சாயலையுடைய கோசலை. *செம்மாமயிற் கோசலையுந் திகையா உணர்வோ வினளால்.* (*அ : 384*)

**செம்மாமலராள் – திருமகள்.** *செம்மாமலராள் நிகர் தேவியொடும்.* (ஆ : *79*)

**செம்மிய - நிறைந்த.** *பூழியிட்டுச் செம்மிய நிறைகுட மொத்தது இவ்வண்டம்.* (கி : *735*)

**செம்மிற்று - தூர்ந்தது. அடைத்தது** (கலா) *திசைதொறும் நின்ற யானை மதத்தொளை செம்மிற்றன்றே.* (பா : *867*)

**செம்முகக் கார் – சிவந்த புள்ளிகள் நிறைந்த முகத்தையுடைய மேகம் போன்ற யானை,** *செம்முகக் கார் மிசைக் கழிந்தது ஆர்கலி.* (அ: *865*) (யுத் : *1023*) (யுத் : *1321*)

**செம்முதல் – 1. தூர்த்தல். நிறைத்தல்** *செம்மிற்று.* (பா : *867*)

2. **மூடுதல்.** *பூழியிட்டுச் செம்மிய நிறைகுடம் ஒத்தது.* (கி : *735*)

**செம்மை – 1. நேர்மைப்பண்பு. நடுவு நிலைமை. செப்பம். நல்ல சிந்தனை. முறைமை.** *செம்மையில் திறம்பல் செல்லாத் தேற்றத்தார்.* (அ : *9*) *செம்மையி னின்றுயிர் துறந்து தீர்திரால்.* (யுத் : *1680*) *செம்மைசேர் உள்ளத்தண்ணல்.* (யுத் : *4097*)

2. **சீரிய தன்மை. செம்மைக்குணம். நற்குணம்.** *செவ்வழிப் பெருமை யென்றுரைக்கும் செம்மைதான்.* (சு : *589*) (சு : *560*)

3. **சிவந்த நிறம்.** *செறிவுறு செம்மைய தீயை ஓம்புவ.* (யுத்: *579*)

4. **இன்பச்செல்வம்.** *முலைக்குவையின் வைகிவாழ் செம்மை சேர் நிலத்தரசு.* (அ : *1175*)

5 **நீதி.** *செம்மன்னர்.* (பா : *771*) **கோல்வருஞ் செம்மையும்,** (பா : *1141*)

6. **வீடுபேறாகிய செம்பொருள்.** **இராமனென்னும் செம்மை சேர்** *நாமம்,* (கி : *308*)

**செம்மைத் தன்மை – சிவப்புத்தன்மை.** (யுத் : *3873*)

**செம்மை நன்மனத் தண்ணல் – பரதன். செம்மையாகிய நல்ல மனத்தையுடைய பரதன்.** *செம்மை நன்மனத் தண்ணல் செய்கையும் அம்மை திமையும் அறிதல் தேற்றினள்.* (அ : *911*)

**செம்மை பிடித்தல் – சாந்த குணத்தை மேற்கொள்ளுதல்.** *பின்னே செம்மை பிடிப்பானோ.* (சு : *655*)

**செம்மையவர் – உத்தமர். உத்தம யோகியர்.** *அம்மையினெடிம் மையை யறிந்து நெறி செல்லும் செம்மையவரென்ன நனி சென்றன துரங்கம்.* (பா : *918*)

**செம்மையின் ஆணி–நன்மைக் குணத்துக்கு உரையாணி போன்றவன். (பரதன்)** *சேனையர் தருமத்தின் தேவைச் செம்மையின் ஆணியை அன்னது நினைக்கலாகுமோ.* (அ : *1112*)

**செம்மையின் நிற்றல்** - நேர்மையான (வீரப்) பான்மையை மேற்கொண்டு நிற்றல். இனிச் செம்மையின்னின்று யிர்துறந்து தீர்திரால். (யுத் : 1680)

**செய்** - 1. வயல். வறியன் ஓம்பும் ஓர் செய்யெனக் காத்து. (பா : 179) செய்யார் புனல் நாடு. (யுத் : 2641)

2. உவம உருபு. பனிசெய் கை. (பா : 490) வரை செய் மும்மத வாரணம். (கி : 36)

**செய்க** - செய்வாயாக. அறனல்லவும் எய்தினுல் அது செய்கென்றே வினுல். (பா : 408)

**செய்கு** - செய்வேன். அமர் செய்கென வந்தனனுய். (யுத் : 1744) செய்கெனின். (ஆ : 745)

**செய்குதல்** - 1. கிரித்திரிமச் செய்தல். தேயத்தவர் செய்குதல் செய்திடினும். (யுத் : 1742)

2. செய்தல். பந்தனை செய்குதல் பணி நமக்கென. (யுத் : 621)

**செய்குதும்** - செய்வோம். செய்ம்முறை குற்றேவல் செய்குதும். (அ : 671)

**செய்குநர்** - செய்பவர். புரிபவர். தீய செய்குநர் தேவராய். (சு :117)

**செய்குவது** - செய்வது. என்ன செய்குவது எய்தினன் என்றனர். (கி : 605) (சு : 334)

**செய்குவான்** - செய்யச்சொல்லுபவன். செல்வகைக்குரிய வெல்லாம் செய்குவானென்ன. (ஆ : 1037)

**செய்குன்றம்** - செய்யப்பட்ட குன்று. சோலையல்ல பொன் செய் குன்றமே. (கி : 230) (யுத் : 801)

**செய்கை** - 1. முறை. உபாயம். சென்றெதிர் நிற்பதோர் செய்கை தேடுவாள். (ஆ : 252)

2. சீலம். ஒழுக்கம். மாதவம் யாவுமோர் செய்கை கொண்டு நடந்தென. (பா : 647)

3 வேலைப்பாடு. மெய்ப்பேர் தீட்டியது தீட்டரிய செய்கையது. (சு : 522) செய்கைதாம் வருந்தேர். (சு : 877)

4. செய்யத்தக்க உபசாரம். மாதவன் மைந்தன்பாற் செய்கை யாவுஞ் செய்து. (ஆ : 146)

5. செயல். மனமொழி மெய்களின் தொழிற்பாடு. இந் நன்னுதவி செய்கை. (சு : 553)

**செய்கை அன்னம் – 1. விளையாட்டுக்குச் செய்யப்பட்ட அன்னப் பறவைகள்.** *செய்கையன்னங்கள் ஏந்திய சேடியரென்ன.* (கி : *19*)

**2. சமைத்த பிரசாதங்கள். (பழையவுரை)** (கி : *19*)

**செய்கை செய்விதன்று – செய்கை நல்லதாக இல்லை.** (ஆ : *264*)

**செய்ஞ்ஞர் – செய்பவர்.** *அடுப்ப வரும்பழி செய்ஞ்ஞருமல்லர்.* (பா : *449*)

**செய்தல் – 1. ஈட்டல்.** *செய்துடைச் செல்வமோ.* (அ : *452*)

**2. அலர்தல்.** *நாட்செய்த கமலம்.* (ஆ : *1021*)

**3. கூடியிருத்தல்.** *தாட்செய்த கமலம்.* (ஆ : *1021*) [பா : பே]

**4. நிகழும்படி செய்தல்.** *செய்யலை,* (யுத் : *3048*) *செய்யப்படுகிற்றி.* (யுத் : *1726*) *செய்கிற்றி.* (யுத் : *1749*) *செய்யுமேல்.* (அ : *854*) *செய்கலேன்.* (கி : *221*) *யாரிது செய்யகிற்பார்.* (யுத் : *1099*) *செய்குதும்.* (ஆ : *671*)

**செய்தவம் - செய்யத்தக்க தவம்.** *செங்கண்மால் இருந்து மேனாட் செய்தவஞ் செய்ததன்றே.* (பா : *434*)

**செய்தவம் பயந்த வீரர் – தாம்செய்த நல்வினைப்பயன் கைகூடப்பெற்ற வீரர். சுக்கிரீவனும் விபீடணனும்.** (யுத் : *437*)

**செய்தவ மருந்தனான் – குற்றமற்ற தவத்தையுடைய தேவாமிர்தம் போன்ற வசிட்டர்.** (அ : *99*) [பா : பே]

**செய்தன குற்றம் – புரிந்தவாகிய தவறுகள்.** *யான்முன் செய்தன குற்றமும் உளவெனிற் பொறுத்தி.* (யுத் : *1316*)

**செய்தாயாகுதி – செய்தாய் ஆவாய்.** *செயல் எல்லாம் மறந்தாய் செய்தாயாகுதி.* (அ : *879*)

**செய்தி செய்தி – செவ்வாய் செவ்வாய் அடுக்கு இடைவிடாமை குறித்தது.** *செய்திசெய்தி சிலைகைக் கொண்டால் வெறுங்கை திரிவோரை நொய்தின் வெல்வதரிதோ.* (சு : *857*)

**செய்தியாதி – செய்தனை ஆவாய்.** *நம்பால் இவன் வந்து கண்ணிற் கண்ட அளவுரையாமற் செய்தியாதி என்றமையச் சொன்னான்.* (சு : *1158*)

**செய்திரு – செம்மையான செல்வம். அதாவது வீடுபேறு.** *செய்திரு வினையுற யான் எரிபுக நினைவேன்.* (ஆ : *111*)

**செய்திறம் – புரியவேண்டிய செயல். செயல்வகை.** *அன்றெனின் உளது வேறுமோர் செய்திறம்.* (யுத் : *1306*)

**செய்துடைச் செல்வம்** – பாக்கியம்புரிந்து அடைதற்குரிய செல்வம். (கலா) (அண்) நீயே சம்பாதித்த செல்வம் (வெ. ப) (அ : 452)

**செய்ந்நீர்மை** – செய்யத்தகும் நீர்மையுடைய செயல்கள். *செய்ந்நீர்மை செய்யேனெனச் சிந்தனை செய்து.* (சு : 45)

**செய்ய** – 1. செவ்விய *செய்ய திருமால்.* (யுத் : 3409)

2. சிவந்த *செய்ய கொழுந்தி.* (யுத் : 2817)

**செய்ய ஆடையள்** – செந்நிறமான ஆடையுடுத்தவள். (யுத் : 3393)

**செய்யக்கடவ செயல்** – இறுக்கவேண்டிய இறுதிக்கடன்கள். *செய்யக் கடவ செயற்குரிய சிறுவர் ஈண்டையாரல்லர்.* (அ : 606)

**செய்யகிற்பார்** – செய்ய வல்லவர். *யாரிது செய்யகிற்பார் என்று கொண்டிமையோர் ஏத்த.* (யுத் : 1099)

**செய்ய சிந்தைப் பேரருளாளர்** – செம்மையான மனமுடைய பெரிய அருளாளர். நல்ல எண்ணத்தையுடைய மிக்க அருளையுடைய பெரியோர்கள். *தீர்வரும் இன்னல் தம்மைச் செய்யினும் செய்ய சிந்தைப் பேரருளாளர் தத்தம் செய்கையிற் பிழைப்பதுண்டோ.* (யுத் : 434)

**செய்ய செங்கைத்தது** – செப்பம் பொருந்திய சிவந்த கையிலுள்ள விற்படை. (கி : 366)

**செய்ய தாமரை** – செந்தாமரை. *செய்ய தாமரை நாண்மலர்க் கைத்தலம் சேப்ப.* (யுத் : 2581)

**செய்ய தாமரைத்தாள்** – செந்தாமரை மலர்போலும் திருவடிகள். *செய்ய தாமரைத் தாள்பண்டு தீண்டலால்.* (அ : 642)

**செய்ய திருமால்** – செவ்விய திருமால். (கலா) செந்நிறமுள்ள திருமகள் நாயகனுகிய திருமால். (யுத் : 3409)

**செய்யப்படுகிற்றி** – செய்யப்படுவாய். *ஐயப்படல் அப்படி இப்படியிற் செய்யப்படுகிற்றி.* (யுத் : 1726)

**செய்ய பவளம்** – சிவந்த பவளத் துண்டுகள். *பாற்கடற் பிறந்த செய்ய பவளத்தைப் பஞ்சியூட்டி.* (கி : 776)

**செய்ய பாதம்** – சிவந்த பாதம். (அ : 786-a)

**செய்ய பெண்** – சிவந்த நிறமுடைய சீதை. செய்யவள். *செய்ய பெண்ணைக் கரிய பெண்ணைச் சில வைகல் தேடி.* (கி : 758)

**செய்ய மள்ளர்** – வயலிடத்தேயுள்ள உழவர்கள். *செய்ய மள்ளர் கமலத்தோடு நெல்லறுக்கும் திருநாடன்.* (யுத் : 3359)

**செய்ய மாமகள் — இலக்குமி. செவ்விய இலக்குமியாகிய மகள்.** *செய்ய மாமகளும் மற்றச் செகதல மகளும்.* (யுத் : 4356)

**செய்யர் — செந்நிறமுள்ளவர். செம்மையான பண்புவாய்ந்தவர்.** *செய்யரைச் சேர்ந்துளாருஞ் செய்யராய்த் திகழ்வரன்றே.* (பா: 1210)

**செய்யல் — செய்யாதே.** *நோவு செய்வன செய்யல்.* (கி : 421)

**செய்யவள் — திருமகள்.** *யான் செய் மாதவத்தின் வந்து செய்யவள் இருந்தாள் என்று.* (பா : 564)

**செய்யார் புனல் நாடு — வயல்கள் நிறைந்த நீர்வளம் மிக்க நாடு. கோசலம்.** (யுத் : 2643)

**செய்யாள் — திருமகள்.** *செய்யாள் என்னுந் திருவும்.* (அ : 360) [பா : பே]

**செய்கையிற் கொள்ளுந் தெள்ளமுதச் செஞ்சிலை — செய்களிலிருந்து வெட்டிக் கொள்ளப்படும் இனிய ரசத்தையுடைய கரும்பாகிய செந்நிற வில்.** *செய்யிற் கொள்ளுந் தெள்ளமுதச் செஞ்சிலையொன்று கையிற் பெய்யிற் காமனு நாணுங் கவினர்.* (பா : 1007)

**செய்யோன் — செம்மை நிறமுள்ளவன். (இலக்குவன்)** *செய்யோன் அயல்நின்ற தன்சிறு தாதையைச் செறுத்தான்.* (யுத் : 3053)

**செய்வது - வியங்கோள்.** (வை. மு) **தொழிற்பெயர்.** (அண்) *நம்பியை நளிமுடி சூட்டிநின்று நின்றது செய்வது.* (அ : 48) (அ : 1141)

**செய்வன — செய்யவேண்டிய கடன்கள்.** *செய்வன வரன்முறை திருத்திச் சேந்தநின் கையினுல் ஒழுக்குதி கடன் எலாம் என்ருன்.* (அ : 1143)

**செய்வித்தல் — புரிவித்தல்.** *அமரர் அச்சம் தீர்ப்பித்தீர் இன்னம் என்னென் செய்வித்துத் தீர்திர் அம்மா.* (யுத் : 1592)

**செய்வினை முற்றுதல் — செய்யவேண்டிய தொழில்களைச் செய்து முடித்தல்.** *செய்வினை முற்றி முற்ரு உடலுறு பாசம் வீசா.* (சு: 11)

**செய்வினை யுசாவுதல் — செய்யவேண்டிய செயல்களைக் குறித்து வினவுதல்.** *அரசன் செய்வினை உசாவினன்.* (யுத் : 54)

**செயல் - 1. அழகு** (வை. மு) **புதுமை.** (அண்) *ஆறிடு செயலுடைப் புதுமண் பொறப்பச் சிந்தியே.* (அ : 783)

**2. செய்கை. தொழில்.** *அத்திருவிலி வலிக்கொரு செயலின்றெங்களால்.* (பா : 190) (கி : 323) *தாய் செயல் அல்லவோ.* (அ : 854) *செயலாற்ரு.* (யுத் : 1662)

**3. விளைவு.** *தெய்வ வன் பாசஞ்செய்த செயல் இந்த மாயச் செய்கை.* (யுத் : 2179) [பா : பே]

4. **செய்யக்கூடிய கைம்மாறு.** செம்மையால் உயிர்தந்தாய்க்குச் செயலென்றால் எளியதுண்டோ. (சு : 560)

5. **செய்யாதே.** சமுக்கியர் மனக்கு நோய் செயல். (யுத் : 3956)

**செயலாற்று – செய்யமாட்டா.** திண்டினவாம் ஒன்றும் செயலாற்று வாம். (யுத் : 1663)

**செயலை – சோலை.** பணியுறு செயலைச் சிந்தி. (சு : 761) [பா : பே]

**செயற்பாற்று – செய்யத்தக்கது.** என்னுகின்றனன் என் செயற்பாற் றென்று. (அ : 520)

**செயிர் – 1. போர்.** செயிர்தரும் கொற்ற மன்னர். (பா : 25)

2. **வருத்தம்.** (வை. மு) செயிர் சேரா உள்ளம். (யுத் : 297)

3. **குற்றம்.** செயிரிலா உலகினில். (பா : 177) செயிரின்......... உந்தையை யாம் சீறி. (யுத் : 297)

4 **கோபம்.** செயிருறு மனத்தவாகித் தீத்திரள் சிந்த. (பா : 566)

5. **துன்பம்.** செயிர்த்தலைக் கொண்ட சொல் செவியிற் சேர்தலும். (ஆ : 814) செயிர் சேரா உள்ளத்தாய். (யுத் : 297)

6. **பகைமை** செயிரும் சிற்றமும் நிற்க. (யுத் : 3837)

7. **வலிமை.** செயிர் சுற்றிய படையான். (பா : 1361)

8. **வஞ்சகம்.** செயிர் தலைக்கொண்ட சொல். (ஆ : 814)

**செயிர்த்தல் – 1. கோபித்தல்.** (கலா) (அண்) செறிகழல் வீரரும் செயிர்த்து நோக்கினர். (ஆ : 186) செயிர்ப்பினும் அழகு செய்யும் திருமுகத் தணங்கு. (யுத் : 712) செயிர்த்து நோக்குறு. (யுத்: 3970) செயிர்த்த சிந்தையன். (யுத் : 4114)

2. **அயிர்த்தல்.** (வை. மு) (ஆ : 186)

**செயிரியர் – 1. பாணர்.** செயிரியர் மகர யாழின் தேம்பிழி தெய்வ கீதம். (பா : 789)

2. **பாடகர்.** (வை. மு) செயிரியர் கலைக்கண்ணால் அளந்த பாடல். (சு : 287)

**செயிரிலா உலகு – குற்றமற்ற உலகு.** செயிரிலா உலகினிற் சென்று நின்றுவாழ் உயிரெலாம் உறைவதோர் உடம்புமாயினான். (பா : 177)

**செரு – போர். யுத்தம்.** தாக்குறு செருவில். (சு : 8) செருவலி வீரன். (அ : 644) மறங்கிளர் செரு. (யுத் : 1309)

**செரு அமைதல் – போர் நிகழ்தல்.** அதிரும் வெஞ்செரு அன்ன தோன்றமைகின்ற அளவில். (யுத் : 2307)

**செரு ஆசை – போர்விருப்பம்.** (யுத் : 1712)

**செரு ஏற்றல் – போர் மேற்கொள்ளுதல்.** *மனிதரோடே யான் செரு ஏற்பல் என்றால்.* **(ஆ : 897)**

**செருக்கர் – மயக்கவறிவுடையவர்.** *செருக்குநர்த் தீர்த்தும் என்பார் தம்மினூர் செருக்கர் என்ன.* **(ஆ : 761)**

**செருக்கல் – 1. களிப்பு மிகுதல்.** *செருக்கும் வெங்கதிர்த் திங்கள்.* **(சு : 1203)**

**2. மிகுதல்.** *சீற்றஞ் செருக்கினர் படைகள் சிந்தி.* **(சு : 833)**

**செருக்களம் – போர்க்களம்.** *தலைகள் பத்தும் சின்னபின்னங்கள் செய்யச் செருக்களஞ் சேர்தல் நன்றே.* **(யுத் : 930)**

**செருக்கிய – நிறைந்த.** (கலா) *நீலஞ் செருக்கிய தெய்வ வாட்கண்.* **(கி : 791)**

**செருக்கினர் – செருக்குக் கொண்டவர்.** *செருக்கினர் வலியராகி நெறிநின்றார் சிதைவரென்றால்.* **(யுத் : 2860)**

**செருக்கு – 1. வலிமை. ஆற்றல்.** *தேவரின் பெற்ற நல் வரத்தினது என் பெருஞ் செருக்கேல்.* **(யுத் : 117)**

**2. மயக்கம்.** *செருக்கில் சிந்தையர்.* **(ஆ : 145)**

**3. கர்வம்.** (உ. வி) **(ஆ : 145)** *செருக்கி நின்றார்.* **(கி : 646)** *செருக்குவேம் திறத்துத் தருக்குமாய்வுற.* **(யுத் : 4030)**

**4. உற்சாகம்.** *தருக்குநர் செருக்குஞ் சிந்தையார்.* **(ஆ : 406)**

**செருக்குநர்த் தீர்த்தும் – களிப்புடையவனை அக்களிப்பினால் வரும் தீமை நீக்கிக் காப்போம்.** *செருக்குநர்த் தீர்த்தும் என்பார் தம்மினூர் செருக்கர்.* **(ஆ : 761)**

**செருக்குறுதல் – (செருக்குறல்) நிமிர்தல்** *நிறம் செருக்குற வாய் தொறும் நெருப்பு உமிழ்கின்றான்.* **(சு : 807)**

**செருக்கொடுத்தல் – போர் தொடுத்தல்.** *கோமான் தனிப்பெருந் தூதனும் எதிரே செருக்கொடுத்தான்.* **(யுத் : 1853)**

**செருகு – கூந்தல். முடித்துச் செருகப்படும் கூந்தல்.** (வை. மு) *செருகு உறும் கண்.* **(கி : 931)**

**செருகுதல் – சொருகுதல். உள் ஒடுங்குதல்.** *செருகுறுங் கணில்.* **(கி : 931)** (உ. வி)

**செருகுபூ – சொருகப்படும் உச்சிச் செருகு பூ.** **(யுத் : 3623)**

**செருகுறுங் கணில் – (செருகு உறும் கண்.) கூந்தல் வரையில் நீண்டு பொருந்திய கண்போன்ற.** (வை.மு) **உறங்குங்கால் உள்ளொடுங்கிய கண்களைப்போல.** (அண்) **மணிகள் இருபுறமும் சலிக்கின்ற கண்களைப்போன்று.** (கலா) **(கி : 931)**

**செருச் செய்தல் – போர் செய்தல்.** *இருந்திசையொடு திசை செருச் செய்தல் ஒத்தவே.* **(இ : 467)**

**செருத்தொழில் – போர்த்தொழில்.** (யுத் : 1448) **(யுத் : 3490)**

**செருந்தி – ஒரு பூச்செடி.** *செருந்தியின் மலர் தாங்கும் செறியிதழின சோகம்.* **(அ : 697)**

**செருநர் – பகைவர்.** *துனிவருஞ் செருநரான தேவரே துணைவராவார்.* **(யுத் : 1370)**

**செருப்படி – போர்க்களம்** (கலா) **செருப்பின் அடி.** (அண்) (வை. மு) *செருப்படியிற் படி ஒவ்வா மானிடர்.* **(ஆ : 329)**

**செருப்பதம்பெரு அரக்கர் – போரில் காலடி வைத்திருக்கப்பெருத அரக்கர். போர் செய்யும் செவ்வி பெருமல் வருந்தும் அரககர். (யுத் : 1430)**

**செருப்பு – 1. பாதுகை.** *தோலின் வினையுறு செருப்புக் கிந்தான் விரை மலர்த்தாளின் வீழ்ந்தான்.* **(யுத் : 4267)**

**2. மிதியடி.** *செருப்பினைத் தாங்கித் திலோத்தமை செல்ல.* (சு : 408) *தோற்செருப்பார்த்த பேரடியன்.* **(அ : 645)**

**செருப்புரிதல் – போர்செய்தல்.** *புரிந்தனர் நெடுஞ் செரு.* **(யுத் : 1484)**

**செருப்பெய்தல் – போர்புரிதல்.** *செருப்பெய் வானிடைச் சினக்கிடாய் கடாய்வந்து.* **(யுத் : 495)**

**செருப்பெருத் தினவுறு சிகரத்தோள் – போரைப் பெருமல் தினவுமிக்க மலைச் சிகரம்போலும் தோள். (ஆ : 411)**

**செரும – நெருங்க.** *மகரங்கள் மயங்கிச் செரும.* **(யுத் : 555)**

**செரு மங்கை – போர் மகள்.** *தெம்முனைச் செரு மங்கை தன் செங் கையால் அம்மனைக் குலமாடுவ போன்றவே.* **(யுத் : 3479)**

**செருமத யாக்கையர் – போர் செய்தற்குரிய செருக்கு வாய்ந்த உடம்பினையுடையவர். (இ : 827)**

**செருமலி வீரர் – போரில் மிக்கவீரர். போர்த்திறத்தில் மிகுந்த வீரர்.** *செருமலி வீரரெல்லாஞ் சேர்ந்தனர்.* **(யுத் : 782)**

**செரு முகம் – போர்முகம்.** *செரு முகத்துக் காத்தி என.* **(பா: 327)**

**செருமுதல் – நெருங்கல்.** *மகரங்கள் மயங்கிச் செரும.* **(யுத் : 555)**

**செருவம் – போர்.** *எதிருற்ற செருவத் துக்க வீரர்.* **(ஆ : 9)**

**செருவலி – போர்வலி.** *செருவலி வீரன்.* **(அ : 664)**

**செருவலி வீரன் – போர்வலி மிக்க வீரனுகிய தசரதன்.** *வீந்த செருவலி வீரன் என்னச் செங்கதிர்ச் செல்வன் சென்ருன்.* **(அ : 664)**

**செருவலோன் - போரில் வல்லவன்.** *செருவலோனே.* (*யுத் : 3192*)

**செருவில் தீர்தல் - போரில் உயிரிழத்தல்.** *சிலைத் தொழிற் குமரன் கொல்லத் தொல்லை நாட் செருவில் தீர்ந்தான்.* (*யுத் : 2515*)

**செருவீரர் - போர்செய்யும் வீரர்.** (*யுத் : 2998*)

**செரு வொருங்குதல் - போர் நெருங்கி நேர்தல்.** *இனிச்செரு வொருங்கியதெனின்.* (*யுத் : 102*)

**செல் - 1. மேகம்.** *செல்லிடைப் பிரிந்த செங்கனல்கள் சிந்தின.* (*கி : 459*)

**2. இடி.** *செல்லொடு மேகஞ்சிந்த.* (*சு : 828*) (*யுத்: 2289*)

**3. கரையான் புற்று** *யானைக் காற்பட்ட செல்லென ஒல்லையின் அவிந்தன.* (*யுத் : 523*) *இருந்த மாநிலம் செல்லரித்திடவும் ஆண்டெழாதாள்.* (*சு : 344*) [*பா : பே*]

**4. மின்னல்.** *செல்லோடெழு மாமுகில்.* (*யுத் : 3456*)

**செல் அரித்து எழல் - கறையான் அரித்துப் புற்றுண்டாதல்.** *செல்லரித்தெழவும் ஆண்டெழாதாள்.* (*சு : 344*)

**செல்கதி - சென்றடையும் புகலிடம்.** *யாவரும் எங்கள் செல்கதி வந்ததென்றேமுரு.* (*ஆ : 627*)

**செல்லகிற்கில நின்றில - ஓடிச் செல்லமாட்டாதனவாகி நிற்கின்றில. (நிற்கமாட்டாதவாய் ஓடின)** *எல்லையற்ற செங்குருதியினிர்ப்புண்ட வல்லாற் செல்ல கிற்கில நின்றில கொடிநெடுந் தேர்கள்.* (*யுத்: 1435*)

**செல்லல் - நடத்தல்.** *செல்லலுற்ற தாள்கள்.* (*யுத் : 3342*)

**செல்லா ஆயுளையாக - முடிவடையாத நீண்ட ஆயுளை உடையையாக.** (*யுத் : 3538*)

**செல்லலாவ அல்ல - எளிதில் நடந்து செல்லத்தக்கன அல்லாதன வாயின.** *மருண்ட மாமலைத் தடங்கள் செல்லலாவ அல்ல.* (*கி : 233*)

**செல்லிடம் - சொல்பலிக்குமிடம்.** *செல்லிடத்தல்ல தொன்றுரைத்தல் செய்கலா நல்லறிவாளர்.* (*கி : 557*)

**செல்லிய - சென்ற.** *செல்லிய செலவு.* (*அ: 969*) *செல்லிய போதினும்.* (*யுத் : 405*)

**செல்லிய செலவு - நடந்த நடை.** *செல்லிய செலவினுல் சிறிய திக்கெனச் சொல்லிய சேனை.* (*அ : 969*)

**செல்லுஞ் சொல் - கேட்டார் மனங்கொள்ளுமாறு திறம்படச் சொல்லும் சொல்.** *செல்லுஞ் சொல் வல்லான்.* (*அ : 432*)

**செல்லொன்று கணைகள் - இடியை ஒத்த கணைகள்.** (*யுத் : 3682*)

**செல்லுண்டாலன்ன கணை** - இடியை உட்கொண்டதை ஒத்த கணை. வில்லுண்டாகின் வெலற்கரி தாமெனுச் செல்லுண்டாலன்ன கணை சிந்தினுன். (யுத் : 3852)

**செல்லுதல் - 1. ஆராய்ந்தறிதல். புந்தி செலுத்தல்.** ஆன்ற தெய்வ அடுபடைகள் அஞ்சாது இவன் வயிற் செல்லின். (யுத் : 3881)

**2. சேர்தல்.** சேறி ஐய விரைந்தனே. (சு : 682)

**3. வெளிப்படுத்தல்.** செங்கனல் வெண்மணல் செல்ல. (கி : 287)

**4. போதல்** செல்லும் என்று. (கி : 506) செல்லிய போதினும். (யுத் : 405) செல்லகிற்றில. (யுத் : 1435)

**5. கழிதல்.** செல்லா இரவே. (சு : 492)

**செல்லுறு கதி - (உயிர்கள் பிறக்குமாறு) செல்கின்ற (நாற்) கதி.** செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்றவன்றே. (பா : 28)

**செல்வது - அடைதல்.** (வை. மு) **செல்லுதற்குரியது.** (அண்) பின் செல்வதில்லாப் பெருஞ் செல்வம். (ஆ : 1187)

**செல்வந்தீரா இசை - சிறப்பினின்றும் நீங்காத இசை.** எல்லையில் செல்வந்தீரா இசையெனப் பழுதிலாத பல்லலங்காரப் பண்பே காகுத்தன் பகழிமாதோ. (யுத் : 1240)

**செல்வம் - 1. சிறப்பு.** செல்வம் தீரா இசை. (யுத் : 1240) பின் செல்வதில்லாப் பெருஞ் செல்வம். (ஆ : 1187)

**2. செல்வம்.** செல்வப் பெருமையும் எய்தி வாழ்தி. (யுத் : 1367)

**செல்வன - சங்கமம்.** நிற்ப செல்வன. (அ : 942)

**செல்வி - திருமகள்.** பங்கயச் செல்வியை மனத்துப் பாவியா. (ஆ : 254)

**செல்வு - செல்வது.** செல்வரிதாம்வகை சரக்கொடு நெடுமதில் சமைத்திட்டானரோ. (யுத் : 3427)

**செல - முடிய. முற்ற.** கரந்து நின்ற தன்மையை அது செலக்கருதும். (யுத் : 536)

**செலக் கருதுதல் - முழுவதும் ஆராய்ந்தறிதல். முற்றிலும் உணர்தல்.** (யுத் : 536)

**செலசரம் - நீர் வாழ்வன.** தெருட்டிடு மாது இனை ஈந்தாள் செலசர மாகிய பலவும். (ஆ : 204)

**செல நோக்குதல் - கூர்ந்து நோக்குதல்.** ஐய செவ்வே செல நோக்குதி. (கி : 268)

**செலவிடு செலவிடு - செல்லவிடு செல்லவிடு.** செலவிடு செலவி டென்ருன் சூதனுமுடுகத் தூண்டச்சென்றது துரகத்திண்டேர். (யுத் :3683)

**செலவிடுதல் - செல்லும்படி எரிதல்.** முவிலே வேலேச் செலவிட்டாள். (சு : 182)

**செலவு - 1. விரைவு.** அன்னசிறைமுன் அவரொடேகு செலவத்து உவணன் என்னு நெடு மன்னவன். (ஆ : 38)

2. **நடை.** அன்னச் செலவிற்படிமே லயல்சூழ் பொன்னிற் பொலிவார். (ஆ : 76)

3. **மேலே செல்லுதல். வழிநடத்தல்.** செலவு தீர்ந்துளார். (கி : 901)

**செலுத்தல் - செல்லவிடுதல். செலுத்துதல்.** செலுத்துவதல்லால். (கி : 743) செல்லும் என்று எளிவந்தோர்மேல் செலுத்தலும் சீர்மைத்தாமே. (கி: 506) கானிடைச் செலுத்திஞட்கு. (யுத்: 4052)

**செலூஉம் - செல்லும்.** கடற் செலூஉம் வங்கம். (யுத் : 1014)

**செவ்வரம் - நல்ல வரம்.** இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தை யாலுந் தொடேன் என்ற செவ்வரந் தந்த வார்த்தை. (சு : 640)

**செவ்வரி - சிவந்த ரேகைகள்.** குருதி வாளெனச் செவ்வரி பரந்த கட்குயிலே. (அ : 739)

**செவ்வழி - 1. நன்னெறி. நல்வழி. தருமமார்க்கம்.** செவ்வழி யுள்ளத் தண்ணல். (அ : 1030) செவ்வழிப் பெருமை என்றுரைக் கும் செம்மை. (சு : 589)

2. **நேர்வழி. சிறந்தவழி. முறை.** செவ்வழிச் சேறலாற்ருர். (சு : 830)

3. **சிவப்புநிறம்.** செவ்வழி நயனம் செல்லும் நெடுவழி சேறுசெய்ய. (சு : 572)

4. **முல்லே நிலத்துக்குரிய பெரும் பண். மாலேக்காலத்துக்குரியது.** தும்பி காலேச் செவ்வழி முரல்வ சோலே. (பா : 45)

5. **செவ்வி வழிகை. அழகு திரளுகை.** செவ்வழிச் செழுமணித் தூணம். (யுத் : 17)

6. **செவ்விதாக விளங்குமாறு.** செவ்வழி உணர்வு தோன்றச் செப்பினம். (யுத் : 1582)

7. **நல்வழி.** செவ்வழித்தன்று நஞ்செயல். (அ : 1195)

8. **நேரே வழிதல்.** செவ்வழி நீருடன். (யுத் : 1317)

**செவ்வழி அறிஞன்** – நல்ல வழியிற் செல்லும் அறிவாளனாகிய விபீடணன். (யுத் : 474)

**செவ்வழித்தன்று** – நல்ல வழியில் நிறைவேறாது. (அ : 1195)

**செவ்வழி நீர்** – நேரே வழிகின்ற கண்ணீர். (கலா) (வை. மு) செம்மை அழிந்த நீர். அன்பு காரணமாக வந்த அழுகை நீர். (அண்) (யுத் : 1317)

**செவ்வழிப் பெருமை** – நன்னெறி வாயிலாக எய்தும் பெருமை. (அண்) நல்ல குணமாகிய பெருந்தன்மை. (வை. மு) (சு : 589)

**செவ்வழியுணர்வு தோன்ற** – நேர்மை வழியிலே ஒழுகும் வீர உணர்வு தோன்ற (அண்) நன்றாக உணர்விலே விளங்குமாறு. (வை, மு) (யுத் : 1582)

**செவ்வழியுருட்டுதல்** – நேர்மையான வழியிற் செலுத்துதல். *செவ்வழி யுருட்டிய திகிரி மன்னவன்.* (அ : 843)

**செவ்வழியுளளம்** – செவ்விய நெறியிற் செல்லுகின்ற உள்ளம். *செவ்வழியுள்ளத் தண்ணல் தென்றிசை செங்கை கூப்பி.* (அ: 1040) (கி : 56) (கி : 63)

**செவ்வன்** – சரியான நிலை. நேரே. *திரிந்தன உலகமும் செவ்வன் நின்றன,* (யுத் : 4008)

**செவ்வன் நிற்றல்** – சரிவர நிற்றல். (யுத் : 4008)

**செவ்வாய்** – செவ்வாய் என்னும் கிரகம். *கொழுஞ்சுடர் மீன்கள் யாவும் செவ்வாயை நிகர்த்தன.* (கி : 281)

**செவ்வாய்ப் பைங்கிளி** – சிவந்த அழகிய வாயினையும் பசுமைநிறம் வாய்ந்த உடலினையுமுடைய கிளி. *சேந்தொளி விரி செவ்வாய்ப் பைங்கிளி செறி கோலக் காந்தளின் மலரேறிக் கோதுவ.* (அ: 694)

**செவ்வாயூறல் மாந்தல்** – சிவந்த வாயில் ஊறும் நீரினைப் பருகுதல். *செவ்வாய் ஊறல் மாந்தினர்.* (சு: 126)

**செவ்வி** – 1. செம்மை. நடுவு நிலைமை. *சிற்றமில்லை தம் சிந்தையிற் செவ்வியால்.* (பா : 70)

2. வடிவழகு. *செவ்வியாள்.* (ஆ : 860) *செவ்விய புட்பகம்.* (யுத் : 4256) *திருமகள் செவ்வி கேளா.* (ஆ : 669) *களிப்பினை யுணர்த்தும் செவ்விக் கமலங்கள்.* (பா : 578)

3. பருவச் சிறப்பால் வந்த அழகு. *அலர்ந்த தாமரைச் சேயவள் என வளர் செவ்வி கண்டு.* (பா : 371)

4. இயல்பு. தன்மை. *சிகரச் செவ்விச் சுந்தரத் தோளினான்.* (ஆ : 800)

5. **சிறப்பு. வைபவம்.** *இன்று நின் பெருஞ் செவ்வி கண்டு.* (பா : 494)

6. **நற்குணம்.** *செவ்வியோய் கேட்டி.* (பா : 551)

7. **பக்குவம். தகுதி.** *புரையறு கலவிச் செவ்வித் தோகையர்.* (பா : 1102)

8. **பொழுது.** *செப்புவானுற்ற செவ்வி.* (சு : 570)

9. **வாசனை.** *ஓண்கேழ் நாவிய செவ்விநாற.* (கி : 478)

**செவ்விதின் – நன்கு.** *செவ்விதின் ஒருமுறை தெரியும் பின்னென்ருன்.* (அ : 557)

**செவ்விது – நல்லது. நன்று. நல்ல காரியம்.** *செவ்விதென்றவனு நேர.* (பா : 421) *ஐய செவ்விது சேறி.* (யுத் : 2359) (யுத் : 3674)

**செவ்விய – செம்மையுடைய.** *செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்பொருளில் சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞர்.* (பா : 93)

**செவ்விய குமரர் – செம்மை நலமுடைய குமரர். (இராம லக்குமணர்)** *செவ்விய குமரரும் சென்னி தாழ்ந்தனர்.* (அ : 454)

**செவ்வியர் – செவ்வியராக இருக்கின்ருர்கள்.** *தெவ்வடு சிலைக்கை என் சிறுவர் செவ்வியர்.* (அ : 143)

**செவ்வியன - கோட்டம் அற்றன.** (ஆ : 539)

**செவ்வியிற் றெடர்தல் – செம்மையுடன் இருத்தல்.** *செவ்வியிற் றெடர்ந்த அல்ல செப்பலே.* (யுத் : 3877)

**செவ்வியோர் – பெரியோர். நற்குணமுடையோர். சிறப்புப்பெற்றவர்.** *செவ்வியோர் ஆர்வம் அம்மன்னவற்கு ஆயுதம் ஆவதே.* (ஆ : 117) *தேவரும் முனிவரு முதல செவ்வியோர்.* (ஆ : 822) *இவனினூங்குச் செவ்வியோரின்மை தேறி.* (கி : 60)

**செவ்விராது – செவ்விதாய் இராமல்.** *தன்னுயிர் செவ்விராதுணர் வோய்ந்திடத் தேம்புவாள்.* (சு : 358)

**செவ்விலங்கலில் சிந்தை செம்மை விளங்குதல் இல்லாத சிந்தை.** *வெளவிலங்கு வளர்த்தவர் மாட்டருள் செவ்விலங்கலில் சிந்தையிற தீருமோ.* (யுத் : 648)

**செவ்விளநீர் – சிவந்த நிறமுள்ள இளநீர். (இலக்) முலை.** *செவ்விள நீரிழி சுண்ணம்.* (பா : 865) *செவ்விள நீருந் தேர்வென்.* (கி : 876)

**செவ்வுரை – சீரிய சொல். நேர்மை பொருந்திய வார்த்தை.** *செவ்வுரை அன்றிது.* (யுத் : 1645)

**செவ்வுழை – அழகிய மான்.** *செவ்வுழை நெடுங்கணவள்.* (கி : 872)

**செவ்வே - செம்மையாக. நன்ருக.** செவ்வே ஆறிரண்டம்பினுல் அந்நெடுமர மறுத்து வீழ்த்தான். (யுத் : 1896) செவ்வே செல நோக்குதி. (கி : 268)

**செவ்வே நினைதல் - செவ்வனே பொருந்த நினைதல்.** கொலை யானையின் மிகையைச் செவ்வேயுற நினையா. (யுத் : 1832)

**செவ்வேலவர் - செம்மை பொருந்திய வேலினையுடையவர்.** (ஆ : 75)

**செவ்வை - நேர்மை.** செவ்வையின் அவர்முன் சென்ருன். (யுத்: 3884)

**செவ்வை நின்றன - பிறழ்ச்சி நீங்கிச் செவ்வையுற நின்றன.** (யுத் : 4008)

**செவ்வையின் - நேராக.** செவ்வையின் நிலத்தை வந்துசேர்ந்தது விமானந்தானும். (யுத் : 4245)

**செவி - 1. காது** செவிநுகர் கனிகள். (பா : 82)

**2. செவ்வி.** செஞ்செவிச் செழும்பவளம். (சு : 99)

**செவி கீள்தல் - காது கிழிதல்.** கீண்டன செவிகள். (யுத் : 2407)

**செவி சார்தல் - காதிற்படுதல்.** அப்பெரிய பூசல் செவி சார்தலும். (சு : 696)

**செவி சாற்றுதல் - காதிற் சொல்லுதல். இரகசியமாகக் கூறுதல்.** என்ற செவ்வரம் தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய். (சு : 640)

**செவி சுடல் - செவியிலே நுழைந்து சுடுதல்.** தீயவெஞ்சொல் செவி சுடத் தேப்புவாள். (அ : 515)

**செவிடு செய்யல் - செவிடாக்குதல்.** ஓதை பொங்கச் செவிமுற்றுஞ் செவிடு செய்ய. (யுத் : 3672)

**செவிடு செல்லல் - செவிடு படுதல். செவிடு உண்டாதல்.** செல்லக் கிழிந்தன திசைகள் எல்லாம். (யுத் : 2056)

**செவிடு படல் - செவிடாதல்.** உலகு செவிடு பட. (யுத் : 3418)

**செவிடு பிளத்தல் - செவிடுபடப் பிளத்தல்.** விடுதிசை செவிடு பிளந்தன. (யுத் : 3473)

**செவிடெய்தல் - செவிடுபடுதல்.** பத்துத் திசையும் செவிடெய்தின. (யுத் : 1921)

**செவிடெறிதல் - செவிடுபடல்.** திசை செவிடெறிந்தன. (யுத் : 1427) திசைகளோடு மலை செவிடெறிந்துடைய. (யுத் : 2013)

**செவித்தலம் - காதாகிய இடம்.** செவித்தலத் தெற்றி வீழ்த்தான். (யுத் : 2531)

**செவித்துளை - காதின் தொளை.** (யுத் : 2869)

**செவித்தொளை – காதின் தொளை.** அங்குறங்குவாலி திண் செவித் தொளைக்கணே. (கி : 240) (யுத் : 167) (யுத் : 2869)

**செவிதொறும் செவிதொறும் – எல்லாக் காதுகளிலும்.** பாடல் வரம்பிலின்னிசை செவிதொறும் செவிதொறும் வழங்க. (சு : 1089)

**செவி நுகர் கனிகள் - செவியால் நுகரத்தக்க கவிதைகளாகிய கனிகள்.** காதைகள் சொரிவன செவி நுகர் கனிகள். (பா : 82)

**செவிப்புலந் தொடர்தல் – காதுகளில் நுழைதல்.** தொடங்கிய ஆர்ப்பினேசை செவிப்புலந் தொடர்தலோடும். (யுத் : 2236)

**செவிப்புலம் – காது.** (யுத் : 2236)

**செவி புகுதல் – காதில் நுழைதல்.** சொன்ன வாசகம் செவிபுகாமுன். (யுத் : 431)

**செவி பொத்துதல் – காதுகளை மூடிக்கொள்ளுதல்.** கிளர்தடக் கைகளால் தோட்ட தன் செவி பொத்தி. (யுத் : 4141)

**செவிமடுத்தல் – கேட்டல்.** தெள்விளிப்பாணித் தீந்தேன் செவிமடுத் தினிது சென்ருர். (பா : 575) (யுத் : 412)

**செவியிடைச் செப்பல் – காதுகளில் சொல்லுதல்.** சென்னி தாழ்க்கச் செவியிடைச் செப்பினுர். (யுத் : 1044)

**செவியில் தூங்குதல் – காதிலே புகுந்து தங்குதல்.** சொன்னன சொன்னன செவியிற்றூங்கவும். (சு : 500)

**செவியிற் சார்தல் – செவியிற்படுதல்.** பேராத வாய்மைப் பெரியோ னுரை செவியிற் சாராத முன்னம். (அ : 389)

**செவியின் உண்ணும் அமிழ்து – செவியால் உண்ணுகின்ற அமுது.** வானத்து அண்டர் தம் செவியின் உண்ணும் அமிழ்தெனலாயதன்றே. (யுத் : 2400)

**செவியின் பொறி – காது.** புக்கவாளரி முழங்கு செவியின் பொறியுற. (ஆ : 9)

**செவிலி – வளர்க்குந்தாய்.** தாதியர் செவிலியர் தாயர் தவ்வையர். (பா : 614)

**செழுந்தவன் – மிக்க தவத்தையுடையவன். (கலைக்கோட்டு முனிவன்)** தீங்கறு குணத்தான் மிக்க செழுந்தவன் யாண்டையுள்ளான். (பா : 214)

**செழுந்தனி மலரோன் – செழுமையான ஒப்பற்ற தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன்.** (யுத் : 455)

**செழு நகர் – வளம்பொருந்திய நகர். (அயோத்தி)** (யுத் : 870) (யுத் : 4351)

**செழும்புயம் – செழுமையான புயங்கள்.** (யுத் : 3705)

**செழுமை – வளப்பம்.** *செழுவிற் சேவகனே யென்னும் ஓர் சிரம்.* (யுத் : 3161) *செழுந்தலைக் குலம்.* (யுத் : 3351) *செழுந்தனி மலரோன்.* (யுத் : 456)

**செழுவிற் சேவகன் – வளப்பமுள்ள வில்வீரன்.** (யுத் : 3161)

**செற்ற – அழிந்த. அழித்த.** *செயலைச் செற்ற பகை.* (கி : 329)

**செற்றபோது – வெகுண்டு நோக்கியபொழுது.** *மாற்றார் செற்ற போதிவர் சென்றுதவாரெனின்.* (அ : 172)

**செற்றம் – 1. குற்றம்.** *செற்றமுன் புரிந்ததோர் செம்மல்.* (பா: 1078)

**2. கோபத்திற்குக் காரணமான குற்றம்.** (பா : 1078)

**3. மிக்க சினம்.** *வேறுமோர் செற்றமில்லையேல்.* (அ : 856)

**செற்றல் – கொல்லுதல்.** *உயிர் செற்ற எதிரில்லோன்.* (ஆ : 755) *பகழியாற் செற்று வானிற் செலுத்தலுற்றான்.* (ஆ : 805)

**செற்றவர் – 1. வருத்தியவர்.** *உன்னைச் செற்றவர் என்னைச் சென்றார்,* (கி : 105)

**2. மாறுபட்டவர்.** *செற்றவர் எதிரெழுந்தேவர்.* (யுத் : 31)

**செற்றனர் – மாறுபட்டவர்.** (யுத் : 31) [பா : பே]

**செற்றிய – நெருங்கிய. அடர்ந்த.** *ஒளியவன் கதிர்களுன்றிச் செற்றிய இருளின்றாக்கி.* (யுத் : 2709)

**செற்று – 1. அழித்து.** *பகையைச் செற்று.* (யுத் : 1411)

**2. வலியடக்கிவென்று.** *திசையுறு கரிகளைச் செற்று.* (ஆ : 571)

**செற்றுதல் – 1. இடம்விட்டுப் பெயர்ந்துசெல்லுதல்.** *வேங்கை செற்று மராமரம் வேர்பறித்து.* (சு : 715)

**2. செதுக்குதல்.** *மணி செற்றுபு குயிற்றி.* (பா : 322)

**3. அழுத்துதல்.** *அவன் உரத்தினுகிர் செற்றும்வகை குத்தி.* (யுத் : 853)

**4. நெருங்குதல்.** *ஒளியவன் கதிர்களுன்றிச் செற்றிய இருளின்றாக்கி.* (யுத் : 2709)

**5. பதித்தல்.** *செற்றிக் கதிரிற் பொலிசெம் மணியின் கற்றைச் சுடர் விட்டெறி கஞ்சுகியான்.* (ஆ : 83) *செற்றிய பசும்பொன்.* (சு : 413)

**செற்றுபு குயிற்றி – நெருங்கப்பதித்து.** (பா : 322)

**செற்றும் வகை – அழுந்துமாறு.** *உகிர் செற்றும் வகை குத்தி.* (யுத் : 853)

**செற்றுற – இறந்துபட.** *செற்றுற நெருக்கினர்.* (சு : 894)

**செற்றேடிய திரள்தோள் – பகைத்து நிமிர்ந்த திரண்ட தோள்.** *செற்றேடிய திரடோளுறு தினவுஞ் சிறிதுடையேன்.* (பா : 1366)

**செறிஞர் – நெருங்கிச் சேர்ந்தவர். நண்பர்.** *அரிய தெவ்வரைச் செறிஞரே யாவரேற் கெடுதல் திண்ணமால்.* (யுத் : 379)

**செறித்தல் – 1. சிறைவைத்தல்.** *எப்புறத்தே செறித்தானோ......... சிறையறியேன்.* (சு : 321)

**2. அழுத்துதல்.** *அயில் வெங்கணை ஐயைந்து புக்கழுந்தத் திக்காசற வென்றான் மகன் இளங்கோ உடற் செறித்தான்.* (யுத் : 3010) *செறித்தான்.* (ஆ : 926)

**3. நெருக்குதல். எறிதல்.** *சுடர்த்தோமரம் வாங்கா மிசை ஓங்கச் செறித்தான்.* (யுத் : 1845)

**செறிதல் – 1. பலவாகத் தொகுதல்.** *உழுவை வன்செறி அதள் திருகுற.* (ஆ : 15)

**2. நெருங்குதல். பொருந்தி நட்புக்கொள்ளுதல். சேர்தல்.** *சிற்றினத் தவரொடுஞ் செறிதல் சீரிதோ.* (யுத் : 380) *செறிஞரே யாவரேல்.* (யுத் : 379)

**3. அடர்த்தியாயிருத்தல்.** *செறிகுஞ்சியர்.* (சு : 165)

**4. அடங்குதல்.** *செறிவும் ஈதே.* (சு : 600)

**செறிந்தோர் வினைப்பகைவன்–தன்னை அடைந்தவர்களது தீவினைகளைச் சினந்தழிப்பவன். சிவபிரான்.** (யுத் : 3038)

**செறிநறுந்தயிர் – உறைந்த நல்லதயிர்.** *செறி நறுந் தயிரும் பாலும்.* (பா : 26)

**செறிபரம் – மிக்க பாரம்.** *திக்குறுஞ் செறிபரந்தெரிய நின்ற திரள் பொற்கைக் குறுங்கண் மலை.* (ஆ : 3)

**செறிபுனல் – தங்குதற்குக் காரணமான நீர் உள்ள புனல்.** *செறிபுனல் தரவல்லேன்.* (அ : 683)

**செறியிதழின சோகம் – நெருங்கிய இதழினையுடைய அசோக மலர்கள்.** *செருந்தியின் மலர் தாங்கும் செறியிதழி னசோகம்.* (அ : 697)

**செறிவு – 1. அடக்கம்.** *செறிவும் ஈதே.* (சு : 600)

**2. நெருக்கம்.** (யுத் : 380)

**3. அடர்த்தி.** *செறிமயிர்.* (இ : 204)

**செறு - 1. வயல். இடம்.** (அண்) *செறுவின் வீழ்ந்த நெடுந்தெரு.* (அ : 526)

**2. நெருக்கம்.** (கலா) (அ : 526)

**செறுத்தல் - 1. உக்கிரங்கொள்ளுதல்.** *செறுத்திறுதியிற் புவனி திய எழுதியின்.* (ஆ : 538)

**2. சீறுதல். கோபித்தல்.** *கறுத்தவர் செறுத்தவர்.* (யுத் : 3396)

**3. நெருக்குதல்.** *செற்ற முதலாரோடு செறுத்ததோர் திறத்தும்.* (யுத் : 72)

**4. சினந்து போர் செய்தல்.** *மாலியும் நீலனும் செறுத்தார்.* (யுத் : 2301)

**5. வெல்லுதல்.** *திசையுறு கரிகளைச் செறுத்து.* (ஆ : 571)

**செறுத்தார் - போர்செய்தார்.** (யுத் : 2301)

**செறுதல்-வருத்துதல்.** *நின்னைச் செற்றவர் என்னைச் செற்ருர்.* (கி: 105)

**செறுநர் - 1. பகைவர்.** *திண்மையில்லை நேர் செறுநர் இன்மையால்.* (பா : 84) (யுத் : 312) (ஆ : 1022)

**2. தண்டித்தற்குரியார்.** *தியன செய்யாராயின் யாவரே செறுந ராவார்.* (கி : 620)

**செருநர் சீறிய இல் - சிறைச்சாலை.** *செருநர் சீறிய இல்லிடை இடுபதம் ஏற்க என்கையால்.* (அ : 905)

**செறும்பு - சிராம்பு.** *பெண்ணை வன் செறும்பிற் செறி வண்ண வன்மயிர் வார்ந்துயர் முன்கையன்.* (அ : 650)

**செறுவின் வீழ்ந்த நெடுந்தெரு - வயல்போலக் குழிந்து கிடக்கும் நீண்ட தெரு.** (அண்) (கண்ணீர்ப் பெருக்கிஞல்) வயல்போலச் சேருகிய இடத்தில் விழுந்துகிடக்கின்ற பெரிய வீதி. (வை. மு) நெருக்கத்திஞலே மிகுந்த பெரிய வீதி (கலா) (அ : 256)

**செறுவு - நெருக்கம்.** (உ.வி) (அ : 256)

**சென்ற சென்ற அடவிகள் தோறும் - செல்லுகின்ற வனங்களெல்லாம்.** *அரியினஞ் சென்ற சென்ற அடவிகள் தோறும்.* (யுத்: 4119)

**சென்றறியா - (உவமையாக) நடத்தலையறியாத.** *பொன் சென்றறியா உவணத் தனிப்புள்ளினுக்கும்.* (யுத் : 1972)

**சென்றிடுதல் செய்கிலமெனில் - செல்லுதலைச் செய்யாது விடுவோமாஞல்.** *சேன்றற நெருக்கிச் சென்றிடுதல் செய்கிலமெனிற் செருந ரோடும் ஒன்றிடுவர்.* (யுத் : 67)

**சென்றீ - சென்று வருவாயாக.** *வித்தக சென்றீ என்றூர்.* **(சு : 14)** *[பா : பே]*

**சென்று – செலுத்தி.** *கை வாய்வழி சென்று.* **(யுத் : 1923)**

**சென்று சென்று – 1. போய்ப்போய்.** *திசையுறச் சென்று சென்று.* **(சு : 19)**

**2. மீண்டும் மீண்டும் போய்.** *சென்று சென்றுற நெருக்கலான்.* **(யுத் : 2016) (யுத் : 2030)**

**சென்றுவாழுயிர் – இயங்குதிணை. சரம்.** *சென்று நின்றுவாழ் உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினன்.* **(பா : 177)**

**சென்னம் – ஒரு நீர்ப்பறவை.** *[ஸ்ரேனம்]* **(சு : 246)**

**சென்னி – 1. சோழன்.** *புவிபுகழ் சென்னி பேரமலன்.* **(கி : 852)**

**2. தலை.** *தேவன் சென்னிப் பண்டைநாள் இருந்த கங்கை.* **(யுத்: 595)** *சென்னி தாழ்க்கச் செவியிடைச் செப்பினர்.* **(யுத்: 1044)**

**சென்னி ஏந்தல் – தலைமேற் கொள்ளல்.** *ஏவினுள் ஈன்றவள் யானது சென்னி ஏந்தினேன்.* **(அ : 461)**

**சென்னி தாழ்த்தல் – தலை தாழுமாறு வணங்கல்.** *சென்னி தாழ்க்க.* **(யுத் : 1044)**

**சென்னி மண்ணுற வணங்குதல் – தலை தரையிற் பொருந்த வணங்குதல்.** *வந்தவள் தன்னைச் சென்னி மண்ணுற வணங்கி.* **(அ : 289)**

**சென்னிமேற் கையன் – சிரசின்மேற் குவித்த கையனாய்.** **(யுத் : 2456)**

**சென்னிமேற் கொள்ளுதல் – (பொருந்தத்) தலைமேற் கொள்ளல்.** *பொன்னின் வார்கழல் புதுநறும் தாமரை பூண்டு சென்னிமேற் கொளூஉ அருக்கன் சேய் இவை இவை செப்பும்.* **(கி : 175)**

**சென்னிமேற் கொளூஉ – தலையின்மேற் கொண்டு.** **(கி : 175)**

**சென்னியர் – பாணர்.** *சென்னியர் திரிவாரும்.* **(பா : 1275)**

**சென்னியிற் கொள்ளுதல் – சிரஸாவகித்தல். தலைமேற்கொள்ளல்.** *முன்னுறப் பணிந்தவர் மொழியை யான் என சென்னியிற்கொண்டு அது செய்வென் என்றதன்பின்.* **(அ : 1193)** *இந்திரனெனின் அவன் அரக்க ரேயின சிந்தையிற் சென்னியிற் கொள்ளுஞ் செய்கையான்.* **(ஆ : 132)**

**சென்னியிற் சுமந்த கையர் – சிரத்திலே குவித்த கையராய்.** *சென்னியிற் சுமந்த கையர் தேவரேபோல யாமும் பொன்னுடை வரிவிலாற்றல் புறனின்று காண்டல் போக்கி.* **(யுத் : 3320)**

**சென்னி வான்தடவும் செம்பொற் கோபுரம் – வான்சென்னி தடவும் செம்பொற் கோபுரம்.** **(யுத் : 802)**

**சென்னெறி** - செல்நெறி. சேர்தற்குரிய வழி. சித்திர கூடத்திற் சென்னெறி பகரென்ன. (அ : 680)

**செனம்** - மக்கள். அந்நகருறை செனமும். (பா : 308)

**செனி** - சென்னி செஞ்சுடர்ச் செறி மயிர்ச்சுருள் செறிந்த செனியன். (ஆ : 7) சேவகன் செனி நேரேவென்று தீர்கென விட்டனன். (யுத் : 1550)

**செனியன்** - சென்னியன். (ஆ : 7)

# சே

**சே** - 1. இடபம். சேமுதற் பிறவும் ஊரும் இறைவர். (பா : 692) சேவலோன். (ஆ : 263)

2. சிவப்பு. தேவர் தேவியர் சேவடி கைதொழும். (சு : 442)

**சேக்கை** - 1. படுக்கை. சேக்கையாகி யலர்ந்த செந்தாமரைப் பூக்கள். (பா : 642)

2. தங்குமிடம். இருக்கை. சிந்துரச் சென்னித் தாங்கோர் மைவரைச் சேக்கை கொண்டார். (ஆ : 1038) சிந்துரச் செந்திக் காட்டோர் மைவரைச் சேக்கை. (ஆ : 1038) [பா : பே]

3. கூடு. சேக்கையிற் பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்ருன். (ஆ : 224)

4. மகளிர் படுக்கை (வை. மு) தத்தம்...... சேக்கை. (சு : 201)

5. இருப்பிடம் நிலைக்களம். துயருக்கே சேக்கையாளுள். (யுத் : 1610) புகழின் சேக்கையைக் கற்பினுக்கரசியை. (ஆ: 838)

**சேர்க்கைப்போர்** - கலவிப்போர். சேர்க்கைப்போரில் ஒருவருக்கொருவர் தோலார். (பா : 1104)

**சேகரத் தென்றிசை** - மணிமுடிபோற் சிறந்த தென்திசை. (கி : 824)

**சேகரப்பூ** - உச்சிப்பூ தலைமயிர்மீது அணிதற்குரிய மலர். சின்னப்பூச் செருகு மென்பூச் சேகரப்பூவும். (பா : 1218) [பா : பே]

**சேகரப் போது** - உச்சிமேல் அணியும் பூ. சின்னப்பூச் செருகு மென்பூச் சேகரப் போது. (பா : 1218)

**சேகரம்** - தலையணி. பார் சேகரத் தென்திசை கடிது செல்கின்ருர். (கி : 824)

**சேகற** - 1. குற்றம் நீங்க. அவனையுள்ளஞ் சேகறத் தெருட்டி, (யுத் : 1346)

2. ஐயமற. யானெதென்னல் தீர்ந்தார் என்னுறும் ஒருவனென்றே...... மன்னு சேகரத் தெரிந்ததன்றே. (யுத் : 2806)

**சேகு – 1. திண்மை. வலிமை. உறுதி.** கணக்கில் காலம் சேகுற வினையிற் செய்த திமையும் தொடர்ந்து செல்ல. (சு : 942) மாகால்வரி வெஞ்சிலையினோடும் வளைத்தபோது சேகாகும் என்றெண்ணி, (யுத் : 1966) (கி : 543)

2. **தீங்கு.** சேகர மீட்ட ஓதிமனும். (பா : 189)

3. **காய்ப்பு.** மலர்ப்பாதங்கள் சேகு சேர்தர. (பா : 1184)

4. **குற்றம்.** தோமில் சிந்தனைச் சேகறு நோன்பினர். (ஆ : 837) சேகறத் தெருட்டி. (யுத் : 1346)

5. **ஐயம்.** சேகரத் தெரிந்ததன்றே. (யுத் : 2806)

**சேகுற - உறுதியாக.** எண்ணுற சேகுறப் பன்முறை தெருட்டிச் செய்தபின். (கி : 543) (சு : 942)

**சேட்டகல் நெற்றி – உயர்ந்த அகன்ற நெற்றி.** வயங்கு வாளிகள் சேட்டகல் நெற்றியில் இரண்டு சேர்த்தினன். (யுத் : 1505)

**சேட்டிளம் – மிகவும் இளமையான.** சேட்டிளங் கடுவன் சிறு புன் கையிற் கோட்ட தேம்பலவின் கனிக்கூன் சுளை. (கி : 936)

**சேடகம் – 1. சிறப்பு. திரட்சி.** (வை. மு)

2. **ஒரு அணி விசேடம்.** (கலா) சேடகம் புனைகோதை. (பா : 242)

**சேடகம் புனைகோதை – 1. அழகைத் தன்பாற்கொண்ட புனைந்தமாலை.** (அண்)

2. **சிறப்புப் பொருந்திய மலர்மாலை.** (வை. மு)

3. **சேடகம் எனனும் அணியைப்பூண்ட கோதை** (கலா) (பா: 242)

**சேடர் - 1. இளைஞராகிய கணவர்.** (வை. மு) இளைஞர். சேடரைத் தழீஇயன. (பா : 123)

2. **நாகர்.** சேடரும் பாரினோடும் கரம் சிரம் கோத்தாரன்றே. (ஆ : 1028) [பா : பே]

3. **எஞ்சி நிற்பவர்.** அமரர் சேடர் சிந்தனை முனிவர்கள். (யுத் : 2562)

**சேடரும் பாரினோர் – உயர்வர உயர்ந்த பரமபதமாகிய உலகத்திலுள்ள நித்திய சூரிகள்.** சேடரும் பாரினோர்க்கும் கரஞ் சிரஞ் சேர்ந்த தன்றே. (ஆ : 1028)

**சேடன் – 1. ஆதிசேடன். (சேஷன் – பிரளய காலத்திலும் அழியாது எஞ்சி நிற்பவன்)** ஓங்கி, சேடன் என்னப் பொலிந்தது சேதுவே. (யுத் : 685) (யுத் : 4282)

2. **சிரேஷ்டன்.** இகல் அனுமனென்னும் சேடனலன்று. (யுத்: 3144)

**சேடன் சிரங்கள் காந்தல்** - ஆதிசேடனது சிரங்கள் விளங்கித் தோன்றுதல். அளக்கர் சேறு தீய்ந்தெழுக் காந்தின சேடன் தன் சிரங்கள். (யுத் : 558)

**சேடி** - 1. தோழி. திதில் தெய்வ மடைந்தையர் சேடியர். (அ : 1078)

2. வேலைக்காரி. தாமரை இருந்த தையல் சேடியாந்தரமும் அல்லள். (ஆ : 628) (யுத் : 1669)

**சேடியர்** - பணிப்பெண்கள். செய்கை யன்னங்களேந்திய சேடிய ரென்ன. (கி : 19)

**சேடு** - 1. அழகு. சேடகம்புனை கோதை மங்கையர். (அ : 242) சேடுறு நறுமுகை. (கி : 557)

2. சிறப்பு. நளிர் நீர்ப் பொன்னிச் சேடுறு தண்புனல் தெய்வத் திருநதி. (கி : 772)

3 கன்று. யானையின் சேடு சென்று கெடில். (கி : 577)

4. இளமை. சேட்டிளங் கடுவன். (கி : 936)

5. பெருமை. சேடகப் புகைச் சில்லி. (யுத் : 2398)

6. உயர்ச்சி. சேட்டகல் நெற்றி. (யுத் : 1505)

7. உயர்வு.

**சேண்** - காலத்தின் தொன்மை. (அண்) அகலம். (வை. மு) சேண் தான் தொடர் மாநிலம். (அ : 423)

2. ஆகாயம். வானம். சேணிடை முந்துறத் தெறித்தெழு முத்தந் தொத்தலால். (யுத் : 632) சேணுலாந் தனித் தேரவன். (ஆ : 1058)

3. தேவர் உலகம். சேண் தொடர் சிமயத் தெய்வ மயேந்திரம். (கி : 1033)

4. சேய்மை. சேணுலாவிய நாள். (அ : 231)

5. உயர்ச்சி. சேணுயர் மறையை. (யுத் : 3963)

6. நெடுந்தூரம். கதிரின் நாயகன் சேணெலாம் புல்லொளி செலுத்தி. (ஆ : 244)

**சேண் எறிதல்** - நெடுந்தூரம் பரவுதல். சேணெறிந்து நிமிர் திசை களோடு மலை செவிடெறிந்துடைய. (யுத் : 2013)

**சேண்செல் நோக்கு** - நெடுந்தூரம் நோக்கும் கண்கள். சேயொலிச் சேண் செல் நோக்கிற் கழுகினுக்கரசு செய்வோம். (கி : 998)

**சேண்டொடர் சிமயம்** - மிக உயரத்திலுள்ள உச்சி. சேண்தொடர் தெய்வ மயேந்திரத் தும்பர். (கி : 1033)

**சேண் பகல் - நீண்டகாலம்.** *திண்டிறனெனில் இத்தனை சேண் பகல் ஈண்டுமோ உயிர். (சு : 636)*

**சேண் விசும்பு – தூரத்திலுள்ள உலகங்கள்.** (வை. மு) **விசும்பு சேண் – ஆகாயத்தே சேய்மைக்கண்.** (அண்) **வானம் தூரத்தில் (விலகி)** (கலா) *சேண் விசும்பொதுங்கத் தெய்வக் கடலெலாம் தாவும் கலுழன்.* **(சு : 32)**

**சேண அந்தரம் – தூரத்திலுள்ள வானம்.** *சேண அந்தரம் நோக்கலும். (யுத் : 3705)*

**சேணகர் – 1. பெருமை பொருந்திய நகர்.** *போர்க்கலை தெரிதலிற் பொழுதுபோம் சிலர்க்கு அச் சேணகர். (பா : 160)*

**2. உயர்ந்த நகர்.** *தென்றிசை இராவணன் சேணகர்.* **(கி : 750)**

**சேண வந்து – உயரமாக வளர்ந்து.** *சேண வந்தமா நோக்கும் செழும் புயம். (யுத் : 3705) [பா : பே]*

**சேணுர் மார்பு – அகன்ற மார்பு.** *சேணுர் மார்புந் திருவும் தெரியக் கடவேன். (அ : 360)*

**சேணிலம் – பரந்த பூமி.** *சேணிலம் காவல் மாமுடி சூடு பேரெழில் காணலாமெனு மாசையால். (அ : 247)*

**சேணுயர் தருமத்தின் தேவு – மிகவுயர்ந்த அறக்கடவுள்.** *சேணுயர் தருமத்தின் தேவை. (அ : 1112)*

**சேணுயர் நெறி – மேலுலகத்து வழங்குவதாய்ச் சிறந்த சங்கீத மார்க்கம்.** (வை. மு) **தொன்றுதொட்டுவந்த சிறந்த இசைநெறி.** (அண்) *சேணுயர் நெறிமுறை திறம்பலின்றியே. (ஆ : 572)*

**சேணுயர் பெருமை – மிகவும் மேம்பட்ட சிறப்பு.** *சேணுயர் பெருமையெல்லாம் சிக்கறத் தெளிந்தேன். (கி : 62)*

**சேணுயர் மறை – மிக உயர்ந்த வேதம்.** *சேணுயர் மறையையெல்லாம் முறைசெய்த மன்னனென்ன. (யுத் : 3963)*

**சேணுயர் மறையையெல்லாம் முறைசெய்த செல்வன் – வேதவியாசராக அவதரித்த திருமால். மிகச்சிறந்த வேதம் முழுவதையும் ஒழுங்குபடுத்துகின்ற வேதவியாசராக அவதரித்த திருமால்.** *(யுத் : 3963)*

**சேணுயர் விசும்பு – மிக உயர்ந்த ஆகாயம்.** *(யுத் : 1064)*

**சேணுலாம் தனித்தேரவன் – வானிடத்தே உலாவுகின்ற ஒப்பற்ற தேரையுடைய சூரியன்.** *(அ : 1058)*

**சேணுலாவிய நாள் – சென்ற பல வருஷம்.** (கலா) **சேய்மையாகப் பொருந்திய பல நாட்கள்.** (அண்) **சென்ற சால நீண்டகாலம்.** (வெ. ப) *(அ : 231)*

**சேணுளோர் - பண்டைப் பெரியோர். முன்னையோர்.** சேயிதழ்த் தாமரையென்று சேணுளோர் ஏயினர். (சு : 528)

**சேணுற நீண்டு - நெடுந்தொலைவிலே பொருந்துமாறு நீண்டுசென்று.** சேணுற நீண்டு மீண்டு செவ்வரி சிதறி. (ஆ : 270)

**சேணுறு நெறி - நெடுந்தூரம் செல்கின்ற வழி.** திணிமர நிறைகானிற் சேணுறு நெறி சென்றார். (அ : 689)

**சேணெறி - மிக்க தூரம். நெடுந்தொலைவு.** சேணெறி வந்ததோர் வருத்தச் செய்கையான். (ஆ : 833)

**சேணெறிதல் - விண்ணில் எதிரொலிகள் உண்டாதல்.** இடிபொடித் தென்னச் சேணெறிந்தன. (யுத் : 1427)

**சேணொலி - நெடுந்தூரத்தில் சென்றிசைக்கும் ஆர்ப்பொலி.** (யுத் : 2400)

**சேத்தல் - சிவத்தல்.** சேத்த நீர்த்திவலை. (பா : 29)

**சேதகம் - சேறு.** குங்குமச் சேதகம். (பா : 953)

**சேதனை - உணர்ச்சி. அறிவு.** (வை. மு) சேதனையுண்ணக் கண்டான். (யுத் : 3683) சேதனை மன்னுயிர் தின்று. (ஆ : 682)

**சேதனையுண்ணல் - பிளவுபடுதல்.** (அண்) **வெட்டப்படல்.** (கலா) சேதனையுண்ணக் கண்டாள். (யுத் : 3683)

**சேதாம்பல் - செவ்விய ஆம்பல். செவ்வல்லி மலர்.** விரிந்த குவளை சேதாம்பல். (கி : 26) (ஆ : 676)

**சேதித்தல் - 1. அறுத்தல். துணித்தல்.** நின்புன் பொறி நாவைச் சேதியாது இது பொறுத்தனன். (அ : 164)

**2. இம்சித்தல்.** (வை. மு) **அறுத்தல்.** (கலா) உணர்வைச் சேதியா நின்றதுன் னொழுக்கம். (யுத் : 3988)

**சேதிராசர் - சேதிநாட்டரச பரிவாரங்கள்.** சேதிராசர் தெலுங்கர் கருநடர். (பா : 1196)

**சேது - 1. அணை.** வேலைக் குட்டத்தைச் சேதுகட்டி. (யுத் : 941)

**2. சேது என்ற அணை.** செல்லுதி சேது வென்றொன்றியற்றி என் சிரத்தின் மேலாய். (யுத் : 618) சேது குயிற்றுதிர். (யுத் : 619)

**சேதுபந்தனம் - அணைக்கட்டு.** சேதுபந்தனஞ் செய்தனன் என்றதிப் போது வந்த புதுவலியோ. (யுத் : 752)

**சேந்த - செந்நிறமாயின.** பன்னிற மணிகளுஞ் சேந்த. (யுத் : 2306)

**சேந்த கண்ண நீர் - சிவந்த கண்களின் நீர்.** சேவடிச் சிந்தி நின்றனன் சேந்த கண்ண நீர். (அ : 1155)

**சேந்த குஞ்சி – சிவந்த முடி.** *மாதர் புலவிகள் திருத்திச் சேந்த குஞ்சியர் சூழ நின்ற மைந்தர்கள் குமாங்கள் கண்டார்.* (பா : 583)

**சேந்த கை – சிவந்த கை.** *சேந்த நின் கையினுல் ஒழுக்குதி கடல்.* (அ : 1143)

**சேந்தது – சிவந்தது.** *மெல்லியல் தன் திருமேனி சேந்தது.* (சு : 688)

**சேந்த நெய் – சிவக்கக் காய்ச்சிய நெய்.** *வெண்ணெயுஞ் சேந்த நெய்யும்.* (பா : 26)

**சேந்து – சிவந்து.** *சேந்து வானகம் எப்போதும் செக்கரை ஒக்குமன்றே.* (பா : 941) (யுத் : 791)

**சேந்தொளி விரிதல் – சிவந்து ஒளி விரிதல். சிவந்து ஒளி பரவுதல்.** *சேந்தொளி விரியுந் தெண்டிரையெனும் நிமிர்கையால்.* (அ : 679) (யுத் : 791) *சேந்தொளி விரி செவ்வாய்ப் பைங்கிளி.* (அ : 694)

**சேப்ப – சிவப்ப** *கைத்தலம் சேப்ப.* (யுத் : 2581)

**சேப்பு – சிவப்பு.** *குவளை வாட்கண் சேப்புற.* (யுத் : 2787) *சேப்ப.* (யுத் : 2581)

**சேமக்குன்று – உறுதி தருமென்று நினைத்தற்கிடமாகிய மலை.** *ஒரு சேமவன் குன்று நின்றது பறித்து.* (யுத் : 2030)

**சேமகர் –** (பா : 1195) [பா : பே] (கலா)

**சேமஞ்செய்தல் – மூடுதல். அழுத்தமாக மூடுதல்.** *செவிகளைத் தளிர்க்கையாலே சிக்குறச் சேமஞ்செய்தாள்.* (ஆ : 881)

**சேமஞ் செலுத்தல் – நன்மையை உண்டாக்குதல்.** *அவை சேமம் செலுத்துமோ.* (சு : 1144)

**சேமத்தார் வில் – காவலில் வைக்கப்பட்ட வில்.** *சேமத்தார் வில் இறுத்தது.* (பா : 1187)

**சேமத்திண் சிலை – சேமமான வலிய வில்.** *சேமத்திண் சிலை மாலியும்.* (யுத் : 2301)

**சேமப்படை – கையிலுள்ள படைகள் அழிந்திடுகையில் எடுத்துக் கொள்ளுமாறு சேமித்துவைத்த படைக்கலம். பாதுகாப்புக்குரிய படைக்கலங்கள்.** *மற்றுள சேம வெம்படை யெலாஞ் சுமந்து சென்றவே.* (யுத் : 1323)

**சேமம் - 1. பாதுகாப்பு.** (பா : 1187) *சேமமால்வரை.* (ஆ : 305)

**2. காவல்.** *சேமம் அவ்வழிச் செய்து.* (கி : 136) *சேமத்தது.* (யுத் : 2907) *சேமத்தன.* (யுத் : 1694)

3. பாதுகாப்பான இடம். க்ஷேமம் என்பதன் திரிபு. செவிகளைத் தளிர்க்கையாலே சிக்குறச் சேமஞ்செய்தாள். (ஆ: 881)

4. அரண். முதல்வர் இவர் சேமம் இது. (சு: 167)

**சேம வில் - இருப்பாக வைத்துள்ள வில்.** சேமவிற் கால்கோட்டு மளவில். (ஆ: 922)

**சேமவிற் குமரன் - பாதுகாவற்கு உரிய வில்லை ஏந்திய இளமகன். (இலக்குவன்)** சேமவிற் குமரனும் விலக்கி. (ஆ: 826)

**சேமவீடு - அழிவில்லாத மோட்சம். பாதுகாப்புடைய வீட்டுலகம்.** சேமவீடுறச் செய்வது. (யுத்: 172)

**சேம வெம்படை - பாதுகாப்பான கொடிய படை.** (யுத்: 1323)

**சேமி - பாதுகாப்பாயாக.** வருணனை மான வெஞ்சிலை சேமியென்றுதவி. (பா: 1393)

**சேமித்தல் - காவல் செய்து வைத்தல். போற்றிக் காத்தல்.** சிக்குறக் கடை சேமித்த செய்கைய. (கி: 598)

**சேய் - 1. மகன்.** தசரதன் சேய். (ஆ: 529) என் சேய்க் குணர்த்துமின். (யுத்: 2554)

2. முருகக்கடவுள். வலத்த சேய் வளர்ந்தருள் சரவணம். (பா: 507)

3. உயர்ந்த. சேயிரு விசும்பிடைத் திரியுஞ் சாரணர். (பா: 319)

4. சிவப்பு. சேயிதழ்த் தாமரை. (சு: 528)

**சேய்மை - தூரம்.** ஏகத் தந்தணனிருக்கை இனிச் சேய்த்தன்றும் என்ன எழுந்து சென்றான். (யுத்: 2691)

**சேய்மையின் நோககுறு சிறுகணான் - நெடுந்தொலைவில் பார்க்கின்ற சிறிய கண்களையுடையவன்.** ஆய்மையின் மந்திரத்து அறிஞனு மெனச் சேய்மையின் நோக்குறு சிறுகணான் தனை. (ஆ: 181)

**சேய காலம் - வெகுகாலம்.** சேய காலம் பிரிந்து. (யுத்: 4)

**சேயர் - சேய்மையிலிருந்து வந்தவர்கள்.** சேயரும் அணியரும் சிறந்த மாதரும். (அ: 478)

**சேயரிக் கண் - செவ்வரி பரந்த கண். சிவந்த இரேகைகளையுடைய கண்.** செந்தளிர்க் கைகளாற் சேயரிப் பெருஞ் சுந்தரக் கண்களை எற்றித் துள்ளினார். (யுத்: 4002) (ஆ: 562) கருங்குழற் சேயரிக் கண்ணி. (ஆ: 1134)

**சேயரிக் கருங்கண் அம்பு - செவ்வரியும் கருமையுமுடைய கண்களாகிய அம்புகள்.** திண்சிலை புருவமாகச் சேயரிக் கருங்கண் அம்பாற் புண்சில செய்வரென்று போவன போன்று. (பா: 978)

**சேயரிக் குவளை – சிவந்த ரேகைகளையுடைய நீலோற்பல மலர்போன்ற கண்கள்.** *நாயக நீயே பற்றி நல்கலை போலும் என்னுச் சேயரிக் குவளை முத்தஞ் சிந்துபு சிறிப்போனுள்.* **(ஆ: 797)**

**சேயரிப் பெரும் சுந்தரக் கண்கள் – சிவந்த ரேகைகளையுடைய பெரிய அழகிய கண்கள்.** *(யுத் : 4002)*

**சேயவர் – அன்னியர். பகைவர்.** *சேயவர் சேனை நண்ணிச் செய்திறம் தெரித்தி.* **(யுத் : 894)**

**சேயவள் – 1. சிவந்த மேனியளாகிய திருமகள்.** *தாமரைச் சேயவள் என வளர் செவ்விகண்டு.* **(பா : 371)**

**2. பரிசுத்தமானவள். செம்மையுடையவள் சீதை.** *யார்க்கும் சேயவள் எளியள் என்னுச் சிந்தையின் இகழல் அம்மா.* **(யுத் : 768)**

**சேயவன் – சேய்மையிலுள்ளவன்.** *தேடி நான்முகனுங் காணுச் சேயவன் சிரித்தலோடும்.* **(யுத் : 258)**

**சேயன் – நெடுந்தூரத்தன்.** *சேயனே அணியனே.* **(அ : 590)**

**சேயிதழ்க் காந்தள் செம்பூ – சிவந்த இதழ்களையுடைய செங்காந்தள் மலர்கள்.** *தேனுற மலர்ந்தசைந்த சேயிதழ்க் காந்தட் செம்பூ வேனிலை வென்றதம்மா.* **(கி : 470)**

**சேயிதழ்த் தாமரை – சிவந்த இதழ்களையுடைய தாமரை.** *சேயிதழ்த் தாமரையென்று சேனுளோர் ஏயினர்.* **(சு : 528)**

**சேயிரு மணி – மிகப்பெரிய மணி. சிவந்த பெரிய மணிகள்.** **(அண்)** *சேயிரு மணி நெடுஞ் சேமத்தேர்.* **(யுத் : 1067)**

**சேயிரு மதியம் – மேலிடமாக உயர்ந்த பூரண சந்திரன்.** *சேயிருமதிய மென்னத் திகழ்தரு முகத்தரானுர்.* **(சு : 1330)**

**சேயிரு விசும்பு – உயர்ந்த பெரிய ஆகாயம்.** *சேயிரு விசும்பிடைத் திரியுஞ் சாரணர்.* **(பா : 319)**

**சேயிழை – செவ்விய அணிகள் பூண்ட பெண். சீதாபிராட்டி. (ஆ: 866)**

**சேயிழை பாகத்தெண்டோள் ஒருவன் – செம்பொன் அணிகளைப் புனைந்த பார்ப்பதியம்மையை இடது பாகத்துட் கொண்டருளிய எட்டுத் தோளையுடைய ஒருவன். சிவபெருமான்.** **(யுத் : 2706)**

**சேயிழை மங்கையர் – செவ்விய அணிகள் பூண்ட மங்கையர்.** *சேயிழை மங்கையர் சிந்தை தொறெய்யா.* **(பா : 776)**

**சேயுயர் சீர்த்தி – நில எல்லையைக் கடந்து வானுலகத்திலும் நெடிது உயர்ந்து செல்லும் இயல்பினதாகிய புகழ்.** *சேயுயர் சீர்த்தியான்.* **(கி : 703)**

**சேயுயர் சீர்த்தியான்** – நெடிது உயர்ந்த கீர்த்தியானுகிய இராமபிரான். (கி : 703)

**சேயொளி** – 1. செவ்விய ஒளி. தெய்வமேனி படைத்த சேயொளி போன் மழுங்கின தீபமே. (அ : 244)

2. சிவந்த ஒளி குரிசிலர் இருண்ட குஞ்சி சேயொளி கதுவுற. (கி : 488) சேயொளி விளக்கம். (சு : 381) சேயொளிக் கமலத் தாள். (யுத் : 4289) சேயொளி முறுவல். (ஆ : 527) (கி : 998) கொழுஞ் சேயொளிக் கற்றையங்கரம். (யுத் : 2307)

**சேயொளிக் கமலத்தாள்** – செவ்வொளியையுடைய தாமரையில் வீற்றிருக்கும் திருமகள். (யுத் : 4289)

**சேயோய்** – செம்மைக்குணமுடையாய். தீதில் வரவாக திருநின் வரவு சேயோய். (ஆ : 263)

**சேயோன்** – 1. இராமபிரான். குகற்கும் அச் சேயோன் வந்த வாசகம் கூறி. (யுத் : 4123)

2. அப்பாற்பட்டவன். தூரஸ்தன். சிரத்தின் நான்மறை இறைஞ் சவும் தேடவுஞ் சேயோன். (யுத் : 3790)

**சேர்** – ஒப்புருவு. வரைசேர் தோளிடை நாளும் வைகுவேன். (கி: 393)

**சேர்குவென்** – சேர்வென். சேர்ந்தபின் அவற் சேர்குவென் யான். (ஆ : 21.)

**சேர்த்தல்** – எய்தல். வாளிகள்...... நெற்றியில் இரண்டு சேர்த்தினன். (யுத் : 1503)

**சேர்தல்** – 1. செல்லுதல். உணர்வைச் சுட்டுச் சேர்தல் ஆற்றுமோ. (அ : 611)

2. தங்குதல். அடல்சேர் அசுரர். (பா : 629)

3. அடைதல். சேருதும் அமளி. (பா : 1161)

4. சேர்ந்து வருதல். சேர்க நின்னொடும். (கி : 752)

**சேர்ந்துழிச் சேர்ந்துழி** – அடையுந்தோறும். நவமணி படர்ந்த பித்திகை சேர்ந்துழிச் சேர்ந்துழி நிறத்தைச் சேர்தலால். (கி : 3)

**சேர்ப்பு** – எல்லை. மேருவின் சிகரச் சேர்ப்பின். (யுத் : 2708)

**சேர்வு** – சென்றடைதல். சேர்வில. (யுத் : 2298)

**சேரல்** – 1. பொருந்துதல். விட்டுலம்பிட நெடு விசும்பிற் சேரலும். (யுத் : 1478) (யுத் : 914)

2. செல்லுதல். துணையின்றிச் சேரல் நன்றோ தோற்றுள கூற்றின் குழல். (யுத் : 133)

**சேரலர் - சேரநாட்டரச பரிவாரங்கள்.** *சேரலர் தென்னவர். (பா : 1194)*

**சேரை - சாரைப்பாம்பு.** *தண்ணிள ஆம்பலைச் சேரையென்று புலம்புவ தேரையே. (கி : 934)*

**சேரைப் பாம்பு - சாரைப்பாம்பு.** *சேரைப்பாம்பின் தலையவாகிப் பரிந்தன குவிந்து சாய்ந்த ஆம்பலும். (அ : 481)* **(அ : 581)**

**சேல் - கெண்டைமீன்.** *சேல்பிடித் தெழுதிரை யாற்றின்.* **(யுத் :1776)**

**சேலாகிய முதல்வன் - மச்சாவதாரமெடுத்த திருமால்.** *(அ : 372-a)*

**சேலியற் கண் அரக்கியர் - சேல் மீன்களை ஒத்த கண்களையுடைய அரக்கியர்.** *(யுத் : 3165)*

**சேலுடை நெடு நன்னீர் - சேல் என்னும் மீனைத் தன்னிடத்துக் கொண்ட மிக்க புண்ணியமுள்ள நீர்.** (வை. மு) *சேலுடை நெடு நன்னீர் சிந்தினர் விளையாட.* **(அ : 678)**

**சேலுண்ட ஒண்கண்ணார் - சேல்மீனை ஒத்த ஒளிபொருந்திய கண்களை யுடைய மகளிர்.** *(பா : 44)*

**சேவகக் கோலம் - வீரக் காட்சி.** *(கலா)* **பராக்கிரமத்தின் தோற்றம்.** *(வை. மு)* **வீரத் திருக்கோலம்.** *(அண்) என் கணவன் சேவகக் கோலம்.* **(யுத் : 3976)**

**சேவகங்கள் - வீரச்செயல்கள்.** *திண்டிறற் புனை சகரனும் தனயர் சேவகங்கள் கண்டு.* **(பா: 512)**

**சேவகச் செய்கை - வீரச்செய்கை ஆண்மைத் தொழில்.** *தீயெனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால். (யுத் : 1248)*

**சேவகம் - 1. வீரச்செயல். வீரம்.** *சகரனும் தனயர் சேவகங்கள் கண்டு.* **(பா : 512)** *சேவகச் செய்கை. (யுத் : 1248)*

**2. உறக்கம்.** *சேவகம் அமைந்த சிறுகட் கரிகள் என்ன.* **(அ : 543)**

**3. யானைகள் தங்கு கூடம்.** *(கலா)* **படுக்குமிடம்** *சிந்துரக் களிறு சேவகஞ் சேர்ந்தென.* **(யுத் : 1227) (யுத் : 2565)** *ஆடன் மாக்கரி சேவகம் அமைந்தென.*

**சேவகர் - 1. காலாள் வீரர்.** *தேர் முகத்திற் சேவகர் மேற் செறுத்து.* **(யுத் : 1006)**

**2. வீரர்.** *சேவகர் கடனேராய். (யுத் : 1549)*

**சேவகன் - வீரன்.** *சேவகனல்லையோ.* **(யுத் : 1549)** *பூவெழுமழுவினுற் பொருது போக்கிய சேவகன் சேவகம் செகுத்த சேவகற்கு ஆவது இவ்வுலகம்.* **(அ : 77) (யுத் : 926)**

**சேவகனுர் - வீரர்.** *தெருவே திரிவார் ஒரு சேவகனுர் இருபோதும் விடார்.* (பா : *1252*)

**சேவடி - 1. சிவந்த அடிகள்.** *நின் சில்லரக் குண்ட சேவடிப் போது.* (அ : *518*) *சேவடிப்பூ.* (பா : *1316*)

**2 செவ்விய அடிகள். செம்மை பொருந்திய திருவடிகள்.** *தன் சேவடிக் கொழுந்தாலுன்னை வென்றவன்.* (சு : *451*) (யுத் : *459*) (யுத் : *213*)

**சேவடிக் கமலப்பூ - செவ்விய அடித்தாமரை மலர்.** *சேவடிக் கமலப் பூவிற் பூட்டிய கையன் பொய்யில் உள்ளத்தன் புகலலுற்ருன்.* (அ : *1026*)

**சேவடிக் கமலம் - திருவடித் தாமரை.** *சேவடிக் கமலஞ் சேர்வான்.* (ஆ : *1024*)

**சேவடிக் கொழுந்து - செவ்விய அடியின் கொழுந்தாகிய ஒரு விரல்.** *குன்று நீ எடுத்த நாள் தன் சேவடிக் கொழுந்தாலுன்னை வென்றவன்.* (சு : *451*)

**சேவடிப் போது - சிவந்த பாத தாமரை.** *கல்லரக்கும் கடுமைய வல்ல நின் சில்லரக்குண்ட சேவடிப் போது என்ருன்.* (அ : *518*)

**சேவல் - ஆண் பறவை.** *சேவலோடுறை செந்தலை அன்றில்.* (ஆ: *300*)

**சேவலோன் - சிவன். (சே - இடபம்)** *முப்புரங்கள் செற்ற சேவலோன் துணைவனுன செங்கையோன் தங்கை.* (ஆ : *263*)

**சேவித்தல் - 1. குற்றேவல் செய்தல்.** *சதகோடி மின் சேவிக்கும் மின்னர சென்னும்படி நின்ருள்.* (பா : *594*)

**2. அடிவணங்கல்.** *தேவா நின் கழல் சேவிக்க வந்தனன்.* (அ: *655*)

**சேற்ற - சேற்றிலுள்ளதாகிய.** (அண்) *சேற்ற வளை தன் கணவன் அருகிருப்ப.* (ஆ : *346*)

**சேற்றடங் கட்டிரு - சேல்போன்ற கண்ணையுடைய திருமகள்.** *சேற்றடங் கட்டிருவொடும் நீங்கிய பாற்றடங்கடல்.* (அ : *829*)

**சேற்ற வளை - சேற்றிலுள்ள சங்கு.** (ஆ : *346*)

**சேற்ருல் விளையாத செந்தாமரைக் கைகள் - சேற்றில் தோன்ருதன வான செந்தாமரை போலும் கைகள்.** (பா : *993*)

**சேற்றிள மரைமலர் - சேற்றில் வளர்ந்த இளமையான தாமரை மலர்.** *சேற்றிள மரைமலர் சிறந்தவாமெனக் காற்றளம் பொலிதரு கன்னிமார்.* (அ : *962*)

**சேற்றுட் சுரித்தல் - சேற்றினுள்ளே புதைதல்.** *மண்ணுறச் சேற்றுட் புக்குச் சுரிகின்ற மாலைக்குன்றம்.* (யுத் : *638*)

**சேறல் – 1. செல்லுதல். புகுதல்.** *கான்புறஞ் சேறலில்.* **(அ : 561)** *தேரிடை வித்தகன் சேறன் மேயினன்.* **(அ : 576)** *சேறி.* **(சு : 14)** *செவ்வழிச் சேறலாற்றூர்.* **(சு : 830)** *எவ்வழிச் சேறும் என்றூர்* **(சு : 830)**

**2. வழிநடத்தல்.** *தென்றிசை நெறியினேச் சேறன் மேயினன்* **(அ : 1206)**

**சேறுடுதல் – சேறுபடுதல்.** *சேறுடின நீணெறி சென்ற வெலாம்.* **(யுத் : 1700)**

**சேறி – செல்வாயாக. செல்லுதி.** *சேறி ஐய விரைந்தனே சேறி* **(சு : 682)** *செவ்விது சேறி.* **(யுத் : 2359) (சு : 14) (யுத் : 2902)**

**சேறு – மண் சேறு. சேறுபோன்று குழம்பாயிருப்பது.** *விரவு செஞ் சாந்தமும் செறிமதக் கலுழிபாய் சேறுமே சேறெலாம்.* **(பா : 1126) (யுத் : 556) (யுத் : 1206)**

**சேறு காண்குறும் – கலக்கிச் சேறுக்கவல்ல.** *ஈறில் வேலையை இமை யுறு மளவினிற் கலக்கிச் சேறுகாண் குறுந்திறல் கெழுவானர சேனே* **(கி : 707)**

**சேறு செய்தல் – சேறுகச் செய்தல்.** *நாறுதன் குலக்கிளேயெலாம் நரகத்து நடுவான் சேறு செய்துவைத்தான்.* **(யுத் : 841)**

**சேறுமோ – செல்வோமோ.** *இம்மென உடனெடுத்தெழுந்து சேறுமோ.* **(யுத் : 3444)**

**சேனுபதி – சேனே நாயகன்.** *சேனுபதி தன்னயலே.* **(யுத் : 832) (யுத் : 2905) (அ : 608)**

**சேனேக்கடல் – சேனு சமுத்திரம். கடல் போன்ற சேனே.** **(யுத் : 1386)**

**சேனேக் காவலர் ஓரைவர் – சேனுதிபர் ஐவர். பஞ்ச சேனுபதிகள்.** **(யுத் : 523)**

**சேனே காப்பாளன் – சேனேத் தலேவன்.** *சேனே காப்பாளன் செப்பும்.* **(யுத் : 757)** *[பா : பே]*

**சேனே காவலன் – சேனு நாயகன்.** *சுருங்கிய கருங்கடற் சேனே காவலன்.* **(யுத் : 27)**

**சேனே காவாளன் – சேனேத் தலேவன்.** *சேனே காவாளன் செப்பும்.* **(யுத் : 757)**

**சேனேத் தலேவர் – படைத்தலேவர்.** *முதியரும் சேனே நீள்கடல் தரம் பெறு தலேவரும் தழுவத் தோன்றினன்.* **(யுத் : 18)**

**சேனேத் தலேவோர் – சேனேத்தலேவர்.** *சேனேத் தலேவோரும் தாம மடைந்தார்.* **(அ : 1133)**

**சேனை நாதன் – தானைத்தலைவன்.** அடியின் இறைஞ்சிய சேனைநாதன் இனைய செப்பினான். (யுத் : 740)

**சேனை நீள் கடல்தரம் பெறுதலைவர் – படையாகிய பெருங்கடலில் மேன்மைபெற்ற தலைவர்.** (யுத் : 18)

**சேனைப் போர்க்கடல் – போரிடும் பெரிய சேனைக்கடல்.** புக்கது கவிப் பெருஞ்சேனைப் போர்க்கடல். (யுத் : 2948)

**சேனை புறத்தும் அகத்துப் புடை சுற்றல் – சேனை வெளியிலும் மனத் துள்ளும் புடை பெயர்ந்து திரிந்துகொண்டிருத்தல். அகத்துப் புடை சுற்றலாவது சேனையை எங்ஙனம் செலுத்திப் பகையை வெல்வ தென்ற சிந்தனையைக் கொண்டிருத்தல்.** பொங்கிப் பரந்த பெருஞ் சேனை புறத்தும் அகத்தும் புடை சுற்ற. (யுத் : 3)

**சேனை முந்நீர் – சேனையாகிய சமுத்திரம்.** புறந்தரு சேனை முந்நீர். (யுத் : 1654)

**சேனையாடவர் – சேனாவீரர்.** அதிகாயன் தன் சேனையாடவர். (யுத் : 1802)

**சேனையாழி – சேனைக்கடல்.** அரக்கர் தஞ்சேனையாழி. (யுத் : 2550)

**சேனையின் கொழுந்து – சேனையின் முன்னணி** எழுந்திடைப் படரும் சேனையின் கொழுந்து போய்க் கொடிமதில் மிதிலை கூடிற்றன்றே. (பா : 839)

**சேனையோர் – சேனைவீரர்.** இச்சேனையோரை அடையத்தெரி. (யுத்: 824) [பா : பே]

**சேனை வளைதல் – சேனை சூழ்ந்துகொள்ளல்.** தெண்டிரைக் கடலென வளைந்த சேனையை. (சு : 811)

# சை

**சையப் படிவம் – மலைபோன்ற வடிவம்.** சையப் படிவத்தொரு தந்தையை. (யுத் : 1726)

**சையம் – 1. மலை.** சையம் புக நிமிரக் கடல் தழுவும்படி சமைவான். (பா : 1363)

2. **கற்கள்.** (வை. மு) சைய மா நெடுந் தாழ்வரைத் தனிவரை. (ஆ : 1177)

3. **சையமென்னும் மலை.** (அண்) (ஆ : 1177)

**சைய மா நெடுந்தாழ் தடந்தனிவரை – சையகிரி என்னும் பெரியதும் தாழ்ந்து பரந்த அடிவாரங்களையுடையதுமான ஒப்பற்ற மலை.** (கலா) (ஆ : 1177) [பா: பே]

**சைய மா நெடுந்தாழ்வரைத் தனிவரை – சையம் என்கின்ற பெரிய நெடிய தாழ்வரைகளோடு கூடிய ஒப்பற்ற மலை.** (அண்) (ஆ : 1177)

# சொ

**சொத்து – பொருள்.** *முறையமுதச் சொத்தின் துள்ளி வெள்ளியினங் தொடுத்த கொல்லோ.* **(சு : 542)** *[பா : பே]*

**சொர்க்கத்தார் - துறக்கத்தார்.** *நரகத்தார் சொர்க்கத்தார் நம்பி நம்மோடெல்லாரும் பகைஞரே.* **(யுத் : 3892)**

**சொர்க்கம் – துறக்கநாடு.** **(யுத் : 3892)**

**சொரி – நீர்ப்ருெக்கு.** *சொரிவமைப்ப தரிதாய மழைக்கண்ணாள்.* **(யுத் : 4148)**

**சொரிதல் – வெளிப்படுதல். வழிதல். பொழிதல்.** *மூக்கினூடு சொரிந்தன மூளையே.* **(யுத் : 983)** *குருதியாறு பெருகிச் சொரிய.* **(ஆ : 34) (யுத் : 562)**

**சொரிவு – நீர்ப்பெருக்கு.** *சொரிவமைப்பதரிதாய மழைக்கண்ணாள்.* **(யுத் : 4148)**

**சொல் – 1. புகழ்.** *சொற் பிறந்தார்.* **(ஆ : 591) (பா : 5)**

**2. கவி.** *செய்தவன் சொல் நின்ற தேயம்.* **(பா : 5)**

**3. வேதம்.** *சூலமும் திகிரியும் சொல்லுந் தாங்கிய மூலம் வந்துதவிய மூவர்.* **(அ : 1138)**

**4. கட்டளை.** *என் சொல் மௌலியால் ஏற்கின்றுரொடு உடனுறை இன்பமால்.* **(சு : 435)**

**5. பேச்சு.** *சொற்பிரியாப்பழி.* **(சு : 501)**

**6. சாபமொழி.** *சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்.* **(பா: 413)**

**7, சரசுவதி,** (வை. மு) **(அ : 1138)**

**8. நூல்.** *முற்றிய சொல்லின் எல்லையான்.* **(கி : 415)**

**9. பழிச்சொல். (யுத் : 4144)**

**10. ஒரு சொல்.** *பொருள் குறித்தமர்ந்த நாமச்சொல்.* **(யுத்: 1210)** *சொல்லொக்கும் பொருள் ஒவ்வாவால்.* **(ஆ : 633)**

**சொல்துறை – (ஏற்ற) சொல்லைச் சொல்லும் நெறி.** *ஏற்ற சொல் துறையறி பெருமையான்.* **(அ : 12)**

**சொல் நோக்குதல் – சொல்லைக் குறிக்கொண்டு பாதுகாத்தல்.** *அடல் மாருதி தன்னை நோக்கினன் தாயர் சொல் நோக்கினன்.* **(யுத் : 3933)**

**சொல்மதித் தொருவராலும் சொலப்படா - வாசாம கோசரம்.** (வை. மு) *சொல்மதித் தொருவராலும் சொலப்படா அயோத்தி தோன்றிற்று.* (யுத் : 4241) **[எண்ணி ஒருவராலும் வரையறுத்துச் சொல்லமுடியாத]** (அண்)

**சொல்மலை - சொல் தொகுதி.** *சொல்மலை யல்லன தொடு கடலமிர்தம்.* (பா : 78)

**சொல் மாசுண்ணுதல் - சொல் குற்றப்படுதல். சொல் குன்றக் கூறுதலாகிய குற்றமுடையனவாகும்.** *இனைய மாடங்கள் இந்திரற் கமைவர எடுத்த மனையின் மாட்சிய வென்னின் அச்சொல்லும் மாசுண்ணும்.* (சு : 102)

**சொல்லச் சொல்ல - சொல்லுந்தோறும்.** *ஆவி துடைத்தது பகையைச் சேனை எனச் சிலர் சொல்லச் சொல்லப் படைத்ததோர் உவகை.* (யுத் : 1628)

**சொல்லமிழ்த மன்னுள் - சொல்லின் இனிமையால் அமிருதத்தை ஒப்பவள்.** *மொழிந்த சொல்லமிழ்த மன்னுள் திறத்தினின் முறைமை நீங்கி இழிந்த என் மரபு.* (யுத் : 456)

**சொல்லளவு - சொல்லாற் குறித்த காலம் வருமளவும்.** *கொல்கிலேன் குறித்துச்சொன்ன சொல் அளவு.* (சு : 471)

**சொல்லறுக்கும் வலியரக்கர் - சொல்லால் எடுத்துரைக்க ஒண்ணாத வன்மையுடைய அரக்கர்** (யுத் : 3359)

**சொல்லன் மேயினுன் - சொல்லத் தொடங்கினுன்.** *நாவினுற் சூளுறு கட்டுரை சொல்லன் மேயினுன்.* (அ : 889)

**சொல்லாடுதல் - பேசுதல். எடுத்துரைத்தல்.** *நல்லா றுடை வீடணன் நாரணன் முன் சொல்லாடினன் அன்னவை சொல்லுது மால்.* (யுத் : 1731)

**சொல்லிடு - விரைந்து சொல்.** *சொன்னபின் என் செயல் காண்டி சொல்லிடென்ருன்.* (அ : 190) (யுத் : 930)

**சொல்லிடு சொல்லிடு-சொல்லுக சொல்லுக. (அடுக்கு போர் ஆர்வங் குறித்தது)** *சொல்லாய் அது சொல்லிடு சொல்லிடு என வில்லாளன் இளங்கிளையோன் வினவ.* (யுத் : 1724)

**சொல்லிடை கிழிக்கில - ஒரு சொல் சொல்லும் நேரமும் தாமதியாத வாய்.** *சொல்லிடை கிழிக்கில சுருங்கிய குரங்கு.* (யுத் : 74)

**சொல்லிய - சொல்லும் பொருட்டு.** *பணித்த மாற்றம் சொல்லிய வந்தேன் என்ருன்.* (யுத் : 940)

**சொல்லின் செல்வன் - சொற்களையே செல்வமாக உடையவன்.** *யார் கொல் இச் சொல்லின் செல்வன்.* (கி : 61)

**சொல்லினுர் இல்லை – சொன்னவர் எவரும் இல்லை. சொல்லவில்லை.** (யுத் : *3360*) *[பா : பே]*

**சொல்லுதல் –1. கற்பித்தல்.** *துன்றுதாரவற் சொல்லுதல் மேயினுன்.* (அ : *103*)

**2. பழித்தல். பழிக்கப்படுதல்.** *சொன்ன நம் பொருட்டும்பர் தம் சூழ்ச்சியின் துணிவால்.* (யுத் : *123*)

**3. கூறுதல்.** *சொற்ற நாவையும்.* (யுத் : *177*) *சொற்றனை.* (யுத் : *1132*) *சொல்லினீர்.* (யுத் : *326*) (யுத் : *1628*) *நன்று சொல்லினை.* (அ : *48*) *சொல்லல்.* (அ : *816*) *[பா : பே]* *சொல்லலையோ.* (ஆ : *832*) *சொல்லுவான் துணிந்தாம்.* (சு : *331*) *என் சொல்லாய்.* (யுத் : *1601*) *சொல்லுதி.* (யுத் : *1504*) *சொல்லுவீர்.* (யுத் : *351*)

**சொல்லுதிர் – சொல்லுங்கள்.** *எம் வரவு சொல்லுதிர் மன்னவற்கே என்றுர்.* (சு : *793*)

**சொல்லுமத்தனை அளவை – ஒரு சொல் சொல்லும் சிறியபொழுது. காலச் சிறுமையை உணர்த்திற்று.** *சொல்லும் அத்தனையளவையின் மணிமுடி துறந்தான்.* (யுத் : *1290*)

**சொல்லும் எல்லையின் – ஒரு வார்த்தை சொல்லும் பொழுதில்.** *அல்லி புல்லு மலரன்ன மனையாளை ஒருகை சொல்லுமெல்லையின் முகந்துயர் விசும்பு தொடர.* (ஆ : *20*)

**சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம் – முனிவர்களின் சாபச்சொல்லை யொத்த மிக்க விரைவினையுடைய காந்துகின்ற அம்பு.** (பா : *413*)

**சொல்லொக்கும் பொருளொவ்வா – சொல்லளவில் பொருந்துமாயினும் பொருள்களின் அளவால் பொருந்தா.** (ஆ : *633*)

**சொல்லொன்ருய்ச் செய்கையொன்ருய் – சொல் ஒருவகையாகவும், செய்கை வேறுவகையாகவும்.** *செப்பிவந்த சொல்லொன்ருய்ச் செய்கையொன்ருய்த் துணிந்தனன் அரக்கன் துஞ்சி.* (யுத் : *3682*)

**சொல் வகுத்தல் – வகைப்படுத்திக் கூறுதல்.** *வன்றின் சிலையாய் கேண்மோ எனவே ஒரு சொல் வகுத்தான்.* (அ : *380*)

**சொல்வலி – பேச்சுத்திறன்.** *உன சொல்வலியாற் போதென்றுடனே கொடு போதுதியால்.* (யுத் : *1711*)

**சொல்விக்க – சொன்ன சொல்லைத் தெரிவிக்க.** (யுத் : *2843*)

**சொல் வில் – சொல்லாகிய வில்.** *சொல் வில்லால் உலகளிப்பாய் போர் செய்யத் தொடங்கினுர்.* (பா : *770*)

**சொல் வில்லால் உலகளிப்பாய்** – சொல்லாகிய வில்லைக்கொண்டு உலகத்தை அளிக்கும் முனிவனே. *(பா : 770)*

**சொலின் மொய்ம்மலர்** – சொல்லாகிய நிறைந்த மாலை. *மொழியும் இன் சொலின் மொய்ம்மலர் சூட்டினர்.* (அ : 631)

**சொலை** – சொல்லை. *நடுங்கன் மின் எனும் சொலை நவின்று.* (கி : 885)

**சொற்கடன்** – சொற்கடவாத தன்மை. *நூற்கடலன்னவர் சொற் கடன் நோக்கி.* (பா : 1343)

**சொற்கலை** – 1. சப்த சாஸ்திரம். இலக்கண நூல். *சொற்கலை முனிவன்.* (பா : 569)

2. சொற்களின் வடிவமாகவுள்ள கலை. (வை.மு) நூல்கள். (அண்) *சொற்கலையெனத் தொலைவில் தூணிகள் சுமந்தார்.* (ஆ : 613)

**சொற்கலை முனிவன்** – தமிழிலக்கண நூலையருளிய அகத்திய முனிவன். *சொற்கலை முனிவனுண்ட சுடர்மணிக் கடல்.* (பா : 569)

**சொற்குன்றல்** – சொல்லை மீறுதல். *இவன் அவள் சொற்குன்றேன் என ஏகிய கொள்கையினுல் நின்றுனுளனுகி.* (யுத் : 1757)

**சொற்பகும்** – சொற்கள் ஆற்றலின்றி வலிகுறையும். (ஆ : 855) *[பா : பே]*

**சொற்பங்கமுற நிமிர் இசையின் சும்மை** – சொற்கள் போதாமையால் குறைவடையுமாறு வளர்ந்த புகழின் திரட்சியாக இருப்பவன். சடாயு. (ஆ : 181)

**சொற்படும்** – சொற்கள் போதாமற் குறையும். (ஆ : 855)

**சொற்பிரியாப்பழி** – சொல்லுதல் நீங்காத வசை. உலகம் என்றும் நின்று தூற்றும் பழி. (அண்) உலகம் பேசும் பேச்சினின்றும் பிரியாத நிந்தை. (வெ. ப) *சொற்பிரியாப் பழிசுமந்து தூங்குவேன்.* (சு : 497)

**சொற்பிறந்தார்** – புகழ் உண்டாகப்பெற்ற மகளிர். *சொற்பிறந்தார்க் கிது துணிய ஒன்றுமே.* (ஆ : 591)

**சொற்பு** – சொல். *சொற்புறுத்திய கற்புடையாள்.* (அ : 311) *[பா : பே]*

**சொற்புறுத்தல்** – சொல்பவற்றை மனத்தே பதியச்செய்தல். (அ : 311) *[பா : பே]*

**சொற்பெற்ற நோன்பின் துறையோன்** – புகழ்பெற்ற தவத்துறையில் தேர்ந்த கலைக்கோட்டு முனிவன். (அ : 1126)

**சொற்பொருள்** – சொற்களின் பொருள். *கற்பகமனைய அக்கவிஞர் நாட்டிய சொற்பொருளாமெனத் தோன்றல் சான்றது.* (கி : 6)

**சொற்ற – சொன்ன.** (அண்) **சொல்லக்கூடிய.** (வை. மு) *சொற்ற வாம் அளவதோ மற்றிதன் தூய்மையே.* **(பா : 344)** *இப்பேர் சொற்ற வாயையும் கருதிய மனத்தையும் சுடும் என் ஒற்றை யாணை.* (யுத் : 177) **(அ : 1169)**

**சொற்றமை – சொன்னமை.** *முனி சொற்றமையும்.* **(அ : 383)**

**சொற்றல் – பேச்சு. சொல்லுதல்.** *நன்றிது இராக்கதர் கொற்றஞ் சொற்றல் மூடரும் மொழியார்.* **(சு : 748)** *வாய்கொண்டு சொற்றற் கெற்ற வலிகொண்டு.* **(யுத் : 1908)** *சொற்றேன்.* **(கி : 402)** *சொற்றலும்.* **(கி : 651)**

**சொற்றவாமளவதோ – இதுவரை சொன்ன அளவில் அடங்கியது ஆகுமோ.** *சொற்றவாமளவதோ மற்றிதன் தூய்மையே.* **(பா: 344)**

**சொற்றன சொல் – சொல்லிய வார்த்தை.** *சுமித்திரை சேய் அவள் சொற்றன சொல்லைக் கமித்திலன்.* **(ஆ : 1094)** [பா : பே]

**சொற்றனை – சொல்லினை.** *விழுமியது சொற்றனை.* **(ஆ : 172)**

**சொற்றுமுன்னம் – சொல்லி முடிப்பதற்கு முன்னம்.** *சொற்றுள் சொற்றுமுன்னம்.* **(அ : 333)**

**சொற்றுள் – சொன்ன அவள். கைகேசி.** **(அ : 333)**

**சொற்றுந் தரமன்று–சிறப்பாக எடுத்துக்கூறும் தரத்ததன்று.** *சொற்றுந் தாமன்றிது.* **(ஆ : 92)**

**சொற்றுளி மாரி – சொற்களாகிய துளிகளையுடைய மழை.** **(அ : 418)**

**சொற்றுறு – சொல்லியுள்ள.** *சொற்றுறு சூழ்ச்சியின் துணிவு.* **(யுத் : 86)**

**சொற்றுறை – சொல்நெறி.** *நிலவரைத்தரு பொருள் வழித் தண்டமிழ் நிரப்பும் புலவர் சொற்றுறை புரிந்தவும் போன்றன புங்கம்.* **(யுத் : 1444)**

**சொற்றுறையறி பெருமையான் – சொல்லும் நெறியறிந்த பெருமை யான். தசரதன்.** *சொற்றுறையறி பெருமையான் அருளுஞ் சூடினன்.* **(அ : 12)**

**சொறிதல் – தினவு சொறிதல்.** *சொறிந்த தன்மையும் செய்தில வாயின.* **(யுத் : 213)** *சொறிந்தனர்.* (சு : 833) *இந்துவால் யாக்கை சொறிந்து.* **(யுத் : 3267)**

**சொன்மலை – சொல்மலை. சொல்லின் தொகுதி.** (பா : 78)

**சொன்மரு மகவு – சொல்லை மருது ஏற்றுக்கொள்ளுகின்ற மகன்.** *சொன்மரு மகப்பெற்றவர்.* **(அ : 68)**

**சொன் மாண்பு - சொல்லில் மாட்சி.** *சொன் மாண்புடையன்னை சுமித்திரை.* **(அ : 435)**

**சொன்மான் - புகழ்கொண்ட மான்போன்ற மாது.** *அரம்மை மாருள் திலோத்தமை எனுஞ் சொன்மானை.* **(பா : 668)**

**சொன்முறை - சொல்லும் முறை.** *சொன்முறை அறியச் சொல்லி.* **(சு : 1325)** *சொன்முறை நெறி தெரிந்து.* **(யுத் : 378)**

**சொன்முறை கடவேல் - யான் சொல்லும் கட்டளையினின்றும் நீங்காதே. (உ. வி)** *சுடருறு வடிவேலாய் சொல்முறை கடவேல்.* **(அ : 687)**

**சொன் மவு(மௌ)லியாலேற்றல் - கட்டளையைத் தலையால் வணங்கி ஏற்றல்.** *என் சொல் மவுலியால் ஏற்கின்றாரோடு உடனுறை இன்பமால்.* **(சு : 435)**

**சொன்ன சொன்னவர் - இதுகாறும் சொல்லிவந்தவர்கள். (யுத் : 507)** *[பா : பே]*

**சொன்ன சொன்னவா - மிகுதியாகச் சொல்லப்பட்டவாறுயுள்ள.** *சொன்ன சொன்னவா படைத்துணை இரட்டியின் தொகையான்.* **(யுத் : 507)**

**சொன்ன தானம் - சுவர்ண தானம்.** *சொன்ன தானப் பலன் எனச் சொல்லுவார்.* **(பாயி : 17)**

**சொன்னம் - பொன். சொர்ணம் என்பதன் திரிபு.** *சொன்ன மதில் இலங்கை.* **(யுத் : 526)**

**சொன்னலங் கடந்த காமச்சுவை - சொல்லையும் எல்லா இன்பங்களையும் கடந்து நின்ற காம இன்பம்.** **(பா : 1159)**

**சொன்னவா சொல்லாவண்ணம் - சொன்ன வகையை மீண்டுஞ் சொல்லாதபடி. சொன்னவாறு என்பது ஈறு குறைந்தது.** *சொன்னவா சொல்லாவண்ணம் அதிசயந் தோன்றுங் காலை.* **(யுத் : 804)**

**சொன்னன சொன்னன - சொல்லியவைகளெல்லாம்.** *சொன்னன சொன்னன செவியிற்றாங்கவும்.* **(சு : 500)**

**சொன்னார்கள் இல்லை - சொல்லவில்லை.** **(யுத் : 3360)**

**சொன்னெறியறிவு நீரார் - பேசவேண்டிய முறைமையறியுந் தன்மையினர்.** *சொன்னெறி யறியு நீரார் தோமறு புலமைச் செல்வர்.* **(யுத் : 4332)**

**சொனாய் - சொன்னாய்.** *என் சொனாய் அரக்க.* **(ஆ : 881)**

**சொனார் - சொன்னவர்.** *கடிந்திட யார் சொனார் கருது நூல்வலாய்.* **(யுத் : 3972)**

# சோ

**சோகந்தீர்ப்பவன் – சோகத்தைத் தீர்த்தற்குரிய தன்மையுடையவன்.** (அ : 324)

**சோகபங்கம் – சோகமாகிய மாசு. (அழுக்கு)** சோகபங்கம் துடைப் பரிதாலெஞ. (அ : 791)

**சோகபந்தம் – துக்கமாகிய பிணிப்பு.** சோகபந்தம் துடைப்பரிதா லெஞ. (அ : 791) [பா : பே]

**சோகம் - பிரிவுத்துயரம்.** இச்சோகந் தீர்ப்பவன் என்று. (அ : 324)

**சோகவிடம் - சோகந்தரத்தக்க நஞ்சு.** சோகவிடந் தொடரத்துணுக்க மெய்தா. (அ : 196)

**சோணுடு – சோழநாடு.** துறை கெழுநீர் சோணுடு. (கி : 773)

**சோணிதக்கண்ணன் - சோணிதாட்சன்.** (யுத் : 2361)

**சோணிதம் – இரத்தம்.** வழிபடு செஞ் சோணிதம் நிலமுற. (யுத்: 3099)

**சோணை – ஓர் ஆறு.** சோணையாந் தெரிவையைச் சேர்ந்தார். (பா : 478) சோணையாறு. (பா : 976)

**சோதனை – 1. தூண்டுகோல். [சோதனா]** என்தன் சோதனை நோக்கிச் செய்தி துடிப்பிலை எனச் சொன்ஞன். (யுத் : 3673)

2. **பரிசோதித்தல்.** துள்ளும் பொறியின் நிலை சோதனைதான் விதியோ. (யுத் : 235)

3. **குறிப்பு.** (உ. வி) என்தன் சோதனை நோக்கிச் செய்தி. (யுத் : 3673)

**சோதி – பிரகாசம். ஒளி** மாசற்ற சோதி வெள்ளம். (யுத் : 763) சோதிசெய் பொன். (கி : 795)

**சோதிச் சுடர்ப் பிழம்பு – பரஞ்சோதி. எல்லா ஒளிகளுக்கும் மேலான பேரொளித்திரள்.** சோதிச் சுடர்ப் பிழம்பு நீ என்று சொல்லுகின்ற வேதம். (ஆ : 1183)

**சோதிட வாய்மைப் புலவர் – சோதிடம்வல்ல உண்மைப் புலவர்கள்.** மாண்ட சோதிட வாய்மைப் புலவரை ஈண்டுக் கூய்த்தருகென்ன வந்தெய்தினர். (யுத் : 4131)

**சோதிட வித்தகர் – சோதிடம் வல்லவர்.** சோதிட வித்தகர் விரித்த நாள் ஒத்த வீதியே. (அ : 130)

**சோதி நீண்ட முடி – ஒளியையுடைய நீண்ட கிரீடம்.** சோதி நீண் முடி மன்னர். (பா : 1196)

**சோதி மணித் தேர்** - ஒளி பொருந்திய மணிகள் பதித்த தேர். *சோதி மணித் தேர்ச் சுமந்திரன்.* (அ : 604)

**சோதியான்** - சூரியன். *சோதியானுதயஞ் செய்தான்.* (யுத் : 2710)

**சோதி விளக்கம்** - ஒளிதரும் விளக்கம். *நீண்ட சோதி நெய் விளக்கம் வெய்யவென்று.* (பா : 632)

**சோதி வெள்ளத்துச்சியின் வரம்பு** - பரமாகாசம். சோதித் தொகுதிகளை யுடைய வானத்தின் உயர்ந்த இடத்து எல்லை. *மாசற்ற சோதி வெள்ளத்துச்சியின் வரம்பிற்றோன்றும் ஈசற்கும் ஈசன்.* (யுத் : 763)

**சோதி வெள்ளம்** - ஒளி மிகுதி. *வான்சுடர்ச் சோதி வெள்ளம் வந்திடை யெயங்கல் நோக்கி.* (ஆ : 282)

**சோப்புதல்** - ஓட்டுதல். *வண்டு சோப்பி.* (யுத் : 1893)

**சோபனம்** - 1. நன்மை. *இயைந்த சோபனம் நன்றிது நன்றென.* (சு : 365)

2. மங்கல வாழ்த்து. *தேவர் நின்றுசி கூற முனிவர் சோபனங்கள் கூற.* (சு : 215)

3. மங்கலச் செய்தி. மங்கலமுண்டாயிற்று. *ஏழை சோபனம். ஏந்திழை சோபனம்.* (யுத் : 3937)

**சோம்பி** - சோம்பல்கொண்டு. *இரு தோளெனச் சோம்பி ஓங்கும் கல்லுஞ் சுமந்தேன்.* (அ : 432) *ஏனையரின்மையின் சோம்பியிருந்ததக் குரங்கு.* (சு : 929)

**சோம்பித்திரிதல்** - சோம்பலை மேற்கொண்டு அலைதல். *இன்றுதவாது போமேல் சோம்பித்திரிவேன்.* (யுத் : 1964)

**சோம்பினேன்** - ஒன்றும் செய்யமுடியாதவனாயினேன். செயலற்றேன். *குலமன்னதோர் வாளியாற் சோம்பினன் சாம்பன்.* (யுத் : 1161)

**சோம்பு** - சோம்பல். *இவ்வமரெனக்கருளி நின்று என் தோளினைத் தின்னுகின்ற சோம்பினைத் துடைத்தி என்றான்.* (ஆ : 430)

**சோம்புதல்** - செயலற்றவனாதல். *சோம்பினன்.* (யுத் : 1161) *சோம்பித் துறப்பென் உயிர்.* (யுத் : 1964)

**சோர்குழல்** - 1. அவிழ்ந்த கூந்தல். *கந்தம் துன்றும் சோர்குழல்.* (பா : 997)

2. அவிழ்ந்த கூந்தலையுடையாள். *சோர்குழ லொருத்தி.* (யுத் : 3211)

**சோர்த்தல்** - இருந்த இடத்திலிருந்து வேறோர் இடத்திற்குப் போகச் செய்தல். *கார்க் கருங்கடலை மற்றோரிடத்திடைக் காலன் தானே சோர்ப்பது போன்றது.* (யுத் : 3211)

**சோர்தல் - 1. தளர்தல்.** ஆடவர் ஆவி சோர. (பா : 938)

**2. பெருகுதல். ஒழுகுதல். சொரிதல். தானுகப் பெருகுதல்.** அஞ்சனம் ஆவி சோர. (பா : 938) சோரினும். (யுத் : 86) ஆறு போற் குருதி சோர. (பா : 1100) அருவி சோர்வாள். (ஆ : 870)

**3. துன்பத்தால் மெலிதல்.** அரந்தை என்கொல் வந்து தொடர்ந்த தெனத் துயர்கொண்டு சோரு நெஞ்சன். (அ : 188)

**சோர்தொறும் சோர்தொறும் - மூர்ச்சிக்கும்போதெல்லாம்.** சோர் தொறும் சோர்தொறும் உயிர்த்துத் தோன்றினுர். (சு : 1275)

**சோர் பொழுது - மாலைப்பொழுது.** சோர் பொழுதணி நகர் குறுகுவர். (பா : 311)

**சோர்விடம்பெரு உணர்வினன் - மனத்தளர்ச்சியற்ற பேருணர்வினன்.** பகையினை நீதியால் வெல்லும் சோர்வு இடம்பெரு உணர்வினன் சூழ்ச்சியே போல. (பா : 899)

**சோர்விலாது - மனத்தளர்ச்சி நீங்குமாறு.** (யுத் : 4074)

**சோர்விலாள் - பின்வாங்காதவள்.** தூயவன் பணியாமுன்னம் சொல்லுவாள் சோர்விலாள். (ஆ : 265)

**சோர்வு - 1. தாழ்வு.** சோர்விலா நல்லீரப் பயன். (கி : 994)

**2. மனச்சோர்வு.** சோர்விடம் பெரு வுணர்வினன். (பா : 899)

**3. தயக்கம். பின்வாங்குதல்.** சோர்விலாள். (ஆ : 265)

**4. பிழைபடுதல்.** ஓர் சோர்விலா நல்லீரப் பயன் நண்ணும். (கி: 993)

**5. மறதியால் விடுதல்.** சமைந்தவாறெலாம் சோர்விலீர் சொல்லு திர். (யுத் : 350)

**சோரச் சோர - மெலிய மெலிய.** உயிர் சோரச் சோரத் துளங்கு கின்ருர் சிலர். (சு : 269)

**சோரவிட்ட - தவறிவிழுமாறு விட்ட. நழுவி விழுந்த.** (அண்) இந்திரன்...... சோரவிட்ட சுடர்மணி ஓடையை. (யுத் : 1292)

**சோரன் - கள்வன்.** விழுந்தது சோரனியாக்கை. (யுத் : 3126)

**சோரி - 1. உதிரம். இரத்தம்.** நிணமும் சோரியும். (பா : 467) பொழிந்த சோரிப்புதுப் புனல். (யுத் : 993)

**2. சொரிதல்.** சோரிக் கதிரொளி. (யுத் : 4326)

**சோரிப் புதுப்புனல் – குருதியாகிய புதுநீர்** **(யுத் : 993)**

**சோரி நீர் – 1. மழைபோன்ற நீர்.** *பொங்கிய சோரிநீர் பொழியுங் கண்ணினுன்.* **(கி : 974)**

**2. இரத்த நீர்.** *போய்ச் சோரிநீர் சொரிதரச் சோரும்.* **(ஆ : 323)**

**சோரிநீர் சொரிதரல் – இரத்தநீர் பெருகா நிற்றல்.** **(ஆ : 323)**

**சோரியாறு – இரத்த நதி.** *சோரியாற்றிடை யழுந்தினர் இன்னுயிர் துறந்தார்.* **(யுத் : 2319)**

**சோரியின் தாரை – இரத்த ஒழுக்கு.** **(ஆ : 583)**

**சோரியினுழ்ந்த தேர் – இரத்தத்திற் புதைந்த தேர்.** *சோரியின் ஆழ்ந்த தேர் அம்பரத் தோட்டி ஆர்க்கின்ருன்.* **(ஆ : 494)**

**சோலை – பொழில்.** *பாரிடு பழுவச்சோலை.* **(சு : 745)**

**சோழர் – சோழநாட்டரச பரிவாரம்.** *மாளவர் சோழர் மராடரே.* **(பா : 1194)**

**சோறு – உண்ணும் சோறு.** *சோறும் உவந்து வாழேன்.* **(யுத் : 1964)** *[பா : பே]*

**சோனகர் – மிலேச்சர்.** **(பா : 662)** **(சு : 207)**

**சோனம் – இருண்டடர்ந்த மேகம்.** *சோனமா மழை முகிலெனப் போர்ப்பனை துவைப்ப.* **(சு : 868)** *[பா : பே]*

**சோனை - 1. விடாமழை. பெரிய மழை.** *சோனைவார் குழலினுர்.* **(பா : 1027)** *பலகணை மாரியின் சோனைபட்டது.* **(யுத் : 1012)**

**2. மேகம். (ஆகு)** *சோனை வார்குழற் சுமை பொருது.* **(அ : 755)** **(சு : 701)** **(சு : 182)**

**3. இடைவிடாது துளித்தல்.** *சோனை வார்குழல் அரக்கியர்.* **(சு : 121)**

**4. நீர்த்துளி** *(அன்)* *சோனை மாமலர்த் தும்பி.* **(சு : 1199)**

**சோனை படுதல் – இடைவிடாது பொழிதல்.** *சில மாமேகம் சோனை படக் குடர் குறைபடத் திரள் சாயனே.* **(அ : 1012)**

**சோனை மாரி - விடாமழை.** *சோனை மாரியிற் சுடுகணை பலமுறை துரந்தான்.* **(யுத் : 508)** **(யுத் : 2451)**

# ஞா

**ஞாங்கர் - பக்கம்.** ஞாங்கர் உற்பலம் உழத்தியர் பித்திகை நாற. (கி : *491*) யூகந்தான் முன்செலப் பின்செல ஞாங்கர் மொய்ம்புற. (கி : *684*)

**ஞாட்பு - போர்.** பந்த ஞாட்புறு பாசறை. (அ : *735*)

**ஞாயிறு - சூரியன்.** மதியமும் ஞாயிறுமிழந்த அல்லுமொத்தனன். (யுத் : *1210*)

**ஞால்வ - சிக்கித் தொங்குவன.** கைவைத்திடுக்கியன ஒத்தன எயிற் றினிடை ஞால்வ. (சு : *703*)

**ஞாலத்தவர் - உலகத்தவர்.** கன்மத்தை ஞாலத்தவர் யார் உளரே கடப்பார். (சு : *573*)

**ஞாலத்தாள் - பூமிதேவி.** மாயிரு ஞாலத்தாள் தன் வன்பொறைப் பாரம் நீங்கி. (யுத் : *3484*)

**ஞால நங்கை - பூமிதேவி.** (அ : *77-a*)

**ஞால நாயகன் - இராமபிரான்.** ஞால நாயகன் தேவி. (சு : *1253*)

**ஞாலம் - 1. உலகம்.** நாரியரில்லை இஞ்ஞாலம் ஏழுமென்ன. (அ: *207*)

**2. பூமி. பூமிதேவி.** வேலை சூழ் ஞாலம். (யுத் : *528*)

**ஞாலம் படுப்பான் - இராவணன்.** உலகத்துக்கு அழிவு செய்பவனுன இராவணன். ஞாலம் படுப்பான் தனதாற்றலுக்கேற்ற நல்வில் மூலம் ஒடிப்புண்டது கண்டு. (ஆ : *929*)

**ஞாலம்முடையான் - உலகநாதன். இராமபிரான்.** ஞாலம்முடை யானது நாமறவோர் ஆலம்முடை யம்பின றுத்தனனுல். (யுத் : *2329*)

**ஞாலமுண்டவன் - பிரளய காலத்தில் உலகத்தையுண்டு பாதுகாக்குந் திருமால் அவனமிசமான இராமபிரான்.** ஞாலமுண்டவ னல்கினுன். (யுத் : *1340*)

**ஞாலமும் விசும்புங் காத்த நானிலக் கிழவன் - தசரதன்.** (யுத் : *2412*)

**ஞால மூன்று - உலகம் மூன்று.** தகை ஞால மூன்றுங்காண. (பா : *878*)

**ஞாலமேழு - உலகம் ஏழு.** நன்றிதென்று ஞாலமேழு நாகமேழு மானுந்தன் வென்றிவில்லை. (யுத் : *3335*)

**ஞால மொடுங்குமெயிற்றுண் ஏனம் – உலகம் ஒடுங்கிக்கிடக்கும் பற்களையுடைய ஆண் பன்றி. (வராகப்பெருமான்)** ஊனமில் ஞால மொடுங்குமெயிற்றுண் ஏனம் எனுந்திறல் மாவலியென்பான். (பா : 436)

**ஞாலவாளி – உலகையாள்பவன்.** நாரவாளி ஞாலவாளி நாந்தகப் பாரவாரி. (யுத் : 3352)

**ஞாலுதல் – தொங்குதல்.** ஞால்வ. (சு : 703)

**ஞாளி – நாய்கள். செந்நாய்.** ஞாளிகள் பூண்டன. (ஆ : 398) (யுத் : 3352)

**ஞான்று – 1. காலம். பொழுது.** பொருந்துவர் எதிர்ந்த ஞான்றே. (யுத் : 429)

**2. நாளில். காலத்தில்.** உலகம் ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி. (சு : 561)

**ஞானக்கண் – ஞான நேத்திரம்.** தன்னை மறவாதே நினையும் ஞானக் கண்ணுடையார்மேல் நினையாதார் வினையம்போல. (யுத் : 3796)

**ஞானக்கணை – ஞானஸ்திரம்.** ஞானமாக் கடுங்கணை துறந்தான். (யுத் : 3790)

**ஞானக்கல் – அறிவாகிய அம்மி.** ஞான நிமிர் கல். (ஆ : 160)

**ஞானத்தம்பி – ஞானத்தையுடையவனான தம்பி. விபீடணன்.** உம்பர் மந்திரிக்கு மேலா ஒருமுழ முயர்ந்த ஞானத்தம்பி. (யுத் : 771)

**ஞானத் திருமறை முனிவன் – தத்துவ ஞானத்தோடு கூடிய சிறந்த வேதம்வல்ல முனிவன்.** தீபமே யனைய ஞானத் திருமறை முனிவன் செப்பும் சாபமே யொத்ததம்பு. (யுத் : 615)

**ஞானத்துத்தமர் – ஆத்ம ஞானத்தையுடைய மேலோர்.** நெடுஞானத் துத்தமர் உறங்கினர். (சு : 260)

**ஞானநாதன் – இராமபிரான்.** (யுத் : 4108)

**ஞான நாயகன் – 1. தத்துவ ஞானத்துக்குத் தலைவன். இராமபிரான்.** திசைமுகன் முதலினர் தெளிந்தோர் ஞான நாயகன். (கி : 487) (யுத் : 2595) (யுத் : 687)

**2. பிரகலாதன்.** பூசிறக் கண்கள் புனலுக மயிர்ப்புறம் பொடிப்ப ஞான நாயகன் இருத்தனன். (யுத் : 153)

**ஞான நிமிர் கல் – ஞானமாகிய உயர்ந்த அம்மி.** யாவும் நிரைத்த நெடு ஞான நிமிர் கல்லின் நெடுநாளிட் டரைத்தும். **(ஆ : *160*)**

**ஞான நீரவர் - அறிவு நிரம்பிய தன்மையுடையவர்.** ஆன தூயவரோ டுடன் ஆடினர் ஞான நீரவர் ஆகுவர் நன்றரோ. **(பா : *1033*)**

**ஞானம் – 1. மெய்யுணர்வு. பிரபஞ்ச நிலையும் கடவுள் நிலையும் உள்ளபடி அறியும் நிலை.** கற்றனர் ஞானமின்றேற் காமத்தைக் கடக்கலாமோ. **(ஆ : *643*)**

**2. ஞானத்தின் பயனாய நல்லொழுக்கம்.** கேட்டுணர் கல்வியோடு ஞானமும் கிடைத்த தொத்தார். (கி : *100*)

**ஞானமாக் கடுங்கணை – பெருமைமிக்க ஞானாஸ்திரம். (யுத் : *3791*)**

**ஞானம் முற்றினர் – ஞானம் நிரம்பியவர்.** ஞானம் முற்றினர் அன்பு பூண்டார். (யுத் : *460*)

**ஞானமுன்னிய நான்மறையாளர் – ஞான நெறிக்கண் ஒழுகிய நான்கு வேதமும் வல்ல அந்தணர்.** ஞானமுன்னிய நான்மறையாளர் கைத்தான மென்னத் தழைத்தது நீத்தமே. **(பா : *16*)**

**ஞானமுனி – ஆன்ம ஞானியாகிய சதாநந்தன். (உ. வி) விசுவாமித்திரன்.** ஞானமுனிக்கொரு நாணிலை யென்பார். **(பா : *780*)**

**ஞான மூர்த்தி – ஞானத்தின் திருவுருவாக விளங்கும் இராமபிரான். (அண்) ஞான சுவரூபியாகிய இராமபிரான்.** நன்மதிக் கிழவர் தம்மை நோக்கிய ஞான மூர்த்தி. **(யுத் : *4241*)**

**ஞான வாளி - ஞன சுவரூபி. ஞான வடிவினன். மெய்யுணர்வை ஆள்பவன். (அண்) (யுத் : *3352*)**

**ஞான வித்தகம் – ஞான முத்திரை.** குண்டிகை பொருள்சேர் ஞான வித்தகந்தரித்த செங்கை விமலை. **(பாயி : *32*)**

**ஞானி – தத்துவ ஞானமுடையவன்.** தனி ஞானி. (யுத் : *149*)

**ஞானியர் உணர்வின் ஒன்றாய் – தத்துவ ஞானிகளின் அறிவில் (உலகின் பேதமான தோற்றங்கள் எல்லாம்) அபேதமாகவே தோன்றுதல் போல ஒன்றாய்.** (பா : *576*)

**ஞானீ – ஞானி.** ஞானீயும் உய்கலான் என்னுதே. **(அ : *396*)**

## ஞி

ஞிமிறு - 1. வரிவண்டு. தாள்புரை தளிர்வைகும் தகை ஞிமிறிவை காணாய். (அ : 706)

2. ஆண்வண்டு. பேடையும் ஞிமிறும் பாயப் பெயர்வுறப் பிறக்கு மோசை. (கி : 476)

3. தேனீ. புள்ளினொடு வண்டு ஞிமிறுங் களிகொள் பூவும். (சு : 705)

ஞிறை - நிறை. நெய்ஞ் ஞிறை நெடுவேல். (அ : 615)

## ஞா

ஞூறு - நூறு. கனலுட்பொதி சீரைஞ் ஞூறவை சேமம் செலுத்துமோ. (சு : 1144)

ஞூறுவ - அழிப்பன. பாரைஞ் ஞூறுவ பற்பல பொற்புயம். (சு: 1144)

## ஞெ

ஞெண்டு - நண்டு. காலுடை நெடு ஞெண்டிற் சென்றது கடிதம்மா. (அ : 678)



பஞோலா பிரஸ், பெரிய தெரு, கும்பகோணம். போன்: 244

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| | | **I பிற்சேர்க்கை** | |
| 13 | 24 | உயர்விஞேடுயர்நிதது | உயர்விஞேடுயர்ந்தது |
| 14 | 9 | உருவெளி | உருவொளி |
| | | **II பாகம்** | |
| 22 | 9 | கடிப்பிடிப்பாய் | கடைப்பிடிப்பாய் |
| 78 | 28 | சந்திரன் தானும் | கதிரவன் தானும் |
| 80 | 9 | கலைவலாளளிற் | கலைவலாளனிற் |
| 113 | 2 | கானுதியால் | காணுதியால் |
| 122 | 11 | காற்புன்கஞேய் | காதற்புன்கஞேய் |
| 158 | 17 | பறிருமுன்ன | பற்ருமுன்னம் |
| 170 | 18 | விம்மி நின்றழுது | விம்மிவிம்மி நின்றழுது |
| 173 | 17 | கேட்டயர் வெய்துமாலை | கேட்டயர் வெய்துமால் |
| 204 | 21 | தருந்தொறும் | தருந்தொறும் |
| | 22 | நீத்தன் | நீத்தம் |
| 221 | 25 | நெடுமேஞன் | நெடுமேஞள் |
| 242 | 22 | துணித்து | துமித்து |
| 269 | 31 | தெரழிலை | தொழிலை |
| 280 | 17 | சந்து – அழகிய (அண்) அப்படிப்பட்ட (உ. வி) | இப்பகுயை 19 ஆம் வரியின் முடிவில் சேர்க்க |
| | | [ச்யந்தன – தேர்] | இதனை 16ஆம் வரியோடு சேர்க்க |
| 283 | 6 | சமரபூமிவும் | சமரபூமியும் |
| 287 | 17 | தொடுத்தான் | துரந்தான் |
| 289 | 34 | போஞன் | போஞள் |
| 309 | 10 | செஞ்துகில் | செந்துகில் |
| 343 | 13 | சுந்தரக்கண் | சுந்தரக்கண்கள் |
| 352 | 13 | இவ்வரியை நீக்கிவிடுக | |
| 359 | 13 | கருங்கொண்டமேகம் | கருக்கொண்டமேகம் |
| | 27 | சூலியின் | சூலையின் |

# KAMBA RAMAYANAM DICTIONARY

## VOLUME-II க - ஞ

Compiled and Published by

A. S. SUNDARARAJAN, B. A..
10-A, Almora, ANUSHAKTINAGAR
BOMBAY - 400 094

1978] [Price Rs 35-00